பி. டி. சீனிவாச அய்யங்காரின்

# தமிழர் வரலாறு

## இரண்டாம் பகுதி

★

தமிழாக்கமும் திறனாய்வும் :

புலவர் கா. கோவிந்தன், எம். ஏ.

★

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
154, டி. டி. கே. சாலை, சென்னை–18.
1982.

1989 THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS,
PUBLISHING SOCIETY, TINNEVELLY LIMITED,

கிளைகள் :
சென்னை-108.
திருநெல்வேலி-6. மதுரை-1. கோயமுத்தூர்-1.
கும்பகோணம்-1. சேலம்-1. திருச்சிராப்பள்ளி-2.

கழக வெளியீடு : 1865

Ed. I' December 1989



*

THAMILAR VARALARU - II
(Tamil Version of P. T. Sreenivasa Ayyangar's
History of the Tamils)

அப்பர் அச்சகம், சென்னை-108.

# பதிப்புரை

இந்தியநாட்டு வரலாறு, பெரும்பாலும் வட இந்திய வரலாறாகவே அனைத்து வரலாற்றாசிரியர்களாலும் எழுதப்பட்டுள்ளது. சமய தத்துவ, பண்பாட்டு வரலாறுகள் என்று எடுத்துக்கொண்டால் கூட, பெரும்பாலும் தென்னிந்தியா, குறிப்பாகத் தமிழ்நாடு எல்லோராலும் புறக்கணிக்கப்பட்டே வருகிறது. ஐயாயிரம் ஆண்டுகட்கு மேலாகத், தொடர்ச்சியான வரலாறுடைய தமிழ் மக்களின் உண்மை வரலாறு உலகுக்கு எடுத்துக் கூறப் பெறவேயில்லை.

தமிழக வரலாற்று நூல்கள் பல வெளிவந்திருப்பினும் பி. டி. சீனிவாச அய்யங்காரின் 'தமிழர் வரலாறு' ஆங்கில நூலுக்குப், புகழ் தொடர்ந்து இருந்து வந்துள்ளது. நீண்ட காலமாக அச்சில் இல்லாதிருந்த காரணத்தால் அதனைத் தேடிப்பிடித்துப் படித்து வந்தனர். இந்நிலையில் அண்மையில் அதன் மறுபதிப்பு வெளிவந்தபோது தமிழ்மக்கள் மட்டுமல்லாது தமிழர் வரலாற்றில் நாட்டமுடைய மேலை நாட்டறிஞர்களும் விரும்பி வாங்கிப் படிக்கலாயினர்.

இதனைப் பார்த்தபோது ஏன் இதன் தமிழாக்கத்தை வெளியிடக்கூடாது என்ற தூண்டல் எழுந்தது. இதுபற்றித் தமிழகச் சட்டப்பேரவை மேனாள் தலைவரும், கழக நூலாசிரியருமான புலவர் கா. கோவிந்தன் எம். ஏ. அவர்களுடன் உரையாடிக்கொண்டிருந்தபோது தாம் முன்னரே முழுதும் மொழியாக்கம் செய்து வைத்துள்ளதாகத் தெரிவித்து, கழகம் அதனை வெளியிடலாமென்றும் கூறினார்கள்.

அவருடைய தமிழாக்கத்தைப் பார்த்தபோது ஒருண்மை புலப்பட்டது. சீனிவாச அய்யங்கார் நூலைப்படைக்கும் போது, அப்போது தமக்குக் கிடைத்த சான்றுகளைக்கொண்டு

வரலாற்றை எழுதினார். அதில் சில செய்திகள் பிற்கால ஆய்வுகளால் மாற்றப்பட வேண்டியதிருந்தன. புலவர் கோவிந்தன் அவர்கள் அப்பணியைத் துணிந்து ஏற்றுக் கொண்டு மூலநூலை முழுவதும் குறைக்காது திரிக்காது மொழிபெயர்த்தபின், எந்தஎந்தச் செய்திகள் மறுக்கப்பட வேண்டுமோ; அனைத்துக்கும் தக்க சான்றுகளைக் காட்டித் திறனாய்வு செய்துள்ளார்; எனவே புதிய செய்திகள் முழுவதையும் கொண்ட புதிய வரலாறு என்று இந்நூலைக் கொள்ளலாம்.

கடும் உழைப்பினை மேற்கொண்ட புலவர் அவர்கட்கும், அவர்தம் மொழியாக்கத்தைக் கழக வழி வெளிக்கொணர ஒப்புதலளித்த அவர்தம் பேருள்ளத்திற்கும் கழகம் நன்றி தெரிவித்துக் கொள்கிறது.

மூலநூலை விடப் பிறமொழியாக்க நூல்கள் விரிந்தே இருக்கும். குறிப்பாக இந்நூலில் மொழிபெயர்ப்பாசிரியர் பல புதிய செய்திகளையும் சான்றுகளையும் ஆங்காங்கே சேர்க்க நேரிட்ட காரணத்தால் தமிழாக்க நூல் இருமடங்காகி விட்டது: எனவே நூல் இரு பகுதிகளாக வெளியிட வேண்டிய சூழல்.

தமிழக வரலாற்றில் தோய்வுடைய அறிஞர்கள், ஆய்வாளர்கள் வரலாற்று மாணவர்கள் தமிழ் அன்பர்கள் அனைவரும் இந்நூலை விரும்பி வரவேற்பரென்று துணிவுடன் எதிர்பார்க்கிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முகவுரை

சென்னைப் பல்கலைக்கழக இந்திய வரலாற்றுத் துறையில் துணைப் பேராசிரியராக 1928-29 கல்வி ஆண்டின் பணியாற்றிக்கொண்டிருந்தபோது செய்த ஆய்வுப்பணியின் விளைவே இந்த நூல். இந்த ஆண்டில் ஜூலைத் திங்களில் இப்பொருள் பற்றிய ஒரு பகுதி பல்கலைக்கழகச் சொற்பொழிவுகளாகவும் நிகழ்த்தப்பெற்றது. சொற்குறிப்பு அட்டவணையை உருவாக்குவதில் உதவிய திரு. ஏ. அப்பாதுரை ஐயர் அவர்கட்கு நன்றி.

பி. டி. சீனிவாச அய்யங்கார்.

# மொழி பெயர்ப்பாளர் முன்னுரை

சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறையில் பணியாற்றிய திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் ஐம்பத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் எழுதிய தமிழர் வரலாறு (History of Tamils) என்ற நூல், கி. பி. 600 வரையான தமிழ், தமிழர், தமிழ்நாடு பற்றிய வரலாற்றினை விளக்கும் அரிய நூலாகும்,

பல்கலைக்கழக நிலையில், தமிழ்த்துறையில் எம்.ஏ. பட்டப்படிப்பிற்குப் பயிலும் மாணவர்களுக்கு, தமிழர் வரலாறு அறிய மிகப்பெருமளவில் துணைநிற்பதான அந்நூல், தமிழில் இல்லாது ஆங்கிலத்தில் அமைந்திருப்பது, தமிழ்த்துறை மாணவர்கள், அந்நூலைப் படிப்பதற்குத் தடையாக இருந்துவிட்டது. அத்தகு இடர்ப்பாட்டிற்கு உள்ளானவர்களுள், நானும் ஒருவன். அதனால், அந்நூல், தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவரின், தமிழ், தமிழர், தமிழ்நாடு, பற்றிய வெளியிடப்பட்டுள்ள இந்நூலின் முதற் பகுதி முன்னுரையில் கூறியன போலும், தவறான கருத்துக்கள் அறவே நீக்கப்பட்டு, தமிழர் வரலாற்றை உள்ளது உள்ளவாறு உணர்த்தும் சிறந்த வரலாற்று நூலாம் விழுமிய பெருமையினை இந்நூல் பெற்றுவிடும் என உணர்ந்தேன்.

அதையொட்டி, நூலை மொழிபெயர்த்ததோடு நில்லாமல் ஆசிரியரின் தவறான முடிவுகள் சிலவற்றினை ஏற்ற சான்றுகள் காட்டி மறுத்து, அந்தந்த அதிகாரங்களின் பின் இணைப்பாகச் சேர்த்துள்ளேன். நான் விட்டுச்செல்லும் பணியினை, இந்நூலைப் படிக்கும் வரலாற்று மாணவர்கள், தொடர்ந்து முடிப்பார்கள்; முடிக்க வேண்டும் என்பதால் அத்தவறான முடிவுகளில் சிலவற்றைச் சுட்டிக் காட்டுவதோடு விட்டுச் செல்கின்றேன்.

"தமிழர் வரலாறு" என்ற இந்நூலின் ஆசிரியர் கடைப்பிடித்திருக்கும் ஆங்கில மொழிநடை, மிகச் சிறந்த இலக்கிய நலம் வாய்ந்த ஒன்று: அதைத் தமிழில் மொழி பெயர்ப்பது அத்துணை எளிய செயலன்று என்பதால், அம் முயற்சியை மேற்கொள்ளச் சிறிது அஞ்சினேன்: ஆயினும், இதுகாறும் அது செய்ய யாரும் முன்வராமையாலும், கால்டுவெல் அவர்களின் திராவிடமொழி ஒப்பிலக்கண நூலின் என் மொழிபெயர்ப்பு நூலை அறிந்த பலரும், இதையும் மொழிபெயர்க்குமாறு ஊக்குவித்தமையாலும், மொழிபெயர்ப்புப் பணியினை மேற்கொண்டேன்: 1983இல் மேற்கொள்ளப்பட்டது; 1987இல் முடிவுற்றது, ஆனால் 1989இல்தான் அச்சேற்ற முடிந்தது: வெளியிட முன்வந்த, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தவர்க்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

திருமாவளவன் என்ற தலைப்பிட்ட என் முதல் நூலை, 1941இல் வெளியிட்ட கழகப் புரவலர் திரு. சுப்பையாப் பிள்ளை அவர்களின் மருகர், திரு: முத்துக்குமாரசுவாமி அவர்கள், இந்நூலை வெளியிட முன்வந்தது, சாலவும் பொருந்தும்:

கா. கோவிந்தன்

# உள்ளுறை


| அதிகாரம் | | பக்கம் |
|---|---|---|
| 20. | கரிகாலன் | 1-91 |
| 21. | இளந்திரையன் | 92-113 |
| 22. | கரிகாலனுக்குப் பிற்பட்ட சோழ அரசர்கள் | 114-163 |
| 23. | பாண்டிய அரசர்கள் | 164-198 |
| 24. | அகத்திலும் புறத்திலும் ஆரியக் கருத்துக்கள் | 199-230 |
| 25. | சேர அரசர்கள் | 231-307 |
| 26. | பழைய அரச இனங்கள் ஒளி குன்றல் | 308-319 |
| 27. | பத்துப்பாட்டின் பிற்காலப் பாடல்கள் | 320-351 |
| 28. | கலித்தொகை நூற்றிஐம்பது | 352-374 |
| 29. | கி. பி. 600க்கு முந்திய எஞ்சிய இலக்கியங்கள் | 375-483 |
| 30. | பழமை புதுமைகளின் இணைப்பு | 484-543 |


———

# தமிழர் வரலாறு-II

## அதிகாரம் : XX

## கரிகாலன்

**வெண்ணிப் போர் :**

பழந்தமிழ்ப் பாக்களில், பெயர் சுட்டிக் குறிப்பிடப் பட்டிருக்கும் முதல் தமிழ்ப் பேரரசின், கரிகாலன். சமகாலப் புலவர்களால் பாடப்பெற்று, அது காரணத்தால், அவன் வாழ்க்கையைத், திரும்பவும் அமைக்கப் பெருந்துணை புரியும், மூன்று குறும்பாடல்களாலும், இரு நெடும்பாடல் களாலும், அவன் பாராட்டப் பெற்றுள்ளான். அவற்றுள் ஒன்று, பெண்பாற் புலவர் வெண்ணிக் குயத்தியாரால் பாடப் பெற்றது. வெண்ணி எனவும் அழைக்கப்பெறும் அவ்வெண்ணி, தஞ்சை மாவட்டத்தில், தென்னிந்தியப் புகைவண்டித் தொடர் நிலையமாம், இன்றைய கோயில் வெண்ணி ஆகும். பண்டை நாட்களில், பாடற்கலை என்பது, உள்ளுணர்வின் இயல்பான எழுச்சி; கற்றுப்பெற்ற புலமையின் விளைவு அன்று; கவிதைக்கான அகத்தூண்டுதலின் பயன்; பண்டிதர் களின் திட்டமிட்ட படைப்பு அன்று; பழைய தொகை நூல் களால், சான்று காட்டல் போல், அனைத்து இனம், அனைத்து நிலைகளையும் சேர்ந்த ஆடவர், மகளிர் ஆகிய இருவரும் பாக்கள் புனைந்தனர். வெண்ணியைச் சேர்ந்த குயவர் மகள், வெண்ணிக்குயத்தியார் வெண்ணிப்பறந்தலைப் போரில், பகைவன் ஒருவன்பால், கரிகாலன் கொண்ட வெற்றிக் கொற்றத்தையும், தோற்று அவமானப்பட்ட அப்பகைவனின் தற்கொலைக் கொடுமையையும் பாடி யுள்ளார். இவ்வாறு செல்கிறது, அப்பாட்டு :- "நீரால்

நிறைந்த பெரிய கடலில் காற்றின் துணை இன்றிப் பெருங்கலங்கள் ஓடாதாக, ஆங்கு அக்காற்றினை ஏவல் கொண்டு நாவாய் ஓட்டிய வலியோன் மரபில் வந்தோனே! போர்மதம் மிக்க யானைப் படையுடைய கரிகால் வளவ! படையெடுத்துச்சென்று, பகைவர் ஆற்றிய போர்த் தொழிலை அழித்து, உன் பேராண்மை வெளிப்பட வெற்றி கொண்டவனே! ஆரவாரம் மிக்க புதுப்புது வருவாய்களைக் கொண்ட வெண்ணி எனும் இடத்தில் நடைபெற்ற போர்க்களத்தில், பெரும்புகழை இப்பேருலகில் நிலைபெறப் பண்ணி, போரில் புறப் புண் பெற்றமைக்கு நாணி, வடக்கிருந்து உயிர் நீத்த உன்பகைவன், நின்னினும் நல்லன் அல்லனோ?

''நளிஇரும் முந்நீர் நாவாய் ஓட்டி,
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக!
களிஇயல் யானைக் கரிகால் வளவ!
சென்று அமர்க்கடந்த நின் ஆற்றல் தோன்ற
வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே!
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கு இருந்தோனே''.

—புறநானூறு : 66

மிகச் சிறந்த பெரும்பாட்டாம் பொருநராற்றுப் படையிலும் (பொருநனுக்குப் பொருள் கிடைக்கும் இடமும் வழியும் கூறும் பாட்டு) - இப்போர் குறிப்பிடப்பட்டுளது. கரிகாலன் சமகாலத்தவரும், யாதோ ஒருவகையில் முடம்பட்ட உடலுறுப்புடையாரும், தலைமாலை அணிந்தவரும் ஆகிய முடத்தாமக் கண்ணியாரால், கரிகாலனின் கொலை வளம் பாராட்டப் பெறும் அப்பாட்டு, கரிகாலனை இவ்வாறு சிறப்பிக்கிறது: ''கரியபெரிய பனைமரத்தின் குருத்து ஓலையாலாம் மாலையும், கரிய அடிமரத்தினையும் கிளைகளையும் கொண்ட, மரம் அறுக்கும் வாளின் வாய்போன்ற வேம்பின்

அழகிய தளிர்களால் ஆன மாலையும், புகழால் உயர்ந்த பெரிய தலையில், மேலும் புகழ்பெருக முறையே அணிந்து கொண்ட சேரனும், பாண்டியனும், ஒரே போர்க்களத்தில் இறந்து போமாறு, வெண்ணி என்ற ஊரின்கண்ணே நடை பெற்ற போரில் அவரோடு போரிட்ட, பகைவர் அஞ்சத்தக்க பேராண்மையினையும், அதற்கேற்ற பெருமுயற்சியினையும், கண்ணுக்கு அழகூட்டும், ஆத்திமாலையினையும் உடைய கரிகால் வளவ!''

''இரும் பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிரும் சென்னி மேம்பட மிலைந்த,
இருபெரு வேந்தரும் ஒருகளத்து அவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்,
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவ!''

—பொருநராற்றுப்படை : 143 - 148

போரில் புறப்புண் பெற்றுவிடும் அரசன், போர்க்களத்தில், தன் கழுத்தைத் தன் கைவாளால் தானே அறுத்துக்கொண்டு விடுதல், பழம்பாக்களில், ''வாளொடு வடக்கிருத்தல்'' என்ற மரபுத் தொடரால் அழைக்கப்படும். ''வடக்கிருத்தல்'' என்ற தொடர், வடக்கு நோக்கி இருந்து உயிரைப் போக்கிக் கொள்வது, அல்லது வடக்கே உள்ள ஓர் இடத்தை அடைந்து, உண்ணாது இருந்து உயிர்விடுவது என்னும் பொருள் உடையதாகும். கரிகாலனின் பகைவர், ஒரு பாண்டிய வேந்தனும், மற்றொரு சேர வேந்தனுமாவர்; இவர்களுள், பின்னவன், வெண்ணிப்போரில் வடக்கிருந்து உயிர்விட்ட செய்தி, அந்நிகழ்ச்சியை இறந்தகால நிகழ்ச்சியாகக் கூறுவதால், காலத்தால் பிற்பட்டதான ஓர் அகப்பாட்டிலும் கூறப்பட்டுளது:

''கரிகால் வளவனொடு வெண்ணிப்பறந்தலை
பொருது புண் நாணிய சேரலாதன்

'அழிகள மருங்கின் வாள் வடக்கு இருந்தென":

—அகம் : 55 : 10 - 12.

சேரலாதன், சோழ அரசன் கரிகால் வளவனோடு, வெண்ணிப்போர்க் களத்தில் போரிட்டுத் தோற்றுப் போரில் புறப் புண் பெற்றமைக்கு நாணி, அப்போர்க்களத்திற்கு அணித்தாக வாளோடு வடக்கிருந்து உயிர் விட்டான். இப்பாட்டில் அச்சேரன், சேரலாதன் எனப் பட்டுள்ளான். இச்சேர வேந்தனின் இச்செயலைக் குறிப்பதாகச் செய்யுள் மூலத்தில் எதுவும் இல்லை ஆயினும் 65 ஆம் எண், புறநானூற்றுச் செய்யுளும், இப்போர் பற்றிக் கூறுவதாகக் கூறப்படுகிறது.

'தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப்புண் நாணி, மறத்தகை மன்னன்
வாள்வடக்கு இருந்தனன்".

—புறம் : 65 : 9 - 10

[மறம் மிக்க மன்னன், தன்போலும் மறம்மிக்க பேரரசன், தன் ஆண்மை குறித்து எறிந்த வேலால் முதுகில் புண் பெற்று விட்டமைக்கு வெட்கி, வாளோடு வடக்கிருந்து உயிர் விட்டான்.]

புறப்பாடல்களைத் தொகுத்துப் பதிப்பித்த ஆசிரியர், அகம் 55ஆம் எண் செய்யுள், சேரலாதன் வடக்கிருந்ததைக் குறிப்பிடுவதால், இப்புறப்பாட்டும் (65) அதே நிகழ்ச்சியைக் குறிப்பதாகவே கருதி, அச்செய்யுளின் கீழ்க் கொடுத்திருக்கும் கொளுவிளக்கத்தில் அவ்வாறே கூறியுள்ளார். அகம், அவன் பெயரைச் சேரலாதன் என்று குறிப்பிட்டிருக்க, இப்பாட்டின் கொளு, அவன் பெயரைப் பெருஞ்சேரலாதன் என்று அழைக்கிறது. இச்சேரனின் பெயர், இக்கொளுவில் அல்லாது, வேறு எந்தச் செய்யுளிலும் இடம்பெறவில்லையாகவே, இவ்வேந்தன் குறித்து இது தவிர்த்து வேறு எதுவும் தெரியவில்லை.

**கரிகாலன் இளமை வாழ்க்கை :**

பொருநராற்றுப்படை, கரிகாலன், தலைநகரை, உறையூரிலிருந்து, காவிரி கடலோடு கலக்குமிடத்தில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்திற்கு மாற்றுவதற்கு முற்பட்டதான, அவனுடைய ஆட்சிக்காலத்து முற்பகுதியில் பாடப்பட்டிருக்க வேண்டும். அது, அவனை இளையோன், தந்தையின் இறப்பிற்குப் பின்னர்ப் பிறந்தவனாகக் குறிப்பிடுகிறது; "வெல்லும் வேற்படையினையும், அழகிய பல தேர்ப்படைகளையும் உடைய இளஞ்சேட் சென்னியின் திருமகன்; முருகக் கடவுளின் சினம்போலும் கடுஞ்சினம் உடைமையால், பகைவர்களை உளம் நடுங்கப் பண்ணும் தலைமையுடையான், தாயின் வயிற்றில் கருவாக இருக்கும் போதே, அரச உரிமையைப் பெற்றவன். பண்டு அவன் வலியறியாது பகைத்து நின்ற பகைவர், பின்னர் அவன் வலியறிந்து வந்து அவன் ஏவல் கேட்டு நின்றனர். அவன் ஏவல் கேட்டு அதன் படி நடந்துகொள்ளாத பகை நாட்டவர், அவனால் வர இருக்கும் கேடுகளை எண்ணிக் கலக்கம் உற்றிருந்தனர்; உலகத்து உயிர்கள் அனைத்தும் விரும்பும் வெம்மையுடையோனாகி இளஞாயிறு, பகற்போதைச் செய்யும் தன் கதிர்களைக் கடல்மீது பரப்பியவாறே எழுந்து, பின்னர், மெல்லமெல்ல விண்ணிடத்தே உயர்வது போல, பிறந்து, மண்ணில் தவழக் கற்றுக் கொண்ட அந்நாள் தொடங்கி, நாடாளும் பெரும்பாரத்தைத் தன் தோள் மேற்கொண்டு, அதன் வளத்தை நாள்தோறும் பெருக்கினான்: ஆளி என அழைக்கப்படும் நல்ல விலங்காம் சிங்கத்தின், எதிர்ப்படும் அனைத்து உயிர்களையும் வருத்தும் குட்டி, கூற்றுவன் ஆற்றலிலும் மிக்க ஆற்றல் உடைமையால் செருக்குற்று, பால் உண்டலைக் கைவிடமாட்டா அத்துணை இளம் பருவத்தில் இரைதேடிச் சென்ற முதல் வேட்டையில், களிற்று யானையைக் கொன்று வீழ்த்தியதுபோலக், கரிகாலன் வெண்ணியில் இருபெரு வேந்தரை அழித்தான்: ஆக, கரிகாலன் பாண்டிய, சேர அரசர் இருவரை வெற்றி கொண்டான்;

"வெல்வேல்
உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்,
முருகன் சீற்றத்து உருகெழு குருசில்,
தாய் வயிற்றிருந்து தாயம் எய்தி,
எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்பச்,
செய்யார் தேஎம் தெருமரல் கலிப்பப்,
பௌவம் மீமிசைப் பகல்கதிர் பரப்பி,
வெவ்வெம் செல்வன், விசும்பு படர்ந்தாங்குப்,
பிறந்து, தவழ்கற்றதன் தொட்டுச், சிறந்த நன்
நாடு செகின் கொண்டு நாள்தொறும் வளர்ப்ப,
ஆளிநன்மான், அணங்குஉடைக் குருளை,
மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி,
முலைக்கோள் விடாஅ மாத்திரை, ஞெரேர்எனத்
தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு"
—பொருநராற்றுப்படை. (129-142)

வெண்ணிப்போர்பற்றிய பாடற்பகுதி, இவ்வாறுதொடர்கிறது. இப்பாட்டின் பிற்பகுதியில், அவன் இளமைப்பருவத்து நிகழ்ச்சி ஒன்று மறைமுகமாகக் குறிப்பிடப் பட்டுளது: (முதியோர் "அவை புகு பொழுதில் தம் பகைமுரண் செலவும்" பொருநராற்றுப்படை. 187-188) முதியோர் இருவர் அவன் அறங்கூர் அவைக்குட் புகுந்து, தங்கள் இருவர்க்கிடையே எழுந்த வழக்கு ஒன்றை, அவன் முன் வைக்க, அவன் அவ்விருவரும் ஏற்றுக்கொள்ளத்தக்க தீர்ப்பை வழங்கினான். "அவைபுகு பொழுதில் தம் பகைமுரண் செலவும்" — பொருநர் : 188. இலக்கிய வகையில், அத்துணை நிறைபயன் அளிக்காப் பாட்டு ஒன்றில், இந் நிகழ்ச்சியின் போது, தன்னுடைய தனி இளமைப் பருவத்தை மறைப்பதற்காக, நரைமயிர் கொண்டு - ஆக்கிய தலைமுடியை அணிந்து கொண்டான் என்பது குறிப்பிடப்பட்டுளது:

"உரைமுடிவு காணான்; இளமையோன்" என்ற
நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்

சொல்லான் முறை செய்தான்; சோழன், குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்.

—பழமொழி: 25

''வழக்கில், இவன், நல்லதீர்ப்பு காண மாட்டான்; காரணம்; ஆண்டால் இளையவன்'' என்று கூறிய நரைத்து முதிர்ந்த பெருமக்கள், உவக்குமாறு, நரைமுடித்து முதியவன் போல் தோன்றி, நல்லதீர்ப்பு வழங்கினான் சோழன், ஆகவே குலவித்தை யாவர்க்கும், கல்லாமலே, அதாவது இயல்பாகவே உண்டாகிவிடும். பொருநராற்றுப்படையின் பிறிதொரு பகுதியில், அவன் உலகனைத்தையும் ஒரு குடைக் கீழ்க் கொண்டுவந்து ஆண்டான் எனக் குறிப்பிடப்பட்டுளது:

''ஒரு குடையான் ஒன்று கூறப்
பெரிது ஆண்ட''.

—பொருநராற்றுப்படை: 228 - 229

வெண்ணிப் பறந்தலையில், தன் பகைவர்களாம், பாண்டிய சேர வேந்தர்களை வெற்றிகொண்ட பின்னர்த், தமிழ்நாடு முழுவதிலும் தன் அரசை நிலை பெறச் செய்தான் என்பது இதன் பொருளாதல் கூடும். ஆனால், இப்பாட்டின் இறுதியில், ''காவிரி காக்கும் நாட்டின் தலைவனே!'' ''காவிரி புரக்கும் நாடு கிழவோனே! (248) எனக் குறிப்பிட்டு அழைக்கப் பட்டுள்ளான். ஆதலால், கரிகாலன், பாண்டிய சேர நாடுகளைச் சோழ நாட்டோடு இணைத்துக்கொண்டா னல்லன். மாறாகத், தன்னைப் பணிந்து, தன் ஏவல்கேட்கும் சிற்றரசர்களாம் நிலைமையையே, அவர்களிடமிருந்து எதிர் பார்த்தான் எனக் கொள்ளலாம்.

## தொடக்க நாட்களில் புலவர் புரவு:

கரிகாலன் உறையூரிலிருந்துகொண்டு, காவிரி நாட்டை ஆண்டிருந்தபோது, பிற்காலத்தில், போஜராசனைப் போல, அவன், புலவர்களைப் பேணும் பெரும் புரவலனாய் விளங்கினான். கரிகாலன் அரசவையில், தமக்கு அளிக்கப்

பட்ட வரவேற்புச் சிறப்பு குறித்து, முடத்தாமக்கண்ணியார் கூறுவது, இது: ''பழுமரத்தை நினைந்து பறந்து விரையும் பறவைக்கூட்டம்போல, நானும், அவன் மாநகர் மதிலின் கண் அமைந்துள்ள, அவனை விரும்பி வருவார்க்கு என்றும் அடையாதே திறந்து கிடக்கும் கோபுரவாயிலுள், அவ்வாயிற் காவலுக்குக் கூறாமலே புகுந்து. ஆரவாரப் பேரொலி எப்போதும் எழும், பரந்து அகன்ற இடம் உடையதான அரண்மனைக்குள் சென்றேன். வறுமையால் வாடியிருந்த என் மேனி, அவன் அரண்மனைக்கு வந்துவிட்டோம் என்ற களிப்பு மிகுதியால் வாட்டம் தீர்ந்துவளம் பெற்றது. படம் விரித்து எழும் பாம்பின் படத்தில் காணப்படும், கவர்த்த கருங்கோடுபோல், கை விரல்களால் அடியுண்டு அடியுண்டு அமைந்துவிட்ட கரும் வடுவினைக் கொண்டு இருபக்கமும் அகன்று, இடைசிறுத்த உடுக்கை எழுப்பிய இரட்டை தாள இசைக்கு ஏற்ப, வாய்ப்பாட்டு ஒன்றினைப் பேரொலி யுடையதான வெள்ளியாகிய வான்மீன் தோன்றிவிட்ட, மிக்க இருள் செறிந்த விடியற்போதில், பாடத் தொடங்கினேன். நான், அவ்வாறு தொடங்குவதற்கு முன்னரே, தன்னுடைய நெருங்கிய உறவினரைப் போலவே, என்னுடன் உறவு கொள்ள விரும்பினான். வரையாது கொடுத்து வான்புகழ் ஈட்டுவதற்கு வாய்ப்பாக, எப்போதும், நான், அவனிடமே சென்று இரந்து நிற்பதற்கு ஏற்ற, இனிய முகமன் உரைகளை மொழிந்தான். நான் எப்போதும், அவன் கண்ணில் பட்டுக் கொண்டிருக்குமாறு, மிக அணித்தான ஓர் இடத்தை எனக்கு அளித்தான். தன் கண்களால், என்னை அப்படியே விழுங்கி விடுவதுபோலும் பார்வையால், என் உடலெலும்புக ளெல்லாம், அன்பின் மிகுதியால், வெண்ணெய்போல இளகி விடும் வண்ணம், அன்புத் தண்ணருளைச் சொரிந்தான். ஈரும் பேனும் கூடியிருந்து ஆட்சிசெய்யும், வேர்வையால் நனைந்து நனைந்து நைந்துபோன, வேற்றுநூல் இடையே நுழைவதற்கு ஏற்பப் பெரிய அளவில் கிழிந்து, தைக்கப்பெற்ற என் கந்தல் ஆடையை அறவே அகற்றிவிட்டு, இது இழையோடிய வழி எனக் கண்ணால் கண்டுகொள்ளாவாறு நுண்ணிதாக நெய்யப்

பெற்ற, பூத்தொழில்களால் புனையப்பட்ட, பாம்பின்தோல் போலும் மென்மையான ஆடைகளை அளித்தான். கார்மேகமோ எனக் கண்டவர் மருளுதற்கேற்பக் கறுத்து நீண்ட கூந்தலையுடையவரும், மகிழ்ச்சிதரும் மேனிலை மாடங்களில் உலாவருவாரும், அணிகள் பல அணிந்து அழகுற்றவரும், எப்போதும் இனிய புன்னகையே உடையாரு மாகிய ஏவல் மகளிர், கள்ளைக் குற்றமற்ற பொன்னால் செய்யப்பட்ட கலங்கள் வழியுமாறு, பலகாலும் வார்த்து வார்த்துத் தர, வழிநடை வருத்தம் தீர நிறைய உண்டு, காண்டற்கினிய கள் கிடைக்கப்பெற்றிலமே என, நெஞ்சிற் கிடந்த பழங்கவலையும் தீர்ந்துபோகப்பெற்று மகிழ்ந் திருந்தேன். மாலை வந்துற்றதும், செல்வம் மலிந்து கிடக்கும், அம்மன்னவன் அரண்மனையில் ஒருபால் தங்கியிருந்தேன். தவஞ்செய்வார், அத்தவம் மேற்கொள்ளும் தம் உடம்பை அழித்துக் கொள்ளாமல் இருந்தே, அத்தவத்தாலாம் பயனை அடைவது போலவே, வழிநடை வருத்தத்தைச் சிறிதும் இல்லாவாறு போக்கிக், கள்ளை அளவிறந்து உண்டுவிட்டதன் விளைவாம் உடல் உறுப்புக்களின் நடுக்கமல்லது வேறு மனக் கலக்கம் ஏதும் இன்றி, மெய் மறந்து உறங்கிப் பின்னர்த் துயில் ஒழிந்து எழுந்தேன். நாம் பெற்றிருக்கும் இவ்வினிய வாழ்க்கை உண்மையானதாக இருக்குமோ என ஐயுற்றுக் கலங்கும் என் நெஞ்சம், இது கனவன்று; நனவுதான் என்று துணிந்து கொள்ளவும், கொடிய வறுமையால் உற்ற துன்பத்தால் நிறைந்திருந்த என் உள்ளம், பெற்றுள்ள பேரின்ப வாழ்க்கையை எண்ணி எண்ணி மகிழவும், கரிகாலனைக் கண்ட நாளைய முன்னாள் மாலையில், என்னிடத்தே குடிகொண்டிருந்த கொடிய வறுமைக்காட்சிகளையும் கரி காலனைக் கண்டுவிட்ட அன்றைய காலைப்போதில், "நெருநல் நாம் கண்ணுற்ற இரவலன் தானா இவன்!" எனப் பார்த்தவர் மருண்டு போவதற்குக் காரணமாம் வகையில், அகிலும் ஆரமும், மலரும் போலும் மணப்பொருள்களை மேனியெங்கும் கொண்டுவிட்டமையால் வண்டுகள் வந்து

மொய்க்குமளவு பெற்றுவிட்ட வளமார் பெருவாழ்வினையும், உலகியல் கல்லா இளம் பருவத்தினராய சிறார்கள் சொல்லிச் சொல்லிக் காட்டுவாராயினர்''.

> ''பழுமரம் உள்ளிய பறவையின், யானும், அவன்
> இழும் என் சும்மை, இடனுடை வரைப்பின்
> நசையுநர்த் தடையா நன்பெரு வாயில்,
> இசையேன் புக்கு, என் இடும்பைதீர,
> எய்த்த மெய்யேன், எய்யே னாகிப்,
> பைத்த பாம்பின் துத்தி ஏய்ப்பக்,
> கைக் கசடு இருந்த என் கண்ணகன் தடாரி
> இருசீர்ப் பாணிக்கு ஏற்ப, விரிகதிர்
> வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்
> ஒன்றியான் பெட்டா அளவையின், ஒன்றிய
> கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி
> வேளாண் வாயில் வேட்பக் கூறிக்,
> கண்ணிற் காண நண்ணுவழி இரீஇப்,
> பருகு வன்ன அருகாம் நோக்கமொடு
> உருகு பவைபோல் என்பு குளிர்கொளீஇ,
> ஈரும் பேனும் இருந்து இறை கூடி
> வேரொரு நனைந்து வேற்றிழை நுழைந்த
> துன்னல் சிதாஅர் துவர நீக்கி,
> நோக்குநுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து
> அரவுரி அன்ன அறுவை நல்கி
> மழையென மருளும் மகிழ்செய் மாடத்து
> இழையணி வனப்பின் இன்னகை மகளிர்
> போக்கில் பொலங்கலம் நிறையப் பல்கால்
> வாக்குபு தரத்தர, வருத்தம் வீட,
> ஆர வுண்டு பேரஞர் போக்கிச்

செருக்கொடு நின்ற காலை, மற்றவன்
திருக்கிளர் கோயில் ஒருசிறைத் தங்கித்,
தவம்செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது
அதன்பயம் எய்திய அளவை மான,
ஆறுசெல் வருத்தம் அகல நீக்கி,
அனந்தர் நடுக்கம் அல்லது யாவதும்
மனம்கவல்பு இன்றி மாழாந்து எழுந்து,
மாலை அன்னதோர் புன்மையும், காலைக்
கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையும்
கனவென மருண்ட என் நெஞ்சம் ஏமாப்ப,
வல்லஞர் பொத்திய மனம் மகிழ் சிறப்பக்,
கல்லா இளைஞர் சொல்லிக் காட்ட,''

—பொருநராற்றுப்படை : 64-100

இரவலர்க்கு, இவ்வாறு உண்ணவும் குடிக்கவும் கொடுத்த தோடு, அவர்களுக்கு, நெருங்க முடித்த முடிகளைக் கரையிலே யுடைய பட்டாடைகளைக் கொடுத்தான் (''கொட்டைக் கரைய பட்டுடை நல்கி'' (பொருநர் : 155) தனக்கு என இதழ்களைப் பெறாத, பொன்னால் பண்ணப்பட்ட, தாமரை போலும் வடிவுடைய மலர்களைக் கொடுத்தான். (''ஏடுஇல் தாமரை'' பொருநர் : 159) யானைத் தந்தத்தால் பண்ணப் பட்ட தாமரை மொட்டினைக் கொண்ட நெடிய தேரில், சாதிலிங்கம் ஊட்டப்பெற்ற தலையாட்டம் அணி செய்ய, கழுத்து மயிர் அழகு செய்ய, மேனி நிறத்தில் பாலை ஒத்த குதிரைகள் நான்கினைப் பூட்டிக் கொடுத்தான்,

''கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தேர்,
ஊட்டுளை துயல்வர, ஓரி நுடங்கப்
பால்புரை புரவி நால்கு உடன் பூட்டி''

—பொருநர் : 163-165

**பிற்கால வாழ்க்கை:**

கரிகாலன் புகழ்பாடும் பிறிதொரு நெடும்பாட்டு, காவிரிப்பூம்பட்டினம் விரிவாக விளக்கிக் கூறப்படும், பாலைத்திணைப் பொருளாகக், கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பட்டினப்பாலை ஆகும். அதில், அப்புலவர், கரிகாலனிடம் பரிசில் பெறுவான் வேண்டிக் காவிரிப்பூம்பட்டினம் செல்லத்துடிக்கும் தன் நெஞ்சை நோக்கிக், "காதலியை விடுத்து, நெஞ்சே! நின்பின் வாரேன்" எனக் கூறியுள்ளார்.

> "முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
> வாரிரும் கூந்தல் வயங்கிழை ஒழிய
> வாரேன்; வாழிய, நெஞ்சே!"
>
> – பட்டினப்பாலை : 218-20

(என்ற தொடருக்கு அவர் கூறும் இதுவன்று பொருள். "காவிரிப்பூம்பட்டினமே கிடைப்பதாயினும், என் காதலியைப் பிரிந்து, அப்பட்டினம் போலும் பெருஞ்செல்வம் தேட விரையும் நெஞ்சே! உனபின் வாரேன்" என ஒரு காதலன் கூறினான் என்பதே இதன் பொருள் : பாடியவர், உருத்திரங் கண்ணனார் ஆயினும், இது அவர் கூற்று அன்று. ஒரு காதலன் கூற்று; அவன் கூற்றைப் புலவர் எடுத்துக் கூறினார் என்பதே பொருள்).

கரிகாலன், தன் ஆட்சிக் காலத்தில், தலைநகரை, உறையூரிலிருந்து, வளர்ந்து வரும் இக்கடற்கரை நகருக்கு மாற்றினான்; பற்பல நிலைகளைக் கொண்ட மாளிகைகளைக் கொண்ட உறையூரில், திருக்கோயில்களோடு, மக்கள் குடியிருப்புக்களையும் நிறுவினான்: பெரிய வாயில்களோடு, சிறுசிறு வாயில்களையும் அமைத்தான். அந்நகரைச் சூழ உள்ள மதில்கள்தோறும், அம்புக்கட்டுக்கள் போலும் படைக் கலப் பொறிகளையும் நிறுவினான்.

'பிறங்குநில மாடத்து உறந்தை போக்கிக்,
கோயிலொடு குடிநிறீஇ,
வாயிலொடு புழை அமைத்து
ஞாயில்தொறும் புதை நிறீஇ''

—பட்டினப்பாலை : 285-288

இப்பாட்டு, இளமைப் பருவம் தொட்டு நடைபெற்ற கரிகாலன் வெற்றிச் செயல்களை விளக்கிக் கூறுகிறது; தந்தை இறந்த பிறகு பிறந்த மகனாதலின், சோழ அரியணையை, அவன் இடையூறுகள் இல்லாமல் அடைந்து விட்டானல்லன்; இளையவனாய் இருக்கும்போது, அடாவழியில் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டவரால், அவன் சிறை செய்யப்பட்டான். அச்சிறையினின்றும் விடுதலைபெற, அவன் போராடினான். புலவர் கூறுமாறு ''கூரிய நகத்தினையும், வளைந்த வரிக்கோடுகளையும் உடைய புலிக்குட்டி, கூட்டிலே அடைபட்டிருந்து வளர்ந்தது போலப், பகைவர் இட்ட சிறையகத்தே இருந்து, தனக்குரிய அறிவு ஆண்மைக் குணங்களால் வயிரமரம்போல் முதிர்ந்து, குழியில் அகப்பட்டுக்கொண்ட நீண்ட கையினைக் கொண்ட ஓர் ஆண் யானை, அக்குழியின் ஏறுதற்கரிய கரைகளைத் தன் கோட்டால் குத்திச் சரித்துக் குழியைத் தூர்த்துவிட்டு ஏறித், தன் பிடியோடு சேர்ந்து கொண்டதுபோல, சிறையினின்றும் வெளியேறி, வெற்றி கொண்டு அரியணையில் அடையும் வழிமுறைகளைப் பலகாலும் ஆராய்ந்து, அப்பகைவரின் அழிக்கலாகாத் திண்மை வாய்ந்த காவற்சிறை மதிலைக் கடந்து வெளிப்போந்து, வாள்கொண்டு போர் செய்து வென்று, தன் அரச உரிமையை முறைப்படி அடைந்தான்.''

''கூர் உகிர்க்
கொடுவரிக் குருளை, கூட்டுள் வளர்ந்தாங்குப்,
பிறர், பிணியகத்து இருந்து, பீடுகாழ் முற்றி,
அருங்கரை கவியக் குத்திக், குழிகொன்று,
பெருங்கை யானை, பிடி புக்காங்கு,

நுண்ணிதின் உணர நாடி, நண்ணார்
செறிவுடைத் திண்காப்பு ஏறி, வாள் கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்தி".

—பட்டினப்பாலை: 220-227

அரச உரிமையை இவ்வாறு பெற்றுக்கொண்டதோடு, மன நிறைவு கொள்ளாத அவன், பிறநாடுகள்மீது போர் தொடுத்துச் சென்றான். அவனுடைய நாற்படையைச் சேர்ந்த யானைகள், தன் அரசனைப் பகைத்துக்கொண்ட பகையரசர்களின் அரண்மதிலையும், வாயிற்கதவையும் தம் கோடுகளால் அழிக்கும்; அப்பகையரசர்களின் மணிமுடி அணிந்த தலைகளைக், கூரிய உகிர்களைக் கொண்ட முன் கால்களால் உதைக்கும்.

"பெற்றவை மகிழ்தல் செய்யான் : செற்றோர்
கடியரண் தொலைத்த கதவு கொள் மருப்பின்,
முடியுடைக் கருத்தலைப் புரட்டும் முன்தாள்
உகிருடையடிய, ஓங்கு எழில் யானை".

—பட்டினப்பாலை : 228-31

அவன், தன் பேரரசை விரிவுபடுத்த உறுதிபூண்டான். ஒளியர் குலத்தலைவர் பலரை மறங்கெடப்பண்ணிப் பணி கொண்டான். பழம்பெரும் பெருமை வாய்ந்த அருவா நாட்டவர், தாங்கள் செய்யும் தொழில் எதுவேயாயினும், அதை. இவன் ஏவல் கேட்டுச் செய்யுமளவு பணிந்து போயினர். அவ்வருவா நாட்டிற்கும் வடக்கில் உள்ளார் எல்லாம் வலியிழந்து வாடினர்; குடநாட்டு அரசர் மன வெழுச்சி குன்றி அடங்கிக் கிடந்தனர். பாண்டியர் வலியிழந்து போயினர். பகையரசர்களின் எளிதில் பாழற்றுப் போகாத் திண்மை வாய்ந்த அரண்மதிலைக் கைப்பற்றும் உள்ளச் செருக்கும், வலிய கால்களும் கொண்ட யானைப் படையும், மறத்தால் சிறந்த வலிமையும் உடைமையால், புல்லிய முல்லை நிலத்துக் குறுநிலத் தலைவர்களின் கால்வழி

முழுவதும் கெட்டொழியவும், இருங்கோவேளின் பெருஞ் சுற்றம் பாழ்பட்டுப் போகவும், சினம் மிகுதலால் சிவந்து விட்ட கண்களால் வெகுண்டு நோக்கினான்.

"பல் ஒளியர் பணிபு ஒடுங்கத்,
தொல்அரு வாளர் தொழில் கேட்ப,
வடவர் வாடக், குடவர் கூம்பத்,
தென்னவன் திறல்கெடச் சீறி, மன்னர்,
மன் எயில் கதுவும் மதனுடை நோன்தாள்
மாத்தானை மற மொய்ம்பின்,
செங்கண்ணால் செயிர்த்து நோக்கிப்,
புன்பொதுவர் வழிபொன்ற,
இருங்கோவேள் மருங்கு சாய"
—பட்டினப்பாலை : 274-282.

இப்பட்டியலில் கூறப்பட்டவருள், இருங்கோவேள், என்ற குறுநிலத்தலைவன், புதுக்கோட்டை மாவட்டத்தில், திருச்சிராப்பள்ளி, மதுரை நெடுஞ்சாலைக்கண் உள்ள பழைய நகராம் கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டிற்குத் தெற்கில் உள்ள மாவட்டங்களை ஆண்டிருந்தான். அருவா நாட்டுக் குறுநிலத் தலைவனும், ஒளியர் குலத்தலைவனும், சோழ, பல்லவ நாடுகளுக்கு இடைப் பட்ட மாவட்டங்களை ஆண்டுவந்தனர். இவ்விரு நாடுகளையும் வெற்றி கொண்டுவிட்டவே, கரிகாலன், வடவர்களை, அதாவது, காஞ்சி ராஜாக்களாம் பல்லவர்களைப் பணி கொண்டான். அவன், மேலும் படையெடுத்துச் சென்று, கடப்பை, கர்னூல் மாவட்டங்களை ஆண்டுகொண்டிருந்த பொதுவர் குலத் தலைவர்களைத், தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தான். பொதுவர் என்ற சொல், ஆயர் தலைவர் எனும் பொருள் உடைத்து, ஆகவே, அது பல்லவ நாட்டின் மருத நிலப்பகுதிக்கு வடக்கில் உள்ள முல்லை நாட்டுப் பு... குடியினர் தலைவர்களைக் குறிப்பதாகும். கரிகாலனா தன் ஆட்சிக்கீழ்க் கொண்டுவரப்பட்ட அவ்வாயர்க அம்மாவட்டங்களில், இன்றும் வாழ்ந்து, அப்பகுதியில் பு

பெற்ற கம்பளி நெய்யும் குறும்பராவர்''. பெரும்புகழ்க் குரியவனும், வெல்லும்போர் வல்லவனுமாகிய கரிகாலன், குன்றுகளில் ஆனிரை மேய்க்கும் குறும்பர் குடியைப் பேணிக் காத்தான்.

''குறும்பறை பயிற்றும்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன்'' —அகம் : 141 : 21-23

இப்பாட்டிலிருந்து உய்த்துணரப்படும், கரிகாலன் ஆட்சி, வடக்கே, கடப்பை, கர்னூல் மாவட்டங்கள் வரையும் பரவி யிருந்தது என்ற உண்மையை உறுதி செய்வதற்கு எண்ணற்ற கல்வெட்டுச் சான்றுகளும் உள. அவை, தனியே ஆராயப்படும்.

இப்பாட்டு, கரிகாலன், காடுகளை அழித்து அவற்றை யெல்லாம் வாழிடங்களாக மாற்றினான் என்றும் கூறுகிறது. (''காடுகொன்று நாடு ஆக்கி''—பட்டினம் : 283) அது, சோழ நாட்டில் நிகழ்ந்ததாக, உரையாசிரியர் விளக்கம் கூறுகிறார். ஆனால் சோழ நாடு முழுவதும், இம்மன்னனுக்கு நெடுங் காலத்துக்கு முன்பிருந்தே மக்களால் வாழப்பட்டுவிட்டது; ஆகவே, இச்செயற்கரும் செயல், மிகமிகக் குறைவான மக்கள் தொகையினை உடையவாய கடப்பை, கர்னூல் மாவட்டங் களையே குறிப்பிடுவதாகும். (சோழநாடு, ஐந்நிலம் என அழைக்கப்படாமல் நானிலம் என்று மட்டுமே அழைக்கப் படுவதற்கு ஏற்ப, (''நால்நாடு''—பொருநர் : 226) அந் நாட்டில் பெருமணல் பரந்த பாலை நிலம் அறவே இல்லை.) ''உள்ளூர் ஆவணங்கள், பழைய ''ரேனாடு'' ஆகிய இன்றைய கடப்பை, கர்னூல் மாவட்டத்து மக்கள், கரிகாலன் படையெடுப்பை, இன்றும் நினைவில் கொண்டுள்ளனர் என்பதை வெளிப்படுத்துகின்றன. ''கைம்யத்'' ஆவணம் ஒன்றின்படி, சூரிய வம்சத்துக் கரிகால மகாராஜா, மேற்கை வெற்றி கொண்டுவிடவே, இந்நாட்டின் உரிமையைப் பெற்று விட்டான். ''கரிகிரி'' மலையின் தென்பால் சரிவில்

காடுகளை அகற்றிப் "பொத்தப்பி" என்ற ஒரு சிற்றூரை நிறுவினான். அதைச் சூழ, எண்ணற்ற சிற்றூர்கள் தோன்ற ஊக்கம் ஊட்டினான். அச்சிற்றூர்களில், பொத்தப்பி, மிகவும் முக்கியமானதாக இருந்தமையால், அதைச் சூழ உள்ள சிற்றூர்கள், "பொத்தப்பி நாடு" என்ற பெயரைப் பெற்றன. (திரு. என். வெங்கட்ரமணய்யா அவர்கள், சென்னைக் கிறித்துவக் கல்லூரி மலர், 1929 சனவரி வெளியீட்டில் எடுத்தாண்டிருக்கும் L. R. Vol. 22. பக்கம்: 141ன் எடுத்தாட்சி) ஆவணத்திலிருந்து மேலே எடுத்துக் காட்டப்பட்ட பகுதியில் உள்ளடங்கியிருக்கும் அக்காதுவழிச் செய்தி, கரிகாலன், காடுகளை அழித்து, அவற்றை வாழிடன்களாக மாற்றினான் என்ற புலவர் கூற்றிற்குச் சரியான விளக்கமாம் என்பதில் ஐயம் இல்லை. ஆகவே, கரிகாலன் ஆட்சி, தமிழ்நாடு முழுவதிலும், தெலுங்கு நாட்டின் ஒரு பகுதியிலும் பரவியிருந்தது; அவன், மக்களின் விவசாயத் தொழில்களை வளர்த்தான். வாணிகத்திற்கு ஊக்கம் ஊட்டினான். ஆகவே அவன் நாடு வளம் பெற்றிருந்தது என முடிவு கொள்ளலாம்.

### புதிய தலைநகர்

முதலாவது உரிமை கொண்ட தன் நாடுகளைத் தன்னுடைய கப்பற்படையால், தன் பிடியின் கீழ்க் கொண்டிருக்கலாம். இரண்டாவது, கடல் வாணிகத்திற்கு அங்கிருந்தவாறே ஊக்கம் ஊட்டி, இவ்வகையால், தன் அரசு வருவாயைப் பெருக்கலாம், என்பதற்காகவே தன் தலைநகரை, உறையூரிலிருந்து, பழைய கடற்கரை நகராம் காவிரிப்பூம்பட்டினத்திற்கு மாற்றியதாகத் தெரிகிறது. அந்நகரைச் சூழ, வெற்றித்திருமகள் வாழும் திண்ணிய மதில்களை எழுப்பி, அவற்றிற்குப் பெரிய மரக்கழிகளை இணைத்துப் புலிச்சின்னம் பொறித்துப் பண்ணப்பட்ட வாயிற்கதவுகளை அமைத்தான் என்கிறது பட்டினப்பாலை:

"புலிப்பொறிப் போர்க்கதவின்
திருத்துஞ்சும் திண் காப்பு"

இப்பாட்டு, அந்நகரையும், அதன் புறநகர்ப் பகுதிகளையும் விரிவாக விளக்குகிறது. தமிழகத்துப் பேரூர் ஒன்றின் சம்ஸ்கிருத இலக்கியங்களில் காணப்படும் விளக்கங்கள் போல் அல்லாமல், மிகைப்படுத்தப்படாத, உள்ளது உள்ளவாறேயான, மிகப்பழைய விளக்கம் இது ஆதலின், அது, அப்படியே தருவதற்குத் தகுதிவாய்ந்தது. "அன்று முழுமதி நாள்; செம்பட்டை மயிருடையராகிய பெரிய பரதவர், கருமை நிறம் காட்டிக் குளிர்ந்திருக்கும் பரந்த கடல்மீது மீன்பிடிக்கப் போகவில்லை. அப்பாக்கத்தின் இடையில், மீன்பிடிக்கும் நெடிய தூண்டிற்கோல் சார்த்தப்பட்டிருக்கும் தாழ்ந்த கூரைகளைக் கொண்ட குடில்களின் முற்றத்து வெண்மணல் பரப்பில், நிலவொளியும், நிறை இருளும் மாறி மாறி, விட்டு விட்டுப் படிந்து கிடப்பதுபோல், மீன்பிடி வலைகள் விரித்துப் போட்டு உலர்த்தப்பட்டிருக்கும்; பரதவர், தழையாடை உடுத்திருக்கும், மாமை நிற மேனியராம் மகளிரோடு, விழுதுகள் தொங்கும் தாழையின் அடியில் வளர்ந்திருக்கும் வெண்தாளி மலர் மாலை அணிந்து, கொடிய சினம் உடையதான சுறாமீனின் கொம்பை, அம்மணல் பரப்பில் நாட்டி அக்கொம்பில் குடிகொண்டிருக்கும் கொடிய தெய்வத்தை வழிபடல் கருதி, தலைமயிரில் தாழைமலர் அணிந்து, சருக்கை வாய்ந்த அடியினையுடைய பனைமரத்துக் கள்ளையும், தாம் விரும்பும் உணவு வகைகளையும், உண்டு, மகிழ்ந்து ஆடிக்களிப்பர். புலால் நாறும் மணற்பரப்பையும், மலர்களையும் உடைய கடற்கரைக்கண், கரிய மலையை அடைந்த, பொன்னிற மாலை முகில் போலவும், கரிய நிறமேனித் தாய் மடியில் பால் உண்ணத் தவழ்ந்து கிடக்கும், செம்பட்டை மயிரினரான் மழலை போலவும், தெளிந்து நீல நிறம் காட்டும் கடல் நீரோடு, காவிரி ஆற்றுக் கலங்கள் செவ்வெள்ளம், கலக்கும் அலைகளின் ஒலிஓயா அப்புகார்ப் பகுதியில், பண்டைய பாவம் போகக் கடல் நீரில் ஆடியும், கடல் நீர் ஆடியதால் உடலில் படிந்துவிட்ட உப்பு மாசினைப் போக்க நறும்புனலில் மூழ்கி எழுவர். அடுத்து நண்டுகளைப் பிடித்து ஆட்டம் காட்டுவர்; உரங்கொண்டு பாயும்

அலைகளைக் கால்களால் உழக்கி விளையாட்டயர்வர்; மணலில் பாவை பண்ணுவர்; ஐம்பொறிகளாலும் நுகரும் இன்பங்களையெல்லாம் நுகர்ந்து தீர்ப்பர். இவ்வாறு ஆட இன்பம் நுகர்ந்தும் மனநிறைவு காணாமல், மேலும் மேலும் நுகரவேண்டும் என்ற தீராக் காதலோடு பகலெல்லாம் ஆடி மகிழ்ந்துவிட்டு, இரவு வந்துற்றதும், அப்பெருங் காவிரி மணலிலேயே படுத்து உறங்கிவிடுவர்.

"எக்காலத்தும் பொய்த்துப்போகாது, ஆண்டு முழுவதும் நீரோடிக்கொண்டிருக்கும் அக்காவிரி ஆற்றின், மலர்கள் உதிர்ந்து மண்டிக்கிடக்கும் இருகரை மருங்கிலும், நெடிய தூண்கள் மீது வானளாவக் கட்டப்பட்டிருக்கும் மாளிகைகளில் வாழ்வார், இசைப்பாடல் செவிமடுத்தும், நாடகங்களை நயந்து கண்ணுற்றும் மகிழ்வர். (ஈண்டு ஆளப்பட்டிருக்கும் நாடகம் என்ற சொல், சமஸ்கிருத "நாடக" என்ற சொல்லாம்; தமிழ்ப்பாக்களில் அச்சொல்லின் முதலாட்சி இது. இது, பெரும்பாலும், சமஸ்கிருத நாடகத்தோடு தொடர்பு கொள்வதற்கு முன்னர்த் தமிழ்நாட்டின் பெரு வழக்கில் இருந்த உரையிலா மெய்ப்பாட்டு நாடகம் ஆதல் கூடும்.) மகளிர், மேனிலை மாடங்களில், நிலவொளியின் இன்பம் காண்பர்; கள் உண்டல் விடுத்துக், காமரசம் பருகுவர்; பட்டாடை அகற்றிப் பருத்தி ஆடை உடுப்பர்; அக்கோலத்தோடே, தம் கணவரைத் தழுவியவாறே உறங்கச் செல்வர். காதல் மயக்கத்தில், கணவர் அணிந்துகொள்ளும் தலைமாலையை மனைவியரும், மனைவியர் குடிக்கொள்ளும் கழுத்துமாலையைக் கணவரும் மாறி அணிந்துகொள்வர். பகற் போதில், மீன்பிடி படகுகளில் கடல் மேல் சென்ற பரதவர், அந்நள்ளிரவில், கரைக்கண் மாடங்களில் வரிசை வரிசையாக ஏற்றப்பட்டிருக்கும் விளக்குகளில், அவிந்தனபோக, அவியாது பேரொளி காட்டி எரிந்துகொண்டிருக்கும் விளக்குகளை எண்ணியவாறே கரைநோக்கி மீள்வர்.

வெண்ணிற மலர்க் கொத்துக்களையும், மடல்களையும் கொண்ட தாழை மண்டிக்கிடக்கும் கடற்கரைக்கண், வணிகப்

பெருமக்கள் வாழும், அகன்று நீண்ட தெருக்களில் அமைந்துள்ள, காவல் மிக்க பண்டக சாலைகளில், மேகம், கடலிடத்தே முகந்துகொண்ட நீரை மலையிடத்தே பொழிவதும், மலையிடத்தே பெய்த மழைநீர், கடலில் சென்று சேர்வதும் மாரிக்காலத்தில், மாறி மாறி நிகழ்வது போலக், கடல்வழி வந்து கலங்களிலிருந்து இறக்கப்படுவனவும், நானிலங்களிலிருந்து வந்து நாவாய்களில் ஏற்றப்பட இருப்பனவுமாய பண்டப்பொதிகள் எண்ணிக்காணமாட்டா அளவு குவிந்துகிடக்கும். அப்பண்டங்களுக்கான சுங்க வரியைக் கணக்கிட்டுத் தண்டிக்கொண்டு, அதற்கு அடையாளமாகச், சோழ அரசின் புலிச்சின்னம் பொறிக்கப்படும். அது செய்து அரசன் வருவாயைப் பெருக்கும் கடமையுணர்ச்சியால் புகழ் கொண்டவர்களாகிய சுங்க அலுவலர், காயும் கதிர்களைக் கொண்டோனாகிய ஞாயிற்றின் தேரில் பூட்டப்பட்ட குதிரைகள், நாளும், நாழிகையும் தவறாது, நடைமெலிவு காணாது, ஈர்த்துச் செல்வதேபோல், இரவு பகல் ஓயாமல், ஒரு சிறிதும் தளர்வின்றிக் கடமை ஆற்றிக்கொண்டிருப்பர்.

முகில் உலாவும் முடியினையும், மூங்கில் வளரும் சாரலினையும் உடைய மலைகளில், துள்ளித்திரியும் எட்டுக் கால்களையுடைய வருடை என்ற கற்பனைப் பறவைபோலத் தோன்றும், கூரிய நகத்தினை உடைய மயிலும், வளைந்த கால்களையுடைய எருதும், ஆட்டுக்கிடாய்களும், வீடுகளின் முற்றத்தில் துள்ளிக்குதித்து இன்புறும். (மொழிபெயர்ப்பு ஆசிரியர் குறிப்பு: இப்பொருள் கொள்வதற்குக் காரணமாயிருப்பன. 137 முதல் 141 வரையான வரிகளாம்; இவ்வரிகளுக்குப் பண்டக சாலையின் முற்றத்தில், புலிச்சின்னம் பொறித்து, மலைபோலக் குவியப் போடப்பட்டிருக்கும் பண்டப் பொதிகள் மீது, மலைமீது துள்ளி ஆடும் வருடையைப்போல், நாய்களும், ஆட்டுக் கிடாய்களும் துள்ளி ஆடும் எனப்பொருள் கொள்வதே நேரிதாம்) ஏறி மனைபுகுவதற்குத் துணைபுரியும் அடுத்தடுத்த பல படிகளையும், உயர்ந்த ஏணிகளையும் கொண்டு, பல கட்டுக்களையும், சிறுவாயில், பெருவாயில் எனப் பல வாயில்களையும், நீண்ட இடைகழி

களையும் உடைய, அம்மாட மாளிகையின், மேகம் தவழும் மேல் மாடியில், சிவந்த அடிகள், திரண்ட துடைகள், உயர்ந்த அணிகள், பெரிய அல்குல், மெல்லிய ஆடை, பவளம் போலும் மேனி, மயில்போலும் சாயல், மான்போலும் நோக்கு, கிளி போலும் மழலை, மென்மையான சாயல் ஆகிய நலமெலாம் பெற்ற நங்கை நல்லார் தென்றல் காற்று உள்நுழையும் பலகணி அருகே அமர்ந்து காட்சி இன்பத்தில் ஆழ்ந்து போவர்.

"நெடுந் தூண்டிலின் காழ் சேர்த்திய
குறும் கூரைக் குடிநாப்பண்,
நிலவு அடைந்த இருள்போல,
வலை வணங்கும் மணல் முன்றில்,
வீழ்த்தாழைத் தாள் தாழ்ந்த
வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்,
சினைச் சுறவின் கோடுநட்டு
மனைச் சேர்த்திய வல்லணங்கினான்,
மடல் தாழை மலர் மலைந்தும்
பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும்,
புன்தலை இரும்பரதவர்
பைந்தழை மாமகளிரொடு
பாயிரும், பனிக்கடல் வேட்டம் செல்லாது
உணவு மடிந்து உண்டாடியும்
புலருமணல் பூக்கானல்
மாமலை அணிந்த கொண்மூப் போலவும்,
தாய்முலை தழுவிய குழவி போலவும்,
தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்
மணி ஓதத்து ஒலிகூடல்
தீது நீங்கக் கடல் ஆடியும்,
மாசு போகப் புனல் படிந்தும்,
அலவன் ஆட்டியும், உரவுத்திரை உழக்கியும்,

பாவை சூழ்ந்தும், பல்பொறி மருண்டும்,
அகலாக் காதலொடு பகல் விளையாடிப்,
பெறற்கரும் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்,
பொய்யா மரபின் பூமலி பெருந்துறைத்,
துணைப்புணர்ந்த மடமங்கையர்,
பட்டு நீக்கித் துகில் உடுத்து,
மட்டு நீக்கி மது மகிழ்ந்து,
மைந்தர் கண்ணி மகளிர் சூடவும்,
மகளிர் கோதை மைந்தர் மலையவும்,
நெடுங்கால் மாடத்து ஒள்எரி நோக்கிக்
கொடுந்திமில் பரதவர் குரூஉச் சுடர் எண்ணவும்,
பாடல் ஓர்த்தும், நாடகம் நயந்தும்,
வெண்நிலவின் பயன் துய்த்தும்
கண்அடைஇய கடைக் கங்குலான்,
மாகாவிரி மணம் கூட்டும்,
தூஉ எக்கர்த் துயில் மடிந்தும்,
வாலிணர் மடல் தாழை
வேலாழி வியல் தெருவில்
நல் இறைவன் பொருள்காக்கும்
தொல் இசைத் தொழில் மாக்கள்,
காய்சினத்த கதிர்ச் செல்வன்,
தேர் பூண்ட மாஅ போல,
வைகல் தோறும் அசைவின்றி,
உல்கு செயக் குறைபடாது
வான்முகந்த நீர் மலைப் பொழியவும்,
மலைபொழிந்த நீர் கடல் பரப்பவும்,
மாரி பெய்யும் பருவம் போல,
நீரினின்று நிலத்து ஏற்றவும்,

நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்,
அளந்தறியாப் பலபண்டம்,
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெரும் காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்,
புலிப் பொறித்துப் புறம் போக்கி,
மதி நிறைந்த மலிபண்டம்
பொதி மூடைப் போர் ஏறி,
மழையாடுசிமைய மால்வரைக் கவாஅன்,
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூருகிர் ஞமலிக், கொடுந்தாள் ஏற்றை,
ஏழகத்தகரொடு உகளும் முன்றில்
குறுந்தொடை, நெடும்படிக்கால்,
கொடுந்திண்ணைப் பல்தகைப்பின்
புழைவாயில் போகுஇடை கழி,
மழைதோயும் உயர்மாடத்துக்
சேவடிச், செறி குறங்கின்,
பாசிழைப் பகட்டல்குல்,
தூசுடைத் துகிர் மேனி,
மயில் இயல், மான் நோக்கின்
கிளி மழலை, மென் சாயலோர்,
வளி நுழையும் வாய் பொருந்தி''.

—பட்டினப்பாலை : 90 - 151

அத்துறைமுகப் பட்டினத்துப் பெரும் சிறப்புகளாவன கடல்மீது கலங்களில் வந்த, நிமிர்ந்த செலவினை உடைய குதிரைகள் நிலமிசை வண்டிகளில் வந்த கரிய மிளகுப் பொதிகள்; வடநாட்டு மலைகளில் எடுக்கப்பட்ட மாணிக்கமும், சாம்பூநதம் என்னும் பொன்னும்; மேற்கு மலையில் வளர்ந்த சந்தனமும், அகிலும்; தென்பாற்கடலில்

பிறந்த முத்து, கிழக்குக் கடலில் பிறந்த பவளம்; கங்கைச் சமவெளியிலிருந்து வந்த பொருள்கள்; காவிரியாற்றுப் பாய்ச்சலால் பெற்ற பல பண்டங்கள்; ஈழத்திலிருந்து வந்த உணவுப் பொருட்கள்: கடாரத்திலிருந்து வந்த கற்பூரம், பன்னீர், குங்குமப்பூ; மற்றும் அரிய பெரிய பண்டங்களைக் கொண்டிருப்பதே ஆம்:

> "நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
> காலின் வந்த கருங்கறி மூடையும்
> வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்,
> குடமலைப் பிறந்த ஆரமும், அகிலும்,
> தென்கடல் முத்தும், குணகடல் துகிரும்
> கங்கை வாரியும், காவிரிப் பயனும்,
> ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்,
> அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி".
>
> —பட்டிப்பாலை : 185 - 192

அந்நகரத்துத் தெருக்களில், பன்மொழி பேசும் மக்களைக் காணலாம் என்றும் பட்டினப்பாலை ஆசிரியர் கூறுகிறார். ("மொழிபல பெருகி பழிதீர் தேஎத்துப் புலம்பெயர் மாக்கள் கலந்து இனிய உறையும்" - 216,1217) ஆகவே, காவிரிப் பூம்பட்டினம், கரிகாலன் காலத்தில், வளங்கொழிக்கும் துறைமுகப் பட்டினமாகத் திகழ்ந்தது என நம்பலாம்.

**நகரத்தில் ஆரிய நாகரீகம்:**

இவ்வாணிகத்தின் தலையாய காரணத்தால், தமிழகத்தின் இத்துறைமுக நகரத்திற்கும், வடஇந்தியாவுக்கும் இடையில் மிக நெருங்கிய போக்குவரத்து இருந்தது. ஆகவே, ஆரிய நாகரீகம், தமிழ்நாட்டின் பிற பகுதிகளில் பரவியதிலும் முன்னதாக, இந்நகரில் பரவத் தொடங்கிவிட்டது. பிற இடங்களில் பெறாத செல்வாக்கை ஆங்குப் பெற்றுவிட்டது. இப்பாட்டு அளிக்கும் சான்றுப்படி, காவிரிப்பூம் பட்டினத்தில், புத்த, சமணப்பள்ளிகளும், ஒளிவீசும் சடை முடியுடையராகிய

முனிவர்கள் எடுக்கும் வேள்வித் தீயிலிருந்து எழும் வேள்விப் புகைக்கு அஞ்சி, குயில், தன் கரியபெரிய பெடையோடு பறந்தோடிவிடும் பூம்பொழில்களும் இருந்தன.

''தவப் பள்ளி, தாழ்காவின்
அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும்
ஆவுதி நறும்புகை முனைஇக் குயில் தம்
மாயிரும் பெடையோடு இரியல் போகி''.

—பட்டினப்பாலை: 53 - 55

காஞ்சியைத் தவிர்த்துத், தமிழகத்துப் பிற நகரங்களில், பிராமணர்கள், புத்தர்கள் சமணர்களின் குடியிருப்புக்களைத் தமிழிலக்கியத்தில், இப்போதுதான் முதன்முதலில் கேள்விப் படுகிறோம். (ஆசிரியன் இக்கூற்று உண்மைக்கு மாறானது. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் புகழ் பாடும் மதுரைக் காஞ்சியில் மதுரைமாநகரைக் கவ்விக் கொண்டுவிட்ட ஆரிய நாகரீகக் குறிப்புக்கள் அடுக்கடுக்காகக் கூறப்பட்டுள்ளன. முதுகுடுமிப் பெருவழுதி உள்ளிட்ட பாண்டிய அரசர்கள் பற்றி ஆராயும் இதே நூலின், ''பாண்டிய அரசர்கள்'' என்ற தலைப்பிடப்பெற்றுள்ள 23வது அதிகாரத்தில், இதே ஆசிரியர், மதுரை மாநகரத்தில் இடம் கொண்டுவிட்ட ஆரிய நாகரீகக் குறிப்புக்களை, மதுரைக் காஞ்சியிலிருந்தும், புறநானூற்றிலிருந்தும் அடுக்கடுக்கான எடுத்துக்காட்டுக்களை எடுத்து ஆண்டுள்ளார்.) பாட்டின் மற்றொரு பகுதியில், ஆரிய நாட்டு மாநிலங்களில் உள்ளது போலவே, காவிரிப்பூம்பட்டினத்தில், தாம் கற்ற பல்வேறு கல்வித் துறைகளிலும், முட்டறக்கற்ற மூதறிவாளராம் வாதிகள், தம்மோடு வாதிடவல்லார் வருக என அறைகூவி அழைப்பதை உணர்த்தும் கொடிகள் நாட்டப்பட்டிருப்பது கூறப்பட்டுளது, ஆகவே, இக்காலத்தில், காவிரிப்பூம்பட்டினம் ஆரிய நாகரீகத்தின் மிகப்பெரிய மையமாக ஆகியிருக்க வேண்டும்;

''பல்கேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
உறழ் குறித்து எடுத்த உருகெழு கொடியும்''.
—பட்டினப்பாலை : 169 - 171

அந்நகரத்து வணிகப் பெருமக்கள், வேதக் கடவுள்களாம் அமரர்களை வழிபட்டனர்; அவர்களுக்கு வேள்விகள் செய்து ஆவுதி அளித்தனர். (வேள்விகளில் பலியிடுவான் வேண்டி) ஆக்களையும், ஆனேறுகளையும் வளர்த்தனர்; நான்கு வேதங்களிலும் வல்ல பிராமணர்களைப் புகழ்ந்து பாராட்டினர்; ஆகவே, பிராமண வழிபாட்டு முறை அந்நகர மக்களிடையே பரவியிருந்தது:

''அமரர்ப் பேணியும், ஆவுதி அருத்தியும்,
நல்ஆனொடு பகடு ஓம்பியும்
நான்மறையோர் புகழ் பரப்பும்''
—பட்டினப்பாலை : 200 - 202

இறவாப் பெரும்புகழ் வாய்ந்த அவ்வமரர்கள், நகரின் காவலர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர் (''செல்லா நல்லிசை அமரர் காப்பின்'' —பட்டினப்பாலை : 184) குற்றம் தீர்த்துப் புகழ் ஏற்றி நிறுவப்பட்ட கடவுள்களும், ஆரியக் கடவுளாகவே தெரிகின்றன. (''மையறு சிறப்பின் தெய்வம் சேர்ப்பிய'' —பட்டினப்பாலை : 159)

**பழந்தமிழ்க் கடவுள்களும் வழிபடப்பட்டனர் :**

ஆரியக் கடவுள்களின் கடுந்தாக்குதலால், பழந்தமிழ்க் கடவுள்கள் கைவிடப்பட்டுவிடப்படவில்லை. நகரங்களில் அக்கடவுள்களும் சிறப்புற்றிருந்தனர். அகன்ற பெரிய அங்காடி வீதிகளில், வெறியாடு மகளிரின் ஆடல்பாடல்களுக்கேற்ப, குழலும், யாழும் இசைக்க, முழவும், முரசும் முழங்க நடைபெறும் முருகவேள் விழா இடையறவு படாது நிகழ்ந்து கொண்டிருக்கும்:

"செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழல் அகவ, யாழ் முரல,
முழவு அதிர, முரசு இயம்ப,
விழவு அறா வியல் ஆவணம்";

—பட்டினப்பாலை: 154 - 158

இக்கால அளவில், முருகன், மலைநாடாம் குறிஞ்சியிலிருந்து, ஆற்றுப்பள்ளமாம் மருதத்துக்குக் குடிபெயர்ந்து விட்டான்; களத்தில் உயிர் நீத்துக் கடவுளாகிவிட்ட வீரர்களை அவர் நினைவாக நடப்படும் நடுகல்லில் இடம் கொளச் செய்து, அவர் கையாண்ட வேலையும் கேடயத்தையும் உடன் வைத்து வழிபடுவதும் தொடர்ந்து நடைபெற்றது.

"கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி
நடுகல்லின் அரண்போல"

—பட்டினப்பாலை: 78 - 79

அதுபோலவே, முன்னரே கூறியவாறு, சுறாமீன் கொம்புருவில் கடற்கடவுள் வழிபாடும் தொடர்ந்து நடைபெற்றது. கம்ப வடிவின் கடவுளும் வழிபடப்பட்டது. இது, போரில் சிறை பிடித்துக் கொண்டுவரப்பட்ட பகையரசர்களின் மனைவி மார்கள், ஊரரர் நீர் உண்ணும் நீர்த்துறையில் நீராடி எழுந்து, அந்திப் போதில், மெழுகித் தூய்மை செய்து, அவியாத விளக்கேற்றிவைத்து, மலர்தூவி அணி செய்த, பலரும் வந்து தொழ, ஊர்ப் பொதுவிடத்தே நடப்பட்ட லிங்கமாதல் கூடும்:

"கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி,
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்கம் ஏறிப் பலர் தொழ
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்"

—பட்டினப்பாலை: 246

இக்கம்பம், கந்து என அழைக்கப்பட்டது. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணை இயலில் (33), கடவுள் வாழ்த்துக்குரிய ஒன்றாகக் கூறப்படும் "கந்தழி" பெரும் பாலும் இக்கந்தின் மாற்றுருவமாகும். ஆனால், உரையாசிரியர் நச்சினார்க்கினியர், கந்தழி என்பது, "ஒரு பற்றுக் கோடின்றி அதுவாகித் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள்" என்று கூறியுள்ளார். இக்கருத்தால் உணரப்படும், கடவுள் நிலையில், மிக உயர்ந்த நிலையாம் அருவமாம் நிலை, பழந்தமிழ்ப் பாக்கள் எதிலும் இடம் பெறவில்லையாத லாலும், அத்தகைய வாழ்த்துப் பாவிற்கான எடுத்துக் காட்டு ஒன்றுகூட, அவரால் காட்ட இயலாத அளவு, உருவம் அற்று அருவமாம் ஒன்றைப் பாடி வழிபடும் கொள்கை, உண்மை யான பழந்தமிழ்க் கொள்கைக்கு முற்றிலும் புறம்பானது ஆதலாலும், அவர் விளக்கம் அறவே, ஒப்புக்கொள்ளத் தக்கதன்று.

**எரி ஓம்பல் நெறிக்குக் கரிகாலன் ஆதரவு:**

கரிகாலன், தன்னுடைய புதிய தலைநகரில், ஆரிய நாகரீகத்தோடு கொண்டுவிட்ட நெருக்கமான தொடர்பின் விளைவு, அவனுடைய கற்பனை வளமெல்லாம், பிராமணர் களால் செய்து காட்டப்பட்ட ஒளிமயமான எரியோம்பல் நெறிகளால் கவரப்பட்டு, அவன், பொருட்செலவுமிக்க வேதயக்ஞங்களைப் பொருள் அளித்துப் பேணிக்காத்த முதல் தமிழரசன் ஆயினன்; தமிழ்நாட்டில் செய்துகாட்டப்பட்ட மிகப் பெரிய ஸ்ரார்த்தச் சடங்கு முறையின் மிகப் பழைய விளக்கம், கரிகாலன் இறப்பை எண்ணிப், புலவர் கருங்குழல் ஆதனார் பாடிய கையறு நிலைச்செய்யுளில் காணப்படுகிறது. "அறத்தைத் தெளிய உணர்ந்த ஒழுக்கத்தால் மாட்சிமைப் பட்ட, அந்தணர்களின் அவையின்கண், வேள்விக்குரிய முறைகளை நன்றாக உணர்ந்த ஆறங்கங்களையும் உணர்ந்த சடங்கவிகள், வேள்விச் சடங்குகளை முன்னின்று காட்ட, பலராலும் புகழப்பட்ட, தூய இயல்பு வாய்ந்த கற்பு, ஒழுக்கமாம் உயர்ந்த கொள்கையினராய, குற்றம் தீர்ந்த

குலமகளிரோடு இருந்து, வட்டவடிவில் பல படையாகக் கட்டப்பட்ட மதில்களால் சூழப்பட்ட வேள்விச்சாலையில், பருந்து வடிவமாகச் செய்யப்பட்ட, இடத்தில் நாட்டிய யூபமாகிய நெடிய கம்பத்தில் வேதத்தால் சொல்லப்பட்ட முறைப்படி வேள்வியினைச் செய்துமுடித்து".

"அறம் அறக்கண்ட நெறிமாண் அவையத்து
முறை நற்கு அறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூவியற் கொள்கைத் துகளறு மகளிரொடு
பருதி உருவின் பல்படைப் புரிசை
எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்
வேத வேள்வித் தொழில்முடித் ததூஉம்":

—புறநானூறு : 224 : 4 - 9

**கரிகாலன் எரியோம்பலை ஆதரித்ததைப் பிற்கால அரசர்களும் பின்பற்றுதல் :**

கரிகாலனால் தொடங்கப்பட்ட வேதயக்ஞங்களுக்கு ஆதரவு தரும் பாணி, ஏனைய தமிழரசர்களாலும் விரைவில் பின்பற்றப்பட்டது. சேர அரசர்களில் பல்யானைச்செல் கெழுகுட்டுவன், பதிற்றுப்பத்து மூன்றாம் பத்தால் தன்னைப் பாடிய புலவர் பாலைக் கௌதமனாரும், அவர் மனைவியும், யாக முடிவில் நேரே சுவர்க்கம் புகுவதற்காம் யாகத்தைச் செய்யத் துணை புரிந்தான் எனப் பிற்காலச் காதுவழிச் செய்திகளில் குறிப்பிடப்பட்டுள்ளான். பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பாண்டிய அரசன், பல யாகங்களைச் செய்தான். கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வழக்கிற்கு உரிய பொருளாகி, பண்டு தானம் பெற்றவனின் வழிவந்தவர்க்கே, இம்முறை செப்புச்சாஸனம் தொடர மீண்டும் வழங்கப்பட்ட நிலங்களை இப் பல்யாக சாலை முதுகுடுமி, ஒரு பிராமண வேள்வியாசிரியனுக்குத் தானமாக அளித்தான். கரிகாலனின் வழிவந்த பெருநற்கிள்ளி என் பானொருவன், வேதமுறைகளின்படி முடி சூட்டிக்கொண்ட

தோடு, ராஜசூயம் என்ற யாகத்தைச் செய்து, ராஜசூயம் வேட்ட என்ற சிறப்புத் தொடரைத் தன் பெயரோடு இணைத்துக் கொள்வதும் செய்தான். இவ்வாறு வேத வேள்விகளைச் செய்திருக்கவும், அந்நிகழ்ச்சிக்குப் பிறகு, சோழர் குலம், விரைந்து நிலைகுலைந்து போய், தென்னிந்திய வரலாற்றில் சில நூற்றாண்டு காலம் பெரும்பாலும் மறைந்தே போய்விட்டது.

**பார்ப்பனத் தமிழ்ப் புலவர்கள் :**

கரிகாலனின் செயலும் சிந்தனையும், ஆரிய நாகரீகத்திற்கு முழுமையாக அடிமைப்பட்டுப் போனதன் மற்றொரு விளைவு, பல பார்ப்பனத் தமிழ்ப்புலவர்களின் தோற்றமாம். இது, ஆரியக் கருத்துக்களுக்கு ஆட்பட்டுவிடாவாறு தமிழ்ப் புலவர்களைத் தடுத்துக் காத்துவந்த அணையை உடைத்து விட்டது. ஆரிய நம்பிக்கைகள், ஆரிய மூட நம்பிக்கைகள், ஆரியப் பழக்க வழக்கங்கள் (சமஸ்கிருதச் சொற்கள்) தமிழர் வாழ்க்கையில் நுழைந்து, தமிழ்ப் பாக்களில், தென்னிந்திய கருத்துக்கள், நம்பிக்கைகள், மூட நம்பிக்கைகள், பழக்க வழக்கங்களை அடுத்தடுத்துக் கூறப்படவுமாயின. இவற்றை வெளிப்படுத்தும் பாக்கள், ஆரிய மூலம் அறவே இடம் பெறாத பாக்களிலும் காலத்தால் பிற்பட்டவை என்பதை எளிதில் காணக்கூடும். தமிழ் அரசர்களும், புராண அரச மரபுகளாம் சூரிய, சந்திர மரபுகளோடு தங்களை இணைத்துக்கொள்வதைத் தேடி அலைந்தனர். இவற்றிற்கான எடுத்துக் காட்டுக்கள், பின்வரும் அதிகாரம் ஒன்றில் கொடுக்கப்படும்.

**கரிகாலன் வாழ்க்கையில் கல்வெட்டுக்கள் அளிக்கும் விளக்கம் :**

கரிகாலன் வாழ்க்கையை, இதுகாறும், சமகால இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் ஆராய்ந்தோம். கரிகாலன் வாழ்க்கையின் சில நிகழ்ச்சிகளுக்கான கல்வெட்டுச் சான்று உறுதிப்பாட்டினை, இச்சோழ மன்னன் காலத்துக்குப் பிற்பட்ட காலத்துக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் காதுவழிச் செய்திகளிலிருந்து பெறக்கூடும். அவ்

வகையில், பெரும்பாலும், பதிப்பித்து வெளியிடப்படாதன வாய ரேனாடு கல்வெட்டுக்கள். [அவற்றுள் ஒன்று முன்பே எடுத்துக் காட்டப்பட்டது.] அம் மாவட்டத்தைக், கரிகாலன் வெற்றி கொண்டது, அவன் காடுகளை அகற்றியது, நகரங்களைத் தோற்றுவித்தது. நீர்ப்பாசன முறைகளை வகுத்தது, அவன் வழி வந்தவர்களாகிய, தெலுங்கு பேசும், சோழ அரச இனத்தைத் தோற்றுவித்தது ஆகியவற்றிற்குச் சான்று பகர்கின்றன. "கி: பி. 640இல் சீன யாத்திரீகன் ஹியூான் ஸ்வாங் காலத்தில், இத்தெலுங்கு ஆவணங்களை நாம் கண்டெடுத்த நிலப்பகுதியில், "சூ-லி-யெ" (chw - li - ye) என்ற பெயருடைய நாடு இருந்திருப்பது, கி. பி. ஏழாம் நூற்றாண்டில், இந்நாடு இருந்தது என்பதற்குத் தெளிவான சான்று ஆகும்". (Ep. Ind. Vol. XI Page: 344) இவ்வரசு இனத்துச் செப்பேடுகளில், புண்ணிய குமாரனின் மாலேபாடு செப்பேடுகள், "இந்தியக் கல்வெட்டுக்கள்", பதினோராம் தொகுதியில் (Ep. Ind. Vol. XI) வெளியிடப்பட்டுள்ளன. கரிகாலன் ஆட்சிக்குப் பிற்பட்ட காலத்தில், இவ்வினத்து அரசர்கள், காஞ்சிப் பல்லவர்களுக்கு அடங்கியவராயினர்; பின்னொரு காலத்தில், அவ்வரச இனம் மறைந்துவிட்டது. "அவர்களில் சிலர் பல்லவ நாட்டின் வட பகுதியை வென்று கைக்கொண்ட மேற்குச் சாளுக்கியர்களுக்கு அடங்கியவராயினர். இவ்வினத்தோடு உறவுடைய ஒரு பிரிவினர், நாகவம்ஸ அரசன் ஜகதேக பூஷணன் (கி. பி. 1060-1061) ஆட்சியின் கீழ்ச், சக்கர கோடத்தில், பணியினைத் தேட, மேலும் வடக்கு நோக்கிப் பயணம் மேற்கொண்டதாகத் தெரிகிறது". (சென்னை கல்வெட்டு அறிக்கை: ஆண்டு: 1909; பக்கம்: 112 (Madras Ep. Report for 1909 : Page 112) மத்திய மாகாணத்துக் கோண்டு அரச இனம் இவர்களால் தோற்றுவிக்கப்பட்டது.) பன்னிரண்டு, பதின்மூன்றாம் நூற்றாண்டுகளில், குண்டூர், நெல்லூர், வட ஆர்க்காடு, கடப்பை, செங்கற்பட்டு மாவட்டங்களில், வாரங்கல் காகத்தியர்களுக்குக் கடமைப்பட்டவராகிய, இப்போது "தெலுகு சோட" (Telugu Coda) எனத் திரிந்து வழங்கும்,

தெலுங்குச் சோழ அரச குடும்பங்கள் வளம் பெற்றிருந்தன. (Madras Ep. Report for 1900 Page : 17) காகத்தியர் தாமும், தங்கள் கால்வழியினைச் சூரியனிலிருந்து கண்டு, கரிகால சோழ அரசனை, அவர்களின் புராண வழி முன்னோர் வரிசையில் வைத்து எண்ணுகின்றனர் (Madras Ep. Report for 1900 : Page 106 ; Page : 44) அனந்தபூர் மாவட்டத்திலும், கன்னட நாட்டு எல்லைப் பகுதிகளிலும் கூட, இச் சோழரின் ஒரு கிளை சிறப்புற்றிருந்தது. கி.பி. பதினாறாம் நூற்றாண்டு போலும் பிற்பட்ட காலத்திலும், வழிவழி வந்த காதுவழிச் செய்தியாம் கரிகாலன் வழிவந்தவர், பழைய பெருநகராம் உறையூரின் ஆட்சியாளர் என்ற பெருமையோடு, சோழர்குலப் படைத்தலைவர் சிலர், விஜய நகர அரசின்கீழ், மண்டலத் தலைவர்களாகப் பணிபுரியக் காணப்படுகின்றனர் (Ep. India Vol. XI Page 344) தெலுங்குமக்களின் வரலாற்றுத் தொடக்க காலத்தில், அத்தெலுங்கு மக்கள் சிந்தனைமீது, கரிகாலன் பொறித்துவிட்ட நல்லெண்ண முத்திரை, பெரும்பாலும், அனைத்துத் தெலுங்கு அரச இனங்களுமே, அவன் வழியில் வந்தவையாகவே உரிமை கொள்ளுமளவு, அத்துணைப் பெருமை வாய்ந்ததாம்.

**கரிகாலனும் காவிரியும் :**

இத்தெலுங்குச் செப்பேட்டு ஆவணங்கள், "கவேரன் மகளின்" (கா - ஏரி எனும் ஆறு) கரை கடந்து ஓடும் வெள்ளப் பெருக்கைத் தடுத்து நிறுத்திய" கரிகாலன் பெருஞ் செயலைக் குறிப்பிடுகின்றன. (IP. India Vol. XI Page 339) காவிரி ஆற்றுக்குக் கரை கட்டினான் கரிகாலன் எனக் கூறுவல், முதலாம் ராஜேந்திர சோழ தேவனின் ஆறாம் ஆண்டுத் திருவாலங்காட்டுச் செப்பேட்டுத்தொடர்களில், இத்தொடர்ப் பொருள் விளக்கப்படுகிறது. (S. I. I. III : III Page: 386) காவிரி ஆற்றின் கடைமுகப் பகுதி, பண்டை நாட்களில், புனல் நாடு, அதாவது வெள்ளத்தின் நாடு எனப் பெயர் பெறுமளவு, காவிரியாறு நாடு முழுவதையும், ஆண்டு தோறும் தவறாமல், வெள்ளக்காடாக்கி வந்துளது. உயர்ந்த வெள்ளத்

தடுப்புக் கரைகளைக் கட்டியதன் மூலம், ஆண்டுதோறும், தவறாமல் நிகழும் இயற்கை விளைவிக்கும் அழிவினின்றும், நாட்டைத் தெளிவுறக் காத்தான். குளம் வெட்டினான்; வளம், பெருக்கினான் ("குளம் தொட்டு வளம் பெருக்கி" பட்டினப்பாலை : 284) என்று மட்டுமே கூறும் பட்டினப் பாலையில், கரிகாலனின் இப்பெரும்பணி, சிறப்பிட்டுக் கூறப்படவில்லை; இப்பெரும் பணி, பிற்கால மக்களின் சிந்தனையைக் கவர்ந்த அளவு (உதாரணத்திற்கு: கலிங்கத்துப் பரணி ஆசிரியர்: பாட்டு: 184) அவனுடைய சமகாலப் புலவர்களின் சிந்தனைகளைக் கவர்ந்ததாகத் தெரியவில்லை; ஆனால், ஒன்றற்கொன்று தொடர்பிலவாய, தெலுங்கு, தமிழ்ச் சிலா சாஸனங்களின் வரிசைகள் பலவும், இக்காது வழிச் செய்தியைச் சிறப்பாகக் குறிப்பிட்டிருப்பதால், காவிரிக்குக் கரை கட்டியது, கரிகாலனின் தொடக்க காலத்திய சிறிய பணியாம் என நாம் நம்பலாம். (பொருநராற்றுப் படையில், நுரைத்து ஒலிஎழுப்பிப் பாயும் புனலில், அது, வரைப்பகத்தே பாயும் பகுதியில், மகளிர் நீராடுவர் எனும் பொருள் தருவதான, "நுரைத்தலைக் குரைப்புனல், வரைப்பகம் புகுந்தொறும் புனலாடு மகளிர்" (240 - 241) என்ற தொடர் வருகிறது. கடைசித் தொடருக்கு, உரையாசிரியர், குளமும், குட்டையும் எனப் பொருள் கொண்டுள்ளார். ஆனால், மகளிர், புது வெள்ளம் வரும் போது, ஆற்றில் தான் குளித்தனரேயல்லது, குளத்திலும், குட்டையிலும் குளிக்கவில்லையாகலே, "வரைப்பகம்" என்ற தொடர், ஆறு கரைகட்டித் தடுக்கப் பட்ட இடம் எனும் பொருள் உடையதாகக் கொண்டு, அத்தொடரில், மேலே விவாதிக்கப்பட்ட உண்மைச் செய்தியின் குறிப்பீட்டினைக் காணும் கருத்துடையேன் நான்.) முடத்தாமக் கண்ணியார், தம்முடைய பொருநராற்றுப் படையின் கடைசிவரிகளில், "குனிந்து நின்று அரிவாளின் கூரிய வாயால், நெற்கதிர்களை அரிந்து, கதிர்க்கட்டுக்களை, மலைபோல அடுக்கி, நாள்தோறும் கடாவிட்டு, மேருமலை போல் குவிந்த நெல், நெருங்கி அடுக்கிய மூட்டைகள்

இல்லாத வெற்றிடம் சிறிது இல்லையாம்படி, எங்கும் இடப்பதற்குக் காரணமாம்படி, செந்நெல் விளையும் வரப்பு கட்டின ஒருவேலி பரப்புள்ள நிலம், ஓராயிரம் கலம் விளையு மாக'' எனக் கூறியுள்ளார்:

''கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து,
சூடு கோடாகப் பிறக்கி, நாள்தொறும்
குன்றெனக் குவைஇய, குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையின் இடம்கெடக் கிடக்கும்
சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாக''.

—பொருநராற்றுப்படை : 242 - 247

மிகப் பெரிய இவ்விளைவு, கரிகாலன், காவிரியின் வெள்ளத்தைத் திட்டமிட்டு முறைப்படுத்தியிருந்ததினாலேயே பெறப்பட்டிருக்க முடியும். எடுத்துக் காட்டுக்களை எடுத்தாளும்போது, சில இடங்களில், பொருத்தமற்றனவற்றைக் காட்டிவிடும். திரு. வி. கனகசபைப்பிள்ளை அவர்கள், ''காவிரியிலிருந்து பாசனத்திற்கான தண்ணீர் வழங்க, கரிகாலன், மதகுகளையும், கால்வாய்களையும் கட்டினான் எனக்கூறி, (ஆயிரத்து எட்டு நூறு ஆண்டுகளுக்கு முந்திய தமிழர் ; பக்கம் ; 68) அதற்கு ஆதாரமாக, சிலப்பதிகாரம், காதை : 10, வரிகள் 108-111ஐக் கொடுத்துள்ளார். அவர் குறிப்பிடும் அவ்வரிகள் ''கடல் அலைகள் பொங்கி எழுவது அதிகமாகும் போது, காவிரியின் புதுவெள்ளம், அது கடலோடு கலக்கும் வாய்த்தலையிலிருந்து பின்னோக்கி எழத், தண்ணீர், பாசனக் கால்வாய்களுள். ஓயாது ஒலித்தவாறே உட்புகும்'' என்ற பொருளைத் தான் தருகின்றனவேயல்லது, கரிகாலனின் பெருஞ்செயல் எதையும் குறிப்பிடவில்லை:

'கடல் வளன் எதிரக், கயவாய் நெரிக்கும்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
ஒலிறந்து ஒலிக்கும்''. சிலம்பு : 10 : 107-109

இத்தொடர்கள், அப்பாடல் பாடப்பெற்றபோது, அதாவது, கரிகாலன் காலத்துக்குச் சிறிது பிற்பட்ட காலத்தில், காவிரியி லிருந்து வெட்டப்பட்ட பாசனக்கால்வாய்கள் இருந்தன என்பதை மட்டுமே உறுதி செய்யும்.

திருவாளர் வி. எ. சிமித் அவர்கள், கரிகாலன் ஈழத்தின் மீது படையெடுத்துச் சென்று ஆயிரமாயிரம் கூலியாட்களைக் கொண்டுவந்து, காவிரி ஆற்றிற்குத் தான் கட்டிய நூறு மைல் நீளக் கரைகட்டும் பணியில் ஈடுபடுத்தினான். காவிரிப் பட்டினத்தைத் தோற்றுவித்தான் எனப் பழந்தமிழ்ப் புலவர்களால் கூறப்பட்டுள்ளனர்" எனக் கூறியுள்ளார் (The Early History of India. 4th Edition. Page 481). பொய்க்கூற்றின் ஒரு சிறு கூறு இது: கரிகாலனின் ஈழப் படையெடுப்பு குறித்தோ, சிறை கொண்ட வீரர்களைக் கொணர்ந்தது குறித்தோ, பழந்தமிழ்ப் புலவர் எவரும் குறிப்பிடவில்லை. இவ்வறிவிப்புகள், மிகவும் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்த ஈழநாட்டுக் கற்பனைக் காலக் கணிப்பு களிலேயே (Ceylonese Legendry chronicles) காணப்படு கின்றன. அதுவுமல்லாமல், நூறுமைல் நீளக்கரை பற்றிய குறிப்பு எங்கும் காணப்படவில்லை. கரிகாலன் கட்டிய கரை, எத்துணைக் குறுகியது, எவ்வளவு நீண்டது என்பதைக் கண்டறிவது அறவே இயலாது. காவேரிப்பட்டினம் ஜாதகக் கதைகளில் குறிப்பிடப்பட்டுள்ளமையாலும், அக்கதைகள் எழுவதற்கு நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே, அது துறைமுகப் பட்டினமாக இருந்தது ஆதலால் அது, கரிகாலனுக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இருந்தது; ஆகவே காவிரிப்பட்டினத்தைக், கரிகாலன் தோற்றுவிக்க வில்லை.

**கரிகாலனும் திரிலோச்சன பல்லவனும்:**

தெலுங்குக் கல்வெட்டுக்கள், இப்பெரும்பணி, (காவிரிக்குக் கரை கட்டியது) கரிகாலன் ஆணைப்படி, தம் கண்களை, அவனுடைய தாமரைத் தாள் மீது வைக்கும்

திரிலோசனனாலும், மற்றும் பிற அரசர்களாலும் செய்து முடிக்கப்பட்டது என்ற உண்மையான சான்றுகளைக் கொண்டுள்ளன. திரிலோசனன், திரிநேத்திரன், திருநயனன், முக்கண்டி, என்பவை பல்லவ என்ற பின் இணைப்போடு, தெலுங்குக் கல்வெட்டுகளில் பெருமளவில் காணப்படும், ஒரு பொருள்குறிக்கும் பல சொற்களாம். (Ep. Ind. Vol. XI P. 340.) பல்லவர் வரலாறு, தனித்து உணரத்தக்க, மூன்று கால கட்டங்களாகப் பிரிக்கத் தக்கதாம். 1) காஞ்சியைத் தலைநகராகவும், கிருஷ்ணா ஆற்றங்கரையில் உள்ள தனகடகத்தை இரண்டாம் தலைநகராகவும், கொண்டு ஆண்ட வேதச் சடங்குகளைப் பேணி வளர்த்த, தங்கள் அரச ஆவணப்பட்டயங்களைப், பிராகிருத மொழியில் வெளியிட்ட, சமுத்திர குப்தனின் அலகாபாத் "ப்ரஸஸ்தி" (Prasasti) யில், குறிப்பிடப்பட்டுள்ளவாறு, விஷ்ணுகோபன் என்பான் ஒருவன், ஆட்சி புரிந்திருந்த கி. பி. 350இல், தங்கள் ஆட்சி அழிநிலைக்கு ஆளாக்கப்பட்டுவிட்ட பல்லவர் காலம், 2) தங்களுள் ஒருசிலர் வெறும் பெயரளவில் மட்டுமே காஞ்சித் தலைவர்களாக இருந்த, காஞ்சியில் அல்லாமல் கிழக்குக் கடற்கரைக்கண் உள்ள தெலுங்கு மாவட்டங்களி லிருந்து கொண்டு தங்கள் பட்டயங்களைச் சமஸ்கிருதத்தில் வெளியிட்ட, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த பல்லவர்கள், 3) மீண்டும் காஞ்சியிலிருந்து ஆட்சி புரிந்த, சமஸ்கிருதம் தமிழ் ஆகிய இரு மொழிகளிலுமான பட்டயங் களைக் கொண்ட, எண்ணற்ற கோயில்களைக் கட்டிய, கி. பி. 600க்கு முன்பே, தமிழர்களோடு இரண்டற ஒன்றுபட்டு விட்ட பல்லவர். இப்பல்லவர்கள், கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து, ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை சிறப்புற்றிருந்தனர், இரண்டாவது காலகட்டம், அதாவது, நான்காம் நூற்றாண்டின் இடைக் காலத்திலிருந்து ஆறாம் நூற்றாண்டின் இடைக் காலம் வரையான காலகட்டந்தான், காஞ்சிமீது, பல்லவர் களுக்கு அதிகாரப் பிடிப்பு இல்லாத காலம். அவர்களைக் காஞ்சியிலிருந்து துரத்தியவன், பெரும்பாலும், கரிகாலன்

ஆகவும், அவனால், காஞ்சியில் இடமில்லாமல் செய்யப் பட்டு, சோழப் பேரரசனுக்குத் திறை செலுத்தும் சிற்றரச னாகத், தெலுங்கு நாட்டில் அரசு கண்டவன், பெரும்பாலும், திரிலோசன பல்லவனாகவும் கூடும். கிழக்குக் கடற்கரைப் பல்லவர்களின் சமஸ்கிருதப் பட்டயங்களில் உள்ள, குடிவழிப் பட்டியலில், திரிலோசனப் பல்லவன் பெயர் இடம் பெறவில்லை. ஆனால், சோளக் கதம்பர்களும் ஹேமாவதி நொளம்பர்களும், திரிலோசனக் கதம்பனையும், திரிலோசன நொளம்பனையும், முறையே, தங்கள் அரச இனங்களைத் தோற்றுவித்த குல முதல்வர்களாக உரிமை கொண்டாடு கின்றனர். (Ep India XI Page : 340 X Page : 58) கடப்பா மாவட்டத்தில், இடம் பெற்றுள்ள, இப்போது, 'பெத்த முடியம்' என வழங்கும் திரிலோசனபுரம் என்ற நகரைத், திரிலோசன பல்லவன் நிறுவினான். திரிலோசன பல்லவன், புராணத் தொடர்பான கற்பனை மனிதன் அல்லன்; தெலுங்கு நாட்டின் சில பகுதிகளை ஆண்ட உண்மையான அரசனே என்பதை உறுதி செய்ய மேலும் பல உண்மை நிகழ்ச்சிகளும் உள. தெலுங்குச் சோழர் கல்வெட்டொன்று, (1907 ஆம் ஆண்டு 580 ஆம் எண்) முக்கண்டி காடுவெட்டி என்பான், அதாவது திரிலோசன பல்லவன், "பெருகஞ்சேரி" என்ற சிற்றூரை, 52 பிராமணர்களுக்கு வழங்கியதைக் குறிப்பிடு கிறது: இந்த அரசன், ஸ்ரீபர்வதத்திற்குக் கிழக்கில் 70 அக்ராகாரங்களை நிறுவுவதும் செய்தான் (Madras Epc. Report 1908. P. 82, 83).

கரிகாலனும் காஞ்சியும் :

தெலுங்கு சோட ஆவணங்களின்படி காவிரியை, இருகரைகளுக்குள்ளே அடக்கியபோது, கரிகாலன் காஞ்சி யிலிருந்தும் ஆட்சி புரிந்தான் (Madras Ep. Report 1900, Page : 17) திருவாலங்காட்டுச் செப்பேடுகள், அவன், காஞ்சிக்குப் பொன் வேய்ந்தான் எனக் குறிப்பிடுகின்றன: (காஞ்சிம் யஸ்ச நவீசகார கனகைஹ்" V 42 S.I.I. Vol. III part Page : 395.) இதற்கு, அவ்விடத்துக் கோயில்

கோபுரத்தைப் பொன் தகடுகளால் மூடினான் என்பதே, பெரும்பாலும் பொருளாகும். இக்கோயில், தென்னிந்தியாவில் ஆகம வழிக் கடவுள்களுக்குக் கட்டப்பட்ட கோயில்களில் முதல்கோயில் ஆதல்கூடும். தென்னிந்தியக் கல்வெட்டுகளில் கோயிலுக்கு வழங்கப்பட்ட நன்கொடை பதிவுபெற்ற பழங் கோயில், கூளி மஹாதாரக தேவகுல (கோயில்)த்துப், பகவான் நாராயணனுக்குக் கட்டி அளிக்கப்பட்ட, தாலூரத்தில் உள்ள கோயிலாம் (Ep. Ind; VIII P. 143) இக்கல்வெட்டு, பெரும்பாலும், கி பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. காஞ்சீபுரத்தில் எண்ணற்ற கோயில்கள், விஷ்ணுவுக்கு—பெரும்பாலும் சிவனுக்கும் கூட கட்டப்படுமளவு, காஞ்சீபுர மாவட்டம் அப்பழைய பல்லவர் காலத்திலேயே ஆரிய மயமாக்கப்படுவது, தெளிவுறத் தெரியுமளவு முழுமை பெற்றுவிட்டது. கரிகாலன் பொன் வேய்ந்த கோயில், சிவன் கோயிலா, விஷ்ணுகோயிலா என்பதை உறுதி செய்ய எந்த வழியும் இல்லை.

கரிகாலன் வாழ்க்கை ஆற்றிய பெரும்பணிகள் பற்றி இதுகாறும் கூறியவை, அவன் காலப் புலவர்களாலும், அவன் காலம் தொட்டு வழங்கி வந்து, பின்னர் எண்ணற்ற கல்வெட்டுக்களில் இடம்பெற்றுவிட்ட மரபுவழிச் செய்தி களாலும் உறுதி செய்யப்பட்டனவாம். இனி, பிற்காலப் புலவர்கள் கூறிய செய்தி விளக்கங்கள், கரிகாலன் காலத்துக்குப் பிற்பட்ட காலத்தவராய பரணர், அகநானூற்றில் தொகுக்கப்பட்ட ஒரு செய்யுளில், அவ்வரசன், வெண்ணியில் மேற்கொண்ட முதல் போரை விளக்கி, இவ்வாறு கூறுகிறார். ''கடும்சினமும் பெருவலியும் வாய்ந்த பெரிய புகழ் வாய்ந்த கரிகாலன், போர் ஆரவாரம் மிக்க கள்வளம் வாய்ந்த வெண்ணிவாயில் என்ற இடத்தில், சிறப்பு வாய்ந்த மைகையரசர்கள் படைகொண்டுவந்து போரிட்ட களத்தில், பேரொலி எழுப்பும் அவர்களின் வீரமுரசும் அழிய வேளிர் குலத்தலைவர்கள் பதினொருவருடன் இரண்டு பெருவேந்தர் களையும் அழித்தனன்.

"காய்சின மொய்ம்பின் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசம் பொருகளத்து ஒழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய".

—அகம் : 246 : 8-13

வெண்ணிப் போர்க்களத்தில், இருபெருவேந்தர்களோடு குறுநிலத் தலைவர்கள் பதினொருவர் இருந்தது, கரிகால் சோழனின் சமகாலப் புலவர்களால் குறிப்பிடப்படவில்லை யாயினும் (அடிக்குறிப்பு:- பரணர் குறிப்பிடும் இவ்வெண்ணிப் போர், கரிகாலன் சமகாலப்புலவர்களால் குறிப்பிடப்பட வில்லை என்பது தவறு. போர் நடந்த அவ்வெண்ணிவாயிலில், அப்போர்க்காட்சியைக் காணும் வாய்ப்பினைப் பெற்ற, அவ்வூர் குயவர் குலத்து வந்த பெண்பாற்புலவர், அப்போரில் வெற்றி கண்ட கரிகாலனிடமும், அவனால் பெற்ற புறப் புண்ணுக்கு நாணி வடக்கிருந்து உயிர்விட்ட சேரலாதனை நல்லன் எனக் கரிகாலன் கேட்கப் பாடிய பாட்டு ஒன்று புறநானூற்றில் (66) இடம்பெற்றுளது. அப்பாட்டை, இவ்வதிகாரத்தின் தொடக்கத்தில் எடுத்து ஆண்டு இருக்கும், திருவாளர். பி. டி. எஸ். அவர்கள், இங்கு இவ்வாறு கூறுவது ஏனோ? —மொழிபெயர்ப்பு ஆசிரியர்), அது காதுவழிச் செய்தியின் ஒரு சிறு உண்மைக்கூற்று ஆகும். கரிகாலன், தமிழ்நாட்டைத் தன் ஆட்சிக்கீழ்க் கொண்டுவந்த பெரு நிகழ்ச்சிகளில், ஒரு சிறு நிகழ்ச்சியான, சேரநாட்டைச் சேர்ந்த வாகைப் போர்க்களத்து ஒருநாள் போரில், ஒன்பது குறுநிலத் தலைவர்களின் தோல்வி பற்றிய செய்தியும், காதுவழிச் செய்தியின் ஒருசிறு உண்மைக்கூற்று ஆகும். இப்போர் பரணரால் இவ்வாறு விளக்கப்பட்டுள்ளது. "சிறந்த வளம் கொழிக்கும் கரிகால்வளவன்முன் நின்று போரிடமாட்டாது, வாகைப் பறந்தலை என்ற போர்க் களத்தில், அவன் வெற்றிபெறத் தங்கள் ஒன்பது வெண்கொற்றக் குடைகளையும் நல்ல பகற்பொழுதிலேயே

களத்தில் கைவிட்டுவிட்டு ஓடிவிட்ட பெருமையில்லாத அரசர்கள்'':

''பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை, ஆடுபெற,
ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த
பீடில் மன்னர்''.

—அகநானூறு: 125, 18 - 21

வாகை எனும் சொல், ஒரு மலரையும் குறிக்கும். ஓர் இடத்தையும் குறிக்கும் ஆகவே, சூடும் வாகைமலரின் வேறு படுத்தி, வாகை எனும் இடத்தை உணர்த்த, சூடாவாகை என்ற சிலேடை வழங்கப்பட்டுளது.

**கரிகாலன் பற்றிய பழங்கதைகள்:**

காலப்போக்கில், நம்புதற்கியலாப் பல கட்டுக் கதைகள், கரிகாலன் பெயரை வளைத்துக் கொண்டு, இலக்கியங்களிலும் இடம் பெற்றுவிட்டன. கரிகாலன் இறப்பிற்குப் பின்னர் (எவ்வளவு காலத்திற்குப் பின்னர் என்பது சொல்ல இயலாது) இயற்றப்பட்ட, கணக்கிலாக்கட்டுக் கதைகளின் களஞ்சிய மான சிலப்பதிகாரக் காப்பியம், இந்திர விழாவையொட்டி நடைபெற்ற ஊர்வலத்தின்போது, காவிரிப்பூம்பட்டினத்துக் கடவுள்களுக்குப் பலிகொடுக்கும் பல்வேறு இடங்களுள், கொற்றப்பந்தர், பட்டிமண்டபம், தோரணவாயில் ஆகியன வைக்கப்பட்டிருந்த இடங்களை விளக்கிக் கூறுகிறது. இப்பகுதி, நம்புதற்கியலா வெற்றிச் செயல்கள் சிலவற்றைக், கரிகாலனுக்கு ஏற்றிக் கூறுவதால், அஃது, ஈண்டு எடுத்துக் காட்டப்படுகிறது. ''பரந்த இவ்வுலகில், தன்னோடு எதிர்த்துப் போரிடும் அரசர் எவரும் இலராகவே, போர் ஆர்வம் மிக்க திருமாவளவன், வாள், குடை, மயிர்நீக்காத் தோல் போர்த்த முரசுகளோடு நல்ல நாளில், தலைநகரின் நீங்கி, வடதிசைக்கண், எதிர்க்க வல்ல பகை வரைப் பெறு வோம் என்ற வேட்கையால், வடநாடு நோக்கிச் சென்ற

போது, இமையவர் இருக்கும் இமயப் பெருமலை, அவன் ஆசை அழியுமாறு இடை நின்று தடுத்து, அவன் ஊக்கத்தை உருக்குலைத்துவிடவே, அம்மலை மீது சினம் கொண்டு அதன் பிடரியில், தன் புலிச் சின்னத்தைப் பொறித்துவிட்டு, எண்ணிச்சென்றது ஈடேறாதாக, மனம் சலித்து மீள்பவனுக்குக், கடல் அரண்கொண்ட வச்சிர நாட்டு அரசன் திறையாகக் கொடுத்த முத்துப் பந்தர், வாட்போர் வல்ல மகதத்து மன்னன், போரில் தோற்றுக் கொடுத்த பட்டி மண்டபம், அவந்தி வேந்தன் உவந்து அளித்த தொழில் நலம்மிக்க வாயில் தோரணம், என்ற பொன்னும், மணியும் கொண்டு தொழில் வல்ல கம்மியனால் பண்ணப்படாத, இவர்களின் குல முன்னோர், தனக்கு இடர் வந்துற்றபோது, ஒரொரு கால் செய்த உதவிகளுக்குக் கைம்மாறாக, மயனால் செய்து கொடுக்கப்பட்ட இம்மூன்றையும் வைத்து, உயர்ந்தோர் ஒன்று கூடிவந்து ஏத்தும் மண்டபம்''.

''இருநில மருங்கில் பொருநரைப் பெறாஅச்
செருவெங் காதலின் திருமா வளவன்,
வாளும், குடையும் மயிர்க்கண் முரசும்,
நாளொடு பெயர்ந்து, 'நண்ணார்ப் பெறுக, இம்
மண்ணக மருங்கின்என் வலிகெழு தோள்', என்ப
புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்,
அசைவில் ஊக்கத்து நசை பிறக்கு ஒழியப்,
பகைவிலக் கியதுஇப் பயங்கெழு மலை என,
இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி ஏற்றிக், கொள்கையின் பெயர்வோற்கு,
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோன் இறை கொடுத்த கொற்றப் பந்தரும்,
மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்,
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த

நீவந்தோங்கு மரபின் தோரண வாயிலும்,
பொன்னினும் மணியினும் புனைந்தன வாயிலும்,
நுண்வினைக் கம்மியர் காணா மரபின
துயர்நீங்கு சிறப்பின் அவர் தொல்லோர் உதவிக்கு
மயன் விதித்துக் கொடுத்த மரபின இவைதாம்
ஒருங்குடன் புணர்ந்து, ஆங்கு, உயர்ந்தோர் ஏத்தும்
அரும்பெறல் மரபின் மண்டபம்''.

—சிலம்பு : 5 : 89 - 110

அடிக்குறிப்பு:

(பரந்த இவ்வுலகில் எனும் பொருள்பட, மூலத்தில், ''இருநில மருங்கின்'' என்ற தொடர் வந்துளது. ஆனால், உரையாசிரியர், ''இருநில மருங்கின்'' என்றது மேற்கும், தெற்கும் எனக்கொள்க; என்றது, சேர, பாண்டியருடைய நாடுகளை'' என விளக்கம் அளித்துள்ளார். இது, வலிந்து கொண்ட பொருளாம்.)

(இப்பகுதியில், கரிகாலன் என்ற பெயர் இடம் பெற வில்லை. ஆனால், திருமகள் அருள்பெற்ற சிறந்த சோழ மன்னன் எனப் பொருள்படும் திருமாவளவன் என்பதுதான் இடம் பெற்றுளது: பட்டினப்பாலையில், (299) கரிகாலனுக்கு, இச்சிறப்புப் பெயர்தான் கொடுக்கப்பட்டிருப்பதால், இதில் வரும் அத்தொடர் (திருமாவளவன்) கரிகாலனைக் குறிப்ப தாகக் கொள்ளலாம். 58ஆம் எண் புறநானூற்றுச் செய்யுளின் கொளு ''அப்பாட்டு, ''சோழன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடியது'' என்கிறது: அப்பெருந்திருமாவளன் யாவன், அப்பெருவழுதி யாவன் என்பதை உணர்ந்த மூலத்தில் எதுவும் இல்லை; அவர்கள் உயிர் நீத்த இடங்கள் அவர்கள் இன்னார் என்பதை உணர்த்தும் குறியீடாகக் கூறப்பட்டுள்ளமையால் அவர்கள்.

கரிகாலன் அல்லாத, பிற்காலத்தைச் சேர்ந்த வேறு மனிதராவர். தம்முடைய கூற்றுக்கும் அரண்செய்யும் சான்று எதுவும் காட்டாமலே, அச்சோழன், கரிகாலனாவன் எனக் கொண்டார் திருவாளர் கனகசபை அவர்கள் (1800 ஆண்டு களுக்கு முந்திய தமிழர் : பக்கம் : 68) சமஸ்கிருதப் புராணக் கதைகளில் வரும் தெய்வதச்சன் மயன் குறிப்பிடப் பட்டிருப்பது, இப்பாட்டிற்குக், கரிகாலன் காலத்திற்குப் பிற்பட்டது என்ற முத்திரையினைப் பொறிக்கிறது; "அந்நாள்" என்ற சொற்றொடர் ஆட்சியும் அத்தகையதே.

கரிகாலன் வரலாறு எழுதிய பண்டைய, இன்றைய வரலாற்று ஆசிரியர், மதிப்பளித்து இந்திய அரசர்கள் அனைவரையும் வெற்றிகொண்ட, தன்படையொடு, இமயத்தின் உச்சிக்கே அணி வகுத்துச் சென்ற, தன் அரச சின்னத்தை அம்மலைமீது பொறித்த, மீண்டு வருங்கால், போராட்டத்தின் பின்னரோ, அல்லது வேறு வகையிலோ, வடஇந்தியப் பேரரசர்கள் மூவரிடமிருந்து திறைப் பொருள் பெற்ற பெருமைகளை, இம்மன்னனுக்கு ஏற்றியுள்ளன. இந்தியாவின் தென் கோடியிலிருந்து, இமாலயத்தின் உச்சி வரையான, ஒரு நெப்போலியப் படையெடுப்பு, இந்திய வரலாற்றின் எந்தக் காலத்திலும், எண்ணிப் பார்க்கவும் இயலா, ஓர் அருஞ்செயலாகும். மேலும், பிற்காலக்கட்டுக் கதை ஒன்றின்படி, தம்முடைய பாட்டுக்குப் பதினாறு நூறாயிரம் பொற்காசுகள் பரிசளிக்கப்பட்டவரும் (கலிங்கத்துப்பரணி : பாட்டு : 185) தம் தலைவனின் அருஞ் செயல்களை மிகைப்படுத்திக் கூற முழு உரிமை பெற்றவரும் ஆன, கரிகாலன் புகழ்பாடிய, அவன் சம காலப்புலவராம் உருத்திரங் கண்ணனார், இதைக் குறிப்பிடவில்லை; சேனாடுக்கு அப்பால், கரிகாலனின் அத்துணை அருஞ்செயல்

களையும், முறைப்படுத்திக் கூறும் தெலுங்குக் கல்வெட்டுக்கள், இதை மறைமுகமாகவும் குறிப்பிடவில்லை. ஆகவே, சிலப்பதிகார ஆசிரியரின் இக்கூற்று, சோழ அரசர்களுக்குச், சூரியன் வரை செல்லும் குடிவழிப் பட்டியல் உரிமை தரப்பட்ட, வடக்கத்திய தேவ வீரர்களோடும், மானுட வீரர்களோடும் தொடர்பு படுத்தும் அருஞ்செயல்களும், தெய்வ வரப்பிரஸாதங்களும் அளிக்கப்பட்ட காலத்திய கற்பனைக் கண்டுபிடிப்புகளாம் என்றே நான் மதிக்கின்றேன்: அம்மூன்றும் பொருட்களை, அன்பளிப்பாக, யாரோ சிலரிடமிருந்து, கரிகாலன் பெற்றான் என்பது நம்பக்கூடாத ஒன்று அன்று; ஆனால், இமயம் வரை, படையெடுத்துச் சென்றான் என்பது, தெளிவாக, ஒரு பிற்காலக் கட்டுக் கதையே அல்லது வேறன்று.

பிற்காலத் தமிழ்ப் பாக்களில் காணப்படும், ஒரு யானை, அவனைத் தேடிக்கண்டுபிடித்து, அரச மாலை சூட்டிற்று; நெருப்பிலிருந்து தப்பித்தபோது, கால் தீப்புண் பெற்றுக் கருகிவிட்டதால், அவன் கரிகாலன் என அழைக்கப்பட்டான் என்பன போலும் கட்டுக் கதைகள், ஆராய்தற்கு அருகிய தகுதிப்பாடுடையவாம். அண்மைக்கால, இலங்கை வரலாற்றுச் செய்திப் பட்டியல்கள், கரிகாலன் கட்டுக் கதைகள் குறித்த தம்பங்கையும் வழங்கியுள்ளன. அவற்றுள் ஒன்று, அதாவது, அவன், இலங்கையிலிருந்து எண்ணற்ற அடிமைகளைக் கைப்பற்றிக் கொணர்ந்து, காவிரிக்குக் கரை கட்டும் பணியில் ஈடுபடுத்தினான் என்பது ஏற்கெனவே குறிப்பிடப்பட்டது. இக்கட்டுக்கதைகள், திரு டொனால்டு ஒபெயெசெகொர (Donald Obeyesekere) என்பவரால், தம்முடைய, இலங்கை வரலாற்று வரைவு (Sketches of ceylon's History) என்ற நூலில் ஏற்ற வகையில் தொகுக்கப் பட்டுள்ளன. அவை ஈண்டு எடுத்துக் காட்டப்பெறும்: "வங்க நஸிக திஸ்ய (Wanka nasika tissa) என்பான் ஆட்சிக் காலத்தில் (கி. பி. 113-116) தஞ்சாவூர் அரசன், பெரும்

படையோடு இலங்கை மீது படையெடுத்து, அத்தீவின் வடமேற்குப் பகுதியைப் பாழ்செய்து, அநுராதபுரம், கண்ணுக்குப் புலனாகும் வரை ஊடுருவிச் சென்று, மிகப்பெரிய கொள்ளைப் பொருள்களோடும், 12000க்குக் குறையாத சிங்களச் சிறைக்கைதிகளோடும் திரும்பினான்; வங்க நஸிகனின் மகன் கஜபாகு, தன் தந்தையின் அரியணையில் அமர்ந்ததும், சிங்கள மக்களுக்கு இழைக்கப்பட்ட இழிவிற்குப் பழிவாங்கிவிட்டான். நேல - யொத்ஹயன் (Nela yodhaya) என்பான் படைத்தலைமையின் கீழ், பெரிய படையோடு, ஆதம் பாலத்தின்மீது அணிவகுத்துச் சென்று, நாட்டைச் சூறையாடி, தஞ்சாவூர் அரசன், 12000 சிங்களவர்களைத் தரவும், அத்துடன் அதற்கு இருமடங்கு எண்ணிக்கையான தமிழர்களைச் சிறைக் கைதிகளாக, இலங்கைக்குக் கொண்டு செல்லத் தரவும், மறுத்தால் தஞ்சை மாநகரைத் தரைமட்டமாக்கித் தகர்த்துவிடுவதாக அச்சுறுத்தினான். அவ்வேண்டுகோள் ஏற்றுக்கொள்ளப்பட்டது. கஜபாகுடு, போர்க் கைதிகளோடும், பண்டு கொண்டு செல்லப்பட்ட சிங்களவர்களோடும் மட்டுமல்லாமல், பத்தினிக் கடவுளின் காற்சிலம்பு, கஜபாகுவின் படை கொள்ளையடித்த, நான்கு தெய்வத் திருமேனிகளின் கைகளோடு கஜபாகு இலங்கை திரும்பினான்". (Sketches of Ceylon's History Page: 26) மகாவம்ஸம், இதைக் குறிப்பிடவே இல்லை என்ற உண்மையாலும், இது, பிற்காலத்திய, நம்புதற்கு இல்லாத கட்டுக்கதை என்பது உறுதி செய்யப்பட்டது. தஞ்சாவூர், சோழ அரசின் தலைநகராக, கி. பி. 850இல் ஆயிற்று. இக்கட்டுக் கதை, அத்தேதிக்குப் பிறகே கட்டிவிடப்பட்டிருக்க வேண்டும்".

மற்றொரு கருத்தும், ஈண்டுக் குறிப்பிடல் தகும். பெயர் குறிப்பிடப்படாத ஒரு சோழ அரசன், சிலப்பதிகாரத்தில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளான். ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்படாத காலத்தில் வாழ்ந்திருந்தவராகிய உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், உண்மைச் சான்றின் நிழல் ஒரு சிறிதும் இல்லாமல், இச்சோழனைக், கரிகாலனாகக் கொண்டுள்ளார். சிலப்பதிகார நிகழ்ச்சிகள், நடைபெற்றபோது, காவிரிப்பூம்

பட்டினத்தில், ஆண்டுகொண்டிருந்த சோழனைப் பற்றிப் பேசும்போது, சிலப்பதிகாரம் பாடிய புலவன், இக்கரி காலனைத்தான் மனதில் கொண்டிருந்தார் என நம்மை நம்பத் தூண்ட, அப்பாட்டின் மூலத்தில் எதுவும் இல்லை. அதற்கு மாறாகக், கரிகாலன், தெளிவாகப் பெயர் சுட்டிக் குறிப்பிடப்பட்டிருக்கும் இரு இடங்களிலும், அவன் பெருஞ் செயல்கள், இறந்த காலத்திலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. அவன், இமயத்திற்குப் படையெடுத்துச் சென்று மீண்டதாகிய சுட்டிவிடப்பட்ட பெருஞ்செயலைக் குறிப்பிடும் ஒரு பகுதி ஏற்கெனவே எடுத்துக் காட்டப்பட்டது. மற்றொன்று, வானளாவும் பெரும்புகழ் கொண்ட கரிகால் வளவன், புதுப் புனலில் புகுந்தாடும் விழாவின் முதல் நாளன்று, புதுப்புது ஆடைகளால் தன்னை அணி செய்து கொள்வது போல, நகர மக்கள் வேறுவேறு ஆடைகளை அணிந்து கொண்டனர் எனப், புனலாட்டு விழா பற்றிய விளக்கங்களைக் கூறும் பகுதியில் இடம் பெற்றுளது.

> ''விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்,
> தண்பதம் கொள்ளும் தலைநாள் போல''.
>
> —சிலம்பு : காதை : 6, பக்கம் : 159 - 160

இக்காப்பியம் இயற்றப்படுவதற்குச் சிலகாலம் முற்பட்ட காலத்தில், புதுப்புனலில் புகுந்தாடும் விழாவினைக், கரிகாலன் தொடங்கி வைத்தான் என்பதே இதன் பொருள்.

இப்பொருள் பற்றி ஆராய்ந்த இன்றைய எழுத்தாளர்கள், மூலத்தையும், உரையையும் ஒன்றாகக் கொண்டு குழம்பி, நூல் ஆசிரியரின் கூற்றும் நூலாசிரியர்க்கு ஆயிரம் ஆண்டுகள் பிற்பட்டவராகிய உரையாசிரியரின் கூற்றும் வரலாற்றுச் சான்றாம் தன்மையில் ஒத்த மதிப்புடைய எனக் கருதி யுள்ளனர். இம்மூன்று அரச இனங்களின் பழைய வரலாறு குறித்து. அண்மையில் எழுதப்பட்டனவற்றில், பெரும் பகுதி, அவ்விலக்கியம் எழுந்த காலத்துச் சமகாலச்சான்றுகள், உரையாசிரியர்கள், இன்றைய எழுத்தாளர்கள், வரலாற்றுச்

சான்றுகளின் விதிமுறைகளின் பெரும் புறக்கணிப்போடு கற்பித்துக் கொண்ட கற்பனைகளின் கூட்டுச் சரக்காகும்.

**கரிகாலன் காலம் :**

**கரிகாலனுக்கும் செங்குட்டுவனுக்கும் இடையில் உறவு கற்பிக்கும் தவறான கொள்கை :**

கரிகாலன் சிறப்புற வாழ்ந்திருந்தது எந்தக் காலம் என்ற வினா, விடையளிக்கப்படாமல் உளது. இன்றைய வரலாற்று ஆய்வாளர், கி. பி. இரண்டாவது நூற்றாண்டை அவனுக்கு உடையதாக்குகின்றனர். பேராசிரியர் சேஷகிரி சாஸ்திரியார், கடந்த நூற்றாண்டு என்பதின் மூற்பகுதியில், தமிழ் இலக்கியம் பற்றிய தம்முடைய ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றில் (கி. பி. 1884), இந்தக் காலத்தைத், தம் கருத்தாகக் கூறியுள்ளார். அவருக்கு முற்பட்ட ஆராய்ச்சியாளர்களைப் போலவே, இவரும், நூலின் மூலம் அளிக்கும் சான்றுகளின் மதிப்பிற்கும், ஆயிரம் ஆண்டுகள் கழித்து எழுதப்பட்ட உரையாசிரியர்களின் பொருள் விளக்கம் அளிக்கும் சான்றுகளின் மதிப்பிற்கும் இடையிலான வேறுபாட்டினை உணராமல், கரிகாலனைச் சிலப்பதிகார மூன்றாம் காண்டத்தின் பாட்டுடைத்தலைவனாகிய சேரவேந்தன் செங்குட்டுவனின் சம காலத்தவனாக மதித்துள்ளார். ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல, கரிகாலனை, அக்கதை நிகழ்ந்தகாலத்திற்குமுற்பட்ட காலத்தவனாக, நூலின் மூலமே கொண்டுளது. அதற்கு மாறாக, உரையாசிரியர், கரிகாலனை, அக்கதை தொடங்கிய காலத்தில் ஆட்சி புரிந்திருந்தவனாகக் கொண்டுள்ளார். திரு. சேஷகிரி சாஸ்திரியாரின் கொள்கைக்கு மீண்டும் சென்றால், கயவாகு (பாலிமொழியில் கஜபாகு), செங்குட்டுவன் சம காலத்தவன், ஆகவே, கரிகாலனுக்கும் சம காலத்தவன் ஆகிறான். திரு. சேஷகிரி சாஸதிரியார் சிலப்பதிகாரக் காதை முப்பதாவது வரியில் குறிப்பிடப்பட்டிருக்கும் கயவாகுவையும், இலங்கை வரலாற்றுப் பட்டியலில், கி. பி. 113-115 காலத்தில் வாழ்ந்தவனாகக் கூறப்பட்டிருக்கும்,

அப்பட்டியலின் முதலாம் கஜபாகுவையும் ஒருவராகக் கொண்டுள்ளார். (Essay of Tamil literature 1884 Page: 30)

திரு: குமாரசாமி அவர்கள், இருக்கருத்தை ஏற்றுக் கொண்டு, பழந்தமிழ் இலக்கிய வரலாறு பற்றிய தம்முடைய கருத்துக்கினிய கட்டுரையில், மதிப்பிற்குரிய குமாரசாமி அவர்கள், கரிகாலனைக், கி. பி. முதல் நூற்றாண்டிற்குக் கொண்டு செல்கிறார். ("பழந்தமிழ்ப் புலவர் இருவரோடு அரைமணிநேரம்", [A half-hour with two Ancient Tamil poets J. R. A. S., Ceyion Branth 1894. Hultson in S. I. I. II. III Page: 372] இக்கருத்து, சிலப்பதிகார உரைகள், கரிகாலனை, இலங்கை கஜபாகுவின் சம காலத்தவனாக சேர அரசன் செங்குட்டுவனின், தாய்வழிப் பாட்டனாகக் கூறுவதை அடிப்படையாகக் கொண்டுளது. திருவாளர் குமாரசாமி, இந்தக் கயவாகுவை. மகாவம்சம் என்ற இலங்கை வரலாற்று நூலின்படி, கி. பி. 113 முதல் 135 வரை அரசாண்ட முதலாம் கஜபாகுவாகக் கொண்டுள்ளார். [S. I. I. II. III. Page: 373] இக்கருத்தின் மீது, சிலப்பதிகார உரைகள், கரிகாலனைச் செங்குட்டுவனின் தாய்வழிப் பாட்டனாகக் குறிப்பிடவில்லை என்பது நினைவில் கொள்ளப்படல் வேண்டும். நூலாசிரியரால் தான் பாடப்பட வேண்டும் என்ற இன்றியமையாமையில்லாத, நூலில் கூறப் படும் கதையின் சுருக்கத்தைக் கூறும், நூலின் முன்னுரையாம் பதிகத்திற்கு அடியார்க்கு நல்லார் எழுதும் உரைக்கான முன்னுரையில், செங்குட்டுவன் பேரொளி வாய்ந்த ஞாயிற்றி னுடைய ஏழ்குதிரைகள் பூட்டப்பட்ட பெரிய தேருடைய சோழன் மகள் நற்சோணையின் மகன் எனக்கூறப்பட்டுளது: இது, செங்குட்டுவன், கரிகாலன் பெயரன் எனும் பொருளை நிச்சயமாகத் தருவதாகாது. இருபத்தொன்பதாவது காதையின் தொடக்கத்தில் அச்சிடப்பட்டிருக்கும் உரை நடைப்பகுதியில், திகழ் ஒளி ஞாயிற்றின் சோழன், அதாவது சூரிய குலத்துச் சோழன் மகளுக்குப் பிறந்த மகன் என்ற தொடர் மட்டுமே இடம் பெற்றுளது. அதற்குமேல் எதுவும் இல்லை (மொழி பெயர்ப்பு ஆசிரியர் குறிப்பு: "நூலாசிரியர்

திரு. சீனிவாச அய்யங்கார் காட்டியிருக்கும், சிலப்பதிகார கதைப்பகுதிகள் இரண்டிலும், செங்குட்டுவன் சோழன் மகள், நற்சோணையின் மகன் என்று மட்டுமே குறிப்பிடப் படாமல், கரிகாலனுக்கு நற்சோணை ஈன்ற மகன் என்றும் கூறப்பட்டுள்ளான். ''குமரியொடு வடவிமையந்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்று ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் தன் மகள் நற்சோணை ஈன்ற மக்கள் இருவர்.'' (பதிகம்: அடியார்க்கு நல்லார் உரை) ''குமரியொடு வடவிமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதற்குத் திகழ் ஒளி ஞாயிற்றுச் சோழன் மகள் ஈன்ற மைந்தன்'' (இருபத்தொன்பதாவது, வாழ்த்துக் காதை, உரைப்பாட்டுமடை), ஆகவே, அவ்வுரைக் கூற்றுக்கள், வரலாற்றுச் சான்றுகளாக ஏற்கத் தக்கனவாயின், கரிகாலன், செங்குட்டுவனின் தாய்வழிப் பாட்டன் என்பது உறுதி செய்யப்பட்ட ஒன்று ஆகிறது)'',

நான் தேடிப்பார்த்த அளவில், பழைய, புதிய பாடல் எதுவும், எந்த ஒரு பழைய பாட்டுக்கான உரை எதுவும், கரிகாலனுக்கும், செங்குட்டுவனுக்கும் இடையிலான உறவு எதையும் கூறவில்லை. ஆகவே, செங்குட்டுவன், கரிகாலனின் பெயரன் (சோழ மன்னனோடு யாதேனும் ஓர் உறவுடையான்) என்பது, கரிகாலன் குறித்த, நவீனக் கட்டுக் கதையே; அதைக் கட்டிவிட்டவர் யார் என்பதை நான் அறியேன். திரு. கனகசபை அவர்கள், ''கரிகாலன் மகள், சேர அரசன் இரண்டாம் ஆதனுக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டு, சேரன் செங்குட்டுவனுக்குத் தாய் ஆனாள்'' என முடிந்த முடிபாகக் கூறுகிறார். (ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முந்திய தமிழர், பக்கம்: 72) இதற்கு ஆதாரமாகச், சிலப்பதிகாரம் முப்பதாவது காதை 173 - 183 வரிகளை அவர்; சான்று காட்டுகிறார். தேவந்திமேல் தெய்வமுற்று வந்த இமையோர் இளங்கொடி உரைத்ததையே, சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளாரும் திரும்பக் கூறுவதை மட்டுமே, இப்பகுதி கூறுகிறது. அது கூறியது இது: ''உன் தந்தையின் தாள் நிழலில் இனிது இருந்தோனே!

"அரியணையில் அமரும் ஊழ், மூத்தோனாம் செங்குட்டுவனுக்கு இல்லை. உனக்கே உண்டு" என, வருவது உரைக்கும் நிமித்திகன் கூற, அவனைச் சினந்து நோக்கிச், கொங்கவிழும் கடிமணமலர்களால் ஆன மாலை அணிந்த, வெற்றிக் கொடியசையும் தேர் முதலாம் நாற்படைகளைக் கொண்ட மூத்தோன் செங்குட்டுவன், நிமித்திகள் உரை கேட்டு உற்ற பெருந்துயர் இல்லாமல் போக, பகலோன் எழும் பக்கமாம் கிழக்கு வாயிற்கண் இருக்கும், துறவிகளுள் ஒருவனாகிப், பரந்து அகன்ற பேரிடமாம் உலகைத்தாங்கும் துயர்ப்பாரம் நீங்க, அது கைவிடுத்து, சிந்தையால் சிந்தித்துப் பார்க்கவும் இயலாத, வான்போல் உயர்ந்த, அழிவிலாப் பேரின்பத்தை ஆட்சி கொண்ட பேரரசே".

'நுந்தை தாள் நிழல் இருந்தோய் ! நின்னை,
அரசுவீற்றிருக்கும் திருப்பொறி உண்டென்று,
உரைசெய் தவன்மேல், உருத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்,
செங்குட் டுவன்தன் செல்லல் நீங்கப்
பகல்செல் வாயில் படியோர் தம்முன்
அகலிடப் பாரம் அகல நீக்கிச்,
சிந்தை செல்லாச் சேணெடும், தூரத்து
அந்தமில் இன்பத்து அரசாள் வேந்து"

—சிலப்பதிகாரம் : 30 : 174 - 182

தமிழிலக்கிய உலகம், பெருமித உணர்வோடு மேற்கொண்டிருக்கும், கரிகாலன் நனிமிகப் பழங்காலத்தைச் சேர்ந்தவன் என்ற கொள்கைக்கு அடிப்படை நிலைக்களமாம் நற்சோணை என்ற பெயரையும், கரிகாலனுக்கும், அவருக்கும் உள்ள உறவினையும், இப்பாடற்பகுதியிலிருந்து, திரு. கனகசபை அவர்கள், எப்படி கண்டெடுத்தார் என்பதைக் கற்பனை செய்து பார்க்கவும், இயலவில்லை.

கரிகாலன் காலத்துப் புலவர்கள் பாடிய பாக்களுக்கும், சிலப்பதிகாரத்துக்கும் இடையில், அதிகம் இல்லை என்றாலும், குறைந்தது ஒரு நூற்றாண்டு காலமாவது கடந்திருக்க வேண்டும். முன்னவற்றில், சமஸ்கிருதச் சொற்கள் அருகியே ஆளப்பட்டிருக்கும். பின்னதில், அவற்றின் ஆட்சி வழக்கமாகி விட்டது. முன்னவற்றில், ஆரியக் கருத்துக்கள் பற்றி, ஒரு சில குறிப்புகளே உள்ளன. அவையும், ஆரிய நாகரீகம், தமிழர் வாழ்வில் ஊடுறுவவில்லை என்பதை உணர்த்திவிடும்; சிலப்பதிகாரத்தில், விளக்கப்பட்டிருக்கும் வாழ்க்கை முறை, அதற்கு மாறாக, முழுக்க முழுக்க ஆரியக் கருத்துக்களாலும், ஆரியச் சமயக் கொள்கைகளாலும் ஊடுறுவப்பட்டிருக்கும், அடிக்கொருதரம் எனப் பரவலாகக் கூறப்பட்டிருக்கும், இசை, நாடகம், நாட்டியம், மற்றும் கற்பனைக் கதைகள் அனைத்துமே ஆரியத் தன்மை வாய்ந்தன. இலக்கியத் திறனாய்வுத் துறையில் ஓரளவே பயிற்சி பெற்றவரும் கூட, சிலப்பதிகாரக் காப்பியம், தமிழர் சிந்தனைகள், ஆரிய நாகரீகத்தோடு கலப்பதற்கு இனி இடமில்லை எனக்கூறுமளவு இரண்டறக் கலந்துவிட்ட காலத்தைச் சேர்ந்தது. ஆனால், கரிகாலனைப் பற்றிய, அவன் காலப் பாடல்கள், தமிழ்நாடு ஆரியமயமாக்கப்படுவதற்கு முந்திய காலத்தைச் சேர்ந்தவை என்பதை எளிதில் உணர்ந்து கொள்ளத் தவறமாட்டார்.

**கரிகாலன் காலம் : கஜபாகு, சம காலத்தன் :**

மேலும், கஜபாகுவைச், செங்குட்டுவன் சம காலத்தவனாகக் கொள்வது, மிகவும் வலுவற்ற அடிப்படை மீது அமைந்துளது; சிலப்பதிகாரக் கயவாகுவை, மகாவம்ச முதலாம் கஜபாகுவாகக் கொள்வது பற்றித் திருவாளர் ஹால்ட்ஸ் (Hawltsch) என்பார், "திரு. குமாரசாமி அவர்களின் மதிநலத்திற்கு மதிப்பளிக்கும் அதே நிலையில், இரண்டு கஜபாகுகளையும் அடையாளம் காட்டுவது, வெறும் பெயர் ஒற்றுமையால் மட்டுமே உறுதி செய்யப்படாமல், அகச்சான்று களாலும் உறுதி செய்யப்படும் வரையும், இலங்கையின் பண்டைய வரலாற்றுக் கால வரிசைப்பட்டியல், நுண்ணிய

திறனாய்வுக்கு உள்ளாக்கப்படும்வரையும் இக்கொள்கையை ஏற்றுக்கொள்ள முன்வரமாட்டேன்'' எனக் கூறியுள்ளார். (S.I.I. III : III. Page : 378) ஹல்ட்ஸ் அவர்களின் திறனாய்வு முடிவினைச் சந்திக்க, திரு. கனகசபை அவர்கள் முயலவில்லை. திரு. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள், திரு. சேஷகிரி சாஸ்திரியார், திரு. குமாரசாமி ஆகியோர் சித்தாந்தங்களை ஒப்புக்கொண்டு, திரு. ஹல்ட்ஸ் அவர்களால் வேண்டப்பட்ட அகச்சான்றுகள் மூலம், இரு கஜபாகுகளையும் அடையாளம் காட்ட முயன்றுள்ளார். ''சிலப்பதிகாரக் காப்பியத்து முதல் காணடத்தின் கருத்தோடு மேற்கொள்ளப்படும் திறனாய்வு, பாட்டுடைத்தலைவன் வாழ்க்கையின் தொடக்க காலத்தில், புகார் அதாவது, காவிரிப்பூம்பட்டினத்து அரசன், கரிகாற்சோழன் என்பதை உணர்த்தும், ஆளும் அரசன் பற்றிய குறிப்பீடுகள் அனைத்தையும், உரையாசிரியர், கரிகாலனுக்கே பொருந்துமாறு ஒரே நிலையினதாகப் பொருள் கண்டுள்ளார் என்ற உண்மை ஒருபுறம் இருக்க, (எடுத்துக்கொண்ட பணிக்கு முழுவதும் தகுதி வாய்ந்தவர் உரையாசிரியர். அகவே, தம்முடைய உரையில், உண்மையான காதுவழிச் செய்தியைத் தவிர்த்து, வேறு எதையும், ஆண்டிருக்க மாட்டார் என எதிர்பாக்கலாம் ஆதலால், இது ஒன்றே போதுமானதாகும்). பெயர் மூலமாகவும், இமயத்தின் மீது புலிச் சின்னத்தை நாட்டியது அவனுக்கே உரித்தாகும் உண்மை மூலமாகவும், அவனைக் குறிக்கும் எண்ணற்ற, நேரிடைக் குறிப்பீடுகளும் உள்ளன'' எனக் கூறுகிறார் (Anciant India. Page : 350) உரையாசிரியர் ஆயிரம் ஆண்டுகள் கழித்து உரை செய்துள்ளார் என ஏற்கெனவே கூறியுள்ளேன். ஒரு கதை, ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்குக் கைம்மாறி வருவதே காதுவழிச் செய்தி என்பதன் பொருள். உரையாசிரியரின் விளக்கங்கள், அவருடைய கண்டுபிடிப்புக்கள் ஆகா; மாறாகப், பழைய உரையாசிரியர் தலை முறைகளிலிருந்து, இடையறவு படாமல், வரிசையாகக், கைம்மாறிக் கைம்மாறி வந்தனவே என்பதை உணர்த்தும் சான்று எதுவும்

இல்லை. ஆகவே, அவருடைய கற்பனைகள் எல்லாம் காது வழிச் செய்திகள் ஆகிவிடா. உரையாசிரியர், சிறந்த தமிழ்ப் புலவர், பொருள் விளங்காப் பகுதிகளுக்கு விளக்கம் அளிக்கும் தகுதி வாய்ந்தவர்; அதில் ஐயம் இல்லை; ஆனால், அதுவே, மேலே எடுத்தாண்டிருக்கும் எடுத்துக் காட்டின் அடைப்புகளுக்கிடையில் கூறப்பட்டிருக்கும் வாக்கியத்திலிருந்து பெறப்படுவது போல, அவர் காலத்திற்கு, ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதான, விவாதத்திற்குரிய நிகழ்ச்சிகளுக்கு விளக்கம் அளித்து உறுதி செய்யும் உரிமையை அவருக்கு வழங்கிவிடாது. சிலப்பதிகாரக் காப்பியத்தில், கரிகாலனைக் குறிப்பிடும் நேரிடைக் குறிப்பீடுகள் அனைத்தையும், கீழ்வரும் பகுதியில், திரு. கிருஷ்ணசாமி அய்யங்கார் குறிப்பிட்டுள்ளார். 1) "முதற் காதையின் கடைசி நான்கு வரிகள், இமயத்துச்சியில், புலிச்சின்னத்தை நிறுவிய அரசனை வாழ்த்துகிறது. "இது, உண்மையன்று, ஒன்று, அரச சின்னத்தை (கல், செங்கல், மரம், இரும்பு ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றில் செய்யப்பட்ட) கரிகாலன் நாட்டினான் எனப் புலவர் கூறவில்லை என்பது குறிப்பிடப்படல் கூடும். ஆண்டிருக்கும் சொல், "பொறித்து", வெட்டுதல் அல்லது செதுக்குதல், முதற்காதையின் கடைசி நான்கு வரிகள், "போர்க்களம் பலவற்றில் வெற்றி கண்ட, கொடிய வேற்படையுடைய செம்பியன் (அதாவது சோழ அரசன்,) ஒப்பற்ற தன் அரச ஆணை ஒன்றே, உலகெங்கும் நடைபெறப் பேரரசு செலுத்துவோனாக! இமயத்தின் இப்பகுதியில் பொறித்த புகழ் ஒளிமிக்க புலிச்சின்னம், இமயத்துப் பொன்முடிக்கு அப்பாலும், தன் ஆணையைச் செலுத்துமாக!" எனக் கூறுகிறது.

"இப்பால் இமயத்து இருத்திய வாள் வேங்கை
உப்பாலைப் பொற்கோட்டு உழையதா, எப்பாலும்,
செருமிகு சினவேல் செம்பியன்,
ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே!"
—சிலம்பு : காதை : 1, 65-68

ஓர் அரசனின், உண்மையான, அல்லது கற்பனையான அருஞ்செயல், அவன் வழிவந்தவர் அனைவர்க்கும் உரிய தாக்கப்படும் என்பது எல்லோரும் அறிந்த ஒன்று; அவ்வகையில், ஓர் அரசன் அசுவமேத யாகம் செய்திருந்தால், அது, அவன் வழி வந்தவர்களுக்கும் ஏற்றி உரைக்கப்படும். ஒருவன் சோமயாகம் செய்திருந்தால், அவன் வழிவந்தவர் அனைவரும், அவர்கள் வ்ராத்யர் வாழ்வு மேற்கொண்டிருந்தாலும், எக்காலத்தும் சோமயாஜிகள்தாம். அதாவது, கரிகாலன் இமயம் வரை பரப்பிய ஆட்சியை, ஆண்டு கொண்டிருக்கும் சோழன், இமயத்திற்கு அப்பாலும் பரப்புவானாகுக என்பதாம். இப்பகுதி ஏதேனும் உதவியிருக்குமாயின், அது, கரிகாலனைச், சிலப்பதிகார நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்கு முன்னர் அரசாண்ட அரசனாக ஆக்கியதே ஆகும். 2) "பதிப்பாசிரியர் பார்வையிட்ட ஒரு கையெழுத்துப் படிவத்தில், கரிகாலன் பெயர். பட்டினப்பாலை ஆசிரியர்க்கு, அவன் பரிசளித்தது ஆகியவற்றின் நேரிடைக் குறிப்பீடு உளது. "ஏனைய உரையாசிரியராலும், பதிப்பாசிரியராலும், உண்மையானவை என ஏற்றுக்கொள்ளப்படாத நிலையில், சிலப்பதிகார மூலம், உரை ஆகியவற்றின் கையெழுத்துப் படிகள் சிலவற்றில், அவன் பெயர் குறிப்பிடப்பட்டிருப்பது, அந்த அரசன், அப்பாட்டில் கூறப்பட்டிருக்கும் நிகழ்ச்சிகள் நிகழ்ந்த காலத்தைச் சேர்ந்தவன் என்பதை எவ்வகையிலும் உறுதி செய்துவிடாது. 3) "மேலும், ஆறாம் காதையின் 158-60 வரிகள், ஒருவர் எத்துணைத் தெளிவாக விரும்புவாரோ, அத்துணைத் தெளிவாக, கரிகாலன் அந்த நாட்களில் ஆண்டு கொண்டிருந்ததாகக் குறிப்பிட்டுள்ளன". "விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன், தண்பதம் கொள்ளும் தலைநாட்போல" — இவ்வரிகள், அதற்கு மாறான ஒன்றையே குறிப்பிடுகின்றன. இவை ஏற்கெனவே எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. அப்பாட்டில் விழாவின் சில நிகழ்ச்சிகள், முந்தைய காலத்தில், புனல் விளையாட்டின்போது, கரிகாலன் மேற்கொண்ட விழா நிகழ்ச்சிகளை ஒத்துள்ளன என்பதே, அவற்றிலிருந்து பெறக் கூடியதாம். 4) "உரையாசிரியர்,

அப்பகுதிக்குத் தேவையான பொருள் விரிவைத் தரும் வகையில், அதை விளக்கியுள்ளார். "உரையாசிரியர் கூறியது இதுதான்.

அடிக்குறிப்பு :

("விண்ணிலே சென்று பொரும், பெரிய புகழையுடைய இக்கரிகால் வளவன், புதுப்புனல் விழவு கொண்டாடும், தலைநாட் போலவே, இவ்விழாவின் இறுதிக்கண் புனலாடிடங்களும் வீறுபெறத் தோன்றா நிற்க". (சிலம்பு : காதை : 6 வரிகள் : 159-160. அடியார்க்கு நல்லார் உரை) அது நிகழ்ந்த காலத்தில் கரிகாலன் ஆண்டுகொண்டிருந்தான் எனக் கூறுவதற்குப்பதிலாக, இது, கரிகாலனுடைய புனலாட்டுவிழா, அப்பாட்டில் கூறப்படும் புனலாட்டு விழாவிற்குக் காலத்தால் முற்பட்டது என்ற பொருளையே உணர்த்துகிறது. 5) "குறிப்பு மொழிகளால் (மறைமுகமாக) உணர்த்துததைக் குறிப்பிடத் தேவை இல்லை ; காதை", வரிகள் 95-8ல், அப்பாட்டுடைத் தலைவனைப் பற்றிய, ஐயத்திற்கிடமில்லாக் குறிப்பே உளது".

"அசைவில் ஊக்கத்து நசைபிறக்கு ஒழியப்
பகைவிலக் கியதுஇப் பயங்கெழு மலையென
இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி ஒற்றிக் கொள்கையிற் பெயர்வோன்".

இவ்வரிகளை எடுத்தாண்டு மொழி பெயர்த்தும் உள்ளேன். அது, இந்திரவிழா ஊர்வலத்தின் போது, பண்டொரு காலத்தில் கரிகாலனால் பெறப்பட்ட சில பொருட்களுக்குப் பலி தூவி விழா செய்யப்பட்டது என்று மட்டுமே குறிப்பிட்டு, அப்பொருட்களை, அவன் கைக்கொண்டது, பாட்டு கூறும் நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்கு முற்பட்ட ஒரு காலத்தில் ஆகும் என்பதையே உறுதி செய்கிறது.

அடிக்குறிப்பு :

(புலவர் ஆண்டிருக்கும் உண்மையான "புண்ணிய திசை முகம் போகிய அந்நாள்" என்ற தொடர் அப்பாட்டு கூறும் நிகழ்ச்சிகளுக்கு மிக மிக முற்பட்ட காலத்தே வாழ்ந்த ஓர் அரசனாவன் அவன் என்ற பொருளை உணர்த்துகிறது).

6) "17 ஆம் காதையில் மூவேந்தர்களைப் பாராட்டும் பாக்களில், ஒரு பாட்டில் கரிகாலனின் இமய வெற்றி குறிப்பிடப்பட்டுளது. குறிப்பிடப்பட்ட அவன், கடைசிச் சோழனாவன்."

"பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ஆண்டான்,
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்."

ஈண்டு கூறப்பட்ட அப்பாட்டின் பகுதி, கரிகாலன் பெயரை ஈற்றில் கொண்ட சோழ அரசர் பட்டியலைக் கொடுக்கவில்லை; அது, உள்வரி வாழ்த்து என்ற தலைப்பில் வரும் மூன்று பாக்களில், வறிதே இரண்டாவதாக இடம்பெற்ற ஒரு பாட்டு, இப்பாக்களில், இந்திரனுக்குரிய (ஒரு புராணக் கடவுள்) மாலையை அணிந்துகொண்ட பாண்டியன், இமயத்துப் பொன் முடியில் புலிச்சின்னம் பொறித்த சோழன், கடலிடையே நடப்பட்டிருந்த கடம்ப மரத்தை வெட்டி வீழ்த்திய சேரன், ஆகிய மூவரும், கடவுளாம் கிருஷ்ணனுக்கு ஒப்புடையவராகப் பாராட்டப் பெற்றுள்ளனர். செங்குட்டுவன் காலத்துக்கு முன் வாழ்ந்தவர்களாய, குறிப்பிடப்பட்ட அரசர்களின் மிகைப்படுத்தப்பட்ட பாராட்டினைக் கூறும், இச்சிறு பகுதி, எவ்வாறு, அவர்களை அச்செங்குட்டுவனின் சம காலத்தவராக ஆக்கும்? அது காண்பது அறவே இயலாது. 7) "21ஆம் காதை, 11முதல் 15 வரையான வரிகள், கரிகாலன் மகள். அக்காலைச் சேர அரசனை மணந்திருந்தாள் எனத் தெளிவாக அறிவிக்கிறது.

"மன்னன் கரிகால் வளவன் மகள், வஞ்சிக்கோன்
தன்னைப் புனல் கொள்ளத், தான் புனலின் பின்சென்று

> கன்னவில் தோளாயோ என்னக் கடல் வந்து
> முன்நிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக் கொண்டு
> பொன்னங் கொடிபோலப் போதந்தாள்".

கரிகாலனின் இச் சேரமாப்பிள்ளையின் பெயர் ஆட்டன் அத்தி என்பது ஆதலாலும், செங்குட்டுவனுக்கு அடுத்த முன்னோர், முறையே அவன் தந்தை சேரலாதனும், அவன் பாட்டன் உதயஞ்சேரலும் ஆவர் ஆதலாலும், ஆட்டன் அத்தி, ஆண்டிருந்தான், செங்குட்டுவனுக்கு நெடுங்காலத்துக்கு முன்னர் ஆண்டிருக்க வேண்டும். கூறிய அப்பகுதியில், தான் பிறந்த காவிரிப்பூம்பட்டினத்தில், தனக்கு முன் பிறந்து, கணவர் காட்டும் நெறிபிறழாக் கற்பு நெறியால் புகழ் பெற்ற பத்தினிப் பெண்டிர் எழுவரை வரிசைப்படுத்திக் கூறி, கரிகாலன் மகளும், ஆட்டனத்தியின் மனைவியுமான ஆதிமந்தியை, அவர்களுள் இரண்டாவதாகக் கூறியுள்ளாள், கண்ணகி. ஆகவே, இப்பகுதியில், உண்மையில் கரிகாலன், இறந்த காலத்தவனாகவே காட்டப்பட்டுள்ளான். ஆக, கூறிய இவற்றால், கரிகாலனைப் பெயர் சுட்டியோ, மறைமுக வகையிலோ குறிப்பிடும் சிலப்பதிகாரப் பகுதிகள் அனைத்தும் அவன் காலம் (எத்தனை ஆண்டு என்பதை நம்மால் சொல்ல இயலாது), அக்கதை நிகழ்ச்சிகள் தொடங்கிய காலத்திற்கு முற்பட்டது. ஆகவே, கரிகாலன் காலத்தைச், செங்குட்டுவன் காலத்தைக் கொண்டு கணிப்பது இயலாது என்பதையே உறுதி செய்கின்றன.

செங்குட்டுவன் காலமும், சம காலத்தவன் கஜபாகு என்பதிலிருந்து உறுதி செய்வது இயலாது. திருவாளர் ஹல்ட்ஸ் அவர்களின், "அகச் சான்றுகளால் துணை செய்யப் படும்வரை, பெயர் ஒற்றுமை பொருளற்றது" என்ற தடைக்கு இன்னமும் விடையளிக்கப்படவில்லை. மேலும், காலத்தால் அவனுக்கு நெருங்கியதான மகாவம்சத்தில் கஜபாகு, உணர்ச்சிமிக்க பௌத்தனாகவே படைத்துக் காட்டப்பட்டுள்ளான். புத்த மடங்களைக் கட்டும் அவன் செயல்கள் விளக்கிக் கூறப்பெறும் அந்நூலில், இந்தியாவி

விருந்து, பத்தினி வழிபாடு, வந்து இடம் பெற்றதற்கான குறிப்பு எதுவுமே இல்லை என்பது மட்டுமன்று, கஜபாகு வாழ்க்கை நிகழ்ச்சிகளின் பெரும்போக்கு, வேறு சமயம் எதையும் பொருட்படுத்தா அளவு, அவன் ஒரு வெறிபிடித்த பௌத்தன் என்ற முடிவிற்கே எவரையும் கொண்டு செல்லும்; பத்தினித் தேவியின் காலணிகலன்களைக், கஜபாகு தஞ்சாவூரிலிருந்து எடுத்துச் சென்றான் என்பது கூறப்பட்டு, அதனால், பத்தினி, ஒரு பெண் தெய்வமாக, அவன் காலத்திற்கு முன்பே வழிபடப்பட்டாள் என்பது குறிப்பாக உணர்த்தப்படுவதால், கஜபாகுவின், சோழநாட்டு வெற்றியைக் குறிப்பிடும் இலங்கையின் பிற்காலக் கட்டுக் கதைகள், பத்தினிவழிபாடு, அவன் காலத்திற்கு முற்பட்டது எனக்கொண்டுள்ளன. சிலப்பதிகாரத்தில், மாளுவ நாட்டு மன்னன் போலும் மற்றவர்களுள், கடல் சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும், கண்கள் கண்டுகொண்டிருக்க வானுலகம் புக்குத் தெய்வமாகிவிட்ட கண்ணகிக்குச், செங்குட்டுவன் எடுத்த விழாவிற்கு வந்தான் எனக் கூறப்பட்டுளது.

அடிக்குறிப்பு :

"மாளுவ வேந்தரும்,
கடல் சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்
எந்நாட் டாங்கண் இமைய வரம்பனின்
நன்னாள் செய்த நாளணி வேள்வியில்"

—சிலம்பு : காதை : 30 வரி : 159-162

அக்காப்பியத்தின் உரைப்பாயிரமாம், உரைபெறுகட்டுரை, மேற்படி கூற்றொடு ஒருபகுதி மாறுபட்டு, கண்ணகியின் வியத்தகு கதையைக் கயவாகு கேட்டு, பற்பல முறை விழா எடுத்தான் எனக் கூறுகிறது.

அடிக்குறிப்பு :

("அது கேட்டுக், கடல் சூழ் இலங்கைக் கயவாகு வென்பான், நங்கைக்கு நாட்பலி பீடிகைக் கோட்டம்

முந்துறுத்து, ஆங்கு அரந்தை கெடுத்து வரந்தரும் இவள் என, ஆடித்திங்கள் அகவையின் ஆங்கோர் பாடி விழாக்கோள் பன்முறை எடுப்ப'') இவ்வுரைப்பாயிரம், பெருங்கிள்ளி என்ற சோழன், பத்தினித் தெய்வத்திற்கு, உறையூரில் கோயில் கட்டினான் என்றும் கூறுகிறது. ''அது கேட்டுச் சோழன் பெருங்கிள்ளி, கோழியகத்து, எத்திறத்தானும் வரந்தரும் இவளோர் பத்தினிக் கடவுள் ஆகுமென நங்கைக்குப் பத்தினிக் கோட்டமும் சமைத்து நித்தல் விழா நிகழ்வித்தோனே''— ஆனால், சிலப்பதிகாரக் காப்பிய முதல் நூலில், இது குறிப்பிடப்படவில்லை. ஏற்கெனவே குறிப்பிட்டது போல, இலங்கை வரலாற்றுக் காலவரிசைப் பட்டியல், கஜபாகுவுக்கு முன்பே, பத்தினித் தேவிக்குத் தஞ்சாவூரில் கோயில் இருந்ததைக் குறிப்பாக உணர்த்துகிறது. பத்தினித் தெய்வ வழிபாட்டின் தோற்றம் குறித்த பழங்கதைகள் நுண்ணிய திறனாய்வுக்குத் தாங்கமாட்டா அளவு, ஒன்றோடொன்று பெரிதும் முரண்படுகின்றன.

செங்குட்டுவனும், கஜபாகுவும் சமகாலத்தவர் என்பதைச் சிலப்பதிகாரத்திலிருந்து முடிவு செய்வதற்கு மற்றொரு தடையும் உளது. கஜபாகு சம காலத்தவன் என்ற வாதத்தின் அனைத்து முடிவிற்கும் அடிப்படையாய் அமைந்து, சிலப்பதிகாரத் தொடரில் இடம் பெற்றிருக்கும் கயவாகு என்ற சொல்லுக்கு, வேறு ஒரு பாடபேதமும் உளது. அது, ''கயவாகு'' என்பதற்குப் பதிலாகக், ''காவல்'' என்பதாம்; இரண்டனுள் எது சரியான பாடம் என்பதைக் கண்டறிய வழியில்லை. ''காவல்'' என்பதே சரியான பாடமாய்விடின், கஜபாகு சமகாலத்தவன் என்ற கூற்றை அடிப்படையாகக் கொண்டு கட்டப்பட்ட மாளிகை அனைத்தும், தரைமட்டமாகத் தகர்ந்துவிடும். அந்துப் பூச்சாலும், கரையான்களாலும் தின்னப்பட்டு, ஒடிந்து நொடுங்கிப்போன, பழைய தமிழ்ப்பனையோலைச் சுவடிகளைக் கண்டவர் எவரும், இப்பாட்டு, தலைமுறை தலைமுறை வழியாக, முந்தைய சுவடியிலிருந்து பார்த்து, படி எடுத்து எழுதப்பட்டு வந்தது; அல்லது நினைவிலிருந்து எழுதப்பட்டு வந்தது

என்பதை மறவாதவர் எவரும், ஐயப்பாட்டிற்குரிய அப்பாடபேதச் சொல்லுக்கு, அதைத் தென்னிந்திய வரலாற்றுக்கால வரிசைப் பட்டியலுக்கு உள்ள ஒரே ஒரு சான்றாக ஆக்குமளவு முக்கியத்துவம் அளிப்பதற்கு முன்னர், ஒரு முறைக்கு இருமுறை சிந்திக்கவே செய்வர்.

**பழங்காலம் தருவதற்கு வேறுபலத் தடைகள் :**

கரிகாலனுக்குப், கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டை உரியதாக்குவது, வேறு காரணங்களாலும் மறுக்கப்படுகிறது. பெரிபுளூஸ் ஆசிரியரோ, அல்லது தாலமியோ, கரிகாலச் சோழப் பெருவேந்தனைவிடக் குறைந்த புகழே கொண்ட சிற்றசர்களையும் குறிப்பிடு கின்றனர் என்றாலும், கரிகாலனைக் குறிப்பிடவில்லை. அதற்கு மாறாகத், தாலமி அவர்களின் தமிழ்நாட்டுக்கு கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் நில இயல் ஏடு, அந்நாட்டின் படத்தைத், தமிழ் இலக்கியங்கள், கரிகாலனைப் பாராட்டி யிருப்பதுபோல், தமிழ் நாடு முழுவதும், ஒரு பேரரசின் ஒரு குடைக் கீழ்க் கொண்டுவரப்பட்டு இருந்தது போல் அல்லாமல், பற்பல சிற்றசர்களால் ஆளப்பட்டிருந்த நாடாகவே காட்டுகிறது. மேலும், பட்டினப்பாலையில் குறிப்பிட்டிருக்கும், தங்கள் தங்கள் கூடாரங்கள் மீது வாதிட்டழைக்கும் கொடிகளை ஏற்றி வைத்துக்கொண்டு வாதிடுவார் செயல், வாதமுறை நன்கு வளர்ந்தவிட்ட ஒரு காலத்தையே, நிச்சயமாகச் சார்ந்ததாகும். இது, கி. பி. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்னர், வடஇந்தியாவிலும், நிச்சயமாக இடம் பெறவில்லை.

**கரிகாலனுடைய உண்மையான காலம் :**

கல்வெட்டுச் சான்றுகள், கரிகாலன் சிறப்புற்றிருந்த காலமாகக், கி. பி. நான்காம் நூற்றாண்டைக் குறிப்பிடு கின்றன. அவன், காஞ்சியைப் பல்லவர்களிடமிருந்து கைப்பற்றி, அதைப் பொன்வேய்ந்தான். காஞ்சிப் பல்லவர் ஆட்சி, கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலும், அதற்கு

முற்பட்ட காலத்திலும், மிகப் பெரும் வலிவோடு இருந்தது; சமுத்திரகுப்தனின் பிராஸஸ்தி குறிப்பிடும் விஷ்ணு கோபன், (ஒரு பல்லவப் பெயர்; தமிழ்ப் பெயர் அன்று) காஞ்சிக் காவலனாக இருந்த கி. பி. 350 வரை, அப்பேராற்றல் தொடர்ந்து இருந்து வந்தது. இக்கால கட்டத்தில், பாணாவாசிக் கதம்ப அரச இனத்தைத் தோற்றுவித்த மயூரசர்மன், அரசுக்கு எதிராக எழுப்பிய கலகத்தால், அது பலவீனப்பட்டது. ஆகவே, கரிகாலன், திரிநயன பல்லவனை வென்று, காஞ்சியை அடுத்த தெலுங்கு, மாநிலத்தில், தனக்குத் திறை செலுத்தும் சிற்றரசனாக, ஒரு சிறிய நாட்டைக் காணத் துரத்தியது, நான்காம் நூற்றாண்டின் இறுதியில் நிகழ்ந்திருக்கக் கூடியதே; தெலுங்குக் கல்வெட்டுக்களும், தெலுங்கு இலக்கியங்களும் திரிநயனப் பல்லவன் குறித்துக் குறிப்பிடும் பல்வேறு குறிப்பீடுகளுக்கு, இது ஒன்றே பொருந்தும் விளக்கமாகும். பிறிதொரு ஒருமைப்பாடும் இதை உறுதி செய்கிறது. கீழைச் சாளுக்கியக் கல்வெட்டுக்களில், அச்சாளுக்கிய குலத்தை ஆதிகாலத்தில் தோற்றுவித்தவன், தக்ஷிண பரதத்தின் அரசனான திரிலோசனன் என்பவனால், அல்லது திரிலோசன பல்லவனால், ஒரு போரில் தோற்கடிக்கப்பட்டவனும், அயோத்தியாவிலிருந்து போர் மேற்கொண்டு வந்தவனுமாகிய, ஒரு விஜயாதித்தியன் ஆவன் எனக்கூறும் ஒரு பழங்கதையினைக் கொண்டுளது. இந்த விஜயாதித்தியன், கி. பி. ஏழாம் நூற்றாண்டில், பாதாமி அரசனான, இரண்டாம் புலிகேசிக்கு ஐந்து தலைமுறை முன்னே தள்ளப்படுகிறான். இவ்வகையால், கரிகாலன், திரிலோசனன், விஜயாதித்தியன் ஆகிய மூவரும், பெரும் பாலும் ஒரு காலத்தவராகின்றனர். ஆகவே, கரிகாலன் சிறப்புற்றிருந்த காலம், பெரும்பாலும், நான்காம்

நூற்றாண்டின் இறுதியும், ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கமுமாம்; அவன் ஆட்சியின் உச்ச காலம், கி. பி. 400.

அடிக்குறிப்பு :-

கரிகாலன் காலம் பற்றி நூலாசிரியர் கொள்ளும் முடிவு பற்றி, மொழிபெயர்ப்பாசிரியர் கருத்து. இவ்வதிகாரத்தின் ஓர் இணைப்பில் விளக்கப்பட்டுள்ளது.

கரிகாலன் : திரிலோசனப் பல்லவன் காலத்தவனா ?

(இக்குறிப்பு, ஆந்திரப் பல்கலைக் கழக ஆட்சிமன்ற உறுப்பினர், திரு. குண்டூர். கே. ஆர். சுப்பிரமணிய அய்யர் அவர்களால் தரப்பட்டது)

திரிலோசனப் பல்லவன் என்ற பெயருடைய அரசன் ஒருவன், தெலுங்கு நாட்டில், பண்டை நாட்களில் இருந்தான் எனக்கூறும், வலுவான, நிலையான பழங்கதைகள் உள்ளன. அவன், திரிநயனப் பல்லவன், முக்கண்டி பல்லவன், முக்கண்டிக் காடுவெட்டி என்னும், ஒரே பொருளுடைய சொற்களால் அழைக்கப்பட்டான். (M. E. R. 1908 Page; 82, Also 109, 10, 153, 244 and 251 of 1893; and 293 of 1892 Nellore Inscriptions D. 69 K, g 24 and also 150 of 1899 and 837 of 1922) இப்பழங்கால அரசனைப் பற்றிக் கூறும் மிகப் பிற்பட்ட காலத்து ஆவணங்களாம், நன்கு தெரிந்த மக்கெனிஸ் (Mackenzie) கையெழுத்துப் படிகள் அல்லாமல், (Wilson catalogue Mss. Introd. P. P. ivii-ixii, Cl, cxix and also Taylor, Cat. of Mss. iii 486 Nellore manua 1436 687, See also fowlkes Pallavas) பத்து பதினாறாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தனவும், சிறிதே அறியப்பட்ட, ஆனால், நன்கு தெரிந்து கொள்ளவேண்டிய தகுதிவாய்ந்த இப்பேரரசின் வரலாற்று நிலையில், நம்மை, எந்த ஐயப்பாட்டு நிலைக்கும் கொண்டுபோய் நிறுத்தாதனவுமாகிய, கல்வெட்டுக்களும், இலக்கியக் குறிப்பீடுகளும் கூட உள்ளன. (கலிங்கத்துப் பரணி: See Chr. Coll, May, April,

and July 1927 for the literary references in the articles, by Venkataramanayya, also T. G. Aravamudan's Kaveri and the Sangam Age)

திரிலோசனன், இன்றைய குண்டூர், கிருஷ்ணா, மற்றும் நெல்லூர் மாவட்டங்களோடு மட்டுமே, முக்கியமாகத் தொடர்பு கொண்டிருந்தான்; ஆனால், சாளுக்கியர் ஆட்சிக்கு வருவதற்கு முன்னர், தக்கணம் முழுவதற்கும், அவனை அரசனாக்கும் ஆவணங்களுக்கும் குறைவு இல்லை. (Ep. Ind. vi. 147, 156) வெல நாடு (Ep. Ind. iv 34, 48) கொண்ட பத்மதி (M. E. R. 1, 16, Page. 136 Also146 of 1897 and 251 of 1893: Also Ep. Ind 111, 95) ஆகிய அரச இனங்கள், தங்களுடைய கல்வெட்டுக்களில், தங்கள் அரச இனங்களைத் தோற்றுவித்த தந்தையர்க்கு, அவர் அளித்த படைத் துணைக்கு ஈடாகச் சிறுசிறுநாடுகளை ஆளும் உரிமை வழங்கி ஆதரித்தமைக்குத், திரிலோசன பல்லவனுக்குத் தங்கள் நன்றியினைத் தெரிவிக்கின்றன. தெலுங்குச் சோழக் கல்வெட்டுக்கள், தங்கள் குல முன்னோன், காவிரிக்கரை புகழுக் கரிகாலன் புகழ் பாடாமல் தொடங்குவது மிக மிக அரிது. அதுபோலவே, தெலுங்குப் பல்லவக் கல்வெட்டுக் களும் (M.E.R. 1916, 138, S. 1157) தங்கள் குல முதல்வன், புகழ்பெற்ற திரிலோசனனைக், "காடுவெட்டி" என்றும், "பிராமணர்களுக்குத் தானம் வழங்கி" என்று அழைக்க என்றும் தவறியதில்லை. திரிலோசனப் பல்லவன் மீது கரிகால் பெருவேந்தன் பெற்ற வெற்றியைத், தெலுங்குச் சோழக் கல்வெட்டுக்களில், பல குறிப்பிடாமல் விட்டுவிடுவதில்லை. பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தன என்பது ஒருபுறம் இருப்பினும், கணக்கற்ற கல்வெட்டுக்கள், இயல்புக்கு மேலும் ஒரு கண்கொண்ட, ஒரு பழைய அரசனைக் குறிப்புடும்போது, அவை அனைத்தையும் பயனற்றவை என, எளிதாக அழித்து விடுவது இயலாது.

திரிலோசனன் செய்துமுடித்த நிலையாய பணி, பாஞ்சாலத்து அஹிச்சத்திரத்திலிருந்து கொண்டுவத்து,

ஸ்ரீபர்வதத்துக்குக் கிழக்கில் குடி அமர்த்திய பிராமணர்களுக்கு நிலதானம் செய்ததாகும். (247 of 1897, S. 1092. Also 109-110 of 1893. S. 1057 and 779 1922) குண்டூர் மாவட்டத்து ஏழு சிற்றூர்களின் தானத்தை, ஒரு கல்வெட்டு கூறும்போது, 261 of 1897) பிறிதொரு கல்வெட்டு, மொத்தத்தில் எழுபது சிற்றூர்களைக் குறிப்பிடுகிறது. (M. E. R. 1908 P. 82-84 Also 580/1907 which curiously enough assigns a second Trilochana to S-723) பதின்மூறாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓர் அரசன், பழைய தானத்தின் உண்மையைப், பெரும்பாலும், எழுத்தாவணங்கள், அல்லது வாய்மொழி விசாரணை மூலம் அறிந்து, மன நிறைவு கொண்டபின்னர், திரிலோசன பல்லவனின் பாபட்லா வட்டத்து நிலதானம் ஒன்றை உறுதிப்படுத்துகிறான். (803 of 1922. 5.1131) அவன் பெயர், நன்றிமறவாப் பெருமக்களால், தங்கள் பின் தலைமுறையினர்க்குத், தொடர்ந்து கூறப்பட்டு வருமளவு, அவன் செய்த அறக்கொடைகள், எண்ணால் பெரியனவும், பலரும் அறிந்த பெருமையும் உடையவாம்.

திரிலோசனப் பல்லவன் எப்பொழுது வாழ்ந்தான்? (See Ep. Ind. X P. 340 for Krishna Sastrie's opinion) விமலாதித்தியனின் ரணஸ்த பூண்டித் தானமும் (S. 933, Ep. Ind. vi. P. 351; 111 P. 95, See also M.E.R. 1916 P. 136 and 1915 P. 393 Also Ep. Ind iv P. 239) ஏழாம் விஜயாதித்தியனின் பாமுலவாக்கச் செப்பேடுகளும் (Andhra Hist. Jour Rajamundry 111 P. 278) வீரசோழனின் செல்லூர் செப்பேடுகளும், அவனைச் சாளுக்கிய இனத்து முதல் அரசன், விஜயாதித்தியனின் காலத்தவனாக ஆக்குகின்றன. தக்கிணத்து அரசன், திரிலோசனன், தன் நாட்டின் மீது படையெடுத்து வந்த சாளுக்கியனை வென்று கொன்றான். அப்போது கருவுற்றிருந்த சாளுக்கிய மன்னன் மனைவி, முடிவெமு (பெத்த முடியம்) வைச் சேர்ந்து, விஷ்ணுவர்த்தனன் எனப்பெயரிடப் பட்டான். அவன் வயதுக்கு வந்ததும், அவன் தந்தை தோல்வி கண்டவிடத்தில், தன் அரசை நிறுவினான். இக்கதை, திரிலோசனப் பல்லவன் காலத்தை

அறிய, நமக்கு, ஒரு குறிப்பினைத் தருகிறது. ஜம்மலமடுகு வட்டத்தில், பிறிதொரு கல்வெட்டில், திரிலோசனபுரம் என அழைக்கப்படுவதும், (350 of 1905) விஷ்ணு வர்த்தனின் பிறப்பிடமாகக் கூறப்படுவதுமாகிய, பெத்தமுடியன் என்ற, அச்சிற்றூரில், கன்னட மொழிக் கல்வெட்டு ஒன்று உளது; (S. 1046, See, M. E. R. 1904.5. P. 32-42) வெண்ணு பட்டனை (விஷ்ணுபட்டனை) சாளுக்கிய அரசிக்கு அடைக்கலம் தந்த சோமயாஜியாக, வெளிப்படத் தெரிந்த திரிலோசனப் பல்லவனிடமிருந்து நிலதானம் பெற்றவனாகக் காட்டுவதும், பிற்காலத்தைச் சேர்ந்ததுமான பிறிதொரு கல்வெட்டும் உளது. (S. I. I. iv P. 927).

விஜயாதித்தியனின் படையெடுப்பும், திரிலோசனனுடனான போரும், கோணக் கல்வெட்டொன்றில், கூறப்பட்டும் உளது. (5.1117) (Ep. Ind iv. P. 94, 239) விஜயாதித்தியன், கீழைச் சாளுக்கிய முதல் அரசன் விஷ்ணு வர்த்தனனிலிருந்து, ஐந்து தலை முறைக்கு அப்பால் தள்ளப் படுகிறான். ஆகவே, அக்கதையில் ஏதேனும் உண்மை இருக்குமாயின், திரிலோசனன், கி. பி ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருக்க வேண்டும். (E/ Ind. xi. P. 337 1899 ஆம் ஆண்டு 175 ஆம் எண் கல்வெட்டில், ருத்ரபட்ட அஹிச்சத்ரன் என்பான் ஒருவன், திரிலோசனனிடம் பெற்ற நிலதானத்தால் பயனடைந்ததாகக் கூறப்பட்டுளது. நிலதானம் பெற்றவன் குடும்பத்தில், பெரிய அரச குலத்து உடன் பிறப்புக்களாம் சத்யாஸ்ரயன், விஷ்ணுவர்த்தனன் ஆகியோரால், அதுபோலவே நிலதானம் பெற்ற சூரியனும், குப்பனனும் பிறந்தனர். மேற்கூறிய குறிப்புகளிலிருந்து, திரிலோசனன், இரண்டாம் புலிகேசிக்கு முன்னர் வாழ்ந்தான் என்பது உறுதியாகிறது என்றாலும், ருத்ரனுக்கும், சூரியனுக்கும், இடையிலான தலைமுறைகளின் எண்ணிக்கை கொடுக்கப்படவில்லையாதலின், திரிலோசனின் சரியான காலத்தைக் கண்டறிவதில், நாம் இன்னமும் இருட்டிலேயே உள்ளோம். வெலநாடு ஆண்ட பிரித்வேஸ்வரனின், பித்தாபுரம் கல்வெட்டுக்களில் (5.1108) (Ep. Ind. P. 34, 48)

பிரித்வேஸ்வனிலிருந்து பதினெட்டு அரசர்கள், அல்லது பதின்மூன்று தலைமுறைகளுக்கு முன்னே வைக்கப்படும், அவ்வரச குலத்தைத் தோற்றுவித்த முதலாம் மல்லன், திரிநேத்திரனோடு நட்பு கொண்டிருந்ததாகக் கூறப்பட்டுளது. ஆனால், இதுவும் நமக்கு மேற்கொண்டு உதவவில்லை.

தெலுங்குச் சோடக்கல்வெட்டுக்களில், திரிலோசன பல்லவன், கரிகாலச் சோழனின் சம காலத்தவனாகக் காட்டப்பட்டுள்ளான். (4469 of 1919 S. 1153 M. E. R. 1920 P. 111-117) அவர்களின் கணக்கிலாக் கல்வெட்டுக்கள் அனைத்தும், தங்களின் புகழ்வாய்ந்த குலமுன்னோனைக் குறிப்பிடுகின்றன. அவற்றுள் சில. உண்மையில், பிற்காலச் சோழர்களின் தென்னாட்டுக் குடிவழிப் பட்டியல்கள், குண்டூர் மாவட்டத்தில் கல்வெட்டுக்களை வெட்டியவனாகத் தெரிய வரும் விஷ்ணுவாகு பிறந்த ஒரு பிரிவினராகிய, அயோத்தியாவைச் சேர்ந்த சூரிய குலத்தவனாகத் தங்கள் குல முதல்வனைக் கொள்வது போலவே அவனுக்கு வட இந்தியப் பிறப்புரிமையை அளிக்கின்றன. அவை, அவனைப் பல்லவத் தலைநகர் காஞ்சியோடு தொடர்பு படுத்துவதும் செய்கின்றன. அப்பட்டியல்களில் நீண்ட இடைவெளி நிரப்பப்படாமல் விடப்பட்டிருப்பதால், இக்கல்வெட்டுக்களிலிருந்து, தொடர்பு படுத்தும் குடிவழிப்பட்டியில் ஒன்றை உருவாக்குவது இயலாது. அக்கல்வெட்டுக்கள் சிலவற்றில், இடம் பெற்றிருக்கும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி, திரிலோசனனோடு, கரிகாலன் கொண்ட தொடர்பு ஆகும். ஒரே காலத்தைச் சேர்ந்த தெலுங்கு, தமிழ் இலக்கியங்களில், இது, முறையாக, வரலாற்று நிகழ்ச்சியாக ஆக்கப்பட்டுளது. மெக்கன்ஸ் அவர்களின் (Machenzie) கையெழுத்துப் படிகளில் ஒன்று, இது குறித்த தனிக்கவனத்தை ஈர்க்கிறது. இவ்வரலாற்றுச் சான்றுகளின் பெருங்குவியலிலிருந்து, கரிகாலனும், திரிலோசனனும் சமகாலத்தவர் என்ற கருத்து, மக்களிடையே பதினோறாம் நூற்றாண்டில், மிகப் பெருமளவில் இடம் பெற்றுவிட்ட நம்பிக்கையாக இருந்தது எனக்கொள்ளலாம். பிற்காலக் கல்வெட்டுக்களிலும், இலக்கியங்களிலும், இடம்

பெற்றிருக்கும் கதைகளில், திரிலோசனன், சோழர்க்குத் திறை செலுத்தும் சிற்றரசனாக, காவிரிக்குக் கரை அமைக்கும் பணியில், அச் சோழர்க்குத் துணை புரிய மறுத்தவனாகக் காட்டப்பட்டுள்ளான். சம காலத்தவனான சோழப் பேரரசன் கையில், தன் தனியாட்சி உரிமையை அண்மையில் இழந்து விட்டதனால், தன்பேரரசன் ஆணைக்கு அடிபணிய மறுக்கும் பெருமிதம் உடையவனாகி விட்டான்; அடிபணியாமைக்குத் தென்னாட்டுச் சோழர் தலைநகரிலிருந்து அவனைப் பிரித்து வைக்கும், நெடுந்தொலைவு காரணமாதலும் கூடும். எவ்வாறாயினும், கரிகாலன் அவனை விட்டுவைக்கவில்லை; தன்னுடைய சிற்றரசனை விரைவில் தன்தாள் பணியச் செய்துவிட்டான் என்பதில் ஆவணங்கள் ஒத்துள்ளன. இலக்கிய மொழியில், உருவகப்படுத்திக் கூறின், தேவைக்குமேல் இருந்ததான கண், கரிகாலனால் பிடுங்கப்பட்டது.

இக்கதைகளில் அடிப்படையில் அமைந்திருக்கும் கருத்துக்களை நம்பி, திரிலோசனன் விஜயாதித்தியன், கரிகாலன் ஆகிய மூவரும் சம காலத்தவர் என்பதை நிலை நாட்டலாம்.

# இருபதாம் அதிகாரத்தின் பின் இணைப்பு: 1

**கரிகால் பெருவளத்தான் சிலப்பதிகாரக் காலத்தவனா?**

சிலப்பதிகாரத்தில், சோழ அரசரைப் பற்றிய குறிப்பு பதினான்கு இடங்களில் வந்துள்ளன என்றாலும், அவற்றுள், கரிகாற் பெருவளத்தான் பெயர், மூலத்தில், மூன்று இடங்களில் மட்டுமே வந்துளது. அவ்வாறு குறிப்பிடப்படும் அவ்விடங்களிலும், கரிகாலன், சிலப்பதிகார நிகழ்ச்சியோடு தொடர்பு படுத்தும் நிலையிலும் கூறப்படவில்லை. சிலப்பதிகார நிகழ்ச்சி நடைபெற்ற காலத்தவனாகவும் கூறப்படவில்லை.

> "இருநில மருங்கில் பொருநரைப் பெறாஅச்
> செருவெங் காதலின் திருமா வளவன்,
> வாளும், குடையும், மயிர்க்கண் முரசும்
> நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுக, இம்
> மண்ணக மருங்கின்என் வலிகெழு தோள்எனப்
> புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்".
>
> —இந்திர விழவூர் எடுத்த காதை: 89 - 94.

இது, திருமாவளவனுடைய வடநாட்டுப் படையெடுப்புப் பற்றிக் கூறுகிறது. அது, சிலப்பதிகாரக் காலத்துக்கு முந்திய நிகழ்ச்சி என்பதைப், "புண்ணிய திசைமுகம்" போகிய அந்நாள்" என்ற தொடரில் வரும் "போகிய" என்ற இறந்த காலவினையும், "அந்நாள்" என்ற சேய்மைச் சுட்டும் உறுதி செய்வது காண்க. ஆக, இத்தொடரில் இடம் பெற்றிருக்கும் திருமாவளவன், சிலப்பதிகாரக் கதை நிகழ் காலத்தவன் அல்லன் என்பது உறுதியாகிறது.

''அரசிளங் குமாரரும் உரிமைச் சுற்றமும்,
பரத குமரரும், பல்வேறு ஆயமும்,
ஆடுகள மகளிரும், பாடுகள மகளிரும்,
தோருகொள் மருங்கின் சூழ்தரல் எழினியும்,
விண்பொரு பெரும்புகழ் கரிகால் வளவன்
தண்பதம் கொள்ளும் தலைநாட் போல
..................................................
கோவலன் தன்னொடும் கொள்கையின் இருந்தனன்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்''

—கடலாடு காதை: 155 - 174.

இதில் கரிகாலனைப் பற்றிவரும் குறிப்பு, அரசிளங்குமாரர், அவர்தம் உரிமை மகளிர், வணிகர் குலச் செல்வங்கள், அவர்தம் ஏவல் மகளிர், ஆடவும், பாடவும் வல்ல மகளிர் ஆகிய பெருங்கூட்டம் உடன் வரச்சென்று, கடற்கரைக்கண்ணே, திரைச் சீலைகளை நாலவிட்டு, ஆரவாரப் பேரொலி எழக் கரிகாலன் புனலாட்டு விழா மேற் கொள்ளும் நிகழ்ச்சி, கோவலன் அத்திரிமீது அமர்ந்தும், மாதவி வையம் ஏறியும் கடலாடச் சென்ற நிகழ்ச்சிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதேயன்றி, சிலப்பதிகார நிகழ்ச்சி நடைபெற்ற நிகழ்ச்சியாகவோ, அச்சிலப்பதிகார நிகழ்ச்சியோடு தொடர்புடைய நிகழ்ச்சியாகவோ, காணப் படவில்லை. மாறாக, இதில் கூறப்பட்டிருக்கும், கரிகாலன் கடலாடல் நிகழ்ச்சி, சிலப்பதிகாரக் காலத்துக்கு முந்திய நிகழ்ச்சி என்பதை உறுதிசெய்யும், வலுவான அகச்சான்று ஒன்றும் சிலப்பதிகாரத்திலேயே இடம் பெற்றுளது:

''மன்னன் கரிகால் வளவன் மகள், வஞ்சிக்கோன்
தன்னைப் புனல் கொள்ளத், தான் புனலின் பின்சென்று

கன்னவில் தோளாயோ, என்னக், கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்'':

—வஞ்சினமாலை : 11 - 15.

வஞ்சினமாலையில் வரும் இவ்வரிகளில், கணவன் கள்வன் அல்லன் என்பதைக் காவலன் முன் காட்டிவிட்டு வெளிப் போந்த கண்ணகி, ''என் காதலனைக் கொன்ற கோன் நகர் இது ; ஆகவே இந்நகரை அழிப்பது தவறன்று ; அழிப்பேன்'' எனக் கூறியவள், தான் பிறந்த புகார் நகரில் பிறந்து கற்பு நெறிகாத்த காரிகையர் எழுவரை நிரலே எடுத்துக்கூறி, ''அவர்போல் யானும் ஒருபத்தினியேயாயின், அரசோடு மதுரையையும் அழிப்பேன்'' எனக்கூறும் வஞ்சின உரையில், எடுத்துக் கூறிய அவ்வேழு பத்தினிப் பெண்டிருள் ஒருத்தியாக, புனல் விளையாட்டின் போது, வெள்ளம் அடித்துச் சென்றுவிட்ட கணவனாம் ஆட்டனத்தியைப் புனலோடு பின் சென்று கரைமீட்ட கற்பரசியாம் ஆதிமந்தியின் வரலாறு கூறும்போது, அவளை, ''மன்னன் கரிகால் வளவன் மகள்'' என அறிமுகப்படுத்தியுள்ளாள். அவ்வாறு அழைத்ததன் மூலம், அந்நிகழ்ச்சி சிலப்பதிகார நிகழ்ச்சிக்குக், காலத்தால் முந்தியதே என்பதை உறுதி செய்துவிட்டாள்.

ஆக, இம்மூன்று இடங்களிலும் கூறப்பட்ட திருமாவளவனோ, கரிகால் வளவனோ, சிலப்பதிகார நிகழ்ச்சி காலத்தவன் அல்லன் என்பதைத் தெளிவுபட உணர்த்திவிட்டார் சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளார் என்பது உறுதிசெய்யப்பட்டது.

முடிகெழுவேந்தர் மூவர்க்கு உரியதான பாட்டுடைச் செய்யுளாம் சிலப்பதிகாரத்தைப் பாடிய இளங்கோவடிகளார், தம் காப்பியத்துக் கருப்பொருளில் புகார் நகரத்து நிகழ்ச்சிகளைப் பாடும்போது, அப்புகார் நகரைத் தலைநகராகக் கொண்ட சோழப் பேரரசுக்குப் பெருமை சேர்த்தவன் கரிகாற் பெருவளத்தான் ஆதலாலும்,

அவன், தம் காலத்துக்குச் சிறிதே முற்பட்டவனாகவே, அவனுடைய வாழ்க்கையொடு தொடர்பு கொண்ட அருஞ் செயல்கள், அவர் மனத்தில் பசுமையாகவே இருந்ததாலும், அச்செயல்கள் சிலவற்றை ஏற்புடைய இடங்களில் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு குறிப்பிடும் நிலையில், அவன் இயற்பெயர் கூறாது, சென்னி, செம்பியன், காவிரி நாடன், புலிக்கொடி உரவோன் என்பன போலும், சோழர் குலத்தவர் அனைவரையும் குறிக்கும் பொதுப் பெயர்களால் குறிப்பிட்டால், சிலப்பதிகாரத்தைப் பிற்காலத்தே படிப்பவர்க்கு, அச்செயல்களுக்கு உரியவன் கரிகால் பெரு வளத்தான் தான் என உறுதியாகக் கொள்வதற்கு மாறாக, சோழர் குலத்து வந்தவன் யாவனோ என ஐயுறவும் கூடும் என அஞ்சியதால், தாம் பாடிய சிலப்பதிகாரத்தில், சிலபல இடங்களில் இவை போலும், பெயர்களை ஆண்டிருந்தாலும், மேலே கூறிய மூன்று இடங்களில் மட்டும், திருமாவளவன், கரிகால் வளவன் என்ற அவன் இயற்பெயர் கூறியே அறிமுகம் செய்துள்ளார்.

ஆக, கரிகாலவன், வடநாட்டு வெற்றி, தன்னொத்த வயதுடையாரோடு சென்று கடலாடி மகிழ்தல், ஆதிமந்தி என்னும் அரிய புலவர் பெருமாட்டியை மகளாகப் பெற்றது ஆகியவற்றைக் கூறியதன் மூலம், கரிகாலனைப் பற்றி முழுமையாக அறிந்திருப்பவர் இளங்கோவடிகளார் என்பது தெளிவாயிற்று.

"அங்ஙனமாக, மாதவியின் அரங்கேற்றம் கரிகாலன் அவையில் நடைபெற்றிருக்குமாயின், மாதவிக்கு ஆயிரத்தெண் கழஞ்சு பொன் பரிசு அளித்தது கரிகாலனே ஆயின், கரிகாலனை நன்கு அறிந்து வைத்திருக்கும் இளங்கோவடி களார், அவ்வுண்மை தெளிவாகத் தெரியும் வகையில், அந்நிகழ்ச்சிகளில் கூறப்படுவோனைத், திருமாவளவன் என்றோ, கரிகால் வளவன் என்றோ, அவன் இயற்பெயர் கூறியே பாடியிருப்பர்; "சூழ்கழல் மன்னன்" என்றோ

''வேந்து'' என்றோ, சோழர் குலப்பொதுப் பெயரால் கூறிப் படிப்பவரை மயக்கத்திற்கு உள்ளாக்கியிருக்கமாட்டார்.

மேலும் இமயத்தே புலி பொறித்தது, கடல் ஆடியது, ஆதிமந்தியின் தந்தையாயது ஆகிய நிகழ்ச்சிகளைத் தம் வாழ்நாள் காலத்துக்கு முந்திய நிகழ்ச்சிகளாகக் கூறிய இளங்கோவடிகளார், மாதவி அரங்கேற்ற நிகழ்ச்சி தம் காலத்துக்கு முந்தியவனவாம் கரிகாலன் காலத்து நிகழ்ச்சி அன்று என்பதினாலேயே அந்நிகழ்ச்சியைத் தம் கால நிகழ்ச்சியாகக் கூறியுள்ளார்.

இம்மூவிடம் தவிர்த்து ஏனைய இடங்களில், சிலப்பதிகாரச் சோழன், ''சென்னி''; ''காவிரிநாடன்''; ''பெருநிலம் முழுதாளும் பெருமகன்'' ; ''செம்பியன்''; ''மன்னன்''; ''வேந்தன்'', ''தமர்'', ''உழைப்புலிக் கொடித்தேர் உரவோன்'' என்பனபோலும் பெயர்களால் அழைக்கப் பட்டுள்ளான். இங்கெல்லாம், அச்சிலப்பதிகாரச் சோழன், கரிகாலன் என்றோ, திருமாவளவன் என்றோ சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளால் அழைக்கப்படவில்லை எனினும் உரையாசிரியர்கள், ''மங்கல வாழ்த்துப் பாடலில் வரும், ''பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த ஒருதனிக் குடிகள்'' (31-32) என்ற தொடரில்வரும் ''பெருநிலம் முழுதாளும் பெருமகன்'' என்பதற்கும், அதே மங்கல வாழ்த்துப் பாடலில் வரும், ''இப்பால் இமயத்து இருத்திய வாள் வேங்கை உப்பாலைப் பொற்கோட்டு உழையதா, எப்பாலும் செருமிகு சினவேல் செம்பியன் ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே'' (85-68) என்ற தொடரில் வரும் ''செம்பியன்'' என்பதற்கும், அரங்கேற்றுக் காதை ''தாதவிழ் புரிகுழல் மாதவி தன்னை... சூழ்கழல் மன்னற்குக் காட்டல்வேண்டி'' (7-11) என்ற தொடரில்வரும் ''மன்னன்'' என்பதற்கும், இந்திரவிழவூர் எடுத்த காதையில், ''இருநில மன்னற்கும் பெருவளம் காட்டத் திருமகள் புகுந்தது இச்செழும்பதி'' என்ற தொடரில் (212-213) வரும் ''இருநில மன்னன்'' என்பதற்கும், நாடு காண்காதை, ''உழைப் புலிக் கொடித்தேர் உரவோன்

கொற்றமொடு மழைக்கரு உயிர்க்கும் அழல் திகழ் அட்டின் மறையோர்" (142-144) என்ற தொடரில்வரும் "உழைப்புலிக் கொடித்தேர் உரவோன்" என்பதற்கும், அடைக்கலக்காதை, "வேந்துறு சிறப்பின் விழுச்சீர் எய்திய மாந்தளிர் மேனி மாதவி" (21-22) என்ற தொடரில் வரும் "வேந்து" என்பதற்கும் "கரிகாலன்" எனப் பொருள் கொண்டுள்ளனர்.

"உரைசால் சிறப்பின் அரைசு விழை திருவின் பரதர்" என, மனையறம் படுத்த காதையிலும், "அரைசர் பின்னோர்" என, அடைக்கலக்காதை (109) கொலைக்களக் காதையிலும் (44) வரும் தொடர்களில், வணிகர் குலத்தைக் குறிக்கும் போதெல்லாம், "வணிகர்" என, அவர் குலப் பெயரிட்டுக் குறிப்பிடாமல், அரசகுலத்தவர்க்கு அடுத்து வைத்து மதிக்கத் தக்க இனத்தவர் என்ற அவர் குலப்பெருமை தோன்றக் குறிப்பிடுவதையே இளங்கோவடிகளார் மரபாகக் கொண்டு உள்ளார் என்பது தெளிவு. ஆகவே, "அரைசு விழை திருவின் பரதர்" என்ற தொடரில் வரும் "அரைசு" என்ற சொல்லோ, "அரைசர் பின்னோர்" என்ற தொடரில் வரும் "அரைசர்" என்ற சொல்லோ, பொதுவாக, அரசர் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ள சொல்லேயன்றி, குறிப்பிட்ட அரசன் ஒருவனைச் சுட்டிக் கூறப்பட்ட சொல் அன்று: மங்கல வாழ்த்துப் பாடலில் வரும், "பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த ஒரு தனிக்குடி" (31-32) என்ற தொடரின் நிலையும் அஃதே. பெரிய நாட்டை முழுமையாகத் தனியொருவனாக நின்று ஆளும் பேரரசனால், முதற்குடியாக வைத்து மதிக்கத்தக்க ஒப்பற்ற குடி" எனும் பொருள் உடையதாய் வணிகரைக் குறிக்கும், அத்தொடரில் வரும் "பெருநிலம் முழுதாளும் பெருமகன்" என்ற தொடரும், ஒருபெரிய நாட்டை முழுமையாக ஆளும் ஒரு பேரரசன்

என்ற பொதுப் பொருள் உணர்த்தவல்லதேயல்லது, உரையாசிரியர் கொண்டதுபோல், கரிகாலனைத் தனித்துக் குறிக்க வழங்கப்பட்ட சொற்றொடர் அன்று.

பழந்தமிழ் மக்கள், அவர்கள் எந்நிலத்து மக்களே ஆயினும், அந்நிலத்துக்குரிய கடவுளர்க்கு விழா எடுத்து, அக்கடவுளர்தம் பெருமைகளைப் பாராட்டிப் பாடிமகிழும் நிகழ்ச்சிகளின் முடிவிலும், அதேபோல் கடலாடல்போலும் இன்ப விளையாடல்கள்போதும், அகத்துறை நலம் சிறக்கப் பாடிக் களிக்கும்போதும், இறுதிப்பாட்டு, அந்நாடாளும் மன்னன் பெருமை கூறி வாழ்த்தும் பாட்டாகவே அமையும்; அவ்வாறு பாராட்டப் பெறும் அரசன், அப்போது அரியணையில் இருப்போனாக இருக்கவேண்டும் என்று கொள்ளாமல் அக்குல முன்னோனாகவும் இருப்பன்; இது மரபு.

இந்திர விழா மேற்கொள்ளும் புகார் நகரத்து மக்களோடு கடற்கரைக்குச் சென்று, கானல்வரி பாடி மகிழுங்கால், பாட்டின் கருப்பொருளாக அமைந்துவிட்ட அகப்பொருள் காரணத்தால் கருத்து வேறுபாடுற்றுக் கோவலன், மாதவியை விடுத்துப் போய்விட, மாதவியும் தனித்தே தன் மனைபுகுந்த கொடுமையைப் பாடி முடித்த இளங்கோவடிகளார், இறுதியாக, சோணாட்டு வேந்தன் வெண்குடைச் சிறப்பைப் பாடி வாழ்த்துங்கால், அக்காலை அரசாண்டிருந்த சோழ அரசனின் இயற்பெயர் கூறிப்பாராட்டாது, "செம்பியன்" எனச், சோழர் குலத்தவரைக் குறிக்கும் பொதுப் பெயரே கூறிப் பாராட்டியிருப்பது காண்க.

"மாயிரும் ஞாலத்து அரசுதலை வணக்கும்
சூழி யானைச் சுடர்வாள் செம்பியன்
மாலை வெண்குடை கவிப்ப
ஆழி மால்வரை அகலையான் எனவே".

—கானல்வரி:

அதேபோல், பாண்டிநாட்டு வேட்டுவர், தம் நிலத் தெய்வமாம் கொற்றவையை வழிபடப் பாடிய வரிப் பாட்டின் இறுதியில் தங்கள் நாடாளும் பாண்டியனை வாழ்த்துங்கால், பெயர்கூறி வாழ்த்தாது, பாண்டியர் குலத்தவர்க்கு உரிய மலையாம் பொதிகைமலை கூறி, அதற்கு உரியோன் என்ற தொடரால் குறிப்பிட்டு வாழ்த்தி இருப்பது காண்க.

''பொறை உயர் பொதியில் பொருப்பன், பிறர் நாட்டு
கட்சியும் கரந்தையும் பாழ்பட
வெட்சி சூடுக விறல்வெய் யோனே''.

—வேட்டுவ வரி.

அதேபோல், மதுரை மாநகரத்து ஆயர்குல மகளிர், பால் உறையாமை போலும் உற்பாதத்தால், தங்கள் ஆயர் பாடியில் அடைக்கலம் புகுந்திருக்கும் கண்ணகிக்கும் கோவலனுக்கும் கேடு வராமை வேண்டி ஆடிய குரவைக் கூத்தின் இறுதியில், மன்னனை வாழ்த்தும் மரபையொட்டி மாநகரத்து மன்னனை வாழ்த்துங்கால் அக்காலை அரசு கட்டிலில் அமர்ந்திருக்கும் அரசன் பெயர் கூறி வாழ்த்தாமல், இந்திரன் முடிஅழித்த் தொடித்தோள் தென்னவனாம் பாண்டியர் மரபு முதியோன் பெயரே கூறி வாழ்த்தியிருப்பது காண்க.

''வெற்றி விளைப்பது மன்னோ, கொற்றத்து
இடிப்படை வானவன் முடித்தலை உடைத்த
தொடித்தோள் தென்னவன் கடிப்பிடு முரசே''.

—ஆய்ச்சியர் குரவை.

அதேபோல் சேரநாட்டு மலைக்குரவர், கண்ணகி கணவனோடு கூடி வானாடு அடைந்த வியத்தகு நிகழ்ச்சியால் மகிழ்ந்து, தாம் வழிபடும் மலைநாட்டுக் கடவுளாம் முருகவேளை வழிபடும் குரவைக் கூத்து மேற்கொண்டு முருகன் புகழைப் பலபடப் பாடி மகிழ்ந்த பின்னர், விழா முடிவில், நாடாளும் மன்னனை வாழ்த்தும் மரபினையொட்டி,

அரச வாழ்த்துப் பாடியவர்கள், அக்காலை அரசாண்டிருந்தவன் செங்குட்டுவன் என்பதை அறிந்திருந்தும், அவன் பெயர் கூறி வாழ்த்தாமல், இமயத்தே வில் பொறித்தும் கொல்லிமலையாண்டும் மாண்புற்ற சேரர்குலக் காவலன் ஒருவனை, அச்சேரர் குலத்தவர்க்கு உரிய பொதுப்பெயராம், குடவர்கோ, என்ற பெயரோடு இணைத்து வாழ்த்தியிருப்பதும் காண்க.

> ''ஆனா வைகலும் வாழியர்
> வில்லெழுதிய இமயத் தொடு
> கொல்லி ஆண்ட குடவர் கோவே''
>
> —குன்றக் குரவை.

ஆக, தத்தம் மண்ணுக்கு உரிய கடவுளர் குறித்த விழாக்களில், கடவுள் வாழ்த்தெல்லாம் முடிந்த பின்னர், தங்கள் மண் ஆளும் மன்னவனை வாழ்த்துவதையும் அவ்வாறு வாழ்த்துங்கால், அக்காலை ஆட்சிப் பொறுப்பில் இருப்போன் இயற்பெயர் கூறி வாழ்த்தாது, அவன் பிறந்த இனத்தவர்க்குரிய பொதுப் பெயர்களுள் யாதேனும் ஒன்றையே கூறி வாழ்த்துவதையும் மரபாகக் கொண்டுள்ளார், சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளார் என்பது தெளிவாகிறது.

கண்ணகி மண நிகழ்ச்சியில், கணவன், மனைவியரை மங்கல நல்லமளி ஏற்றி மணவிழாவிற்கு நிறைவு கண்ட மகிழ்ச்சியில், நாட்டு மரபையொட்டி நாடாளும் மன்னனை வாழ்த்துங்கால், அக்காலை அரியணையில் இருந்த அரசன் இயற்பெயர் கூறி வாழ்த்தாமல், சோழர் குலத்தவர்க்கு உரிய பொதுப் பெயர்களுள் ஒன்றான ''செம்பியன்'' எனும் பெயர் கூறி வாழ்த்தி இருப்பதும் மேலே கூறிய மரபுகளை ஒட்டியே தான்.

> 'அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை
> மங்கல நல்லமளி ஏற்றினார்; தங்கிய
> இப்பால் இமயத்து இருத்திய வாள் வேங்கை

உப்பாலைப் பொற்கோட்டு உழையதா ; எப்பாலும்
செருமிகு சினவேல் செம்பியன்
ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே''
—மங்கல வாழ்த்துப் பாடல் : 63-68.

ஆகவே, இவ்வரிகளில் இடம்பெற்றிருக்கும் "செம்பியன்" என்ற சொல்லுக்கு உரையாசிரியர்கள், கரிகாலன் எனப் பொருள் கூறியிருப்பதும் பொருந்தாது. அவ்வாறு பொருள் கூறியது கொண்டு சிலப்பதிகாரக் காலத்தில் புகார் நகர் ஆண்டவன் கரிகாலன் எனக் கொள்வதும் பொருந்தாது.

மேலும், உரையாசிரியர்கள் கரிகாலன் எனப் பொருள் கொள்வதற்குக் காரணமாக இருக்கும் ''செம்பியன்'' என்ற சொல் இடம் பெற்றிருக்கும், அம்மங்கல வாழ்த்துப் பாடல் வரிகள், அச்செம்பியன், கண்ணகி மணவிழா நிகழ்ந்தபோது புகார் நகர் ஆண்டவன் அல்லன்; மாறாக, அம்மணவிழா காலத்திற்கு முற்பட்ட காலத்தே ஆண்டவன் என்பதையே உறுதி செய்கின்றன. ''இப்பால் இமயத்து இருத்திய வாள் வேங்கை உப்பாலைப் பொற்கோட்டு உழையதா''; என்ற தொடர்க்கு இமயத்தின் இப்பதியில் பொறித்த புலிக்கொடி, அப்பாலும் நிற்குமாக'' என்பதே, பொருளாக, அந்நிகழ்ச்சி, கண்ணகி மணவிழா நிகழ்ச்சிக்கு முற்பட்ட காலத்தே நிகழ்ந்த ஒன்று என்பது உறுதியாவது காண்க. இமயத்தே பொறித்த என்னும் பொருள்தரும். ''இமயத்து இருத்திய'' என்ற தொடரில் வரும், ''இருத்திய'' என்ற பெயரெச்சம் இறந்த காலப் பெயரெச்சமாய் அமைந்திருப்பதும், அந்நிகழ்ச்சி கடந்தகால நிகழ்ச்சி என்பதையே உறுதி செய்கிறது. ஆகவே, அது செய்தவனாக, இளங்கோவடிகளார் கூறும் ''செம்பியன்'', புகார் நகரைக் கடந்த காலத்தே காவல் புரிந்தவனேயல்லது, கண்ணகி திருமணம் நிகழ்ந்த காலத்துக் காவலன் அல்லன் என்பது தெளிவாம்.

மேலே கூறிய விளக்கங்களால், சிலப்பதிகார நூலாசிரிய ராகிய இளங்கோவடிகளார், கரிகால் வளவனை அறிந்தவர்

அவனுக்குக் கரிகாலன் என்பதோடு, திருமாவளவன் என்ற பெயர் உண்மையையும் அறிந்தவர்; தென்னகத்தில் தன்னால் வெற்றி கொள்ளத்தக்க வேந்தர் யாரும் இல்லாமையால், போர் விரும்பி வடநாடு சென்ற காலை, இமயப் பெருமலை அவன் முயற்சிக்குத் தடையாக நிற்பது பொறாது, அதன்மீது, தன் புலிக்கொடி பொறித்து மீள்கையில், வச்சிர நாட்டுக்கோன் கொடுத்த பட்டி மண்டபம்; அவந்திவேந்தன் அளித்த தோரணவாயில், ஆகிய வற்றைப் பெற்றுக் கொணர்ந்து, புகார் நகரத்தில் அமைத்து, நகரை அழகு படுத்திய அருஞ்செயல்களை அறிந்தவர் (இந்திரவிழவூர் காதை : 89-104) என்பதும், அதேபோல், அரசிளங்குமரர், வணிகர்குலச் சிறார், ஆடல் பாடல் வல்ல இளமகளிர் சூழ்ந்துவரச் சென்று கடலாடி மகிழ்வதில் ஆர்வமுடையவன் கரிகாலன் என்பதையும் (கடலாடுகாதை : 155-160) அத்தகைய புனலாடல் விழா ஒன்றில், புதுப் புனலால் அடித்துச் செல்லப்பட்ட அவன் மருகன் ஆட்டனத்தியை, அவன் மகள் ஆதிமந்தி மீட்ட அருஞ் செயலையும் (வஞ்சினமாலை : 9-150) அறிந்தவர் என்பதும் தெளிவாக உறுதி செய்யப்பட்டன.

கரிகாலனின் இவ்வரலாறுகளை அறிந்திருந்தமையால் தான், இளங்கோவடிகளாரால், அவற்றை எடுத்துக் கூறிப் பாராட்ட முடிந்தது; அவ்வாறு பாராட்டுங்கால், அச்செயல் களோடு தொடர்புடையவன், திருமாவளவன், கரிகாலன் என அவன் இயற்பெயரையே கூறவும் முடிந்தது.

கரிகால் வளவனை, இத்துணைத் தெளிவாக உணர்ந் திருந்த இளங்கோவடிகளார், மாதவி அரங்கேறியது கரிகாலன் அரசவையில், மாதவிக்குத் தலைக்கோல் அளித்து ஆயிரத்தெண் கழஞ்சு பொன் பரிசு அளித்து விழுச் சிறப்புச் செய்தது கரிகாலன் என்பன உண்மையாயின், அவ்விடங்களில் முறையே "திருமாவளவனுக்கு அல்லது கரிகாலனுக்குக் காட்டல் வேண்டி" என்றும், "கரிகால்வளவன் பால் தலைக்கோல் எய்தி" என்றும், கரிகாலனால் விழுச்சீர்

எய்திய மாதவி" என்றும், கரிகாலன் பெயர் கூறியே பாடியிருப்பர். "சூழ்கழல் மன்னர்க்குக் காட்டல் வேண்டி," (அரங்கேற்று காதை: 11)" என்றும், "காவல் வேந்தன்", "தலைக்கோல் எய்தி" (ஷை : 158-161) என்றும், "வேந்துறு சிறப்பின் விழுச்சீர் எய்திய மாந்தளிர் மேனி மாதவி" (அடைக்கலக் காதை : 21-22) என்றும் வேறு வேறு தொடர் வாய்பாட்டால் கூறியிருக்க மாட்டார். ஆகவே, மாதவி அரங்கேறிப் பரிசு பெற்றது கரிகாலன் அவையில் அன்று; அக்காலை அரசாண்டிருந்த வேறு ஒரு சோழன் அவையில் தான், ஆகவே, அத்தொடர்களில் வரும் "சூழ் கழல் மன்னன்", "காவல் வேந்தன்", "வேந்து" என்ற சொற்களுக்குக் "கரிகாலன்" என் உரையாசிரியர்கள் பொருள் கொண்டது பொருந்தாது.

தம்மைக் காணும் ஆடவர் உயிரைக் கவர்ந்து கொள்ளும் பேரழகு வாய்ந்தவர் புகார் நகரத்துப் பெண்டிர் என்ற அம் மாநகரத்து மகளிர் நலம் பாட வந்த இளங்கோவடிகளார், மக்கள் உயிரைக் கவரும் தன் தொழிலைப் புகார் நகரத்தே ஆற்ற முடியாது அப்புகார் நகரத்து மன்னனுக்கு அஞ்சிய கூற்றுவன், தன் ஆண் உருவைக் கைவிட்டுப் பெண் உருக் கொண்டு உலாவருகிறான் போலும் "மன்னவன் செங்கோல் மறுத்தல் அஞ்சி, பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றில் ஆண்மையில் திரிந்து...பெண்மையில் திரியும்" (இந்திர விழவூர் எடுத்த காதை ; 218-223) என்ற பகுதி, எவ்வாறு புகார் நகரத்துப் பெருமையைப் பொதுவாகப் பாராட்ட வந்ததோ அது போன்றதே, சோழப் பெருநாட்டை ஆளும் அரசனுக்கு, வளங்கொழிக்கும் பெருநகரமாம் புகார் நகரின் வளப் பெருக்கத்தை உணர்த்த திருமகளே அந்நகருள் புகுந்து விட்டாள் என்ற பொருள்பட வரும் "இருநில மன்னர்க்குப் பெருவளம் காட்டத், திருமகள் புகுந்தது இச்செழும்பதி" (இந்திரவிழவூர் எடுத்த காதை : 212-213) என்ற வரிகளும் ஆதலின், அத்தொடரில் இடம் பெற்றிருக்கும் "மன்னன்" என்ற சொல்லுக்கு அடியார்க்கு நல்லார் "கரிகாலன்" எனப் பொருள் கொண்டதும் பொருந்தாது.

புலிக்கொடி பறக்கும் தேர் ஊர்ந்து செல்லும் உரிமை, சோழர் குலத்தவர் அனைவர்க்கும் உரிய ஒன்று; ஆகவே நாடுகாண் காதையில் வரும் "உழைப்புலி கொடித்தேர் உரவோன்" என்ற தொடரில் வரும் அத்தொடருக்கு அடியார்க்கு நல்லார், கரிகாலன் எனப் பொருள் கொண்டதும் பொருந்தாது.

ஆக, மேலே கூறிய விளக்கங்களால், திருமாவளவன், கரிகாலன் என்ற அவன் இயற்பெயர் விளங்கவே கூறப்பட்ட, அவன் வடநாட்டுப் படையெடுப்பு, அவன் கடல் விளையாட்டு, அவன் மகள் ஆதிமந்தி வரலாறு ஆகிய அம்மூவிடம் தவிர்த்து, சிலப்பதிகார நிகழ்ச்சிகளோடு தொடர்புபடுத்தி வழங்கியிருக்கும், சோழர் குலத்தவரைக் குறிக்கும் சென்னி, செம்பியன் போலும் பெயர்கள் கரிகாலனைக் குறிப்பதாக, உரையாசிரியர் பொருள் கொண்டது தவறு. அப்பெயர்களால் குறிப்பிடப்படுவோன் கரிகாலன் அல்லன். அவன் சிலப்பதிகாரக் காலத்துக்கு முந்தியவனே அல்லது சிலப்பதிகாரக் காலத்தவன் அல்லன் என்பன தெளிவாகின்றன.

மேலும், சிலப்பதிகாரத்து நிகழ்ச்சிகளில், சோழநாட்டில் நிகழ்ந்தன கூறும் புகார்க் காண்டத்து இறுதியில் வரும் கட்டுரையின் தொடக்கத்திலும், பாண்டி நாட்டில் நிகழ்ந்தன கூறும் மதுரைக் காண்டத்து இறுதியில் வரும் கட்டுரையின் தொடக்கத்திலும், சேரநாட்டில் நிகழ்ந்தன கூறும் வஞ்சிக் காண்டத்து இறுதியில் வரும் கட்டுரையின் தொடக்கத்திலும், முறையே.

"முடியுடை வேந்தர் மூவ ருள்ளும்
தொடிவிளங்கு தடக்கைச் சோழர் குலம்";

"முடியுடை வேந்தர் மூவ ருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலம்"

"முடியுடை வேந்தர் மூவ ருள்ளும்
குடதிசை ஆளும் கொற்றம் குன்றா
வார மார்பிற் சேரர் குலம்"

என, அந்நாடுகளை ஆண்ட அரச குலத்தவர் பொதுவாகக் கூறப்பட்டிருந்தாலும், வஞ்சிக் காண்டத்துக் கட்டுரை இறுதியில், "செங்குட்டுவனோடு ஒரு பரிசா நோக்கிக் கிடந்த வஞ்சிக்காண்டம்", என்றும், மதுரைக் காண்டத்துக் கட்டுரை இறுதியில், "நெடுஞ்செழியனோடு ஒரு பரிசா நோக்கிக் கிடந்த மதுரைக் காண்டம்" எனச், சிலப்பதிகாரத்து நிகழ்ச்சிக் காலத்துக் காவலர்கள் பெயர்கள் கூறப்பட்டிருப்பது போல், புகார்க் காண்டத்துக் கட்டுரை இறுதியில், கரிகாலன் பெயர் கூறப் படாமையும் காண்க.

—

# 20 ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு : 2

**செங்குட்டுவன் காலம் :**

''கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனைத் தொடர்பு படுத்திச், செங்குட்டுவன் காலத்தை உறுதி செய்வது கூடாது. Nor Can Senguttuvan's date be fixed by the socalled Gajabahu Synchorism'' என்கிறார் திருவாளர் சீனிவாச அய்யங்கார் (History of the Tamils Page : 379)

இதற்கு அவர் காட்டும் காரணங்களுள் தலையாயது, கண்ணகி வழிபாடு குறித்து, உரைபெறு கட்டுரையும், வாழ்த்துக் காதையும் கூறும் செய்திகளில் காணப்படுவதாக அவர் கருதும் முரண்பாடு.

செங்குட்டுவன் கண்ணகிக்கு எடுத்த விழாக்காண மாளுவ மன்னன் போலும் பலவேந்தர்களோடு கயவாகுவும் வந்திருந்தான் என்கிறது சிலப்பதிகாரம்.

> ''குடகக் கொங்கரும் மாளுவ வேந்தரும்
> கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்
> எம்நாட் டாங்கண், இமைய வரம்பனின்
> நல் நாள்செய்த நாளணி வேள்வியில்
> வந்தீகு என்றே வணங்கினர் வேண்ட''
>
> —சிலம்பு : 30 : 159 - 163.

ஆனால், உரைபெறு கட்டுரையோ, ''அது கேட்டுக் கடல் சூழ் இலங்கைக்கயவாகு என்பான். ... பாடிவிழாக் கோள் பன்முறை எடுப்ப'' என்கிறது.

மேலும், சோழன் பெருநற்கிள்ளி, கண்ணகி தேவிக்கு உறையூரில் கோயில் கட்டி விழா எடுத்தான் எனக் கூறுகிறது

உரை பெறு கட்டுரை ; ஆனால், இது வாழ்த்துக் காதையில் கூறப்படவில்லை என்றெல்லாம் அவர் கூறுவது காண்க.

"In the Silappadigaram, it is said, that among others such as the king of Malva, Kayavagu King of lanka, surrounded by the sea, attended the sacrificc perfomed, by Senguttuvan-in honour of Kannagi's visible elevation to to the godhead. "The "urai peru Katturai" a prose prologue to the Epic, partilly Contradicts the adove statement and says, "Kayavagu Heard of the marvellous story of Kannagi and———frequently celebrated the festival of Kannagi, This prologu also says that Perungillli, the Solan, built a temple to the chaste - goddess (Pattini Davi) at wraiyur, but the Epic does not refer to this" (History of the Tamils Page, 380)

வஞ்சியில், செங்குட்டுவன் எடுத்த விழாவிற்கு வந்திருந்தார், தங்கள் தங்கள் நாடுகளில் விழா எடுக்க வரங்கேட்டுப் பெற்றனர் என்றாலும், வந்திருந்த அவர் அனைவரும் விழா எடுத்தார் அல்லர். விழா எடுக்க வேண்டிய தேவைக்கு உள்ளானார் மட்டுமே விழா எடுத்தனர். அருஞ் சிறை நீங்கிய ஆரிய மன்னர், பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னர் ; குடகங்கொங்கர் ; மாளுவ வேந்தர், கயவாகு, ஆகிய ஐவர் விழாவிற்கு வந்திருந்தவர் ; இவர்களுள், கொங்கர், கயவாகு ஆகிய இருவர் மட்டுமே தங்கள் நாட்டகத்தே விழா எடுத்தவர் என்கிறது உரைபெறுகட்டுரை

அதுபோலவே, மழைவளம் வேண்டித் தங்கள் தங்கள் நாட்டகத்தே, கண்ணகிக்கு விழா எடுத்தவர் அனைவரும் வஞ்சியில், செங்குட்டுவன் எடுத்த விழாவில் பங்கு கொண்டவர் அல்லர். கொற்கைக் காவலன் வெற்றி வேற் செழியன், கொங்கிளங்கோசர், கயவாகு, சோழன் பெருங் கிள்ளி, ஆகிய இந்நால்வரும், கண்ணகிக்கு விழா எடுத்தனர் எனக் கூறுகிறது உரை பெறு கட்டுரை. இந்நால்வருள் கோசரும், கயவாகுவும் மட்டுமே, வஞ்சி விழாவிற்கு வருகை

தந்தவர்; கொற்கைச் செழியனும், கோழிப் பெருங்கிள்ளியும், வஞ்சிக்கு வராதவர்கள்.

கயவாகு வஞ்சிக்கு வந்திருந்தான். விழாவில் பங்கு கொண்டான். தன்னாட்டில் தான் எடுக்கும் விழாவிற்கு வருகை தரவேண்டிக், கண்ணகி தெய்வத்தின் ஒப்புதல் பெற்றான் என்பதெல்லாம் உண்மை. ஆனால், அவன் நாடு திரும்பியதுமே, விழா எடுத்தான் அல்லன். தன் இலங்கை நாட்டில், மழைவளம் குறைந்து வறட்சி மிகுந்து விட்டதாக, அது தீர்க்க எண்ணியிருந்தபோது, அதுபோல் வறட்சிக்கு ஆளான தென்பாண்டிநாடும், கொங்குநாடும் முறையே, வெற்றி வேற்செழியனும், கோசரும், கண்ணகிக்கு விழா எடுக்க மழைவளம் பெற்ற செய்தியும் கிட்டவே, கண்ணகிக்கு விழா எடுத்தான்.

உரை பெறு கட்டுரையில், கொற்கைச் செழியன் விழா எடுக்க மழை பெய்து வளம் கொழித்த செய்தியைப், பாண்டிய நாடு பாலவே, மழைவறண்டுபோன கொங்கு நாட்டுக்கோசர் அறிந்து, தங்கள் நாட்டிலும் கண்ணகிக்கு விழா எடுக்க மழைவளம் மிக்கது. அச்செய்தி கயவாகு காதுகட்கும் எட்டவே, தன்னாட்டு அரந்தை போக்க, அவனும், அவன் நாட்டகத்தே விழா எடுத்தான். ஆக, உரைபெறுகட்டுரையில், "அது கேட்டு", எனவரும் தொடர்களில் இடம் பெற்றிருக்கும் "அது" என்ற சுட்டு, விழா எடுக்க மழை பெய்த செய்தியைக் குறிப்பதாகக் கொண்டால், உரைபெறு கட்டுரையில் கூறப்பட்டிருக்கும் செய்திக்கும், வரந்தரு காதையில் கூறப்பட்டிருக்கும் செய்திக்கும் இடையில் எவ்வித முரண்பாடும் இல்லையாதல் உறுதியாம்.

செங்குட்டுவன் காலத்தை, அவன் கஜபாகுவின் சம காலத்தவன் என்பது கொண்டு முடிவுசெய்தல் இயலாது என்பதற்குத், திருவாளர் அய்யங்கார் காட்டும் பிறிதொரு காரணம் பின்வருமாறு: இலங்கைவரலாற்று நூலாகிய அம்மகாவம்சம், கஜபாகுவை, வெறிபிடித்த பௌத்த சமயத்தவனாகவே காட்டுகிறது. பௌத்தப் பள்ளிகளைக் கட்டும்

அவன் செயல்களை விளக்கிக் கூறும், அந்நூல், பத்தினி வழிபாட்டு நெறியினை இந்தியாவிலிருந்து கொண்டுவந்தது பற்றிய குறிப்பு எதையும் கூறவில்லை'' என்பது.

செங்குட்டுவன் காலம், சமயப் பூசல் இல்லாச் சமரச சமய உணர்வு நிலை பெற்ற காலம். தமிழகத்துப் பேரூர்களில், பிறவாயாக்கைப் பெரியோன், அறுமுகச் செவ்வேள், வால்வளை மேனி வாலியோன், நீலமேனி நெடியோன் ஆகியோர்க்காம் கோயில்களோடு, அறவோர்பள்ளிகளும் ஒருசேரக் கட்டியிருக்கும், சமயக் காழ்ப்பில்லா சமரச நிலையினைச் சிலப்பதிகாரம் உணர்த்துவது காண்க. சிலம்பு: 5: 169 - 179 செங்குட்டுவன் குலவழி, சைவன்; ஆயினும் திருமாலை வழிபட வெறுப்பவன் அல்லன்; சிவன்முன் சிரம் தாழ்த்தித், திருமால் சேடத்தைப் புயத்தே தாங்கிக் கொள்ளும் அவன், கற்பு நிறைமகளிர்க்குக் கோயில் கட்டி வழிபாடாற்றும் மனப்பக்குவம் பெற்றிருந்தான். ஒருதாய் வயற்று மக்களே எனினும், மூத்தவன் செங்குட்டுவன் வைதீக நெறியினனாக, இளையவன் இளங்கோ, சமண நெறி ஏற்றான். அத்தகைய சமயஒற்றுமையுணர்வு நிலவிய காலத்தவன் கஜவாகு, ஆகவே, பௌத்தனாகிய அவன் கண்ணகி வழிபாட்டு நெறியினை ஏற்றிருக்கமாட்டான் என்ற வாதத்தில் வலுவில்லை.

மகாவம்சம், கஜபாகு கால நிகழ்ச்சிகள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் தொகுத்துக் கூறிய வரலாற்றுத் தொகுப்பு நூல் என்று கூறிவிட முடியாது. அது, ஒருசிலவற்றைக் கூறாமல் விட்டிருக்கவும் கூடும். மேலும், ஒன்று கூறப்பட வில்லை என்பதினாலேயே அது இல்லை என்ற முடிவுக்கு வருவது பொருந்தாவாதம் என்பதை, திரு. அய்யங்கார் அவர்களும் ஒப்புக்கொண்டுள்ளார். "இருக்குவேதத்தில் ஆலமரம் குறிப்பிடப்படவில்லை என்பதால், அவ்வேதம் எழுதப்பட்ட காலத்தில் ஆலமரம் என்பதே இந்தியாவில் இல்லை என்ற வாதம் சரியானவாதம் ஆகாது எனத் திரு.

அய்யங்கார் காட்டும், திரு. பர்கிதர் அவர்களின் மேற்கோளினைக் காண்க.

''Speaking of the argument, from silence pargiter remarks, ''one might argue, with more force, that because, the banyan, the most characteristic tree of India, is not mentioned in the Rg. Veda, there were none in India, when the hymus were composed.'' (History of the Tamils : Page ; 124, Foot Note).

ஆகவே, கண்ணகி வழிபாடு, மகாவம்சத்தில் கூறப்படவில்லை. ஆகவே, கஜபாகுவை வைத்துச், செங்குட்டுவன் காலத்தை முடிவு செய்வது கூடாது என்ற வாதமும் வலுவற்றுப் போவது காண்க. கஜபாகுவை முன்னிறுத்திச், செங்குட்டுவன் காலத்தை உறுதிசெய்வது முறையாகாது என்ற தம் வாதத்திற்குத், திரு. அய்யங்கார் அவர்கள், சோழ நாட்டை வெற்றிகொண்ட கஜபாகு, தஞ்சையிலிருந்து, பத்தினித் தெய்வத்தின் காலணியாம் சிலம்பைக் கைப்பற்றிக் கொணர்ந்தான் எனக் கூறும் இலங்கை வரலாற்றுச், சான்றிலிருந்து, பத்தினி வழிபாடு அவன் காலத்தில் எழுந்த ஒன்று அன்று; அவன் காலத்திற்கு முன்பே வழக்கத்தில் இருந்த ஒன்றாம் என்பது புலப்படுகிறது என்பதையும் ஒரு காரணமாகக் கொண்டுள்ளார்.

கண்ணகிக்குச் செங்குட்டுவன் எடுத்த விழாதான், பத்தினி தெய்வ வழிபாட்டு நெறியின் தொடக்கம் என்று யாரும் கூறவில்லை; யாண்டும் கூறப்படவில்லை. கண்ணகிக்கு முன்னர், பத்தினிப் பெண்டிரே இல்லாமல் இல்லை. சோழ நாட்டில், அதிலும் புகார் நகரில் மட்டும் வாழ்ந்து மறைந்து மாண்புற்ற பத்தினிப் பெண்டிர் எழுவர்க்குக், கண்ணகியே வாயுரை வாழ்த்துக் கூறி வணங்கியுள்ளாள்; சிலப்பதிகாரம் வஞ்சினக்காதை வரிகளைக் காண்க (5-34)

செங்குட்டுவன், கண்ணகி சிலைக்காகக் கனகவிசயர் முடிமீது கொணர்ந்த கல்லைக், கங்கையில் நீராட்டி, அக்கங்கையின் தென்கரையில் பாடி கொண்டிருந்த காலை, கங்கையாடப் போந்த மாடலன், கொற்கைக் கோமான், கண்ணகிக்கு விழா எடுத்த செய்தியைக் கூறினான்:

"கொற்கையில் இருந்த வெற்றிவேற் செழியன்
பொன்தொழில் கொல்லர் ஈரைஞ் நூற்றுவர்
ஒரு முலை குறைத்த திருமாபத்தினிக்கு
ஒரு பகல் எல்லை உயிர்ப்பலி ஊட்டி,".

—சிலம்பு : 27 : 127-130

ஆகவே, செங்குட்டுவன், வஞ்சியில் கோயில் எடுத்து விழாக்காண்பதற்கு முன்னரே, தமிழ் நாட்டவர், கண்ணகிக்கு விழா எடுத்து விட்டனர் என்பது தெளிவாகிறது.

தமிழகத்துப் பேரூர்களில், பத்தினிப் பெண்டிர்க்குக் கோயில் கட்டி வழிபடும் வழக்கம் பண்டே இருந்தது என்பதை, மணிமேகலையில் வரும் பின்வரும் வரிகளே உணர்த்துகின்றன:

"ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க்காயினும்,
இறந்தோர் மருங்கில் சிறந்தோர் செய்த
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம்".

— மணி : 6 : 55-59

இவ்வகையால், சோணாட்டுத் தஞ்சையில் இருந்த பத்தினிக் கோட்டம் ஒன்றிலிருந்து, அத்தெய்வத்துக் காலணியாம் சிலம்பினைக், கயவாகு, கொணர்ந்திருத்தல் கூடும்.

மேலும், கயவாகு, சோணாட்டின் மீது படையெடுத்துச் சென்றுவென்று திரும்பிய அச்செய்தியைக் கூறும் அதே இலங்கை வரலாற்று நூல், அப்படையெடுப்பிற்குக் காரணமாம் முன் நிகழ்ச்சி ஒன்றையும் கூறியுள்ளது.

கரிகாலன், இலங்கைமீது படையெடுத்துச் சென்று, ஆங்குப் போரில் தோற்ற பல ஆயிரம் வீரர்களைக் கைப் பற்றிக் கொணர்ந்து அவர்களைக் கொண்டு காவிரிக்குக் கரை அமைத்தான் எனவும், இலங்கை அரசன் கயவாகு, நள்ளிருள் யாமத்து நகர்சோதனை செய்துவருகின்றபோது, நரைத்த முதுமகள் ஒருத்தி, பெருங்குரற் பாய்ச்சி அழக்கண்டு, அன்னவள் இன்னலுக்கு ஏது, பன்னெடு நாளைக்கு முன்னர்ப் படையெடுத்துப் போந்த கரிகால் வளவன் சிங்களக் குடிகள் பலவற்றைச் சிறைப்படுத்திச் சென்றானென்று, தன் குடிக்கு ஒருமகனையும், கொண்டு போயினமையே எனக் கேட்டுச் சோணாட்டின் மீது படையெடுத்து வந்து, தன் நகர்க் குடிகளைச் சிறையினின்றும் விடுவித்தனன் என்றும் கூறுகிறது Wpham's Mahavamsum Vol. 1 Page : 228).

செங்குட்டுவன் வழிபட்ட கண்ணகி, போற்றிய கற்புடை மகளிர் எழுவரில், கரிகாலன் மகளும் ஒருத்தி; ஆகவே, செங்குட்டுவனுக்குக் காலத்தால் முற்பட்டவன் கரிகாலன், செங்குட்டுவன் - காலத்தவன் கயவாகு, ஆகவே, கரிகாலன் இலங்கைப் படையெடுப்பு, கயவாகு காலத்திற்கு முற்பட்ட தாதல் வேண்டும். அப்படையெடுப்பால் இலங்கை நாட்டவர்க்கு ஏற்பட்ட இழுக்கைத் துடைக்கவே, சோணாட்டின் மீது கயவாகு படையெடுத்தான். அப்படை யெடுப்பு, செங்குட்டுவன் காலத்திற்குப் பின்னரே நிகழ்ந் திருக்க வேண்டும். செங்குட்டுவன் காலத்தில், சோணாட்டு அரியணையில் இருந்தவன் அவன் மைத்துனனாகிய கிள்ளி வளவன். அவன் அரசுரிமையைப் பொறாது, அவனோடு மாறுபாடு கொண்ட, சோழர் குலத்து இளவரசர் ஒன்பதின் மரைச் செங்குட்டுவன் வென்று அடக்கினான் என்கிறது சிலம்பு.

'மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்
இளவரசு பொறாஅர் ஏவல் கேளார்
வளநாடழிக்கும் மாண்பினராதலின்

ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்து, அவன்
பொன்புனை திகிரி ஒரு வழிப் படுத்தோய்!''
—சிலம்பு : 27 : 118-123

செங்குட்டுவன் நண்பனாகிய கயவாகு அச்செங்குட்டுவன் காலத்திலேயே, அவன் மைத்துனன் மீதே படையெடுத்துச் சென்றிருக்கமாட்டான். சோணாட்டில், செங்குட்டுவன் காலத்திலேயே எழுந்து, அவனால் அடக்கி வைக்கப்பட்ட ஆட்சி உரிமைப்போர், அவன் காலத்திற்குப் பின்னர் உரம் பெற்றிருக்கும் ஆதலின், அக்காலமே, அந்நாட்டின்மீது படையெடுப்பதற்கு வாய்ப்புடைய காலமாம் ஆதலின், கயவாகுவின் சோணாட்டுப் படையெடுப்பு, செங்குட்டுவன் காலத்திற்குப் பின்னரே நிகழ்ந்திருக்க வேண்டும். அக்காலை, வஞ்சியில், செங்குட்டுவனால் தொடங்கப்பட்ட கண்ணகி வழிபாடு, அவள் பிறந்த மண்ணாம் சோணாட்டிலும் மேற் கொள்ளப்பட்டிருக்கக் கூடும். ஆக, செங்குட்டுவன் காலத் திற்குப் பின்னர்ச், சோணாட்டின் மீது படையெடுத்துச் சென்ற கயவாகு, ஆங்குப் பத்தினித் தெய்வத்தின் காலணியைக் கைக்கொண்டதில் வியப்பு இல்லை. ஆகவே, அச்செயல், செங்குட்டுவனைக் கயவாகுவின் காலத்தவன் எனக் கொள் வதற்குத் தடையாக நிற்கிறது என்பதில் நியாயம் இல்லை.

செங்குட்டுவனைக் கயவாகுவின் காலத்தவனாகக் கொள்வதற்குத் தடையாகத், திரு. அய்யங்கார் எடுத்து வைக்கும் கடைசிவாதம், கயவாகு என்பதற்குப் பிறிதொரு பாடமாகக் ''காவல்'' என்பது சிலப்பதிகாரத்தில் கூறப் பட்டிருப்பது.

''கயவாகு காலத்தவன் என்ற முடிவு மேற்கொள்வதற்கு ஆதாரமாக இருக்கும் கயவாகு என்ற சொல்லிற்குச் சிலப் பதிகாரத்தில் பிறிதொருபாடமும் கொடுக்கப்பட்டுள்ளது: அது, கயவாகுவிற்குப் பதில் ''காவல்'' என்பதாம். ''காவல்'' என்பதே சரியான பாடமாயின், கயவாகுவின் சட

என்ற முடிவின் மீது கட்டப்பட்ட, கருத்து மாடங்கள் அனைத்தும் அடியோடு சரிந்து மண்ணாகிப் போய்விடும்.

"There is an alternative reading to the word kayavagu in the passage of the silappadigaram, on which all this contention about the "Gajabahu synchronism" is based. That reading is "Kaval" insted of Kayavagu. If Kaval is the Correct reading, down falls to the ground all the edifice of the theories based on the "Gajabahu Synchronism", (History of the Tamils, Page : 381) என அவர் கூறுவது காண்க:

தமிழக வரலாற்றுக் கால எல்லையை உறுதி செய்யும் ஒரே சான்றாகப் பாடபேதத்திற்கு உள்ளான ஒரு சொல்லை மேற்கொள்வது ஏற்புடையதாகாது என்பது அவர் வாதம்.

"கயவாகு", "காவல்" இவ்விரண்டனுள் உண்மையான பாடம் எது? சிலப்பதிகாரப் பதிப்பாசிரியர் திரு. உ. வே. சாமிநாத அய்யர் அவர்களால், இப்பாடபேதம் குறிப்பிடப் பட்டிருப்பது வரந்தரு காதையில். கயவாகுவின் நிகழ்ச்சி, சிலப்பதிகாரத்தில், வரந்தரு காதையில் மட்டுமல்லாமல், உரைபெறு கட்டுரையிலும் இடம் பெற்றுளது. அதுகூறும் அவ்வுரை பெறு கட்டுரையில், அவன் பெயர் "கயவாகு" என்றே வந்துளது. பாடபேதம் எதுவும் குறிப்பிடப்பட வில்லை. தஞ்சையிலிருந்து பத்தினித் தெய்வத்தின் காலணிகளைக் கொண்டு வந்த இலங்கை வேந்தன் பெயரை, மகாவம்சம் "கயவாகு" என்றே குறிப்பிட்டுளது. காட்டிய இச்சான்றுகளால், "கயவாகு" என்பதே சரியான பாடமாம் என்பது ஐயத்திற்கு இடமின்றி உறுதி செய்யப்படுகிறது. ஆகவே, எங்கோ ஓரிடத்தில் கூறப்பட்டிருக்கும் பாடபேதத்தை, வலுவான ஒரு முடிவைத் தகர்த்தெறியும் ஆயுதமாகக் கொள்வது வாத நெறியாகாது;

ஆக, கூறிய இவ்விளக்கங்களால், செங்குட்டுவன், கயவாகுவின் காலத்தவன்தான் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை என்பதும், ஆகவே, அக்கயவாகுவின் காலமாம் கி. பி. 177-199 காலமே, செங்குட்டுவன் காலமாம் என்பதும் உறுதி செய்யப்படுகின்றன.

---

## அதிகாரம் : XXI

# இளந்திரையன்

**அவன் தலைநகர்க்குப் போகும் வழியில் :**

பட்டினப்பாலையில், கரிகாலன் புகழ்பாடிய புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார், பத்துப்பாட்டு வரிசையில் பிறிதொரு பாட்டாகிய பெரும்பாணாற்றுப் படையில், தொண்டைமான் இளந்திரையன் எனும் பெயருடைய காஞ்சிபுரக் காவலன் ஒருவனையும் பாடியுள்ளார். பாட்டின் தலைப்பு, ''புலவர்களுக்குப் பெரிய வழிகாட்டி'' என்பதாம்.

**அடிக்குறிப்பு :**

(மொழிபெயர்ப்பு ஆசிரியர் குறிப்பு: பாணர்களில், ஒரு சில நரம்புகளைக் கொண்ட சிறிய யாழில் வல்லவர், பற்பல நரம்புகளைக் கொண்ட பெரிய யாழில் வல்லவர் என இருவகையினர் உள்ளனர். அவர்களுள் பெரிய பாணனுக்குக் கூறிய வழிகாட்டு உரை என்பதே இதன் பொருளாம்.) இது, தன் புகழ்பாடும் இரவலர்க்கு வாரிவழங்கும் பெரியவள்ளலாம் இளந்திரையன்பால், பரிசில் பெறச் செல்வீர்களாக எனப் புலவர்களுக்கு அழைப்பு விடுக்கிறது. பட்டினப்பாலையில் உள்ளதுபோலவே, இப்பாட்டிலும், புலவர், இப்புரவலன் ஆட்சிக் கீழ் உள்ள நாட்டின் பல்வேறு இயற்கை நிலப் பிரிவுகளிலும் உள்ள மக்களின் வாழ்க்கை குறித்த விரிவான, நனிமிகு வியத்தகு விளக்கங்களைக் கொடுத்துள்ளார். பாட்டைப் படிப்போரை, இளந்திரையனுக்கு உரிய பற்பல மாவட்டங்களூடே, அழைத்துச் சென்ற பின்னர், புலவர், காஞ்சிக்கு வெகு தொலைவில் இல்லாத பார்ப்பனக் குடியிருப்பு ஒன்றைக் காட்டுகிறார். ''மனையின் முற்றத்தில் போடப்பட்டிருக்கும் பந்தரின் சிறிய கால்களில், வளமான பசுங்கன்றுகள் கட்டப்பட்டிருக்கும். வீடுகள், ஆவின்

சாணத்தால் மெழுகப்பட்டிருக்கும். வளர்ப்புக் கோழிகளோ, நாய்களோ இம்மனைகளை அணுகா. வளைந்த வாயினை உடைய கிளிகளும், கேட்டுக் கற்ற மறைகளை உரைக்குமளவு, வேதங்களைக் கற்பிக்கும் வேதியர்கள், வாழும் ஊர் அது! பாணர்காள்! நீவிர் ஆங்குச் செல்வீராயின், அகன்ற பெரிய நல்லவானில், வடதிசைக்கண் கிடந்து, ஒளிவீசும் விண்மீனாகிச் சிறப்புற்ற அருந்ததிக்கு நிகரான கற்பும், அழகிய நெற்றியும், வளை அணிந்த கைகளும் உடைய பார்ப்பனமகளிர், ஞாயிறு மறைந்த பின்னர், பதம் பார்த்து ஆக்கி முடித்த, கருடன் என்ற பறவையின் பெயரைப் பெற்ற கருடன் சம்பா அரிசியிலான சோற்றையும், சிவந்த பசுவின் நல்ல மோரில் கடைந்து எடுத்த வெண்ணெயில் வேகவைத்து, மிளகுப் பொடியும், கருவேப்பிலையும் தூவி எடுத்த மாதுளங்காய்க் கறியையும், நெடிய மாமரத்தில் கொத்துக் கொத்தாகக் காய்த்த இளங்காய்களைப் பிளந்து போட்டுப் பண்ணிய ஊறுகாயோடும் பெறுகுவீர்". எனக்குத் தெரிந்த வரை, தமிழ்நாட்டில் உள்ள ஒரு பார்ப்பனச் சிற்றூர் பற்றிய மிகப் பழைய விளக்கம், இதுதான்.

*

''செழுங்கன்று யாத்த, சிறுதாள் பந்தர்ப்,
பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்,
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது;
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப் பாளர் உறைபதிச் சேப்பின்,
பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையும் கற்பின், நறுநுதல்,
வளைக்கை மகடூஉ, வயின்அறிந்து அட்ட,
சுடர்க்கடைப், பறவைப் பெயர்ப்படு வத்தம்,
சேதா நறுமோர் வெண்ணெயின், மாதுளத்
துருப்புறு பசுங்காய்ப் போழொடு, கறிகலந்து,
கஞ்சக நறுமுறி அளைஇப், பைந்துணர்,

நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த,
தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவிர்''.
—பெரும்பாணாற்றுப்படை : 297-310

இச்சிற்றூர்க்கு அப்பால் உள்ளது நீர்ப் பெயற்று: இச்சொல், நீரால் பெயர் பெற்ற ஊர் எனும் பொருள் உடையது. இது, பெரும்பாலும், காஞ்சி அரசர்களின், தலையாய துறைமுகமும், பிற்காலத்தில், மாமல்லபுரம் என அழைக்கப்படுவதுமாய கடல்மல்லையைக் குறிப்பது ஆகும். இந்நகரிலும் பிராமணர்கள் சிறக்க வாழ்ந்திருந்தனர். ''விளையாடும் இளம்பருவத்து மகளிர், உண்ணுநீர்த் துறையில், அறியாதே போட்டுவிட்டுப்போன, பொன்னால் செய்த, மகரமீன் வடிவிலான காதணியை, அந்நீர்த்துறையில், இரைதேடிக் கொண்டிருக்கும் மீன்குத்திப்பறவை, தான்தேடும் இரையாக எண்ணி எடுத்துக் கொண்டு, பறவைக் கூட்டம் இருக்கும் பனைமரத்து ஓலைக்கண் சென்று தங்களது, கற்றுவல்ல அந்தணர்கள், செய்தற்கு அரிய கடனாகச் செய்து முடித்த வேள்விச் சாலையில் நட்ட கம்பத்தின் உச்சியில் சென்று அமர்ந்து, யவனர் இயற்றிய மரக்கலத்துக் கூம்பின் மேல் அமைத்த அன்னவிளக்குப் போலவும், உயர்ந்த வானத்தில், வைகறைப் போதில் தோன்றும் வெள்ளியாகிய விண்மீன் போலவும் தோன்றும் நீர்ப்பெயற்று'' எனக் கூறப்பட்டிருப்பது காண்க.

'வண்டல் ஆயமொடு உண்துறைத் தலைஇப்
புனலாடு மகளிர் இட்ட பொலங்குழை,
இரைதேர் மணிச்சிரல், இரைசெத்து எறிந்தெனப்,
புள்ஆர் பெண்ணைப் புலம்புமடல் செல்லாது,
கேள்வி அந்தணர் அருங்கடன் இறுத்த
வேள்வித் தூணத்து அசைஇ, யவனர்,
ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட
வைகுறு மீனின் பைபயத் தோன்றும்''.
பெரும்பாணாற்றுப்படை : 311-318

நீக்கடற்கரைப் பட்டினம், காவிரிப்பூம்பட்டினம் அளவு பெரிது அல்லவாயினும், வாணிக வளங்கொழிக்கும் மையமாக இருந்தது. "அதன் பெருமைமிக்க கடற்கரையில், பால்போலும் வெண்ணிற உடலும், ஆடிக்கொண்டே இருக்கும் வெள்ளிய பிடரி மயிரும் தலையாட்டத்தினையும் உடைய குதிரைகளோடு வடநாட்டு, வளங்கொழிக்கும் பொருட்களைக் கொண்டுவந்து தரும் மரக்கலங்கள் வரிசை வரிசையாக நிற்கும். மணல் பரந்த தெருவுகளில் பண்டக சாலைகளைக் காவலர் காத்துக் கிடப்பர்; வேறு வேறுபட்ட தெருக்களில், வானளாவ உயர்ந்த மாடமாளிகைகளில், வணிக மக்கள் வாழ்ந்திருப்பர்".

> "நீர்ப்பெயற்று எல்லைப் போகிப், பால்கேழ்
> வால்உளைப் புரவியொடு, வடவளம் தரூஉம்
> நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை,
> மாடம் ஓங்கிய மணல்மலி மறுகின்
> பரதர் மலிந்த பல்வேறு தெருவின்
> சிலதர் காக்கும் சேணுயர் வரைப்பு,"
>
> —பெரும்பாண் : 319-324

அது வாணிக வளம் அல்லாமல், வேறுபல வளங்களையும் கொண்டது. "வீடுகளில், உணவுப் பண்டங்கள் மலிந்து கிடக்கும், நெல்விளைய உழும் எருதுகளும், பால்வளம் தந்து கொண்டே இருக்கும் நீளைவால் காளைகளைக் கருதாக் கறவைகளும், ஆட்டுக்கிடாய்களும், காவல் நாய்களும் திரிந்து கொண்டிருக்கும். வளைத்து வளைத்துப் பண்ணப்பட்ட பொன் அணிகள் அணிந்த மகளிர், கொன்றை மரத்து, மலர்ந்து கிடக்கும் மெல்லிய கொம்புகளில், பனித்துளிகள் படர்ந்திருக்கும் காட்சிபோல பசிய மணிகள் கோத்த வடங்களால்ஆன அணிமேலேகிடந்து அணிசெய்ய, இடையில் கட்டிக் கொண்டிருக்கும் மெல்லிய ஆடை அசைய, பெரி... மலைச்சாரலில் மகிழ்ந்து ஆடும் மயிற்கூட்டம் போ... கால்களில் அணிந்திருக்கும் பொற்சிலம்பு ஒலிக்க, வானளா

உயர்ந்த மாளிகைகளில் மேல்மாடத்தில், பந்தாடி இளைத்ததும், மாளிகையின் முற்றத்தில் முத்தைப் பரப்பி வைத்தாற் போலும், புது மணல்பரப்பில் அமர்ந்து, கைகளில் அணிந்திருக்கும் பொற்றொடி, மேலும் கீழுமாக அசையப், பொன்னால் ஆன கழங்குக் காய்கள் கொண்டு, மெல்ல மெல்லக், கழங்காடி மகிழ்வர்''.

> ''நெல்லுழு பகட்டோடு, கறவை துன்னா;
> மேழகத் தகரொடு எகினம் கொட்கும்,
> கூழ்உடை நல்இல் கொடும் பூண் மகளிர்
> கொன்றை மென்சினைப் பனிதவழ் பவைபோல்
> பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க,
> மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந்து ஆலும்,
> பீலி மஞ்ஞையின் இயலிக், கால,
> தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப, உயர்நிலை
> வான்தோய் மாடத்து வரிப்பந்து அசைஇக்,
> கைபுனை குறுந்தொடி தத்தப், பையப்,
> முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்'';
>
> —பெருமபாண் : 325-335

**காஞ்சிமாநகர் :**

முருக வழிபாடு போலும் பழந்தமிழ் வழிபாட்டு நெறிகள் சிறப்புற்றிருக்கும். மேலும், பல சிற்றூர்களைக் கடந்து சென்ற பின்னர், வழிப் போவார், மலைச்சாரலில், காந்தள் மலர்க்காட்டில் களிறு வீழ்ந்துகிடப்பதுபோல், பாம்பணைப் பள்ளி மீது இறைவன் அமர்ந்திருக்கும் காஞ்சியை (சரியாகச் சொல்வதாயின், புறநகராம் திருவெஃகாவை) அடைவர்;

> 'நாடுபல கழிந்த பின்றை, நீடுகுலைக்
> காந்தளம் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
> பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்''.
>
> —பெரும்பாண் : 371-373

பாம்பணைப் பள்ளிமீது படுத்திருக்கும் விஷ்ணு வழிபாடு, தமிழ் இலக்கியத்தில் முதன்முதலில் குறிப்பிடப்படுவது இதுவே, விஷ்ணுவின் இத்தெய்வத் திருமேனி, முதன்முதலில் கருத்தில் உருப்பெற்றது எப்போது என்பதை நாம் அறியோம். ஆனால், இந்தியாவில் நாம் பெற்றிருக்கும், அனந்தசாயிச் சிற்பங்கள், குப்தர் காலத்திற்கு முற்பட்டனவாகா.

திருவெஃகாவின் சோலைகளையும், நீரோடைகளையும் கடந்த பின்னர்க், காஞ்சி, அல்லது அச்சொல் தமிழாகி வழங்கும் கச்சிப் பெருநகரை அடையலாம். சோலைகளில், நிலம் நோக்கித் தொங்கும் துதிக்கைகளையுடைய யானைகளுக்காக, நெய்கலந்து ஆக்கிவைத்திருக்கும் சோற்றுக் கட்டிகளைக், களிறு ஓட்டும் கோல்களைக் கையில் கொண்டிருக்கும் யானைப்பாகர்கள், ஏமாறும் சமயம் பார்த்துக், கருவுற்றிருக்கும் மந்திகள் கவர்ந்து செல்லும்; அச்சோலைகளில், களிறுகளின் கடுஞ்சினத்தை அடக்கி வைக்க, அவற்றைப் பிணித்திருக்கும், வயிரம் பாய்ந்த வலிய கட்டுத்தறிகள் வரிசை வரிசையாக நடப்பட்டிருக்கும். நகரின் நீண்ட தெருக்கள், நெடிய பெரிய தேர்கள் ஓடிஓடிப் பண்ணிய குழிகளால் நிறைவுண்டிருக்கும். போர்க்களத்தில் படைக்கலம் இழந்து தோற்றுப்போதலை அறியாத, மிக்க வலியும் பெரிய புகழும் வாய்ந்த மறக்குடி மக்களைக் கொண்டிருக்கும், நகரைக் காத்து நிற்கும் நாற்படை; வாங்குவதும் விற்பதுமாகிய வாணிகத்தொழில், அவ்வணிகத் தொழில், அவ்வணிக வீதிகளில் இயங்குவாரை, எளிதே இயங்கவொட்டாது தடுக்குமளவு பெருக நடைபெறும்; அந்நகர்வாயில், பரிசில் வேண்டி வரும் இரவலர்க்கு அடைத்தல் அறியாது என்றும் திறந்தே கிடக்கும். காவற் காட்டால் அரண் செய்யப்பட்டிருக்கும் அந்நகர், நான்முகனைப் பெற்ற நீலவண்ண நெடியோனாம் திருமாலின் திருவுந்தியிலிருந்து எழும், பல்லிதழ்த் தாமரை மலரின் நடுவண் கொட்டை போலப், பேரழகுப் பெட்டகமாய்க் காட்சி அளிக்கும்; நகரைச் சுற்றி, உயர்ந்த மதில்கள்

செங்கல்லால் கட்டப்பட்டிருக்கும்; இழும் எனும் ஒலி இடையறவுபடாது எழப், பறவைக்கூட்டம் மொய்த்துக் கிடக்கும், பருத்தனவும், சிறுத்தனவுமாகிய கொம்புகளைக் கொண்ட, பூவாமலே காய்க்கும் பல்வேறு மரங்களுள்ளும், பருத்த, இனிய பழங்களை உடைமையால், சிறந்ததாக மதிக்கப்படும் பலாமரம் போல, புலால் நாறும் கடலால் சூழப்பட்டு, வானத்தால் மூடப்பட்ட, பரந்து அகன்ற பேருலகில் உள்ள நகரங்கள் அனைத்திலும் பல்வேறு சமயத்தவரும் வந்து, வழிபாடு ஆற்றுவதற்கு ஏற்பப், பல்வேறு கடவுள்களுக்கான விழாக்கள் எடுக்கப்படுவதால், பழம்பெரும் சிறப்புற்றது, அக்கச்சிப் பெருநகர். அழகிய வளர்பிறைத் திங்கள், காட்சி அளிக்கும், அந்திப்போதின் செவ்வானத்தில், கார்முகில் கூட்டம் அசைவதே போல, செங்குருதி ஆற்றில், வெண்ணிறத் தந்தங்களைக் கொண்ட கரிய களிறுகளின் பிணங்கள் ஈர்த்துச் செல்லப்படுமாறும், துரியோதனனும், அவன் உடன்பிறந்தாருமாகிய நூற்றுவரும் அழிந்து போகுமாறும் கொடிய போர் செய்து வெற்றி கொண்ட, நெடிய பெரிய தேர்ப்படையினையுடைய, ஓயாது போர் மேற்கொண்டிருக்கும் பாண்டவர் ஐவர் போல, ஓர் எண்ணுக்குள் அடங்கமாட்டாப் பெரும்படை தம்மிடத்தே உளது என்ற செருக்கால், தன்மீது போர் தொடுத்து வந்த, தன்னோடு ஒத்துப்போகாத பகைவர், தோல்வியுற்றதும், வெற்றிக்களிப்பால், ஆரவாரிப்பவனும், பொருள் வேண்டி வந்து, புகழ்பாடி நிற்பார்க்கு வாரி வாரி வழங்குவோனுமாகிய தொண்டைமான் இளந்திரையன், அக்கச்சிப் பெருநகரில் உள்ளான்.

காமோர் இகழ்பதம் நோக்கிக், கீழ
நெடுங்கை யானை, நெய்ம்மிதி கவளம்,
கடுஞ்சூல் மந்தி கவரும் காவின்,
களிறு கதன் அடக்கிய வெளிறுஇல் கந்தின்
திண்தேர் குழித்த குண்டுநெடுந் தெருவின்,
புடைதொலைவு அறியா, மைந்துமலி பெரும்புகழ்ப்

படைகால் யாத்த பல்குடி செழிஇக்,
கொடையும் கோளும் வழங்குநர்த் தடுத்த,
அடையா வாயில், மிளைசூழ் படப்பை,
நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்,
நான்முக ஒருவன் பயந்த, பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டின் காண்வரத் தோன்றிச்
சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்,
இழும் என் புள்ளின் ஈண்டுகிளைத் தொழுதிக்
கொழுமென் சினைய கோலி யுள்ளும்,
பழம் மீக்கூறும் பலாஅப் போலப்,
புலவுக் கடவுள் உடுத்த, வானம் சூடிய
மலர்தலை உலகத் துள்ளும், பலர்தொழ
விழவுமேம் பட்ட பழவிறல் மூதூர்,
அவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வாய்
அந்தி, வானத்து ஆடுமழை கடுப்ப,
வெண்கோட்டு இரும்பிணம் குருதி ஈர்ப்ப,
ஈரைம் பதின்மரும், பொருது களத்து அவியப்,
பேரமர்க் கடந்த கொடிஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவின் ஐவர் போல,
அடங்காத் தானையொடு உடன்றுமேல் வந்த
ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்துக்
கச்சி யோனே, கைவண் தோன்றல்,''

—பெரும்பாண் : 393-420

மேலே எடுத்துக்காட்டிய பகுதியில், காஞ்சியில், பல்வேறு மக்களும், விழாவெடுத்து வழிபாடு செய்வர் எனக் குறிப்பிடப்பட்டிருப்பதன் பொருள், இரண்டு நூற்றாண்டுகள் கழித்து யுவான்சாங், அந்நகருக்கு வருகை தந்தபோது இருந்ததுபோலவே, வட இந்திய ஆகமநெறி வழிபாட்டுச் சமயங்களின், அதாவது வைஷ்ணவ, சைவ, சமண, புத்த

சமயங்களின் வாதிகள், ஆங்கு வாழ்ந்திருந்தனர் என்பது ஈண்டுக் குறிப்பிடப்படல் வேண்டும். பாரதப் போர் பற்றிய விளக்கத்தில், பண்டைத் தமிழ்ப் புலவர்களுக்குத் தெரியாத, அளவுக்கு மீறிய உயர்வு நவிர்ச்சி அணிக்கு இயல்புடையதாகி விட்ட சமஸ்கிருத இலக்கியச் செல்வாக்கின் அடிச்சுவடு களைக் காணலாம். பாட்டின் ஆசிரியர், ருத்திரன் மகன் கண்ணனார், (உருத்திரங்கண்ணனார்) ஒரு பார்ப்பனர் ஆதலும், பாடற்பொருள், முன்னரே குறிப்பிட்டவாறு, இந்நூலாசிரியர் காலத்துக்கு ஏறத்தாழ ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பே, ஆரியமயமாக்கப்பட்டுவிட்ட காஞ்சியாம் ஆதலுமே காரணங்களாம். ஆகவே, ஆரியக் கொள்கைகள் இடம் பெற்றிருப்பதில், இப்பாட்டிற்கும், பழைய தொகைப் பாக்களுக்கும் இடையில் உள்ள மிகப்பெரிய வேறுபாட்டினை உணர்த்துவதற்காக, இப்பாட்டிலிருந்து, ஆரியச்சார்பான, மேலும் சில, குறிப்பீடுகளைக் காட்டுகின்றேன். "இளந் திரையனின் குலமுதல்வனாகவும், பரந்த இப்பேருலகை அளந்து கொண்டவனாகவும், மார்பில் அழகிய மறுவுடை யனாகவும், கடல்நிறமேனியுடையவனாகவும்," விஷ்ணு கூறப்பட்டுள்ளார்:

"இருநிலம் கடந்த, திருமறு மார்பின்,
முந்நீர் வண்ணன்".

—பெரும்பாண் : 29-30

பிராமணர்கள் வேதம் ஓதுவது, வேள்வித்தூண் ஆகியவற்றை விளக்கும் பாட்டின் பகுதிகள், முன்னரே எடுத்துக் காட்டப் பட்டன. இளந்திரையனின் பேராற்றல் பாண்டவர் ஆற்றலோடு ஒப்பு கூறப்பட்டுளது. இளந்திரையன் அரண்மனை முற்றத்தில், திறைப் பொருள்களோடு காத்துக் கிடக்கும் அரசர்கள், தேவர்கள் வாழும் இமயமலையில், வெள்ளிய அலைகளைக் கொண்ட நீரைக் கிழித்துக் கொண்டு ஓடுதலால், ஒளிவீசும் உச்சியிலிருந்து, பொன்னைக்கொழித்துக் கொண்டு குதித்தோடிவரும், கடத்தற்கரிய கங்கையாற்றில், அப்பெருவெள்ளத்தைக் கடந்து, மறுகரைக்குச்செல்ல, அவ்

வாற்றில் விடப்படும் ஒரே தோணியை எதிர்நோக்கிக் காத்துக் கிடக்கும் மக்களோடு ஒப்பு கூறப்பட்டுள்ளனர்:

> ''இமையவர் உறையும் சிமையச் செவ்வரை
> வெண்திரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
> பொன் கொழித்து இழிதரும், போக்கரும் கங்கை,
> பெருநீர் போகும் இரியல் மாக்கள்,
> ஒருமரப் பாணியில் தூங்கியாங்குந்
> தொய்யா வெறுக்கையோடு துவன்றுபு குழீஇ'':
>
> —பெரும்பாண் : 429-434

தன்னைச் சூழ்ந்து நின்று துணங்கைக் கூத்து ஆடப் படுவோளாகிய பெண்தெய்வம், இப்பாட்டில், வெண்திரை வீசும் கடல் பரப்பில் சென்று, கொடிய சூரனைக் கொன்ற, அழகிய புதிய அணிகளை அணிந்து, சேயோனாம் முருகனைப் பெற்ற ஆரியத் தாய்க் கடவுளாக மாற்றப்பட்டாள்:

> ''வெண்திரைப் பரப்பின் கடுஞ்சூர் கொன்ற
> பைம்பூண் சேஎய் பயந்த மாமோட்டுத்
> துணங்கையம் செல்வி.''
>
> —பெரும்பாண் : 457-459

உலகம், நாவல் என்ற கனியால் பெயர் பெற்ற, அழகிய குளிர்ந்த சோலையாக, அதாவது ஜம்புத்தீபமாகக் கூறப் பட்டுளது. (''நாவலந்தண் பொழில்'', பெரும்பாண் : 465) குதிரை இலக்கணம் பற்றிய குறிப்பும் அதில் உளது: ''நூலோர் புகழ்ந்த புரவி''—பெரும்பாண் : 487) இறுதியாக, வெண்கோடுடையவாய களிறுகள், கொண்டுவந்து கொடுக்கும், விறகு கொண்டு, முனிவர்கள் வேள்வி வேட்பதும் கூறப் பட்டுளது:

> ''செந்தீப் பேணிய முனிவர், வெண்கோட்டுக்
> களிறுதரு விறகின் வேட்கும்.''
>
> —பெரும்பாண் : 498-499

ஆரியக் கருத்துக்கள் மட்டுமல்லாமல், சமஸ்கிருதச் சொற்களும், பழைய தொகைப் பாக்களில் காணப்படுவதிலும், அதிகமாக இதில் இடம் பெற்றுள்ளன. சமஸ்கிருதத்திலிருந்து வேண்டுமென்றே கடன் வாங்கப்பட்ட சொற்களாவன: ''சகடம்'' (50), ''நாடகம்'' (55), ''தெய்வம்'' (104) ''பூதம்'' (285) ''எந்திரம்'' (260), ''தருப்பை'' (264) மற்றும் ''அமுது'' (475) இப்பாட்டு, தன் காலச் செய்யுட் படைப்புகளைக் காட்டிலும், ஆரியக் கருத்துக்களைத், தங்கு தடையின்றி மேற்கொண்டிருக்கும் அதே நிலையில், ஆரிய இலக்கிய நெறி எதனாலும் ஆட்சி கொளப்பட்டுவிடவில்லை. ஆற்றுப் படைச் செய்யுளுக்கு ஒரு முன்மாதிரியான செய்யுளாகி, பழந்தமிழ் இலக்கிய மரபுகளை, முழுமையாக மேற்கொண்டு உளது: தமிழகத்தில், ஆரிய நாகரிகத்தின் மையமாகத் திகழ்ந்த காஞ்சியில் பாடப்பட்டு, ஆரியச் செல்வாக்கிற்கான அடிச் சுவட்டினை அளவின்றிக் கொண்டுளது என்றாலும், அது, பழங்காலத்தைச் சேர்ந்த பிற தமிழ்ப் பாக்களைப் போலவே, ஐந்திணை நிலத்து வாழ்க்கை முறைகளையும், அக்காலைத் தமிழ் மக்களின் பழக்க வழக்கங்களையும் விரித்துரைக்கிறது.

பெரும்பாணாற்றுப்படைப் பாட்டுடைத் தலைவனான இளந்திரையன், எந்தப் போர்க்கள வெற்றியாலும் புகழ் பெற்றவனல்லன். அவன் வீரம், பெரும்பாணாற்றுப் படைப் போலும் பாக்களின் வழக்கமாதல் போல, மிகைப்படுத்தப் பட்ட வெறும் புகழ் உரைகளாகக் கூறப்பட்டுள்ளனவே யல்லாது, குறிப்பிட்ட போர்க்களத்தில் பெற்ற எந்த ஒரு வெற்றியோ, பிற நாடுகளைக் கைக்கொண்ட எந்த ஒரு வெற்றியோ, அவனுக்கு உரியதாகக் கூறப்படவில்லை: ''பகைவர் அரண் மதிலை அழித்து, அப்பகைவரின் முனி

முடிகளைக் கைக்கொள்வதல்லது, அவரோடு சமாதானம் செய்துகொள்ள விரும்பான்'' என்பது போலும் பொருள் தெளிவில்லாச் சொற்றொடர்கள், பிரெஞ்சு நாட்டில், ஒவ்வொரு அங்குல நிலத்தையும் இழந்து நெடுங்காலம் கழிந்த பின்னரும், பிரித்தானிய நாட்டுப் பேரரசர்கள், விடாமல் மேற்கொண்டிருந்த பிரெஞ்சு நாட்டு அரசுரிமைப் பட்டயங்கள் போலவே, பொருள் தெளிவு அற்றனவாம்.

> ''கடிமதில் எறிந்து குடுமி கொள்ளும்
> வென்றியல்லது வினை உடம்படினும்
> ஒன்றல் செல்லா''.
>
> —பெரும்பாண் : 450—453.

ஆகவே, இளந்திரையன், காஞ்சிநாட்டை ஆண்டுகொண்டிருந்த காலம், எவ்வித வரலாற்று முக்கியத்துவமும் வாய்ந்ததாக அமையவில்லை; ஆனால், கரிகாலன் புகழைப் பாடிய புலவராலேயே, இளந்திரையனும் புகழப் பட்டுள்ளான். ஆகவே, கரிகாலனோடு, இளந்திரையனுக்கு உள்ள உறவு, ஆய்வுக்குரிய முக்கியப் பொருளாகிறது. இளந்திரையன் காஞ்சி அரியணையைக், கரிகாலன் பிள்ளைப் பருவத்தில் கைப்பற்றிக் கொண்டதாக, திரு. கனகசபை அவர்கள், கருதுகிறார். ஆனால், அதற்கான அடிப்படை அகச்சான்று சிறிது கூட இல்லையாகவே, அது, ஆய்வுக்குத் தகுதியற்றது; அது, ஒரு தவறான கற்பனையல்லது, வேறு அன்று; இளந்திரையன், கரிகாலன் காலத்தவனாதலின், கரிகாலன், காஞ்சி நாட்டை வென்று கைக்கொண்டதும், இளந்திரையன் காஞ்சிக் காவலனாக நியமிக்கப்பட்டு, கரிகாலனுக்குப் பின்னரும், அதே நிலையில் தொடர்ந்து இருந்தவனாக வேண்டும்;

தெலுங்கு நாட்டுச் சோடக் கல்வெட்டுக்கள், கரிகாலனுக்குத், தொண்டைமான் என்ற பெயரன் ஒருவன்

இருந்ததாகக் கூறுகின்றன, [No. 123 and 205 of 1899 Referred to in Madras Epic. Reports 1930-17. இப்பட்டயங்கள், கரிகாலன் மக்களில், சோழநாடாண்ட மக்களைப் பற்றிப், பொதுவாக அக்கறைகாட்டுவதில்லை] அக்காலகட்டத்தில், தெரிந்த தொண்டைமான், இளந்திரையன் ஒருவனே ஆதலின், கல்வெட்டுக் கூறும், அத்தொண்டைமான், பெரும்பாலும் இளந்திரையனே ஆகும். பெரும்பாணாற்றுப் படையில், இளந்திரையன், தொண்டையர் வழிவந்தவன் எனக் கூறப்பட்டுள்ளான். ("தொண்டையோர் மருக!" - பெரும்பாண்: 454) தொண்டையோர், அல்லது தொண்டையர் என்ற சொல் திரையர் என்ற பெயராலும் அழைக்கப்படும் ஓரினத்து மக்களைக் குறிக்க வழங்கப்பட்டுளது. வேங்கட மலையைக் குறிப்பிடுங்கால், காட்டூர் கிழார் மகனார் கண்ணனார் என்ற புலவர், அது, திரையர்க்கு உரியதாகக் கூறியிருக்கும் நிகழ்ச்சியால், இது உறுதி செய்யப்படுகிறது: ("வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை"—அகம் : 45,9) இளந்திரையன், பெரும்பாணாற்றுப்படையில், பலவேற் படைகளுக்கு உரியதிரையன், "பல்வேல் திரையன்" (37) என அழைக்கப்பட்டுள்ளான் என்பதும் ஈண்டுக் குறிப்பிடல் நலம். அதே காலத்தைச் சேர்ந்த, மற்றொரு புலவராகிய எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், "மழைமேகங்கள் தழுவிக் கிடப்பதும், புகழ் எல்லைக்கு அப்பாற்பட்டதும், எளிதில் ஏறி அடையலாகா, உயர்ந்த உச்சியினையுடையதும், வெண்ணுரை தெரிக்கும் மலையருவிகளைக் கொண்டதுமாகிய வேங்கடம், கடும்போர் புரியப் பழக்கப்பட்ட யானைப் படையுடைய தொண்டையர்க்கு உரியது" எனக் கூறியுள்ளார்.

"வினைநவில் யானை விறல் போர்த் தொண்டையர்,
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு,
ஓங்கு வெள்ளருவி வேங்கடம்".

—அகம் : 213 : 1-3

"திரையன்" என்ற சொல் "கடல்", "அலை" எனப் பொருள்படும் "திரை" என்ற சொல்லிலிருந்து மட்டுமே

பெறப்படுமாகவே, "ஒருகடலோடி", "கடற்கரை நிலத்தைச் சார்ந்த இனத்தவன்", "அவ்வினத்தலைவன்" என்று மட்டுமே பொருள்படும். திரையர் என்பார், பெரும்பாலும் இன்று செங்கற்பட்டு, பகுதியில் பண்டு வாழ்ந்திருந்த பழங்குடியினராவர். "தொண்டையர்" என்ற சொல், "தொண்டை" என்ற ஒரு கொடிப் பெயரிலிருந்து பெறப் பட்டதாம். ஆகவே, தொண்டையர் என்பார், தொண்டைக் கொடியைத், தங்கள் சின்னமாகக் கொண்ட, போர் மற்றும் பிற நிகழ்ச்சிகளின்போது, அதை அடையாளமாலையாக, அணியும் அரச இனத்தவர் அல்லது பழங்குடியினரைக் குறிப்ப தாகும். தொண்டையர், திரையர் என்ற இரண்டுமே, ஒரே இனத்தவரைக் குறிக்க வழங்கப்படுதலின், திரையர் என்ற இனத்தவர், தங்கள் சின்னமாகத் தொண்டைக் கொடியைக் கொண்டனர் எனக்கொள்ளலாம். தொண்டைமான் என்பது, இளந்திரையன் பட்டப்பெயர்; தொண்டை மாலைக்கு உரியவன் என்றுமட்டுமே அது பொருள்படும். இத்திரையன், தொண்டையர் குலத்தலைவனாயின், அவன், கரிகாலன் பெயரனும் ஆகல் எவ்வாறு இயலும்? அவனுடைய தாய், ஒரு திரையர் குலப்பெண்ணாய் இருந்தால் மட்டுமே அது இயலும், சோழர், திரையர் ஆகிய இரு குலத்தவரின் வழிவந்தவன் இளந்திரையன் என்பது, பெரும்பாணாற்றுப் படையில் குறிப்பிடப்பட்டுளது. "இப்பெரிய உலகை அளந்து கண்டவனும், திருவாகிய அழகிய மறு விளங்கும் மார்பினை உடையவனும், கடல் போலும் நிறத்தினை உடையவனுமாகிய விஷ்ணுவின் வழிவந்த, பரந்த இப்பேருலகில், வாழும் உயிர்களைக் காக்கும், வெற்றி முரசு முழங்கும் மூவேந்தர் களுள்ளும் சிறந்த, சோழர் குடியில் வந்தவன் நீ! பரந்தகடலில் பிறக்கும் சங்குகளில், உலகத்தவர் அனைவராலும், குற்றம் தீர்ந்து சிறந்தது எனப் புகழப்படும் வலம்புரிச் சங்கு போலக், குற்றம் இலனும், குண்நலன் உடையனும் ஆகுவை! நாட்டில் அறம் அல்லனவற்றை அறவே அழித்து, அறமே சிறக்க ஆளும் ஆட்சி நலன் உடையை! திரைவழிவந்த மரபில் பிறந்தவனும் ஆகுவை!"

"இருநிலம் கடந்த, திருமறு மார்பின்,
முன்னீர் வண்ணன் பிறங்கடை; அந்நீர்த்
திரைதருமரபின் உரவோன் உம்பல்!.
மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும்,
முரசு முழங்குதானை மூவருள்ளும்
இலங்கு நீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம் புரியன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல்வேல் திரையன்".

—பெரும்பாண் : 29 - 37

பத்துப்பாட்டின் உரையாசிரியர் நச்சினார்க்கினியர், மேலே காட்டிய பாடற்பகுதியில் வரும் "திரைதரு" என்ற தொடருக்குத் தெரிந்த ஒரு கட்டுக் கதைமூலம், அதற்கு விளக்கம் காண முற்பட்டுள்ளார். அவர் கூறியது; "நாகப் பட்டினத்துச் சோழன், பிலத்துவாரத்தால், நாகலோகத்தே சென்று, நாக கன்னியைப் புணர்ந்த காலத்து, அவள், யான் பெற்ற புதல்வனை என் செய்வேன் என்றபொழுது, தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட, அவன் வந்து கரையேறின், அவற்கு, யான் அரச உரிமை எய்துவித்து நாடாட்சி கொடுப்பன், என்று அவன்கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின், திரையன் என்று பெயர் பெற்ற கதை கூறினார்," என்பது, முன்பே காட்டியவாறு, திரையர் என்பார், ஒருபழங்குடியினராதலன், இவ்விளக்கம் பொருந்தாது. (பவத்திரி என்ற நகருக்கு உரியவனும், பொன்னணிகள் பூண்டவனுமாகிய மற்றொரு திரையர் தலைவனும் உள்ளான். "செல்லா நல்லிசைப் பொலம் பூண் திரையன், பல்பூங்கானல் பவத்திரி"—அகம் : 340 : 6-7) ஆயினும், இன்றைய எழுத்தாளர் சிலர், இக்கட்டுக் கதையை, வரலாற்று உண்மையாக ஏற்றுக் கொள்வது மட்டுமல்லாமல் இளந்திரையனைப், பிறிதொரு காதல் கட்டுக்கதைக் குழந்தையாக, இந்த இடத்தில்,

நாகப்பட்டினத்துச் சோழன் மகன் அல்லாமல், வேறு ஒரு காவிரிப்பூம் பட்டினத்துச் சோழன் மகனாக, திரைவழி மிதந்து வாராமல், கலம் ஏற்றி அனுப்பப்பட்டு, அக்கலம், கடும் சூறாவளியால் தாக்குண்டு மூழ்கிப் போக, அதன் பின்னர், அவன் குறித்து யாதும் - அறியவாராமகனாகக் கொண்டு, அக்கட்டுக் கதையை மேலும் பொருளற்றதாகச் செய்தும் உள்ளனர். இக்கதை மணிமேகலையில் இடம் பெற்றுளது. காவிரிப்பூம் பட்டினத்துச் சோழன், நாகப் பட்டினத்துச் சோழன் போலல்லாமல், தன் மகனைப் பார்த்தும் அறியான் ஆதலின், அவன் தன் மகனுக்கு நேர்ந்து விட்ட கதியைக் காண்பதில் ஈடுபாடு கொண்டுவிட்டது, அக்காலை, வழக்கம்போல் கொண்டாட வேண்டிய இந்திர விழாவைப் புறக்கணிக்க நேர்ந்து, அக்கதையில் விளக்கியுள்ள வாறு, அப்பழைய துறைமுகப் பட்டினத்தைக் கடல் கொள்வதில் கொண்டுபோய் விடுவதும் செய்தது. இருகதை களுமே நம்புதற்கு இயலாதன; அவை இரண்டையும் ஒன்றாக இணைத்துக் காண்பது, அவற்றின் மீது நம்பிக்கையை உண்டாக்கிவிடாது.

புறநானூற்றுப் பதிப்பாசிரியர் அல்லது தொகுப்பாசிரியர், 185 ஆம் எண் பாட்டு, தொண்டைமான் இளந்திரையன் பாடியது என்றும். 95 ஆம் எண் பாட்டு, தொண்டைமான் படைக்கலப் பெருமை குறித்துப் பாடுகிறது என்றும் கூறியுள்ளார். "தொண்டைமான்" என்ற சொல், "தொண்டை" என்ற சொல்லும் சமஸ்கிருத விகுதி "மான்" (மத்) என்பதும் இணைத்து, தொண்டைக்கு உரிய தலைவன் எனும் பொருள் உணர்த்தும் ஒரு தொகைச் சொல், "தொண்டையர்" எனும் சொல், தொண்டைக் கொடியை அடையாளச் சின்னமாகக் கொண்ட பழங்குடியினர் எனும் பொருள் உடையது; தொண்டை என்பது, இன்றைய நாட்களில், பொதுவாகக், கோவை என அழைக்கப்படுகிறது. ஆனால், தெலுங்கில், "தொண்டே" என்பது, அச்செடியின், பொதுவான பெயராகும்; பிற்காலப் பல்லவர்கள், அதாவது, காஞ்சியைக் கி. பி. 550க்கு முன்னரே மீண்டும் கைக்கொண்டு, அந்நாள்

முதல் கி. பி. 900 வரை, அதைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர்கள், தங்கள், தமிழ்க் குடிமக்களாம் தொண்டையரோடு, பழைய பல்லவர்களினும் நெருக்கமாகக் கலந்து விட்டனர்; உண்மையில், முழுக்க முழுக்க, தமிழர்களாகவே ஆகிவிட்டனர். அவர்கள், தங்களைத் தொண்டையர் குல அரசன் எனும் ஒருபொருளே தருவதான, "தொண்டைமான்" (சுந்தரமூர்த்தி நாயனார் வடதிருமுல்லை வாயில் பதிகம்'10), "தொண்டையர்கோன்" (திருமங்கை ஆழ்வார் பெரிய திருமொழி: 8 : 10 : 1) "தொண்டை மன்னவன்" (திருமங்கை ஆழ்வார் பெரிய திருமொழி: 5 : 8 : 9 : 1) என்றெல்லாம் பெயர் சூட்டிப் பாராட்டும் புலவர்களைப் பேணும் புரவலர்களும் ஆயினர். நாடும், "தொண்டை நாடு அல்லது "தொண்டை மண்டலம்" (துண்டக விஸயம் "துண்டிர விஸயம்" எனச் சமஸ்கிருத மாக்கப்பட்டது) என அழைக்கப்படவும் ஆயிற்று. ஆனால், இவை அனைத்தும் எட்டாம் நூற்றாண்டில் நடைபெற்றன; இந்நிலையிலும், இன்றைய எழுத்தாளர் சிலர், தொண்டையர் என்ற சொல், பல்லவ என்ற சொல்லின் மொழிபெயர்ப்பு, அல்லது, இதன் மொழிபெயர்ப்பு அது, எனக் கூறி வாதிடுகின்றனர். "பல்லவ" என்பது, இளம்தண்டு, சிறுகம்பு அல்லது இளம்தளிர் எனும் பொருள் உடையதாக, தொண்டை என்பது, ஒருவகைக் கொடி எனும்பொருளே உடையதாகலின், அவ்விரு சொற்களும், ஒன்றின் பெயர்ப்பு ஒன்று ஆதல் அறவே இயலாத ஒன்று. ஆறாம் நூற்றாண்டிற்குப் பின்னர், பல்லவ அரசர்கள், தமிழில், "போத்தரையர்" என அழைக்கப்பட்டனர். போத்து என்பது இளம் கொம்பு எனும் பொருள் உடையது ஆதலின், போத்தரையர் என்ற சொல், "பல்லவராஜா" என்பதன் மொழிபெயர்ப்பாதல் கூடும்; ஆகவே, ஒரு தமிழ்ப் பழங்குடியினர் பெயராகிய தொண்டையர் என்ற சொல்லை, வட இந்தியாவிலிருந்து வந்துகுடியேறிய, ஆரிய மயமாகிவிட்ட, ஓர் அரச குலத்தவர் பெயராகிய "பல்லவர்" என்ற சொல்லிலிருந்து கொள்வதும் மாறாக, இச்சொல்லை, அச்சொல்லிலிருந்து கொள்வதும்

ஆகிய அனைத்து முடிவுகளும், வாதங்களின் முன் நிலைத்து நிற்பன ஆகா.

இளந்திரையன், ஒரு தமிழர் தலைவன் ஆதலின், அவன், தமிழ்ப் புலவர்களைப் பேணிப் புரந்தான். அவனே, ஒரு தமிழ்ப் புலவனும் ஆவன். அவனுடைய பாடல் ஒன்று புறநானூற்றில் இடம் பெற்றுளது. அது, ஏனைய குடிமக்கள் பாக்களிலும், சிறந்த செய்யுள் நயம் வாய்ந்தது என்பதற்காக அல்லாமல், காவல பாவலன் பாடிய பாட்டினுக்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகுக என்பதால் ஈண்டு மொழி பெயர்க்கப் பட்டுளது. அது இது; "உருளையும் பாரும் நன்கு காக்கப் பெற்று உலகின்கண் ஓட விடப்படும் நாடுகாவலாகிய நல்ல வண்டி, அதனைச் செலுத்துவோன், நாடாளும் மாண்பு நிறையப் பெற்றவனாயின், ஊறுபாடு இல்லாமல், இனிதே நன்கு ஓடும்; அவன், அதனை நன்கு செலுத்த அறியானாயின், அது, நாள்தோறும், பகையாகிய பெரும் சேற்றில் சிக்குண்டு மிகப்பெரிய துன்பத்தைத் தந்துவிடும்"

"கால்பார் கோத்து, ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு உகைப்போன் மாணின்,
ஊறு இன்றாகி, ஆறு இனிது படுமே;
உய்த்தல் தேற்றான் ஆயின், வைகலும்
பகைக்கூழ் அல்லற் பட்டு
மிகைப் பஃல் தீ நோய் தலைத்தலைத் தருமே";
—புறம்: 18

அரசியல் வானில், இவ்வாறு சிறக்கச் சிறகடித்துப் பாடி இப்பாட்டை அடுத்து, இளந்திரையன், நற்றிணையில் இட பெற்றிருக்கும், நெய்தல் திணை சார்ந்த பாடல்கள் இரண்டும் முல்லைத் திணை சார்ந்த பாடல் ஒன்றுமாக, மூன் பாடல்களைப் பாடியுள்ளான். அவற்றுள் முதலாவ வருமாறு: "ஒருத்தி, காதல் நோய் நிலைகுலையப் பண்ணு தலால், உளம் கலங்கி, உடல்வலியிழந்து போகும்போது

அன்போடு வந்து, அருகில் இருந்து, இன்மொழிகூறி, அந்நோயைத் தணிவித்தல் ஆண்மகனுக்கு உரிய சிறந்த கடமையாகும். ஆனால், காம நோயால் நாம் வருந்திக் கிடக்கும்போது நம் காதலன் வந்து அது தீர்த்தான் அல்லன்; கைத்தொழில் வல்ல கம்மியன், அழகுறக் கழுவித் தூய்மை செய்யாத முத்து, தன் பேரொளியை மறைத்துக் காட்டுவது போல், நானும், அவனொடு கொண்ட புணர்ச்சியால் பெற்று விட்ட என் புதுநல அழகைப் பிறர் கண்டுகொள்ளாவாறு, என் பெண்தன்மையால் மறைத்து, மனத்துயர்மிக்குக் கிடக்க, புலால் நாறும் கடல்நீர் நெறித்தலால், அதுகாறும் மலரா திருந்த பேரரும்புகளெல்லாம் மலர்ந்து மணக்கும் புன்னை மரங்கள் நிறைந்த கடற்கரைத் தலைவனாகிய நம் காதலன், அவன்பால் அன்புகொண்டு, அவன் மார்பு தந்த நோயால் வருந்தும் என் நிலையினை அறிந்திலனே; என்ன காதலனோ அவன்?"

"நோயலைக் கலங்கிய மதனழி பொழுதில்
காமம் செப்பல், ஆண் மகற்கு அமையும்;
யான் என் பெண்மை தட்ப, நுண்ணிதின் தாங்கிக்,
கைவல் கம்மியன் கவின் பெறக் கழாஅ
மண்ணாப் பசுமுத்து ஏய்ப்பக், குவியிணர்ப்
புன்னை அரும்பிய புலவு நீர்ச் சேர்ப்பன்,
என்ன மகன் கொல் தோழி! தன் வயின்,
ஆர்வம் உடையராகி,
மார்பு அணங்குறுநரை, அறியாதோனே".

—நற்றிணை : 94

அடுத்த செய்யுள், பிரிவால் வருந்தும் தலைவியைத் தோழி ஆற்றுவிப்பதைக் கூறுகிறது. "தண்ணீர் அறவே இல்லையாம்படி வறண்டுபோன, கடக்கமுடியாவாறு நீண்டு கிடக்கும் பெருவழியில, வெண்ணிற ஆடையை விரித்துப் போட்டாற்போல், வெயில் காய்வதால், வெப்பம், மிகுந்து, நினைத்தாலும் நடுங்கப் பண்ணும் கொடுமை வாய்ந்ததான

பாலைக் காட்டைக் கடந்து சென்ற காதலன், தான் திரும்பிவரும் காலமாகத், தெளிவாகக் கூறிய பருவம் இதுவல்லவோ எனக் கேட்கின்றனை; இஃது, அப்பருவம் அன்று! பருவகாலம் அன்று என்பதை மறந்து கடல் நீரைக் குடித்துக் கருவுற்றுவிட்ட கார்மேகம், அது தாங்கமாட்டாது பெய்து ஒழிய மழை பெய்து விடவே, அதைப் பருவ மழை யென்றே கருதிவிட்ட அறியாமையால், பிடவும், கொன்றை யும், காந்தளும் மலர்ந்துவிட்டன. ஆகவே, அது கொண்டு, நீயும், இது கார்காலந்தானோ என எண்ணிக் கலங்கி விடாதே; இது கார்காலம் அன்று".

"நீர் அற வறந்த நிரம்பா நீளிடைத்,
துகில் விரித்தன்ன வெயிலவிர் உருப்பின்,
அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்,
தாம் வரத்தெளித்த பருவம் காண்வர,
இதுவோ என்றிசின்; மடந்தை! மதியின்று
மறந்து கடல்முகந்த கமஞ்சூல் மாமழை
பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்
கார் என்று அயர்ந்த உள்ளமொடு, தேர்வில
பிடவும், கொன்றையும், கோடலும்
மடவ ஆகலின், மலர்ந்தன பலவே".

—நற்றிணை : 99

"பாக! காதலியைப் பிரிந்து வந்து, இப்போது வருந்து கின்ற நான், பரந்த கடலின், கரையை மோதும் பெரிய அலைகள் கொண்டு வந்து குவித்த மணல்மேட்டில், கடல் அலைகளோடு வந்து மொய்க்கும் நண்டுகளைப் பிடிக்க, தன்னிடமிருந்து வெளிப்படும் தான் செல்லுமிடமெல்லாம் வீசாநிற்க, அந்நண்டுகள் ஓடுமிடமெல்லாம் தொடர்ந்து ஓடி ஓடி விளையாடிக் களைப்புற்றுப் போக, விளையாட்டில் விருப்பம் ஒழிந்து இருந்த இளையளாம் அவள்பால் சென்று, வினைமேற் செல்லத் துடிக்கும் என் உள்ளத்துக் கவற்சியைக்

கூறியவுடனே பிரிவறிந்து கலக்க முற்றமையால் மறுமொழி கூற நா எழாமல் போக, அப்பிரிவினைப் பொறமாட்டாத தன் மனக்கலக்கத்தைத், தனக்கு அணித்தாக வளர்ந்திருந்த ஞாழல் மரத்துத் தாழ்ந்த கிளையில், மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருந்த மலர்க் கொத்தை, இளந்தளிரோடு கொய்து அவற்றை ஒரு சேரக் கசக்கிப் பிசைந்து உதிர்த்ததன் மூலம் வெளிப்படப் பண்ணி அறிவு மயங்கிவிட்ட அவள் துயர் நிலையினை அறிந் திருப்பை அல்லவோ? அறிந்திருக்கும் நீ, அத்துயர் தீர்க்க வேண்டின், அதற்கேற்பத், தேரை ஓட்டுவாயாக!''

''அறிதலும் அறிதியோ! பாக! பெருங்கடல்
எறிதிரை கொழீய எக்கர் வெறிகொள,
வாடுவரி அலவனோடு ஒடுவயின் ஆற்றாது
அசைஇ, உள்ளொழிந்த வசைதீர் குறுமகட்டு,
உயவினென் சென்றுயான் உண்ணோய் உரைப்ப,
மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள், நறுமலர்
ஞாழல் அஞ்சினைத் தாழிணர்க் கொழுதி
முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்
அறிவு அஞர் உறுவி ஆய்மட நிலையே'';

—நற்றிணை : 106

இம்மூன்று பாடல்களில், முன்னவை இரண்டும், இளந்திரையன் பாடியனவாகவும், இறுதிப்பாட்டு, தொண்டைமான் இளந்திரையன் பாடியதாகவும் கூறப்பட்டுள்ளன; இருவரும் பெரும்பாலும் ஒருவரே; தானே உணர்ந்து உணர்ந்து பெற்ற உணர்வால் உந்தப்படாமல், பண்டே இருந்துவந்த கவிமரபுத் தொடர்களே, திரும்பத் திரும்ப எடுத்துக் கூறப்பட்டுள்ளன என்பதை வெளிப்படுத்தும் வகையில், இப்பாடல்களில், இயற்கைக்கு மாறான வலிந்து மேற்கொண்ட செயல்பாட்டு நிலையும், சமஸ்கிருதப் பாக்களின் சூழ்நிலைச் சாயலும் கலந்து காற்று வீசுவதாகவே நான் கருதுகின்றேன்;

இளந்திரையன் பாடல்களும், பெரும்பாணாற்றுப் படைப் பாடலும் சமஸ்கிருத ஆசிரியர்களால் மலிந்த திராவிட நாட்டுக் காஞ்சீபுர மாவட்டத்தில் பாடப்பெற்ற முதல் தமிழ்ப் பாக்களாகும். ஒன்று, அவனால் இயற்றப்பட்ட, அல்லது அவனுக்குப் பெருமைசேர்க்க, அவன் பெயரில், யாரோ ஒருவரால் இயற்றப்பட்ட இளந்திரையம் என்ற நூல், பிற்கால உரைகளில் குறிப்பிடப்பட்டுளது. இது இப்போது வழக்கிறந்து போனதாகத் தெரிகிறது. இளந்திரையனுக்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர்ப், பிராகிருத மொழியை ஆட்சி மொழியாகக் கொண்ட ஆரியராஜாக்கள் அல்லது ஆரியமயமாக்கப்பட்ட ராஜாக்கள், காஞ்சி நாட்டை ஆண்டு வந்தனர். வழிவழியாக வந்த சேர, சோழ, பாண்டிய அரசவைகளோடும், தமிழ் நாட்டுக் குறுநிலத் தலைவர்களின் அரசவைகளோடும் மட்டுமே தொடர்பு கொண்டிருந்த தமிழ்ப் புலவர்களை, அக்காஞ்சி நாட்டுக் காவலர்கள் பேணிப் புரக்கவில்லை. கரிகாலனின் காஞ்சிவெற்றி, அவ்விடத்தைத் தமிழ் இலக்கிய வளைவுக்குள் முதன்முதலில் கொண்டுவந்து சேர்த்தது. இன்றும் அழியாமல் வழக்கில் இருக்கும் பழந்தமிழ் இலக்கியங்களில், பல்லவர் பற்றிய குறிப்பு அறவே இல்லாமல் இருப்பதை இது விளக்கும். பல்லவர்கள், தமிழர்களாக ஆகிவிட்ட பின்னர், தமிழிலக்கியங்களில், அவர்களைப் பற்றிய குறிப்புகள் மிகப் பலவாம்.

பல்லவ குமார விஷ்ணு கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் கைப்பற்றும் வரை, காஞ்சீபுரம், சோழப் பேரரசிக்கு அடங்கிய சிற்றரசாகவே இருந்து வந்தது. அவன் வழிவந்தவருள் ஒருவனான சிம்ம விஷ்ணு, சோழ நாட்டையும், தன் ஆட்சியோடு இணைத்துக் கொண்டான். அது, எடுத்துக் கொண்ட ஆய்வுப் பொருளின் எல்லைக்கு அப்பாற்பட்டதான மிகப் பெரிய வரலாற்று மாறுதலுக்கு வழிவகுத்துவிட்டது.

---

## அதிகாரம் : XXII

# கரிகாலனுக்குப் பிற்பட்ட சோழ அரசர்கள்

### தொகை நூல்களிலிருந்து பெறலாகும், சிறு அளவிலான வரலாற்றுச் செய்திகள்

பழைய தொகை நூல்களைச் சேர்ந்த ஆயிரத்து ஆறுநூறு பாடல்களும் அரசர்கள், குறுநிலத்தலைவர்களின் செயல்பாடுகள் பற்றிய ஒருசில குறிப்பீடுகளையே இங்கொன்றும், அங்கொன்றுமாகக் கொண்டுள்ளன; அக்குறிப்பீடுகள் தாமும், அப்பாக்கள் பாடப்பெற்றபோது வாழ்ந்த தமிழரசர்களின் தொடர்ச்சியான வரலாற்றினை வகுக்கவோ, அவற்றில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரு சிலரின் வாழ்க்கை வரலாற்றினைக்கூட வகுக்கவோ இயலாத அளவு, முறையாக இல்லாமல், இடைப்பிறவரலாகவும், மிகமிக அருகியுமே இடம் பெற்றுள்ளன. கரிகாலன் வாழ்க்கை பற்றிக் கூறியதுபோலவே, அரசர்கள் மேற்கொண்ட போர்க்களப்பெயர்கள், போரிடப்பட்ட இடங்கள், தோற்ற அரசர்களின் பெயர்கள் ஆகிய இவற்றை மட்டுமே, அம்மூலங்களிலிருந்து பெறலாம். பெரும்பாலான இடங்களில், அப்பாக்கள், அரசர்களின், குறிப்பிட்ட வீரச்செயல்களின் புகழ் உரைகளாக அமையாமல், தெளிவிலாப் பொதுநிலைப் புகழ் உரைகளாகவே உள்ளன. அவற்றின் உண்மையான ஒரு சிறப்பு, சிலப்பதிகாரம் மற்றும் பிற்கால இலக்கியங்கள் போல் அல்லாமல், தாம் பாடும் அரசர்களுக்கு மிகைப்படுத்தப் பட்ட புகழ் உரைகளையோ, செய்வதற்கு இயலா அருஞ் செயல்களையோ உரிமையாக்காமல், அத்துணை இயல்பினை, உண்மையோடு பட்ட உரைகளாய் அமைந்திருத்தலே ஆகும். பாடிப்புகழ் பரப்பும் புலவர்களும் இரவலர்களும் கறி உண்ணுவது, கள் குடிப்பது ஆகிய நிலைகளில் ஒரு கட்டுப்

பாட்டினைக் கொண்டாரல்லர். தங்களோடு இணைந்து விட்ட, இரவலர், விறலியர், போலும் சுற்றத்தார் நலனில் பெரிதும் கருத்துடையராயினர்; என்றாலும், தேவைப்படும் போதெல்லாம் அரசர்களின் தவறுகளைச் சுட்டிக்காட்டி இடித்துரைப்பதிலும் பொருள்செறிந்த அறிவுரைகளை எப்போதும் அளிப்பதிலும், அவர்கள் கண்முடிச் செயல் பட்டனர்.

கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் என்ற புலவர் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் அரசவையில் நெடிது நாட்கள் காத்திருந்தும், பெறவேண்டிய பரிசில் பெறமாட்டாமையால், அவனை இவ்வாறு கடிந்துரைக் கிறார்: ""காற்றெனை விரையும் குதிரைகள் பூட்டப்பெற்ற, வெற்றிக்கொடி பறக்கும் தேர்ப்படை உடையவர் எனவும், கடல்போல் பரந்த படைக்கலம் ஏந்திய படைவீரர்களோடு, மலையையும் மோதி அழிக்கும் களிற்றுப்படையும் உடையவர் எனவும், இடியென முழங்கிப் பகைவர்க்கு அச்சம் ஊட்டும் போர் முரசோடு, பெரும் வெற்றிச்சிறப்பும் உடையர் எனவும் எண்ணிப் பெரும்படையும் பொன் அணியும் உடைய பேரரசர்களின், வெண்கொற்றக்குடைக் கீழ்க்குவிந்து கிடக்கும் பெருஞ்செல்வத்தை மதிப்போம் அல்லோம். முள் வேலியிட்டு அடைக்கப்பட்ட தோட்டத்தில், ஆடுதின்று கழிந்த முன்னைக்கீரையைப் புன்செய் நிலத்தில், விளைந்த வரகரிசிச் சோற்றோடு கலந்து உண்ணும், செல்வ வளம் சிறவாச் சிற்றூர் அரசரே ஆயினும், எம்மை மதித்து, எமக்கு செய்யவேண்டிய முறைமைகளை அறிந்து செய்யும் பண்புடையாரே எம்மால் மதிக்கப்படுவோர் ஆவர். யாம் மிகப் பெரிய துன்பத்தில் ஆழ நேரினும், சிறிதும் அறிவில்லாதார் செல்வத்தைச் சிந்திப்பதும் செய்யோம். நல்லறிவுடையார், வறுமையுற்றுக்கிடப்பினும், அவ்வறுமையிலும் பயன்படுவர் ஆதலின் அன்னார் வறுமையையே பெரிதும் நினைப்போம்''.

""வளிநடந்தன்ன வாஅய்ச்செலல் இவுளியொடு
கொடிநுடங்கு மிசைய தேரினர் எனாஅக்,

கடல் கண்டன்ன ஒண்படைத்தானையொடு
மலைமாறு மலைக்கும் களிற்றினர் எனாஅ,
உருமுரற் றன்ன உட்குவரு முரசமொடு
செரு மேம்படூஉம் வென்றியர் எனாஅ,
மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே;
எம்மால் வியக்கப்படூஉ மோரே,
இடுமுள் படப்பை மறிமேய்ந்து ஒழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கண் குற்றடகு
புன் புலவரசின் சொன்றியொடு பெறூஉம்
சீறூர் மன்னர் ஆயினும் எம்வயின்
பாடறிந்தொழுகும் பண்பினாரே;
மிகப்பேர் எவ்வம் உறினும், எனைத்தும்
உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளோம்;
நல்லறிவுடையோர் நல்குரவு
உள்ளுதும்; பெரும! யாம் உவந்து நனி பெரிதே"
—புறம்: 197

இவ்வாறு கடிந்துரைக்கப்பட்ட அரசன், கரிகாலனாவன் எனக் கருதுகிறார் திரு. கனகசபை அவர்கள். அத்தகைய கண்டனத்திற்கு உரியனல்லனாய் அளவு புலவர்கள்பால் பெருங் கொடையாளனாவன் கரிகாலனாதலின், அது சரியன்று; அவ்வாறு கொள்வதற்குத் திரு கனகசபை அவர்கள் காட்டும் காரணம், இரு அரசர்களுமே "திருமாவளவன்" என்ற சிறப்புப் பெயரைக் கொண்டிருப்பதே ஆகும். ஆனால், "மாவளவன்" என்பது இயற்பெயரன்று ஆதலின், சோழ அரசன் எவனும் மாவளவன் என அழைக்கப்படல் கூடும்,

புறநானூறு 45ஆம் எண் செய்யுளில், சோழர் குலத்து உடன் பிறந்தார் இருவர் ஒருவரோடு ஒருவர் போரிட்டுக் கொண்டிருக்கும்போது, மூத்தவன், கோவூர் கிழாரால்,

இவ்வாறு நயமாகக் கண்டிக்கப்பட்டான்: "நலங்கிள்ளி! நீ எதிர்த்துப் போரிட்டுக்கொண்டிருக்கும் உன் தம்பி பனந்தோட்டு மாலை அணிந்திருக்கவில்லை; ஆகவே அவன், உங்கள் குலப் பகைவனாகிய சேரன் அல்லன்; கரிய கொம்புகளைக் கொண்ட வேப்பம் மாலையையும் அவன் அணிந்திருக்கவில்லை. ஆகவே உங்கள் குல மற்றொரு பகைவனாகிய பாண்டியனும் அல்லன் அவன்; உன்தலை மாலையும் சோழர்க்குரிய ஆத்தி மாலையாக உளது; உன்னோடு போரிடுவான் தலை மாலையும் ஆத்தியாகவே உளது; ஆகவே இருவிரும் சோழர் குடியில் வந்தவர்; உங்கள் இருவரில் யார் ஒருவர் தோற்பினும், தோற்பது சோழர் குடியே; போரில் இருவரும் வெற்றி பெறுவது என்பது இயலாது: சோழர் குடி தோற்றது என்ற பழிச்சொல் எழ, நீங்கள் நடந்து கொள்வது உங்கள் குடிக்குப் பெருமை சேர்ப்பதாகாது. மேலும் போர்க்கொடி பறக்கும் தேர்ப் படைகளோடு விளங்கும் உம்பகையரசர்கள் எள்ளி நகையாட இடம் வகுப்பதும் ஆகும்; ஆகவே, போரைக் கைவிடுக."

"இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்;
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;
நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்று; நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர் மிடைந்தன்று;
ஒருவீர் தோற்பினும், தோற்பது உம் குடியே;
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்
குடிப் பொருள் அன்று நும் செய்தி; கொடித்தேர்
நும் போரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும் இவ்விகலே";

— புற

இப்பாக்கள், இனிய நயம் வாய்ந்துள்ளனவாயினும், அளிக்கும் செய்தி வறுமையால், அவை, வரலாற்று மூலங்களாகப் பயன்படுவ அல்ல.

இப்பாக்களைப்பாடிய புலவர்கள் பற்றிய ஆராய்ச்சியினை மேற்கொள்ளும், இன்றைய வரலாற்று ஆசிரியர்கள், பெயர்களில் காணப்படும் ஒருமைப்பாடு, அகப்புறச்சான்றுகளால் உறுதி செய்யப்படாது போயினும், தனிமனிதர்களின் ஒருமைப்பாட்டை உறுதி செய்வதாகக் கொள்கின்றனர். அஃது ஒரு பொருளற்ற கற்பனை ஊகமே. நக்கீரர் என்ற பெயரில், தனித்தனி மனிதர் நால்வர் உள்ளனர். ஒருவர், பழைய தொகை நூல்களில் பல பாடல்களையும், பத்துப்பாட்டில், திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை ஆகிய இருபாடல்களையும் பாடியவர்: இரண்டாமவர், நாலடி நாற்பது என்ற யாப்பிலக்கண ஆசிரியர்: மூன்றாமவர், கற்பனைக் கதை மூலம் கூறப்படுபவராகிய அகப்பொருளுக்கு முதலில் உரை கண்டவர்: நான்காமவர் பிற்காலத்தைச் சேர்ந்த சில சைவ சமய வழிபாட்டுப் பாடல்களைப் பாடியவர். ஆனால், தமிழ்ப் பேராசிரியர்கள், இந்நால்வரையும், ஒருவராகவே இணைத்துக் கொள்கின்றனர். இம்முறை, தமிழ்ப்பாக்களின் முறையான வளர்ச்சி குறித்த ஆராய்ச்சிக்குப் பெருந்தடையாக நின்று, தமிழ்ப்புலவர்கள், சமஸ்கிருதப் பாடல்களைக் கற்றறிந்த பின்னரே, தமிழ்ப்பாக்கள் தோன்றின என முடிவு கொண்டு அகச்சான்று, புறச்சான்றுகளை அறவே புறக்கணித்துவிட்டு, பிற்காலப்பாக்களை, முற்காலப்பாக்களின் முன்னே கொண்டுபோய் வைத்துத், தங்கள் முடிவினை உறுதிசெய்ய முனைவார்க்குத் துணைபுரியவும் செய்கிறது.

**புறநானூற்றுச் செய்யுட்களின் கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் கொளுக்கள் நம்பிக்கைக்கு உரியன ஆகா:**

கி.பி. ஐந்தாம், ஆறாம் நூற்றாண்டுகளில், நான்கு தொகை நூல்களும் தொகுக்கப் பெற்றபோது, ஒவ்வொரு பாட்டுக்கும் அதற்குரிய திணை, துறை, பாடிய ஆசிரியர் பெயர் ஆகியன கொடுக்கப்பட்டன. அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய இவ்வகையிலேயே நமக்குக் கிடைத்துள்ளன. ஆனால், இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் புறநானூற்றுப் பதிப்பு, இவற்றோடு 1) முதல் இருநாற்று

அறுபத்து ஆறு பாடல்களும், அவை ஒவ்வொன்றும் பாடப் பெற்ற சூழ்நிலையை விளக்கும் கொளுக்கள். 2) அந்த இருநூற்று அறுபத்தாறு பாடல்களுக்கான பொழிப்புரை, இலக்கணக்குறிப்பு, மற்றும் பிற பொருள் விளக்கக் குறிப்புக் களையும் கொண்டுள்ளன. பொழிப்புரை எந்தப் பாட்டோடு முடிகிறதோ அந்தப்பாட்டோடு கொளுவும் முடிகிறது. இவ் விரண்டும் பெரும்பாலும், பழந்தமிழ்ப்பாக்களுக்கு உரை எழுதத் தொடங்கப்பட்ட காலத்தை, அதாவது கி. பி. பன்னிரெண்டுக்கும் பதினாலுக்கும் இடைப்பட்ட நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஒரு பதிப்பாசிரியரால், இயற்றப் பட்டனவாதல் வேண்டும். உரை இல்லாமல், கொளுக்கள் மட்டும், முன்னூற்று ஐம்பத்தொன்பதில் மீண்டும் தொடங்கி, இறுதிவரை தொடர்கின்றன.

பெரும்பாலான தமிழ்ப் பேராசிரியர்கள், இக்கொளுக் களுக்கு, நம்புதற்கியலாக் கண்மூடித்தனமான பெருமதிப்பு அளித்துள்ளனர். அக்கொளுக்களில் இடம் பெற்றிருக்கும் செய்திகளைச் சான்றாக மேற்கொள்ளும்போது, புறநா னூற்றுச் செய்யுட்கான கொளுவில் கூறப்பட்டுளது என்றோ, புறநானூற்றுச் செய்யுட்கான உரைநடையில் கூறப்பட்டுளது என்றோ சொல்ல வேண்டுவதற்குப் பதிலாக, இது, புறனாற்றுச் செய்யுளில் கூறப்பட்டுளது என்றே கூறுகின்றனர். செய்யுளின் மூலங்களையும், ஆயிரம் ஆண்டுகட்குப் பிற்பட்டனவாய அவற்றின் உரைகளையும், ஒன்றாக மதித்துக் குழப்புவதைப், புலவர்கள் கைவிடவேண்டிய இனியும் காலம் கடத்தலாகாக் காலம் இது. மேலும், புறநானூற்றைத் தொகுத்தவர் அவர் காலத்தில் நினைவில் இருந்த அனைத்துக் காதுவழிச் செய்திகளையும் குறித் துள்ளார் என்பதும், அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டுளது; அவரால் கொடுக்கப்பட்டிருக்கும் அனைத்துச் செய்தி களையுமே, காதுவழிச் செய்தியாக வழிவழி வந்தனவே என்பதை ஏற்றுக்கொள்வதாயினும், காதுவழிச் செய்திகள், பனித்திரள்போல் நூற்றாண்டுக்கு நூற்றாண்டு, ஒன்று பலவாகப் பெருகி, வகைவகையான வியத்தகு கட்டுக்கதை

களையும் கொண்டு பருத்துவிடுமாதலின், அவற்றை நன்கு ஆர்ந்து அமர்ந்து சிந்தித்தே ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும்;

**கொளுக்களின், சிற்சில, நம்புதற்கு உரிய அல்லவாம் தன்மை:**

தொகுப்பாசிரியரால், பாக்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கொளுக்களில், சில கொளுக்கள், வழி வழியாக வந்த காதுவழிச் செய்திகளைக் கொண்டிருப்பதில்லை. ஆனால் வெறும் ஊகங்களைச், சிற்சில இடங்களில் கண்மூடித்தனமான ஊகங்களையே, கொண்டுள்ளன என்பது நன்கு தெரிந்த ஒன்று; எடுத்துக்காட்டுக்கு: புறநானூற்று 76, 77 ஆகிய பாக்கள், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, இடைக்குன்றூர்க்கிழார் புகழ்ந்து பாடியனவாகக் கூறப்பட்டுளது. 76 இவ்வாறு கூறுகிறது: ஒருவனை ஒருவன் வெற்றிகொண்டு கொல்வதோ, ஒருவனுக்கு ஒருவன் தோற்றுப் போவதோ புதுமையான ஒரு செயல் ஆகாது: இது, உலகில், தொன்று தொட்டு இருந்துவரும் இயல்பான நிகழ்ச்சி ஆகும்: ஆனால் ஊர்ப்பொதுவிடத்தே நிற்கும் பருத்த அடிமரத்தை யுடைய வேம்பின் பெரிய கிளைகளில் உள்ள இளந்தளிரை, நீண்ட உழிஞைக் கொடியோடு கலந்து கட்டிய தேன்சொட்டும் மாலையைச் சிறக்கச் சூடிக்கொண்டு, தெளிந்த ஓசையை வெளிப்படுத்தும் போர்ப்பறை ஒலிக்க, நாடு நிறைந்த செல்வத்தையுடைய, பசும்பொன்னால் பண்ணப்பட்ட அணிகளை அணிந்த நெடுஞ்செழியன் பெருமையையும், தலைமையையும் அறியாமையால், ஒன்றுகூடிப் போரிடவந்த இருபெருவேந்தர், ஐம்பெரும் வேளிர் ஆகிய எழரசர்களின் கொற்றம் அடங்கத், தான் ஒருவனாகவே நின்று போரிட்டு, அவர்களை வென்று அழித்த நிகழ்ச்சியை உலகம் தோன்றிய நாள் தொட்டு, இந்நாள்வரை யாம் கேட்டறியோம்.

> "ஒருவனை ஒருவன் அடுதலும், தொலைதலும்
> புதுவதன்று: இவ்வுலகத்து இயற்கை;
> இன்றின் ஊங்கோ கேளலம்; திரள்அரை
> மன்ற வேம்பின் மாச்சினை ஒண்தளிர்

நெடுங்கொடி உழிஞைப் பவரோடு மிடைந்து
செறியத்தொடுத்த தேம்பாய் கண்ணி,
ஒலியில் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் தெண்கிணை கறங்கக் காண்தக
நாடுகெழுதிருவின் பசும்பூண் செழியன்
பீடும் செம்மலும் அறியார், கூடிப்
பொருதும் என்று தன்தலை வந்த
புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க,
ஒருதானாகிப் பொருது களத்து அடலே''

—புறம் : 76

அடுத்த பாட்டு இவ்வாறு கூறுகிறது: ''காலில், குழந்தைப்பருவத்தில் அணிந்த சதங்கையைக் கழற்றி அகற்றி விட்டு, வீரர் அணியும் கழல் அணிந்துகொண்டு பிள்ளைப் பருவம் கழிந்ததை உணர்த்த, பிறந்த மயிர் நீக்கப்பெற்ற தலையில், வேம்பின் தளிரோடு, நெடிய உழிஞைக்கொடி கலந்து கட்டிய தலைமாலையைச் சூட்டிக்கொண்டு, சிறு பிள்ளைகள் அணியும் வளை கழற்றப்பட்ட கைகளில் வில்லும் அம்பும் ஏந்தி, நெடிய தேர் மீது பொலிவு தோன்ற நிற்கின்றான்; மாலை அணிந்திருக்கும் மார்பிலிருந்து, பிள்ளைப்பருவத்தே அணியும் ஐம்படைத்தாலி அணியை இன்னமும் அகற்றினானல்லன்; பால் உணவு விடுத்துச் சோற்றுணவை இன்றுதான் உண்டான். தன்மேல் சினங்கொண்டு சாரி சாரியாக வரும் புதிய வீரர்களைத் தன்னினும் எளியராக எண்ணி இகழ்வதும் செய்திலன். வந்து மோதினாரைக் கைக்கொண்டு வானோக்கி ஓச்சி எறிய, அவர்தம் உயிரிழந்த உடலம் நிலத்தின் கண்ணே வீழ்ந்து உயிர் போகக் கண்டும், கொண்ட வெற்றியைக் கண்டு மகிழ்வதோ, மனச்செருக்கு உறுவதோ செய்திலன்: இத்தகு நலம் வாய்ந்த இவ்விளையோன் யாவனோ? யாவனே ஆயினும் வாழ்க அவன் கண்ணி'':

"கிண்கிணி களைந்த கால், ஒண்கழல் தொட்டுக்
குடுமி களைந்த நுதல் வேம்பின் ஒண்தளிர்,
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து,
குறுந்தொடி கழித்த கைச்சாபம் பற்றி,
நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்,
யார்கொல்? வாழ்க அவன் கண்ணி! தார் பூண்டு
தாலி களைந்தன்று மிலனே! பால்விட்டு
அயினியும் இன்று அயின்றனனே! வயின்வயின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியத்தன்றும் இழிந்தன்றும் இலனே! அவரை
அழுந்தப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்
கவிழ்ந்து நிலம் சேர அட்டதை
மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும், அதனினும் இலனே!"

—புறம் : 77

கொளுக்களின் ஆசிரியர், இவ்விரு பாடல்களும், ஒரே அரசன் குறித்து, ஒரே புலவரால் பாடப்பட்டன எனக் கூறுகிறார். புலவருக்குத் தெரிந்த தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும், புலவருக்குத் தெரியாத இளைய வீரனும், வேறு வேறு அல்லர் ஒருவரேயாதல் நம்புதற்கு இயலாதது: இருவரும் பாண்டியர் குலத்தைச் சேர்ந்தவர் என்பது ஒன்றை மட்டுமே நாம் உறுதியாகக் கொள்ளலாம். புறநானூற்று 77ஆம் எண் பாட்டின் கொளு ஒரு ஊகம்; அதிலும் ஒரு தவறான ஊகம்; அவ்வளவே.

மற்றொரு பாட்டு, புறநானூறு 74, அரசர்குலத்து வந்தாரின் மானஉணர்வின் மாண்பினைப் புகழ்கிறது. "குழந்தை பிறந்தபோதே இறந்து போயினும், உயிரற்ற வெறும் தசைப் பிண்டமே பிறந்தாலும், ஆள் அல்ல என்று விட்டுவிடாது, அவற்றையும் வாளால் வெட்டிப் புதைப்பதைத் செய்வார். சங்கிலியால் பிணிக்கப்பட்ட நாய் பிணித்துச் சிறைசெய்து, தன்புறத்தும் பகைவர்,

விருப்பம் இன்றி, வெறுப்போடு கொடுக்கும் தண்ணீரை இரந்துபெறு நீரைக் குடியேம் என்னும் மனவலி இல்லாமல், தம் வயிற்றுப் பசித்தீயைத் தணிப்பான் வேண்டித், தாமே இரந்து கேட்டு உண்ணுவாரை, இவ்வுலகில் பெறுவரோ?"

"குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்,
ஆள் அன்று என்று வாளில் தப்பார்;
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய,
கேளல் கேளிர், வேளாண் சிறுபதம்,
மதுகை இன்றி, வயிற்றுத் தீத்தணியத்,
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ்வுலகத்தானே?"

—புறம்: 74

புறநானூற்றுத் தொகுப்பாசிரியர், "சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணானோடு, திரும்போர்ப் புறத்துப் பொருது, பற்றுக் கோட்பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையில் கிடந்து, தண்ணீர் தா என்று பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணான், சொல்லித் துஞ்சிய பாட்டு" இது எனக் கூறியுள்ளார். இது, நடக்கக் கூடாததொன்றன்று; இப்பழங் கதையில் நம்புவதற்கு இயலாத எதுவும் இல்லை; ஆனால், இதில் தொடர்புபடுத்தப்பட்ட அரசர்கள் யாவர் என்பது பற்றி, மூலம் எவ்விதக் குறிப்பையும் தரவில்லை; தொகுப்பாசிரியர், அப்பழங்கதையைக் கேட்டறிந்து, அதை, அச்செய்யுளோடு இணைத்துவிட்டார் என்ற கருத்தை மறுக்க எதுவும் இல்லை. இப்பழங்கதை குறித்து ஐயப்பாடுகளும் உள்ளன. "தமிழ் நாவலர் வரலாறு" என்ற, உண்மையில் அது அல்லாத, அரிய பெயரால் அழைக்கப்படும். கி. பி. 16 ஆம் நூற்றாண்டிற்கு முன்னர்த் தொகுக்கப்பெற்ற, சிலவற்றிற்குச் சுருக்கமான உரை விளக்கத்தோடு கூடிய தமிழ்ப் பாக்களின் தொகை நூல் ஒன்று உளது. அத்தொகை நூலில், இப்பாட்டு, 158ஆம் எண் பாட்டாக வருகிறது. அதற்குக்

கொடுக்கப்பட்டிருக்கும் குறிப்பு, "சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானால் சிறைபிடிக்கப் பட்டுத் தன் கோட்டைக் குடவாயில் கோட்டத்துச் சிறையில் அடைக்கப்பட்டபோது, சேரன், இப்பாட்டைப் பாடி, தன் புலவ நண்பர் பொய்கை யார்க்கு அனுப்பினான். பொய்கை யார் இது கேட்டதும், செங்கணான் புகழ்கூறும் களவழி நாற்பது என்ற பாக்களைப் பாடினார். அது கேட்ட செங் கணான், சேரனை விடுதலை செய்து, அவன் அரியணையையும் திருப்பித் தந்தான்" எனக் கூறுகிறது. (தமிழ்நாவலர் வரலாறு: பாக்கம்: 57) இருகட்டுக்கதைகளும், ஒன்றோ டொன்று மாறுபடும் இவ்வுண்மை நிலை, தமிழ்ப் பேராசிரியர்களால், தெய்வத் தன்மை வாய்ந்து, மாற்றொணா மாண்புடையதாகக் கருதப்படும் அம்மரபு வழிச் செய்திகள், வரலாற்று ஆய்வு நிலையில், ஊன்று கோலாகக் கொள்வதற்கு உதவா, எளிதில் ஒடிந்து உருக்குலைந்து போகும் வெறும் நாணற்புல்லாகும் என்பதை உணர்த்துகிறது.

பாக்களின் பொருள், அவற்றோடு இணைந்திருக்கும் கொளுக்களில் கூறப்பட்டிருக்கும் கதைகளோடு, எவ்விதத் தொடர்பும் கொள்ளாத, இவைபோலும் வேறு சில பாடல் களும் உள; மேலும் ஒரு எடுத்துக் காட்டினை, ஈண்டுத் தருகின்றேன்; "வரையாது வழங்கும் உள்ளம் உடையாரை உள்ளத்தில் கொண்டு, பழுமரம் தேடிச் செல்லும் பறவை போலக், கடந்து செல்ல வேண்டிய வழி, நெடிது, கொடிது எனக் கருதாமல், கடந்து சென்று, தம் நாவால், தம் வன்மை தோன்றப் பாடிப் பாராட்டி, ஆங்குப் பெற்ற பரிசிலால் தாமும் மகிழ்ந்து, தம் சுற்றத்தையும் பேணிப் பெற்ற பொருளைப் பயன்கொள்ளாதே பேணிக் காப்போம் என எண்ணி விடாது, தாமும் உண்டு, தம்பால் வந்து வறுமை கூறுவார்க்கும் வழங்கித், தம்மைப் பேணிப் புரப்பவர் தரும் பெரும் பரிசில் பொருட்களை இவ்வாறு பயன் கொள்வதில் பெறும் சிறு தொல்லையோடு வாழும், இப்பரிசிலர் வாழ்க்கை, செய்யும் கொடுமையை எப்போதும் அறிந்த

தில்லை. புலமைத் துறையில், தம்மோடு மாறுபட்டு வருவார், தோற்று நாணும் வண்ணம், அவரைத் தம் புலமையால் வென்று, தலைநிமிர்ந்து நின்று செருக்குற்று வாழ்வதல்லது, வேறு மாறுபாடு அறியா அந்நிலையால், சிறந்த புகழும், நாடாளும் நலமும் நன்கு வாய்க்கப் பெற்ற நில தலைமைக்கு நிகரான தலைமையையும் உடையராவர்."

> வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
> நெடிய என்னாது சுரம்பல கடந்து
> வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்,
> பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
> ஓம்பாது உண்டு கூம்பாது வீசி,
> வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை,
> பிறர்க்குத் தீது அறிந்தன்றோ இன்றே; திறப்பட
> நண்ணார் நாண அண்ணாந்து ஏகி
> ஆங்கினிது ஒழுகின் அல்லது ஓங்குபுகழ்
> மண்ணாள் செல்வம் எய்திய
> நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே.
>
> —புறம் : 4

இச்செய்யுளுக்கு இணைந்திருக்கும் கொளு இவ்வா கூறுகிறது :- "சோழன் நலங்கிள்ளியுழை நின்று, உறையூ புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனைக், காரியாற்று துஞ்சிய நெடுங்கிள்ளி 'ஒற்றுவந்தான்' என்று கொல்ல புக்குழிக், கோவூர் கிழார் பாடி உய்யக் கொண்டது." ஒற் வந்த நிகழ்ச்சியை மறைமுகமாகவாவது குறிப்பிட, மூலத்தி எதுவும் இல்லை என்ற தடை ஒருபுறம் இருக்க, கோவூ கிழார், நெடுங்கிள்ளியின் பகைவர்கள்பால், அதாவ நலங்கிள்ளி, கிள்ளிவளவன்கள்பால் மிக்க செல்வாக்கு யவராவர். ஆகவே, அவருக்கு, நெடுங்கிள்ளிபால் எவ்வித செல்வாக்கும் இருந்திருக்க முடியாது என்ற மேலும் ஒ தடையும் உளது.

புறநானூறு 173 ஆம் எண் பாட்டின் கொளு, "சிறுகுடி கிழான் பண்ணனைச் சோழன், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாடியது" என்கிறது. பாட்டு கூறுவது இது :- "என் வாழ்நாளையும், தன் வாழ் நாளோடு கொண்டு பண்ணன் நெடிது வாழ்வானாக! பாணர்காள்! இப்பரிசிலனது சுற்றத்தின் வறுமைக் கொடுமையைக் காணுங்கள். புதிது புதிதாகப் பழங்களை ஈன்றிருக்கும் மரத்தின்கண், பறவைக் கூட்டம் எழுப்பும் பேரொலிபோல, பண்ணன் அட்டிற் சாலையில் உணவு உண்பார் எழுப்பும் பேரொலியும், கேட்கத் தான் செய்கிறது. காலம் தப்பா மழை பெய்யும் காலத்தை எதிர்பார்த்திருந்து, தம்முட்டைகளைக் கல்வியவாறே மேட்டு நிலம் நோக்கி வரிசை வரிசையாகச் செல்லும் எறும்புக் கூட்டம்போல, பண்ணன் அட்டிற்சாலையில் பெற்ற சோறு நிறைந்த தட்டேந்திய கையினராய், இளம் சிறார்கள், தங்கள் உறவினரோடு வரிசை வரிசையாகச் செல்வதையும் பார்க்கத்தான் செய்கிறோம். அதனால் பண்ணன் இல்லம் அணித்தாகிவிட்டது என்பதையும் அறிந்துள்ளோம். இருந்தும், பசிக்கொடுமையால், மனம் விதுப்புற, எதிர்ப்படுவாரையெல்லாம் அணிதோ, பசி தீர்க்கும் மருத்துவனாம் பண்ணன் இல்லம், அண்மையில் உள்ளதா? இன்னமும் சேய்மைக்கண் உள்ளதா சொல்லுங்கள், சொல்லுங்கள்" எனக் கேட்கலாயினோம்"

"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!
பாணர்! காண்கு, இவன் கடும்பினது இடும்பை;
யாணர்ப் பழுமரம் புள் இமிழ்ந்தன்ன
ஊண் ஒலி அரவம் தானும் கேட்கும்;
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டைகொண்டு வன்புலம் சேரும்
சிறுநுண் எறும்பின் சில்ஒழுக்கு ஏய்ப்பச்
சோறுடைக் கையர், வீறு வீறு இயங்கும்
இருங்கிளைச் சிறாஅர்க் காண்கும்; கண்டும்
மற்றும் மற்றும் வினவுதும்; தெற்றெனப்

பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே".
—புறம் : 173)

பசிக்கொடுமையால் வருந்தி, அப்பசி தீர்க்கும் புரவலனைத் தேடி அலையும் ஓர் இரவலன் பாடியதாக அல்லாமல், வேறு வகையில் இப்பாட்டை மதிப்பது இயலவே இயலாது; ஆனால், புறநானூற்றுத் தொகுப்பாசிரியரால், அது, நாடாளும் ஓர் அரசனுக்கு உரியதாக ஆக்கப்பட்டுளது; இத்தொகை நூலில், இவைபோலும் பல கொளுக்களை, எளிதில் கண்டு கொள்ளலாம். ஆகவே, பாக்களுக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் கொளுக்கள் எல்லாம் நம்புதற்குரியனவாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டா எனக் கருதுகின்றேன்.

எனினும், இதற்கு நேர்மாறாக, பெரும்பாலான புலவர்கள், கொளுக்களில் கூறப்பட்டிருக்கும் செய்திகளை வேதவாக்கியங்களாக மதித்து, பாடிய புலவர்கள், பாட்டுடை அரசர்களின் சமகால நிகழ்ச்சிகளுக்கான திட்டங்களை வகுத்துவிட்டனர்; அவற்றில் குறிப்பிடப்பட்டிருக்கும் அரசர்களின் குடிவழிப் பட்டியல்களையும், அக்கால அரசியல் வரலாறுகளையும் வகுக்கும் முயற்சியினையும் மேற்கொண்டு விட்டனர். ஆனால் அத்தகைய திட்டங்களுள் எந்த ஒரு திட்டமும், பிறிதொரு திட்டத்தோடு ஒத்துப்போகவில்லை; திருவாளர் கனகசபை அவர்களாலும், பிறராலும், இக் கொளுக்களிலிருந்து பெற்ற செய்திகளிலிருந்து, உருவாக்கப் பட்ட, ஒன்றோடொன்று முரண்படும் ஒன்பது குடிவழிப் பட்டியல்கள், எந்த நிலையிலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய வாகக் கொள்ளப்படா. இவை அனைத்திற்கும் மேலாக, முடிந்த முடிபாக, அவ்வாறு கொள்வதற்குக் காரணம், அத்தகைய புனைர் அமைப்பின் விளைவாக, அரசர்கள், புலவர்களின், இருக்க முடியாத மிக நீண்ட பட்டியல், ஒரு குறுகிய கால கட்டத்துக்குள், அதற்கு முன்னரும் பின்னரும் இருளடைந்து கிடக்கத் திணிக்கப்படுகிறது.

மேலும், இக்கோளுக்கள் அளிக்கும் சான்று, இன்றைய இத்திறனாய்வாளர்களை, அப்பாக்கள்தாம் தம்மளவில் அளிக்கும் அகச்சான்றுகளுக்கு மாறாகப், பழந்தமிழ் இலக்கியத்தில், அழிந்ததுபோக எஞ்சியிருக்கும், பல்வேறு நூற்றாண்டிற்கு உரியவாக, அல்லது அரை நூற்றாண்டிற்கு உரியவாக, ஒதுக்கச் செய்துவிடுகிறது. இது: தமிழ் இலக்கியம், விரிவாக்க விதிமுறைகளுக்கு மாறாக, முன் வரலாறு ஏதும் இது, தமிழ் இலக்கியம், விரிவாக்க விதிமுறைகளுக்கு மாறாக, முன் வரலாறு ஏதும் இல்லாமலே, ஒரு காலகட்டத்தில், திடுமெனப் பேரொளிப் பிழம்பாக ஒளிவிட்டுப் பெருகி, அடுத்து, தமிழ்ப்பாக்கள், பல நூற்றாண்டுகளுக்கு ஊமையாகி வாயடைத்துப் போகச் செய்துவிடுகிறது ஆதலால், இது, வரலாற்றை முட்டாள் நிலைக்கு இறக்கிவிடுகிறது. மற்றவர்களோடு நானும் சேர்ந்து கொண்டு, இக்கொளுக்களிலிருந்து, நம்புதற்குரிய வரலாற்றினைத் துருவிக் காணும் முயற்சியில் பல ஆண்டுகளை வீணாக்கிவிட்ட பின்னர், அவை, மெய்ம்மை, பொய்ம்மைகளின், மரபுவழிச் செய்திகள்; கற்பனை யூகங்களின், சிக்கறுத்துக் காணலாகாக் கருத்துக் குழப்பம்; ஆகவே, அரசர்களின் குடிவழிப் பட்டியலை வகுப்பது பயனற்றவை என்ற முடிவிற்கு வந்தேன். முடிந்தவரை, இப்பாக்களிலிருந்து, சில அரசர்களின் வாழ்க்கை பற்றிய ஒருசில குறிப்புகளைக் கண்டு கொள்ளலாம்.

## நலங்கிள்ளி :

கரிகாலன் இறப்பிற்குப் பின்னர், அவன் கண்ட பேரரசு, இரு சிறு நாடுகளாகப் பிளவுண்டு போயின. ரேனாடு, தங்களைச் "சோடர்" (டகரம், தமிழ் ழகரத்திற்கு ஈடான தெலுங்கு எழுத்து ஆதலின்) என அழைத்துக் கொள்ளும் தெலுங்குச் சிற்றரசர்களால் ஆளப்படலாயிற்று. அவர்கள் ஆட்சிக் காலத்தில், தெலுங்கு, கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்பட்டு, மெல்ல மெல்ல எழுத்துருவ மொழியாகிவிட்டது; இல நூற்றாண்டுகளில், அது இலக்கிய மொழியாகவும்

ஆகிவிட்டது. சோழர் அரியணையில், பெரும்பாலும், கரிகாலனை அடுத்து அமர்ந்தோனாகிய நலங்கிள்ளி (இதற்கான அகச்சான்று இல்லை ஆயினும்), சேர, பாண்டியர்களிலும், தான் உயர்ந்தவனாம் என்ற நிலையினை நிலைநாட்டுவதற்காக, அவர்களோடு அடிக்கடிப் போர் மேற்கொள்ள வேண்டி நேர்ந்ததற்கேற்ப, அவ்விரு அரசு களும், தங்கள் ஆட்சியுரிமையை மீண்டும் பெற்றுவிட்டன. புலவர் கோவூர் கிழார் இவ்வாறு கூறுகிறார்:— "மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவற்றுள், பொருளும், இன்பமும், அறத்தைப் பின் தொடர்ந்து வருவதுபோல,

அடிக்குறிப்பு :

[இத்தொடர், ஆரியக் கருத்துக்கள், தமிழ்நாட்டில், நன்கு இடம்பெறத் தொடங்கிவிட்டன என்பதை உணர்த்து கிறது. வாழ்க்கையின் குறிக்கோள் பற்றிய ஆரியக் கருத்துக் களை உள்ளடக்கிய, உருவப் பொருள்களை, அருவப் பொருட்களோடு ஒப்பு காட்டும், இவைபோலும் உவமைகள், கரிகாலனுக்கு முற்பட்ட காலத்துத் தமிழ் இலக்கியங்களில் காண்பது இயலாது.]

சேர பாண்டியர்களுடைய இரு குடைகளும் பின்னாக, முன்னே உயர்த்திய உன் வெண் கொற்றக் குடை, கலைகளால் நிறைந்த வெண்திங்கள் போலச் சிறந்து, சேய் நாடுகளிலும் சென்று நிழல் செய்யவல்ல பெரும்புகழ்பால் வேட்கை கொண்டு. அதை முடித்துக் கொள்வான் வேண்டி, எப் போதும், வெல்லும் போர்க்கு வாய்ப்பாக. பாசறைக் கண்ணே இருப்பதல்லது, தலைநகரின் கண் இருத்தலை நீ விரும்பாய். காவல் மிக்க பகைவர் அரண்மதில்களை மோதி மோதி அழித்ததனால், முனை மழுங்கிய கொம்புகளை உடைய வாகிவிட்ட உன் போர்க்களிறுகளும் ஓய்வு கொள்ளா. போர் என்ற சொல் கேட்டதுமே பூரிக்கும் உள்ளம் உடையவராகிய, வீரக்கழல் அணிந்த உன் வீரர்கள், வென்று கைப்பற்றக் கருதிய நாடு, காடுகள் இடைப்பட்டுக் கிடக்க, நெடுந்

தொலைவில் உளதே, எவ்வாறு செல்வேம் எனக் கலங்குவது செய்யார்; இத்தகு படைநலம் உடைமையால், பகைப்புலம் தோறும் வெற்றித் திருவிழா மேற்கொண்டு சிறிதே இருந்து விட்டு, கீழ்க்கடல் பின்னிட்டுப் போக, உன் படையைச் சேர்ந்த குதிரைகளின், குளம்புகளை வெண்ணுரை தெறிக்க வீசும் மேற்குக் கடலின் அலைகள், அலைப்புறும் வண்ணும், நீ வெற்றித்திருவுலா மேற்கொள்வதும் செய்குவையே என்ற நினைவு அலைகள் அலைக்க, நெஞ்சு நடுநடுங்க, கண்ணுறக்கம் பெறமாட்டாது கிடப்பர், வடபுலத்து அரசர்களெல்லாம்"

"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறந்து வழிப்படூஉம் தோற்றம் போல,
இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை,
உருகெழு மதியின் நிவந்து சேண்விளங்க,
நல்லிசை வேட்டம் வேண்டி, வெல்போரிப்,
பாசறை அல்லது நீ ஒல்லாயே;
நுதிமுகம் மழுங்க மண்டிட ஒன்னாரி
கடிமதில் பாயும் நின் களிறு அடங்கலவே;
போர் எனில் புகலும் புனைகழல் மறவர்
காடிடைக் கிடந்த; நாடு நனிசேய,
செல்வேமல்லேம் என்னார்; கல்லென்
விழவுடை ஆங்கண், வேற்றுப் புலத்து இறுத்துக்
குணகடல் பின்னதாகக், குடகடல்
வெண்தலைப் புணரி நின்மான் குளம்பு அலைப்ப,
வலமுறை வருதலும் உண்டு என்று அலமந்து
நெஞ்சு நடுங்கு அவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வட புலத்து அரசே".

—புறம்: 31

இவ்வரிகளைப் படிப்பதில், நலங்கிள்ளி, தன் அரியணையை இழக்காமல் காத்துக் கொள்ளுதற்கு இடைவிடாது போரிட நேர்ந்தது என்பது பொருளாகிறது. இம்முடிவு சோழ

நாட்டில் உள்நாட்டுப் போர் குறித்துப் பேசும் பிற பாக்களால் உறுதி செய்யப்படுகிறது. நெடுங்கிள்ளி என்பான் ஒருவன், இவனால், உறையூரில் முற்றுகை இடப்பட்டுள்ளான் [புறம் : 45 முன்பே எடுத்தாளப்பட்டுளது). நலங்கிள்ளியின் தலைநகர் காவிரிப்பூம்பட்டினம் :

அடிக்குறிப்பு :

''கூம்பொடு
மீப்பாய்களையாது மிசைப்பரம் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெரும்கலம், தகாஅர்
இடைப்புலப் பெருவழி சொரியும்
கடல் பஃல் தாரத்த நாடுகிழவோயே''.

—புறம் : 30 : 10-14.]

கொளுவின் கூற்றுப்படி, இது நலங்கிள்ளி புகழ்பாடப் பாடப்பட்டுளது. கொளுவில் கூறப்படும் செய்திகள் மறுக்கப்படா நிலையில், அவற்றை ஏற்றுக் கொண்டுள்ளேன். நெடுங்கிள்ளி, உறையூர் அரியணையைக் கைப்பற்றிச் சோழ நாட்டின் உள் நாட்டுப் பகுதிகளைத், தன் ஆட்சிக் கீழ்க் கொண்டுவிட்டான். அதை மீட்டுக் கொள்ள நலங்கிள்ளி அவனோடு போரிட்டான்.

பிற அரசர்களைப் புகழ்ந்து பாடும் பாக்களிலும், நலங்கிள்ளியைப் புகழும் பாடல்கள், எண்ணிக்கையில் அதிகமாம்.

நலங்கிள்ளி வாழ்ந்திருந்த துன்பச் சூழல், இரவலர் உள்ளத்தில், பெருங்கவலையை வளர்ப்பதாய் இருந்தது. அத்தகைய புலவர்களில் ஒருவர் பாடிய பாட்டு ஒன்றில், பழம்பாடல்களில் காணக்கூடாத நிலையினைத் தெளிவுறக் கொண்டதான, நிலையாமைக்குறிப்பு, தமிழ்ப் பாட்டில் முதன்முதலாக, இடம் பெற்றுளது. உறையூர் முதுகண்ணனார், அவனுக்காக, இவ்வாறு பாடியுள்ளார். "சேற்றில் வளரும் தாமரைக் கொடியில் மலர்ந்த, சிறந்த நிறம் காட்டும் நூறு இதழ்களைக் கொண்ட மலர்க்காட்டைக்

கண்டாற்போலும், ஏற்றத் தாழ்வில்லாச் சிறந்த குடியில் பிறந்து பெருக வாழ்ந்திருக்கும் வேந்தர் பலரே ஆயினும், அவர்களின் பண்பு நலங்களை எண்ணிப் பார்க்குங்கால் பாக்களாலும், பாநிகர் உரைகளாலும் பாராட்டப் பெற்றவர், ஒருசிலரே ஆவர்; அத்தாமரையின் இலைகளைப் போல, எதற்கும் பயன்படாது, மாய்ந்து மறைந்துபோனவரே மிகப் பலராவர்; புலவரால் பாராட்டப்பெறும் புகழ் உடையார், பாகனால் செலுத்தப்படாது, தானே இயங்கவல்ல வானவூர்தி ஏறி வானுறையும் தெய்வமாகிவிடுவர் எனக் கூறக்கேட்டுளேன் யான். சேட்சென்னி! நலங்கிள்ளி! எம் இறைவா! வளர்ந்த ஒன்று, பின் குறைந்துபோதலும், குறைந்த ஒன்று பின் வளர்ந்து நிற்றலும், பிறந்த ஒன்று பின் இறந்துபோதலும், இறந்த ஒன்று, பின் பிறந்து உளவாதலும் உலகியல் என்பதைக், கற்றுணராக் கல்லாதார்க்கும், கண்ணெதிரில் காட்டித் தெளிவிப்பான் வேண்டித், தேய்வதும் வளர்வதுமாகித், திங்கள் உலாவரும் இவ்வுலகில், நின்பால் பரிசில் வேண்டி வருவாரின் பரிசில் பெறும் தகுதி, தகுதியின்மைகளை ஆராய்வது விடுத்து, வறுமைக் கொடுமையால், உண்ணுவது ஒழிந்து வாடிக் கிடக்கும் அவர் வயிற்றினை மட்டுமே பார்த்து, அவர்க்கு வாரி வழங்கும் வள்ளண்மை உடையை ஆகுக! நீ! அழிக்கலாகா ஆற்றல் வாய்ந்த உன்னொடு, பகைகொண்டு கிடப்பார், அத்தகு அருள் உள்ளம் இன்மையால், வருவார்க்கு வழங்கமாட்டா வன்கணாளர் ஆகுக"

"சேற்று வளர் தாமரை பயந்த, ஒண்கேழ்
நூற்றிதழ் அலரின் நிரை கண்டன்ன,
வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந்தோரை எண்ணுங்காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே,
மரைஇலை போல மாய்ந்திசினோர் பலரே;
புலவர் பாடும் புகழ்உடையோர், விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி

எய்துப என்ப, தம் செய்வினை முடித்து' எனக்
கேட்பல் ; எந்தை ! சேட்சென்னி ! நலங்கிள்ளி !
தேய்தல் உண்மையும், பெருகல் உண்மையும்,
மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்,
அறியாதோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து,
வல்லார் ஆயினும், வல்லுநர் ஆயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருளவல்லை ஆகுமதி! அருளிலர்,
கொடாமை வல்லுநர் ஆகுக!
கெடாத துப்பின் நின் பகை எதிர்ந்தோரே''.

—புறம் : 27

குளமுற்றத்துத் துஞ்சிய சோழன் :

கிள்ளிவளவன் என்ற பெயருடைய மற்றொரு சோழன், சோழச் சிற்றரசர்கள் எனும் பொருளுடையவாய கிள்ளி, மற்றும் வளவன் என்ற பெயர்களால் அழைக்கப்படுவார்களைக் காட்டிலும், மிகுதியான பாக்களாலும், மிகுதியான புலவர்களாலும் பாராட்டப் பெற்றுள்ளான். இவன், இறப்பிற்குப் பின்னர், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்ற சிறப்புப் பெயரிட்டு அழைக்கப்பட்டுள்ளான். புறநானூற்றுக் கொளுக்களின்படி, இவன், தன்பெருமை குறித்துப் பாக்கள் புனைந்த பத்துப் புலவர்களைப் புரந்தவனாவன். இவன் புலவர்களைப் பேணும் பெருஞ்செயலைவேறு புலவர்களும் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளனர். சேரர் தலைநகராம் வஞ்சியை முற்றியிருந்த இவன் செயல், இரு பாக்களில் பாடப்பெற்றுளது ஆதலின், ஒரு சேர அரசனோடு, இவன் பகைகொண்டிருந்தான் எனத் தெரிகிறது. “பகைவரை அழிப்பை ஆயினும், அழிக்காது பிழைத்துப் போக விடுவை யாயினும், அதனால் உனக்கு வரும் பயனை, நான் சொல்லத் தேவையில்லை; அதை நீயே, அளந்து அறிந்து கொள்வை;

உள்ளிடுபரல்கள், மிகவும் செறிக்கப்பட்ட காற்சிலம்பினையும், நீண்ட கோல்தொழில் அமைய செய்யப்பட்ட, குறுகிய கைவளைகளையும் உடைய இளம் மகளிர், மணல் மேட்டில் அமர்ந்து, பொன்னால் செய்யப்பட்ட காய்களைக் கொண்டு கழங்காடி மகிழும் அத்துணை அணித்தாக ஓடும் ஆன்பொருநை ஆற்றின் வெண்மணல் சிதறுமாறு, உரம் வாய்ந்த கரங்களையுடைய கொல்லன், வடித்து, அரம் கொண்டு கூர்மைசெய்து கொடுத்த, நெடிய காம்பு செருகப் பட்ட கோடாலி வெட்டுதலால், மணம் நாறும் மலர்க் கொத்துக்களைக் கொண்ட காவற்காட்டு மரங்கள், அடியற்று விழ, வெட்டும் ஓசை, தன்னுடைய பேரூர் வீதிகளிலும், நெடிய மதில் சூழ்ந்த காவல் மிக்க தன் அரண்மனையகத்தும் சென்று ஒலிக்கவும், அது கேட்டும், வந்து எதிர்க்கும் எண்ணம் இல்லாமல், இனிதே இருக்கும் அந்த அரசனோடு, வானவில் போலும் வண்ணமலர்மாலை அணிந்து கொண்டு, போர் முரசு முழங்கப் போரிடுகின்றனை என்பது நினக்குப் புகழினைத் தாராது, நாணித்தலை குனியத்தக்கது நின் செயல்; ஆகவே, அது கைவிடுக''.

''அடுநை ஆயினும், விடுநை ஆயினும்,
நீ அளந்து அறிதி; நின் புரைமை; வார்கோல்,
செறிஅரிச்சிலம்பின், குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கின் தெற்றி ஆடும்
தண் ஆன்பொருநை வெண்மணல் சிதையக்,
கருங்கைக் கொல்லன் அரம் செய் அவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலின் நிலை அழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக், காவு தொறும்
அடிமரம் தடியும் ஓசை, தன் ஊர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப,
ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு, ஈங்கு, நின்
சிலைத்தார், முரசம் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தகவு உடைத்தே
—புறம் : 36

மாறோக்கத்து நப்பசலையார் (கொற்கையை அடுத்த சிற்றூராம் மாறோக்கத்தைச் சேர்ந்த, பசலை படர்ந்த நெற்றியினளான ஒரு பெண்) என்ற பெண்பாற்புலவர், கிள்ளிவளவனுக்கும், அவன் காலச் சேர அரசனுக்கும் இடையில் நிலவும் அந்த பகைமை குறித்து, இவ்வாறு பாடியுள்ளார். "தன்பால் அடைக்கலம் புகுந்த ஒரு புறாவின் துயரைத் தீர்ப்பான் வேண்டிப், பகைவிலங்குகளை அழித்துக் கறைபடிந்த கால்களையுடைய யானையின் வெள்ளிய தந்தத்தைக் கடைந்து செய்த நிறைகோல் துலாத்துத் துலைத்தட்டில் அமர்ந்து தன்னையே தந்த சோழன் மரபில் வந்தவன் நீ; ஆதலின் வறியோர்க்கு வழங்குதல் உனக்கு இயல்பாய் அமைந்த ஒன்றேயல்லது, உனக்கே உரிய தனிச்சிறப்பு உடையதன்று; அசுரர்க்குப் பகைவராகிய தேவர்களால் அணுகவும் மாட்டாத் திண்ணிதாய் வானத்தில் உலாவந்திருந்த கோட்டையை அழித்து ஒழித்த உன் முன்னோன் ஒருவனின் புகழ்ப் பெருமையை நோக்கின், ஈண்டுள்ள பகைவரை அழித்தல், புகழ் சேர்ப்பதாகாது; அழிக்கலாகா மறம் செறிந்த சோழர் தலைநகராம் உறையூரில் உள்ள அறங்கூர் அவையில், அறம், என்றும் நின்று நிலைபெறுமாதலின், முறைகோடாது ஆட்சி புரிதலும் உனக்குப் புகழ் தருவதாகாது. ஆகவே, வீரம் செறிந்த பல போர்க்களங்களில் வெற்றி கண்டு, கணைய மரம் எனத் திரண்ட தோள்களையும், அழகிய தலைமாலையினையும் போர்ச் செருக்கு மிக்க குதிரையினையும் உடைய வளவ! அளந்து காணலாகா உயரமும் பொன்வளமும் பொருந்திய, நெடிய முடிகளைக் கொண்ட இமயத்து உச்சியில், நாட்டப்பட்ட விற்கொடியினையும், பல்லாற்றானும் மாண்புற்ற தேரினையும் உடைய சேரன் அழிந்துபோக, அழிதல் அறியா அவன் தலைநகராம் கருவூரை அழிக்கும், உன் பெருமைமிகு வீரத்தாள்களை எவ்வாறு பாட வல்லேன்!"

"புறவின் அல்லல் சொல்லிய, கறையடி,
யானை வான் மருப்பு எறிந்த வெண்கடைக்

கோல் நிறைதுலாஅம் புக்கோன் மருக!
ஈதல், நின் புகழும் அன்றே; சார்தல்
ஒன்னார் உட்கும் துன்னருங் கடுந்திறல்
தூங்கெயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்,
அடுதல், நின் புகழும் அன்றே; கெடுவின்று
மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறம் நின்று நிலையிற்று ஆகலின், அதனால்,
முறைமை நின் புகழும் அன்றே; மறம்மிக்கு
எழுசமம் கடந்த எழுவு உறழ் திணி தோள்
கண்ணார் கண்ணிக், கலிமான் வளவ!
யாங்கனம் மொழிகோ! யானே, ஓங்கிய
வரை அளந்தறியாப் பொன்படு நெடுங்கோட்டு
இமயம் சூட்டிய ஏம விற்பொறி,
மாண்வினை நெடுந்தேர் வானவன் தொலைய
வாடா வஞ்சி வாட்டும் நின்
பீடுகெழு நோன்தாள் பாடுங்காலே? —புறம் : 39

அடிக்குறிப்பு :

(''வஞ்சி'' என்ற சொல், நகர் ஒன்றின் பெயராகவும், மலர் ஒன்றின் பெயராகவும் வழங்கப்படும் ஆதலின், மலர் வாட, நகர் வாடாது ஆதலின், நகரைக் குறிக்க ''வாடாவஞ்சி'' எனக் குறிப்பிடப்பட்டுளது. இத்தகு இலேடைச் சொல்லாட்சி, பழந்தமிழ்ப் பாக்களில் பலவாம்)

கரிகாலன் இளையோனாக இருந்தும், தீர்த்தற்கரிய ஒரு வழக்கை, நன்கு தீர்த்துவைத்த அந்நாள் தொட்டே, உறையூர், அறங்கூர் அவையால், நாடறியப் புகழ்பெற்றுத் திகழ்ந்தது. (அதிகாரம் 20: ''கரிகாலன் இளமை'' என்ற தலைப்பு காண்க) அதுபோலவே மதுரை, தமிழ்க் கல்வியால் சிறப்புற்றுத் திகழ்ந்தது. புறம் : 58, அறம் நின்று நிலைபெறும்

உறையூரையும், "அறந்துஞ்சு உறந்தை" (வரி ; 9) தமிழுக்கு உரிய மதுரையையும், "தமிழ்கெழு கூடல்" (வரி : 13) குறிப்பிடுகிறது.

கடைசியாக எடுத்துக் காட்டிய செய்யுற்கண், சோழர் முன்னோர் குறித்த இருபழங்கதைகள், முதன்முதலாக இடம் பெற்றிருப்பது காணப்படுகிறது. அவற்றுள் ஒரு பழங்கதை, அசுரர், சிலர் வானத்தில் தொங்கிக்கொண்டிருந்த கோட்டையில் வாழ்ந்திருந்தவாறே தேவர்களை அழித்து வந்தனர். பழைய சோழ அரசன் ஒருவன், அக்கோட்டையை அழித்து அதன் மூலம், ஏழைத் தேவர்களின் துயர் துடைத்தான் என்பது. சோழர்களைப் பற்றிய இக்கதை மட்டும் அல்லாமல், பாண்டியர்களைப் பற்றிய இதுபோலும் கதைகளும், அக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டு, தமிழர் உள்ளத்தை ஆரியமயமாக்கத் துணைபுரிந்தன. மற்றொரு பழங்கதை, சோழர் குல முன்னோர்களில் ஒருவன் சிபி என்பவனாம். புறா ஒன்று, தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டிக் கொண்டதனால், தன் தொடையிலிருந்து, ஒரு துண்டு தசையை வெட்டி எடுத்துப் புறாவைத் துரத்தி வந்த பருந்துக்குக் கொடுத்த சிவியின் கதை நன்கு தெரிந்த ஒன்— சிவி வழி மரபினைச், சோழ அரசர்க்கு உரித்தாக்குத புறம் : 37ல், நப்பசலையாராலும், புறம் ; 46ல் கோ கிழாராலும், இடம் பெற்றுளது.

"புள்ளுறு புன்கண் தீர்த்த வெள்வேல்
சினங்கெழு தானைச் செம்பியன் மருக!"

(பறவை ஒன்றின் துயர் தீர்த்த, வெள்ளிய வேல் ஏந்
சினம் மிக்க பெரும்படைக்கு உரிய, சோழன் வழி
வந்தவனே —புறம் : 37 ; 5-6.)

"நீயே, புறவின் அல்லல் அன்றியும், பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை"
புறாவின் துயர் தீர்த்தோன் வழியில் வந்தவனே

(பெரும்பாணாற்றுப்படையில், அப்பாட்டுடைத் தலைவனான சோழன், விஷ்ணுவின் வழிவந்தவனாகவே அழைக்கப்பட்டுள்ளான் என்பது நினைவு கூறற்கு உரியது. அதிகாரம் : 21 காண்க)

நலங்கிள்ளி எனக்கூறப்படும், சிறந்த தேர் வீரனாகிய திருவில் தேர் வண்கிள்ளி என்பானின் தம்பியை நோக்கிக் கூறுவதான புறம் : 43 லும் இது கூறப்பட்டுளது.

''கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் பருந்தின் ஏறுகுறித்து ஒரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி அஞ்சிச், சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக!''

—புறம் : 43 : 4-8.

(வளைந்த சிறகுகளையும், கூரிய உகிரினையும் உடைய பருந்தின் தாக்குதலுக்குத் தப்பித் தன்னிடம் அடைக்கலம் புகுந்த, தத்தித் தத்தி நடக்கும் புறாவின் அழிவிற்கு அஞ்சித், தன் அழிவிற்கு அஞ்சாது, துலாத் தட்டில் புகுந்த, வரையாது வழங்கும் வள்ளலாம் வண்மையோன் வழியில் வந்தவனே!)

பிற்காலத்தில், சோழர்கள், சூரிய மரபிற்கு உரியவராகக் கூறப்பட்டுள்ளனர். இதற்கான குறிப்பு எதையும், புறநானூற்றில் என்னால் காண இயலவில்லை. ஆனால், அவர்கள் சிபியின் மரபில் வந்தவர்களாயின், அவர்கள், திங்கள் மரபில் வந்தவராதல் வேண்டும்; காரணம், உஷிநரனின் மகனான சிபி, திங்கள் மரபைச் சேர்ந்த யயாதியின் குடிவழியில் வந்தவனாதலின், மிக்க பாராட்டிற்குரிய இராமாயண காப்பியத்தை இயற்றிய கம்பரும், இம் முரண்பாட்டினை உணர்ந்ததாகத் தெரியவில்லை; காரணம், சிபியை, சூரிய மரபினனான ராமனின் முன்னோனாகத்

துணிந்து கொண்டுள்ளார். பத்ம புராணம், இம்மூன்று தமிழரசர் குலங்களையும் சூரிய வம்சத்துத் துர்வாசு வழியில் வந்தவராகக் கொள்கிறது. (Padma Puranam VI 250 : 1-2. referred to by Pargiter. Anc. Ind. History Trad. Page ; 108) தமிழர்களுக்கு, ஆரியத் தகுதிப் பாட்டினைக் கற்பித்துக் கொண்டவர்கள், புராணங்கள் பற்றித் தெளிவான அறிவிற்கு மாறாகக், குறைந்த அறிவினையே பெற்றுள்ளனர், பெண்பாற்புலவர், சிபியைச் சோழர்குலச் சிற்றரசன் எனத் துணிந்து கொண்டுள்ளார்.

கரிகாலன், எத்துணைப் பாவலர்ப் பெரும்புரவலனோ, அத்துணைப் பெரும் புலவனாகக் காணப்படுகிறான் கிள்ளிவளவன். அவன் புகழ்பாடிய புலவர், "தேன்போலும் இனிய ஒலி எழுப்பும் நரம்பு தொகுக்கப் பெற்ற சிறிய யாழுக்கு உரியபாண! குளத்து வாழ் யாமையைப், பற்றுக் கோலில் கோத்து எடுத்தாற்போல, நுண்ணிய கோலில் பிணிக்கப்பட்ட, தெளிந்த ஓசை எழுப்பும் கண்ணுடைய, பெரிய உடுக்கையின் ஓசை இனிதாக எழுவது காண்க; இவ்விடத்தே சிறிது இளைப்பாறிச் செல்வேமாக என்றெல்லாம் பலப்பல கூறிக் கேள்விமேல் கேள்விமேல் கேள்வியாகக் கேட்டு நிற்கும், மூத்த, வாய்மையில் வழுவாவ் இரவலனே! நான் கூறுவது கேட்பாயாக! தைத்திங்களித தண்ணெனக் குளிர்ந்திருக்கும் குளத்து நீர் போலக், கொள்ளக் கொள்ளக் குறைதல் அறியாத பெருஞ்சோற்று மலையையுடைய பெரியநகரத்தில், சோறு ஆக்கும் நெருப் பல்லது, பகைவர் மூட்டிய நெருப்பினைக் காண்பது இயலாவாறு சோற்றையும், உண்ணீரையும் விளைவிக்கும் அத்தகு நாட்டின் வேந்தனாம் கிள்ளிவளவன் நல்ல புகழை நினைந்து செல்வீராக!"

"தேஎம் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண!
கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன,
நுண்கோல் தகைத்த தெண்கண் மாக்கிணை,
இனிய காண்கு இவண் தணிகெனக் கூறி

விளைவல் ஆனா முதுவாய் இரவல!
தைஇத் திங்கள் தண்கயம் போலக்
கொளக் கொளக் குறைபடாக் கூழுடை வியன் நகர்
அடு தீ அல்லது சுடுதீ அறியா
திருமருந்து விளைக்கும், நன்னாட்டுப் பொருநன்
கிள்ளி வளவன் நல்லிசை உள்ளி'' —புறம் : 70:1-10

இப்பாட்டின் இறுதியில் ஆளப்பட்டிருக்கும் உவமை, சிறப்பினைக் குறிப்பிடத்தக்கது, என்னால் காண முடிந்த அளவில் மாதங்களின் ஆரிய முறையிலான வரிசைப்பாடும், அவற்றின் சமஸ்கிருதப் பெயர்களும், தமிழர்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டதற்கான, மிகப் பழைய குறிப்பு, இதுதான். நற்றிணையில், பெரும்பாலும், இறைவழிபாட்டுக் கடனாகத், தைத்திங்களில், குளிர் நீர்க்குளத்தில் நீராடும் மகளிர் பற்றிய குறிப்பு ஒன்று உளது. (''தைஇத் திங்கள் தண்கயம் படியும்''—நற்றிணை : 80 : 7) குறுந்தொகை, தைத்திங்களின் குளிர் போலும், குளிர்ந்த சுனைநீர் பற்றிப் பேசுகிறது: (''சுனைத் தெண்ணீர், தைஇத் திங்கள் தண்ணிய'' —குறுந்தொகை : 194 : 3 — 4) இது போலும், தொடர் இடம் பெறும் பாக்கள், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டை விடப் பழைய காலத்தைச் சேர்ந்தனவாகா. புறநானூற்றுத்தொகை நூலில், பெரும்பாலும் பிற்பட்ட பாக்களில் ஒன்று ஆன, சேரமான், யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பானைப் பாராட்டும் புறம் : 229, ஒரு விண் வீழ்கொள்ளி வீழும் அந்நாளன்று, ஞாயிறு திங்கள் போலும் கோள்களும், அசுவனி, பரனி போலும் விண்மீன்களும் இடங்கொண்டிருந்த நிலைகளைத் தெரிவிக்கிறது. அச்செய்தி, அவ்வுற்பாதம் எப்போது இடம் பெற்றது என்பதை நாம் கண்டு கொள்ள, நமக்குப் போதுமானவையோ, அத்துணைத் தெளிவுடையவையோ அல்ல: ஆனால், அந்த அரசன், நாம் ஆய்ந்து கொண்டிருக்கும் பிற்காலத்தைச் சேர்ந்தவருள் ஒருவன் என்பதைக் கொண்டு காணின், அது: கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்னர் ஆதல் இயலாது.

கிள்ளிவளவன் புகழ்பாடும் பாட்டு ஒன்றில், அரசர்களிடையேயான ஓர் அரிய வழக்கம் குறிப்பிடப்பட்டுளது; பழைய தமிழரசர்கள். பகைவர்களை வெற்றிகொண்டபோது அப்பகைவரிடம் கொள்ளும் ஏனைய பொருள்களோடு, அவர்களின் முடிகளையும் கைக்கொண்டு, பகைவர்களின் அம்முடிகளை அழித்துக் கொண்ட பசும் பொன்லால், வீரக்கழல் பண்ணித் தம்கால்களில் அணிந்துகொள்வர். அரசர்களின், வெற்றிப் பெருமிதத்திற்கும், பகைவர்களின் தோல்விப் பேரிழிவிற்கும், இதுவே தமிழர் இலக்கணமாம். புலவர் ஒருவர் இவ்வாறு பாடியுள்ளார். ''பகைவர் பாதுகாத்து வந்த, வீரம் செறிந்த அழிக்கலாகா அரண்களை அழிக்காது விடுத்துப் பேணிக்காப்பது செய்யாது, எதிர் சென்று அழித்து, அரணகத்தாரைக் கொன்று, அவர்தம் மகுடங்களை ஆக்க உதவிய பசும்பொன்னால், வீரக்கழல் செய்து, உன் கால்கள், பொலிவுபெறப் புனைந்து கொண்ட பேராண்மையாளன் நீ''.

''நீயே, பிறர் ஓம்புறு மறமன் எயில்
ஓம்பாது. கடந்து, அட்டு, அவர்
முடிபுனைந்த பசும்பொன்னின்
அடிபொலியக் கழல் தைஇய
வல்லாளனை; வயவேந்தே!''

—புறம் : 40 : 1 - 5

சோழன், தன் பகைவனுக்குத் தேர்ந்து வழங்கிய நாகரிக நெறியல்லா நனிமிகக் கொடிய தண்டனை, அவன் அரணைத் தரைமட்டமாக அழித்ததும், தன் பகைவனாம் சேரனுக்கு உரிய தலைநகரை, நண்பகல் போதிலேயே தீயிட்டு அழித்ததும்; ஆம்;

''குட்டுவன்
அகப்பா அழிய நூறிச், செம்பியன்
பகல் தீ வேட்ட ஞாட்பு''

—நற்றிணை : 14 : 3 - 5

பண்டை நாட்களில் இருந்ததுபோல், போர், ஒருவீர விளையாட்டாக, இல்லாமல், கொடிய காட்டுமிராண்டிச் செயலாகி விட்டது. பிற்காலத்தைச் சேர்ந்த மற்றொரு சேர அரசனாம், தொண்டித் தலைவன் இரும்பொறை என்பான், மூவன் என்பான் ஒருவனை வெற்றி கொண்டு, அவனுடைய, முள்போல் கூரிய, வலிய பற்களைப் பிடுங்கி, அவற்றைத் தன் கோட்டை வாயிற் கதவில் பதித்து வைத்தான்.

> "மூவன்
> முழுவலி முள்ளெயிறு அழுத்திய கதவின்
> கானலம் தொண்டிப் பொருநன்".
>
> —நற்றிணை : 18 : 2 - 4

அடிக்குறிப்பு :

கிள்ளி வளவன் புகழ்பாடிய புலவர்களுள், இருவர், நலங்கிள்ளியையும் பாடிய கோவூர்கிழாரும், ஆலத்தூர் கிழாருமாவர். 'கிழார்' என்பதன் பொருள், ஒன்றை உரிமையாகக் கொண்டவர், அல்லது ஒன்றிற்கு உரிமை உடையவர் என்பது பொருளாம். ஆகவே, புலவர்கள், ஆலத்தூர் கிழார் அல்லது கோவூர் கிழார் எனப் பெயரிடப் படக்காணின், அச்சொற்களை, முறையே, ஆலத்தூர்ப்புலவர் அல்லது கோவூர்ப் புலவர் என்பதாகப் பொருள் கொள்ளுதல் வேண்டும். இத்தொகை நூல்களில் இடம் பெற்றிருக்கும் பாக்களைப் பாடிய பல புலவர்கள், இயற்பெயர் உடையராகார்; ஊர்ப் பெயரினாலேயே பெயரிடப் பட்டுள்ளனர்; ஆரியக்கடவுள் பெயர்களை மக்களுக்குச் சூட்டும் வழக்கம் நடைமுறைக்கு வந்த கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னர், இயற்பெயர்கள் அருகி இடம் பெற்றதாகவே தெரிகிறது. அக்காலத்திற்கு முன்னர் எப்பெயர் சூட்டப்பட்டிருந்தாலும், அவை, "இரும்பிடர்த் தலையார்" என்பது போலச் சிறப்பு குறித்து இடப்பட்ட பெயராகவும், 'மாங்குடி கிழார்' என்பது போல, ஊர்ப்பெயராகவும், 'இளநாகனார்' என்பதுபோலச்,

சிறப்பு அடை அடுத்த சாதிப் பெயராகவுமே இருக்கும்; அரசர்கள் பெயர்களிலும் இதுவே நிலையாம். இன்றும், சிற்றூர்களில், மக்கள் இயற்பெயர் உடையராயினும், பழங்கால வழக்கமாம், சிறப்பும் பெயரிட்டு அழைக்கப் பெறுதல் பெருவழக்காம். ஆகவே, இவ்விரு சோழர்களும், ஒருவர்பின் ஒருவராகவோ, அல்லது, ஒரே காலத்தில் வேறு வேறு பகுதிகளில் ஆட்சிபுரிந்த நெருங்கிய உறவினராவர்; பெரும்பாலும், உடன் பிறந்தவராவர். ஆனால், அவர்கள் உறவு முறைகுறித்த எவ்விதக் குறிப்பும், பாக்களில் இடம் பெறவில்லை.

சிலப்பதிகாரம், சேரவேந்தன் செங்குட்டுவனின் மைத்துனனாகிய வளவன் கிள்ளி என்பான் ஒருவனைக் குறிப்பிட்டு, அவ்வளவன் கிள்ளியின் பகைவர்களாகிய சோழ இளவரசர்கள் ஒன்பதின்மரைச், செங்குட்டுவன் ஒரே நாளில் வெற்றி கொண்டான் எனக் கூறுகிறது.

> ''ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை
> நேரிவாயில் நிலச்செரு வென்று'';
>
> —சிலம்பு: 28; 116 -

(நேரிவாயில் போர்க்களத்தில், ஆத்திப்பூ மாலை அணி ஒன்பது சோழ இளவரசர்களை வென்று).

> ''மைத்துனவளவன் கிள்ளியொடு பொருந்தா
> ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்,
> இளவரசுபொறாஅர், ஏவல் கேளார்
> வள நாடழிக்கும் பண்பினராதலின்
> ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்தவன்'',
>
> — சிலம்பு: 28: 118 - 1

''தன மைத்துனன் வளவன் கிள்ளியொடு ஒத்துவர அவன் பெற்ற இளவரசு உரிமையை ஏற்றுக் கொள்ளமறு அது காரணமாக, நாட்டுவளம் அழித்த ஒன்பது சிற்ற

களின் ஒன்பது குடைகளையும், ஒருநாள் போரில் அழித்த செங்குட்டுவன்.

இவ்வளவன் கிள்ளி, இன்றைய எழுத்தாளர் சிலரால், கிள்ளிவளவனாகக் கொள்ளப்பட்டுள்ளான். மேலே எடுத்துக் காட்டிய பாக்கள் உறுதி செய்வதுபோல, கிள்ளிவளவன் மிகப் பெரிய போர்வீரன், சேரர் தலைநகரை, ஒரேபகலில் அழித்துத் தரைமட்டம் ஆக்குமளவு அச்சேரரோடு கொடும்பகை உடையவன் என்பதைக் கண்டிருந்தும், அவன், சேரன் செங்குட்டுவனின் துணை நாடினான், அல்லது பெற்றான் என்பதை நம்புவது நம்மால் இயலாது. கிள்ளி, வளவன் என்ற இருசொற்களும், வறிதே, சேர அரசர்கள் என்று மட்டுமே பொருள்பட்டு, சோழ நாட்டின் எந்த அரசனைக் குறிக்கவும் வழங்கப்பெறும். ஆகவேதான், நாம் ஆய்ந்து கொண்டிருக்கும் அக்குறிப்பிட்ட சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என அழைக்கப் பட்டுள்ளான்.

செங்குட்டுவன் படைத்துணையை வேண்டிப் பெற்றவன், இளவரசனே அல்லது, ஆட்சியில் இருக்கும் பேரரசன் அல்ல; ஆகவே, நெடுமுடிக்கிள்ளி, ஒரு பட்டத்து இளவரசன் அல்லன் ஆகவே, திருவாளர், கிருஷ்ணசாமி அய்யங்கார் கொண்டது போல, இந்தச் சோழனை, நெடுமுடிக் கிள்ளியாகக் கொள்வது தவறு.

Manimekalai in its Historical setting என்ற நூலின் ஆசிரியர், பக்கம் 35-ல் நெடுமுடிக்கிள்ளி, என்பானைக், செங்குட்டுவனின் சமகாலச் சோழனாகக் கொண்டுள்ளார். இது, செங்குட்டுவனின் சம காலத்தவன், சோழன் பெருநற் கிள்ளி எனக் கூறும் சிலப்பதிகார உரை பெற கட்டுரைக் கூற்றுக்கும், அவன், இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி யாவன் எனக் கூறும், உரைபெறு கட்டுரையின் இப்பகுதிக்கான அடியார்க்கு நல்லார் உரைக் கூற்றுக்கும் முரண்பாடாக உளது. திருவாளர் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள்,

மரபு வழிச்செய்திக்கு மதிப்பளிப்பவராய் இருந்தும்; உரைபெருகட்டுரையும், அதற்கான அடியார்க்கு நல்லார் உரையும், தெளிவாக உணர்த்தும் செய்திகளைக் காட்டிலும், சிலப்பதிகாரமும், மணிமேகலையும் சம காலத்தவை என்ற தன் கொள்கைக்கே, முதலிடம் தருகிறார்.

மணிமேகலை அழகுக்கு அடிமைப்பட்டு, அதனாலேயே உயிரிழந்துபோன சோழஇளவரசன் உதயகுமாரனின் தந்தை யாவன், இக்கிள்ளிவளவன் எனக் கூறுவதன் மூலம், மிகப்பெரிய தவறு செய்கிறார், திரு. கனகசபை அவர்கள். (1800 ஆண்டுகளுக்கு முந்திய தமிழர் : பக்கம் : 77) மணிமேகலை, முழுக்க முழுக்க, ஒரு கட்டற்றக் கற்பனைக் கதை. வரலாற்று மூலமாகக் கொள்வதற்கு அறவே தகுதி அற்றது: அதில், நாகபுரத்தைச் சேர்ந்த புண்ணியராசன் என்பான், கிள்ளிவளவன் நட்பைப் பெறுவான் வேண்டி, ஒருமுறை, கலம் ஏறிக் காவிரிப்பூம்பட்டினம் சென்றிருந்தபோது, ஆங்கு, மணிமேகலைக்கு ஒப்பார், நாவலந்தீவாம் இப்பேருலகில் ஒருவரும் இலர் எனக் கூறக்கேட்டதாகவும் கூறுகிறான்.

> "நாவலந் தீவில் இந்நங்கையை ஒப்பார்
> யாவரும் இல்லை; இவள் திறம் எல்லாம்
> கிள்ளிவளவனொடு கெழுதகை வேண்டிக்
> கள்ளவிழ் தாரோய் கலத்தொடும் போகிக்
> காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்":
>
> —மணிமேகலை: 25 : 12 - 16

இந்தப் பகுதியிலிருந்தே, திரு. கனகசபைப் பிள்ளை அவர்கள், நாம் ஆய்ந்து கொண்டிருக்கும் கிள்ளிவளவன், மணிமேகலை காலத்துப் புகார்க் காவலன் ஆவன் எனக் கொண்டுள்ளார்; கிள்ளி, வளவன், என்ற சோழ இளவரசர் எனும் பொருள் உடைய மேலும், புறநானூறு பாராட்டும் கிள்ளிவளவன் உரையூர் அரசனே அல்லது புகார் அரசன் அல்லன் ஆதலின்;

மணிமேகலை கூறும் கிள்ளிவளவனுக்கும், புறம் பாராட்டும் கிள்ளிவளவனுக்கும் எவ்விதஉறவும் இல்லை.

இக்காலந் தமிழ்ப்புலவர்களின் பாக்களில், ஆரியக் கருத்துக்கள், மிகப் பெருமளவில் இடம் பெற்றிருக்கவேண்டும் என எதிர்பார்க்க வேண்டியதே; ஆலத்தூர் கிழார், பார்ப்பனர்க்குக் கொடுமை செய்வதால் உளவாகும் பாவம் குறித்துப் பேசுகிறார்; தர்ம சாஸ்திர ஆணைகளைக் குறிப்பிடுகிறார்.

"பார்ப்பார்த் தப்பிய கொடுமை", "அறம் பாடிற்று",

—புறம்: 34; 3-7

இக்கிள்ளிவளவன் காலத்தில், ஆரியக் கருத்துக்கள் பரவியது மட்டுமல்லாமல், அவன்தானும் எரிக்கப்படாமல் புதைக்கப்பட்டுள்ளான். அவன் இறப்பு, புலவர் மூவரால் வருந்திப் பாடப்பட்டுளது. அவர்களுள் ஒருவர், அம்மன்னன் அடக்கம் செய்யப்படவேண்டிய தாழியைச் செய்து தரவேண்டிய குயவனை விளித்து, மன்னனை அடக்கம் செய்வதற்கு வேண்டும் மிகப் பெரிய தாழி பண்ணவேண்டின், இப்பேருலகையே திகிரியாகக் கொண்டு, பெருமலையையே, (உரையாசிரியர் மேருமலை எனப் பொருள் கொண்டுள்ளார்) மண்ணாகக் கொள்வாயாக எனக் கூறியுள்ளார்.

"அன்னோன் கவிக்கும் கண்ணகன் தாழி
வனைதல் வேட்டனையாயின், எனையதூஉம்
இருநிலம் திகிரியாப், பெருமலை
மண்ணா வனைதல் ஒல்லுமோ நினக்கே";

—புறம்: 228: 12-15

**பெருநற்கிள்ளி :**

புறநானூறு விளக்கம் அளிக்கும், பழைய சோழர் குலத்தில் வந்து சிறப்பு வாழ்ந்த கடைசிக் காவலன்

பெருநற்கிள்ளி என அழைக்கப்பட்டான். சோழ நாடுமுழுவதையும், தன் ஆட்சிக் கீழ்க்கொண்டுவருவதன் முன்னர்க், கீழ்ப்படிய மறுத்த சோழச் சிற்றரசர்களையெல்லாம், அவன் வெற்றி கொள்ள வேண்டியிருந்தது. அத்தகு போர் ஒன்று பின் வருமாறு கூறப்பட்டுளது. "போர்த்தொழில் மாட்சிமைப்பட்டு, விரைந்து பாயவல்ல குதிரைப் படையோடும், கார்முகில் போலும் நிறம் வாய்ந்த தோலால் ஆன பரிசை ஏந்திய படைவீரர்களோடும், பகைவர் போர் முனைகள் பாழ்பட்டுப் போகச் சென்று, அவர்தம் உண்ணுநீர்க் குளங்களில் போர்க்களிறுகளை நீராட்டி, அப்பகைவர் நாட்டில், மூட்டிய நெருப்பின் ஒளி, கதிர்காயும் ஞாயிற்றின் செந்நிறம் போல் தோன்றி நிற்க, இடம் இல்லை எனக் கூறுமளவு சென்றுதங்கும் பெரிய படையினையும், பிறர் படைத்துணை வேண்டாதே பெறலாகும் வெற்றியினையும் பகைவர் குருதிக் கறைபடிந்து புலால் நாறும் வாளினையும், பூசிப் புலர்ந்த சந்தனச் சாந்தினையும் உடைய, பகைவர்க்கு அச்சம் தரும் தலைவ! வள்ளையும், ஆம்பலும், பகன்றையும், பழம் நிறைப் பாகலும் உடையதாகிக், கரும்புக் காடல்லது, பிறகாடறியாச், சிறந்தவயல் வளம் பாழுற்றுப் போகக், காவல் செறிந்த பகைவர் நாட்டை, ஒள்ளி தீயூட்டிப், பகைவர் அஞ்சத்தக்க கடும்போர், நின்கருத்திற்கேற்ப புரிந்தன, பெரும! உன் போர்க்களிறுகள்":

"வினைமாட்சிய விரை புரவியொடு
மழை உருவின தோல் பரப்பி
முனை முருங்கத் தலைச் சென்று, அவர்
விளைவயல் கவர்பூட்டி,
மனைமரம் விறகாகக்,
கடி துறைநீர்க் களிறுபடிஇ,
எல்லுப்பட இட்ட சுடுதீ விளக்கம்,
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரில் தோன்றப்,
புலம் கெட இறுக்கும் வரம்பில் தானைத்,

துணைவேண்டாச் செருவென்றிப்,
புலவுவாள், புலர் சாந்தின்,
முருகன் சீற்றத்து உருகெழு குருசில்!
மயங்கு வள்ளை, மலர் ஆம்பல்,
பனிப்பகன்றைக், கனிப்பாகல்,
கரும்பல்லது காடறியாப்,
பெருந்தண்பணை பாழாக,
ஏம நன்னாடு ஒள்ளெரி ஊட்டினை,
நாம நல்லமர் செய்ய,
ஓராங்கு மலைந்தன, பெரும! நின் களிறே".

—புறம் : 16

பின்னர் அவன் ராஜசூய யாகம் செய்து, முடிசூட்டு விழாவை ஆரிய முறையில் மேற்கொள்வதும் செய்தான். அதனால், அவன், ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என அழைக்கப்பட்டான், தஞ்சாவூரைச் சார்ந்த, பிற்காலச் சோழர்களால், கரிகாலனோடு ஒருங்குவைத்து, மிகப் பழைய குலமுதல்வனாக நினைவு கூரவும் பட்டான். [Vide the Leydan Grant and Thriuvalangadu Inscription : also S. I. I. Vol. II Part III. These later Inscriptions however confuse the order of sequence of these two early Solas.] ராஜசூயம் வேட்ட ஒரேயொரு பழைய சோழன், பெருநற்கிள்ளி ஆவன்; ஆகவேதான் அப்பெருஞ்செயலைச், சிறப்புடைய தன் அடையாளமாகக் கொண்டான். இப்பெருஞ்செயல், தமிழ் நாட்டு மக்களின் கலாச்சாரத்தில் ஆரியக் கலப்பு பெருமளவில் வளர்ந்துவிட்டது என்பதையும் உணர்த்துகிறது. இது அவன் புகழ்பாடும் பாக்கள் ஒன்றில், பொருள் வேண்டி வந்து நிற்கும் பார்ப்பனரின் ஈரம்பட்டகையில், பூவையும், பொன்னையும், புனலொடு சொறிந்த அவன் செயல் பாராட்டப் பெற்றிருப்பதாலும் உறுதி செய்யப்படுகிறது.

"ஏற்ற பார்ப்பார்க்கு ஈரங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து"

—புறம் : 367 ; 4-5

மூவேந்தர்களும், புலவரால் விளிக்கப்படும்போது, ஆரியக் கொள்கையின் அடிப்படையில் கொள்ளப்பட்ட ஓர் உவமையும், அப்பாட்டில் இடம் பெற்றுளது. அத்தொடர் இது: இருபிறப்பாளராம் பார்ப்பனர் வளர்க்கும், முத்தீப் போல, அழகுற வீற்றிருக்கும், வெண்கொற்றக் குடைகளையும், வெற்றிக் கொடி பறக்கும் தேர்களையும் உடைய மூவேந்தர்காள்!''

''முத்தீ புரைய, காண்தக இருந்த
கொற்ற வெண்குடைக், கொடித்தேர் வேந்தீர்!''
—புறம் : 367 : 13-14

இப்பாடற் பகுதியில் குறிப்பிடப்பட்டிருக்கும் மூன்று அரசர்கள், கொளுவில் இருந்து நாம் தெரிந்து கொள்ளும் வகையில், புறநானூறு, தொகை நூலாகத் தொகுக்கப்பட்ட காலத்துக்கு, அதிகம் முற்படாத காலத்து, தமிழரச குலங்களின் கடைசி அரசர்களாம் சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் உக்கிரப்பெருவழுதியும், சோழன் பெருநற்கிள்ளியுமாவர். இம்மூன்று அரசர்களின் காலத்திற்குப் பின்னர், பின்வரும் அதிகாரத்தில் விளக்க இருக்கும், ஒரு அரசியல் பெருமாற்றம் இடம் பெற்றதாகத் தெரிகிறது.

மேலே கூறிய அரசர்களுக்கு மட்டுமேயல்லாமல், வேறு பிற பன்னிரண்டு சோழர்களுக்கும் கொளுக்களின் ஆசிரியரால், பாக்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அவர்கள் அனைவரும், சோழ நாட்டில் ஆட்சி செலுத்தியிருக்க இயலாது. ஒரு நிகழ்ச்சியில் ஒன்பது சோழர்கள், பத்தாவது சோழன் ஒருவனோடு போரிட ஒன்று கூடியிருந்தனர் எனக் கேள்வியுற்றோம். ஆதலின், சோழர் அரியணையில் அமர்ந்து, ஆட்சி புரியாத சோழகுல இளவரசர்களே, அக்கொளுக்களில் கூறப்பட்டுள்ளனர் எனக் கொள்ளுதல் வேண்டும்.

---

## 22ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு:

**புறநானூற்றுப் பாக்களுக்குப் பொருள் விளக்கம் அளிக்கும் கொளுக்கள்**

"நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு என்ற தொகை நூல்களில் உள்ள அனைத்து அகத்துறைப் பாடல்களுக்கும், திணையும், துறையும், பாடிய புலவர் பெயரும் கொடுத்திருப்பது போல், புறநானூற்றுப் பாடல்கள் நானூறுக்கும் திணையும், துறையும், பாடிய புலவர் பெயரும் கொடுத்திருப்பதால், அது செய்தது, அப்பாடல்களைத் தொகுத்தவர் செயலாகும்.

"புறநானூற்றுப் பாக்களில், முதல் 266 பாக்களுக்கு, திணை, துறை, பாடிய புலவர் ஆகிய விளக்கங்களுக்கு மேலாக, அப்பாக்கள் பாடப்பெற்ற சூழ்நிலை, அப்பாக்களின் பாட்டுத் தலைவர்கள் ஆகிய விளக்கம்அளிக்கும் கொளுவும், அதை அடுத்துப் பொருள் விளக்கமும் கொடுக்கப் பட்டுள்ளன".

"எந்தப் பாட்டோடு பொருள் விளக்கம் நின்று விடுகிறதோ, அந்தப் பாட்டோடு கொளுவும் நின்று விடுகிறது; ஆகவே, கொளு, பொருள்விளக்கம் ஆகிய இரண்டையும் செய்தவர் ஒருவரே; அவர் அந்நூலைத் தொகுத்தவரினும் காலத்தால் பிற்பட்டவராதல் வேண்டும். நூலைத் தொகுத்தவர் கி. பி. ஆறாம் நூற்றாண்டினராயின், கொளுவும், விளக்கமும் அளித்தவர், கி. பி. 12ஆம் நூற்றாண்டிற்கும், கி. பி. 16ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தவராதல் வேண்டும்" என முடித்துவிட்டு (பக்கம்: 409-410) அக்கொளுக்கள், வரலாற்றுச் சான்றுகளாக ஏற்கும் தகுதியுடையவல்ல என முடிந்த முடிவாக முற்றுப்புள்ளியும்

வைத்துவிட்டார் திருவாளர். பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் (பக்கம் : 417)

கொளுவிற்கும், விளக்க உரைக்கும், அவர் விதித்த காலத்திற்கான அடிப்படைச் சான்று எதுவும் காட்டாத அவர், கொளு, வரலாற்றுச் சான்று ஆகாது, என்ற தம் முடிவிற்கு ஆதாரம் காட்ட, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் பாடும் புறம், 76, 77 பாக்களையும், சோழன் செங்கணானோடு திருப்போர்ப் புறத்துப் பொருது பற்றுக் கோட்பட்டுக் குடவாயில் கோட்டத்துச் சிறையில் கிடந்து தண்ணீர் தா என்று பெறாது பெயர்த்துப் பெற்றுக் கைக் கொண்டிருந்து உண்ணாது பாடியதான சேரமான் கணைக்கால் இரும்பொறையின் புறம் 74 பாட்டையும், சிறுகுடிகிழான் பண்ணனைப் பாராட்டும் கிள்ளிவளவன் பாடிய புறம். 173 பாட்டையும், சோழன் நலங்கிள்ளியுழை நின்று உறையூர் புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, ஒற்று வந்தான் என்று கொல்லப்புக்குழிப் பாடியதாகக் கூறும், கோவூர்கிழாரின் புறம் 147 பாட்டையும், எடுத்துக்கொண்டு திறனாய்வு செய்துள்ளார். (பக்கம் : 411-416)

திருவாளர் அய்யங்கார் அவர்கள் கூறுவது போல், புறநானூற்றுக் கொளுக்கள், வரலாற்றுச் சான்றுகளாக ஏற்கும் தகுதியுடையவல்ல எனத்தள்ளி விடத்தக்கன அல்ல; மாறாக, நற்றிணை, குறுந்தொகை, நெடுந்தொகை, புறநானூறு ஆகிய நான்கு தொகை நூல்களிலும் உள்ள 1600 பாக்களிலும் கிடைக்கும் வரலாற்று மூலங்கள் அனைத்தையும் நுண்ணிதின் ஆராய்ந்து கொண்ட உண்மை முடிவுகளின் தொகுப்பே ஆகும்.

கொளுக்கள் ஏற்கத் தக்கன அல்ல என்பதை உறுதி செய்ய திரு. அய்யங்கார் அவர்கள் எடுத்து விளக்கம் அளிக்கும் அந்நான்கு நிகழ்ச்சிகளுள், ஒரு பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம் என்பதற்கிணங்க, ஒன்றை மட்டும் ஆய்ந்து,

அவர் காட்டும் ஆதாரத்தின் பொருளின்மையை உறுதி செய்வோமாக.

திரு. அய்யங்கார் அவர்கள் காட்டும், சான்றுகளுள் முதலாவதான சான்று, புறம், 76, 77, பாக்களுக்குப், "பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனை இடைக்குன்றூர் கிழார் பாடியது" என்ற கொளுவாகும்.

பாண்டியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வென்ற தலையாலங்கானப் போர்குறித்து அறிய வேண்டிய செய்திகள்; 1) போர் நிகழ்ந்த இடம் ஆலங்கானம் என்பது, 2) போரில் வெற்றி பெற்றவன், பாண்டியர் குலத்தவன் என்பது; 3) அவன் செழியன் என அழைக்கப்பட்டான் என்பது; 4) போர் மேற்கொண்ட போது அவன் நனி இளையன் என்பது; 5) போர் மேற் கொண்டு சென்ற அவன், இனமாலையாம் வேம்பும்; பகைவர் அரணை முற்றுகையிடச் செல்வதை உணர்த்தும் உழிஞை மாலையும் அணிந்து கொண்டான் என்பது, 6) அவன் பகைவர், சேரனும், சோழனும் ஆகிய வேந்தர் இருவரும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மாண், பொருநன் என்ற வேளிர் ஐவரும் என்பது, 7) வென்று அவர் முரசு கவர்ந்தான் என்பது, 8) இறுதியாகக் களவேள்வி செய்தான் என்பது.

தலையாலங்கானப் போர் குறித்துப் பாடிய புலவர்கள்: அப்போரின் வெற்றித் திருமகனாம் நெடுஞ்செழியன், இடைக்குன்றூர் கிழார், கல்லாடனார், நக்கீரர், பொதும்பில் கிழார் மகனார், ஆலம்பேரி சாத்தனார், குடபுலவியனார், மாங்குடி மருதனார், ஆக புலவர் எண்மர் ஆவர்; இவர்தம் பாடல்களில் ஆலங்கானப்போர் குறித்த விளக்கங்களைத் தரும் பாடல்கள் பதினாறு. இப்பதினாறு பாக்களில் எந்த ஒரு பாட்டிலேனும், பெறவேண்டிய எட்டு விளக்கங்களையும் ஒருசேரப் பெற்றுவிட முடியுமா என்றால் இயலாது.

தலையாலங்கானத்துப் பெருவீரன் நெடுஞ்செழியன் பாடியபாட்டு புறம்: 72, ''நகு தக்கனரே நாடு மீக்கூறுநர்'' எனத் தொடங்கும் அப்பாட்டில், மேலே கூறிய விளக்கங்கள் எட்டும் கிடைக்கின்றனவா என்றால் இல்லை. அது மட்டு மன்று, அப்பாட்டில் வரும் ''மாங்குடி மருதன் தலைவனாக'' என்று அந்த ஒரு சிறுதொடர் மட்டும் இல்லாமல், இருந்தால் அதைப் பாடியவனை, மூவேந்தர் குலத்தில், எக்குலத்து வந்த எந்த ஒரு பேரரசனாகவும் கொண்டுவிடலாம்,

அது அவன் பாட்டுதான் என்பதை உறுதி செய்ய மாங்குடி மருதன் பாடிய மதுரைக் காஞ்சியின் துணையினை நாடவேண்டும். அதில் வரும் ''பொருப் பிற்பொருந'' (40 - 43) ''நெடியோன் உம்பல்'' (60 - 61) ''நற்கொற்கை யோர் நசைப் பொருந(138) என்ற வரிகள் எல்லாம், அப்பாட்டுடைத் தலைவன், பாண்டியர் மரபில் வந்தவன் எனப் பொதுவாகத்தான் உணரத்துணை புரிகின்றன; ''இரு பெரு வேந்தரொடு வேளிர் சாய'' (55) ''ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து, அரசுகெட அமர் உழக்கி, முரசு கொண்டு களம் வேட்ட'' (127 - 130) என்ற வரிகள், அப்பாட்டுடைத் தலைவனின் பகையரசர்கள், மூவேந்தருள் பாண்டியர் அல்லாத, சேர, சோழ வேந்தர்களும், வேளிர் சிலருமாவர் என்பதையும், அவன் அவர்களை ஆலங்கானத்துப் போரில் வெற்றி கொண்டான், பகையரசர்களின் முரசினைக் கைக் கொண்டான்; களவேள்வி செய்து புகழ் கொண்டான் என்பதையும் உணர்த்துகின்றன என்றாலும், தன்னுடைய பாட்டுடைத் தலைவன் செழியன் என்பதை உணர அது துணை புரியவில்லை; அதற்கு, அவர் பாடிய, புறநானூற்குப் பாக்களின் துணை நாட வேண்டியுளது; அவ்விரு பாக்களில், 24ஆம் எண் பாட்டு, அவன் செழியன் தான் என்பதையும், 26ஆம் எண் பாட்டு, அவன் பெயரை உணர்த்துவதோடு, அவன் களவேள்வி செய்தான் என்பதையும் தான் உணர்த்து கின்றனவே ஒழிய போர்க்களம், ஆலங்கானம் என்பதையோ, பிற விளக்கங்களையோ தரவில்லை;

அவ்விளக்கம் பெறக் கல்லாடனார், துணையினை நாட வேண்டியுளது. அவன் புகழ்பாடும் கல்லாடனார் பாக்கள் இவை.

"செழியன்
நேரா எழுவர் அடிப்படக் கடந்த
ஆலங்கானம்" —அகம் : 209

"ஆலங்கானத்து அமர் கடந்து அட்ட
கால முன்ப"

"ஒன்று மொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை உணங்கப் பண்ணி,
பிணியுறு முரசம் கொண்டகாலை
நிலைதிரிபு எறியத் திண்படை கலங்கிச்
சிதைதல் உய்ந்தன்றே நின்வேல் செழிய"

"அரைசுபட அமர் உழக்கி
உரைசெல முரசவெளவி
முடித்தலை அடுப்பாகப்
புனல் குருதி உலைக் கொளீஇத்
தொடித்தோள் துடுப்பின் துழந்த வல்சியின்
அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய"
—புறம் : 23, 25, 26.

இவற்றுள், எடுத்துக்காட்டு ஒன்றில், செழியன் என்ற அவன் பெயரும், அவன் பகைவர் எழுவர் என்பதும், போர்க்களம் ஆலங்கானம் என்பதும் உணர்த்தப்பட்டன. எடுத்துக்காட்டு இரண்டில், களம், ஆலங்கானம் என்பது மட்டுமே உணர்த்தப்பட்டது. எடுத்துக்காட்டு மூன்றில், பகைவர், வேந்தர் என்பதும், அவன், செழியன் என்பதும் உணர்த்தப்பட்டன். எடுத்துக்காட்டு நான்கில், பகைவர்

முரசு கைப்பற்றப்பட்டதும், அவன் களவேள்வி செய்ததும்; அவன் செழியன் என்பதும் உணர்த்தப்பட்டன.

ஆக, அப்பாக்கள் நான்கினையும் ஒருங்கு வைத்து நோக்கிய வழியே, ஆலங்கானத்துப் போர் வீரன் செழியன், அவன் பகைவர், வேந்தர் உள்ளிட்ட எழுவர், களம், ஆலங்கானம், அவன், பகையரசர் முரசு கொண்டு, களவேள்வி செய்தான் என்ற செய்திகளை அறிய முடிந்தது. அவன் இளையோன்; பகைவருள் வேந்தர் இருவர் ஒழிந்த ஐவர் யார்; அவன் களம் நோக்கிச் சென்ற கோலம் ஆகியவற்றை இவைதாமும் அறிவிக்கவில்லை; பகைவர் எழுவருள், வேந்தர் இருவர் ஒழிந்த ஐவர், வேளிர் என்பதை உணர, மாங்குடி மருதனாரையும், (மதுரைக்காஞ்சி : 55 - 56) அந்த ஐவர் இன்னின்னார் என்பதை உணர,

செழியன்,
ஆலங்கானத்து அகன் தலை சிவப்பச்,
சேரல், செம்பியன், சினங் கெழுதிதியன்,
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி,
நாரரி நறவின் எருமை ஊரன்;
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோவேண்மான் இயல்தேர்ப் பொருநன் என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து உரைசெலக்
கொன்று களம் வேட்ட ஞான்று''

— அகம் : 36

என்ற நக்கீரனாரின் இப்பாடலை நாடவேண்டியுளது.

போரில் புண் பெற்ற படைகளின் நிலைகண்டு, அதன் நலம்பேணும் கடமையுணர்வால், வாடைப்பருவம் வந்துறவும் கணவன் வாரானாக வருந்தும் கோப்பெருந்தேவியையும் மறந்து, போர்க்களத்துப் பாசறை வாழ்க்கையை மேற் கொண்டிருக்கும் செழியனின் பேராண்மை நலம் பாராட்டுப்

நெடுநல்வாடையில், அவனுடைய வேப்பந்தார் தவிர்த்து வேறு அடையாளம் காட்டாத நக்கீரர், மேலே கூறிய அகப் பாட்டுச் சில வரிகளில், செழியன் என்ற அவன்பெயர், ஆலங்கானம் என்ற அவன்போரிட்ட களம், சேரன், செம்பியன், திதியன், எழனி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்ற அவன் பகைவர் எழுவர், முரசு கொண்டு, களவேள்வி செய்த அவன் செயல் ஆகிய இத்தனை விளக்கங்களை ஒருசேரத்தந்துள்ளார். என்றாலும், அவன், தன்பாட்டில் தானே கூறிய, அவன் இளையோன் என்ற விளக்கத்தையோ, நனிமிகப் பெரிய படையுடையேம் என்ற செருக்கால் போர் மேற்கொண்டுவந்த பகைவர்தம் அறியாமையினையோ, நக்கீரரின் இப்பாட்டிலும் காணமுடிய வில்லை.

''ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்த, வேல்கெழுதானைச் செழியன்'' (நற்றி: 387) என்ற பொதும்பில் கிழார் மகனார் பாட்டும், ''செழியன் ஆலங்கானத்து அமர் கடந்து உயர்த்த வேல்'' (அகம்: 175) என்ற ஆலம்பேரி சாத்தனார் பாட்டும் செழியன் என்ற அவன் இயற்பெயர், ஆலங்கானம் என்ற அவன் வென்றகளம் ஆகிய இவ்விரண்டை மட்டும் உணரத் தான் துணை புரிகின்றனவேயல்லது, அவன் இளையன் என்பதை உணரத் துணை புரியவில்லை.

அதுபோலவே, ''தமிழ் தலைமயங்கிய தலையாலங் கானத்து மன்னுயிர்ப் பன்மையும், கூற்றத்து ஒருமையும், நின்னொடு தூக்கிய வென்வேல் செழிய! எழுவர் நல்வலம் கடந்தோய்'' என்ற (புறம்: 19) வட புலவியனார் பாட்டும்! செழியன் என்ற அவன் பெயர், ஆலங்கானம் என்ற போர்க் களம், ஆகிய இவ்விரு விளக்கங்களோடு, அவன் பகைவர் எழுவர் என மேலும் ஒரு விளக்கத்தை மட்டும் தான் தருகின்றதே அல்லது, அவன் இளையன், தாம் படையாலும் எண்ணாலும் பெரியவர் என்ற செருக்கே ஆலங்கானப் போருக்குக் காரணம் ஆயிற்று என்பதை உணர்த்தவில்லை.

"செழியன்
பீடும் செம்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன் தலைவந்த
புனைகழல் எழுவர்"

"கிண்கிணி களைந்தகால், ஒண்கழல் தொட்டு...
.......................................
பால் விட்டு அயினியும் இன்று அயின்றனன்."

"விழுமியம்; பெரியம் யாமே; நம்மில்
பொருநனும் இளையன்; கொண்டியும் பெரிது என
எள்ளிவந்த வம்ப மன்னர்"

—புறம்: 76, 77, 78

என்ற இடைக்குன்றூர்க் கிழாரின் பாக்களில்தான், வென்றோன் செழியன் என்பதும், தோற்றோர் எழுவர் என்பதும் கூறப்பட்டிருப்பதோடு, வேறு எப்புலவர் பாட்டிலும் வெளிப்படாத அவன் இளையோன் என்பது கூறப்பட்டுளது. அதுமட்டும் அன்று, "இளையன் இவன் என உளையக்கூறி...படையமை மறவரும் உடையம்யாம் என்று, உறுதுப்பு அஞ்சாது உடல்சினம் செருக்கிச் சிறுசொல் சொல்லிய சினங்கெழுவேந்தர்" (புறம்: 72) என்ற பாட்டுடைத்தலைவன் குரலை "விழுமியம் பெரியம்? யாமே; நம்மில் பெருநனும் இளையன்; கொண்டியும் பெரிது என எள்ளிவந்த வம்ப மன்னர்" (புறம்: 78) என அப்படியே எதிர் ஒலிக்கவும் செய்துள்ளது.

ஒருவன் பால் அமைந்துவிடும் கல்வி, செல்வம், வீரம், விழுப்புகழ்களின் அளக்கலாகா மிகுதி, கண்டவழி, வியப்புற்று நிற்கும் நிலையில், "இத்துணை உயர்ந்து நிற்பான் யாவனோ?" என வினா எழுப்புவது இயல்பு; அது பாட்டின் மரபும் கூட. அது, வியப்பு அடிப்படையாக எழும் வினாவே அல்லது, அறியாமையின் அடிப்படையில் எழும் வினா அன்று.

வல்வில் ஓரியின் வில்லாற்றல், கொடைவளங்களை அறிந்து, வன்பரணர், புறப்பாட்டு ஒன்றில் (152) "கொலைவன் யார் கொலோ? ..ஓரி கொல்லோ? அல்லன் கொலோ?" என வியந்து வினா எழுப்பி வாய்பிளந்து நிற்பதும், பெயர் அறியாப் படைமறவன் ஒருவனின் பேராண்மை கண்டு வியக்கும் பெயர் அறியாப் புலவர் ஒருவர், "யார்கொலோ? அளியன்!" எனப் பிறிதொரு புறப்பாட்டில் (257) வியப்பு அடிப்படையாக எழும்வினா எழுப்பி நிற்பதும் காண்க.

இம்மரபை யொட்டி, புலவர் இடைக்குன்றூர் கிழார், புறம்: 77ல், "யார்கொல்" என வினா எழுப்பியுள்ளார். இம்மரபு உணராத காரணத்தால், புறம்: 76ல் அவன் ஒருவன், அவன் பகைவர் எழுவர் என்பதையும், அவன் ஆற்றலும் பெருமையும் அறியாது வந்துவிட்ட அப்பகைவர்களின் அறியாமையினையும், அவன், வேப்பந்தாரோடு உழிஞை மாலையும் அணிந்து சென்று, அப்பகைவர் எழுவரையும், ஒருதானாகி நின்று வென்றதையும் விளங்கக் கூறியிருப்பதையும், புறம் 77ல் போர்க்களம் நோக்கிப் போகும் அப்போதும், அவன் இளமை மாறா நிலையினைக் கண்ணுற்று "யார்கொல்" என வினா எழுப்பி நிற்பதையும் கண்டு, "புலவருக்குத் தெரிந்தவனான, 76ஆம் புறப்பாட்டுத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும், புலவருக்குத் தெரியாதவனான 77ஆம் புறப்பாடு நனி இளையோனும், வேறுவேறுபட்ட இருவர் அல்லர், இருவரும் ஒருவனே என்பது நம்பக் கூடாத ஒன்று",

It is possible to believe, that the hero-victor of Talayalanganam, known to the poet, and the boy-hero, unknown to the poet, were one and the same "person" (Page: 413)

எனக் கூறி எள்ளி நகையாடியுள்ளார், திருவாளர் அய்யங்கார் அவர்கள்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் புகழ்பாடும் புலவர் எண்மரும், அவனும், அப்போர் குறித்துப் பாடியிருக்கும் நற்றிணை, நெடுந்தொகை, புறநானூறு ஆகியவற்றில் கலந்து கிடக்கும், பதினாறுக்கும் மேற்பட்ட அப்பாக்களை அரிதின் முயன்று தேடிப்பிடித்து, நுணுகி ஆய்ந்து, அப்போர் குறித்த பல்வேறு செய்திகளையும் அறிந்து கொண்டு தெளிவுற்ற நிலையில் அமைத்திருக்கும் கொளுக்கள், முழுக்க முழுக்க உண்மைவாய்ந்தவை; பழந்தமிழர் வரலாற்றை வரைவார்க்கு, வலுவான சான்றாக அமைய வல்லவை; ஆகவும், அக்கொளுக்களை வரைந்தார் தம் ஆழ்ந்த அறிவினையும், அரு முயற்சியினையும், அருஞ்செயலையும் பாராட்ட மனமில்லையாயினும், அவை ஏற்கதக்கன அல்ல என இழிவுபடுத்துவது, நல்ல வரலாற்றுத் திறனாய்வு நெறி ஆகாது.

திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், தம்முடைய சோழர் வரலாறு மற்றும் ஆட்சி முறைபற்றிய திறனாய்வு நூலில், (Studies in Chola History and Administration) கொளுக்கள் குறித்த, திருவாளர் பி. டி. எஸ். அவர்களின் இம்முடிவை விரிவாக ஆராய்ந்து, அது தவறான முடிவு என உறுதி செய்து, பின்வரும் தீர்ப்புக்களை வழங்கியுள்ளார்.

''தொகை நூலைத் தொகுத்த ஆசிரியர், அப்பாக்களைப் படித்தும், மரபு வழிச் செய்திகளை ஏற்றும், அந்நூலைத் தொகுத்தபோதே, அக்கொளுக்களைத், தாமே எழுதியிருக்க இயலாதா, ஒவ்வொரு பாக்களுக்குமான கொளுக்கள் அப்பாக்கள், தொகை நூலாகத் தொகுக்கப்படுவதற்கு முன்னரே, அப்பாக்களோடு இணைந்திருக்க இயலாதா என்ற வினாக்களுக்கு விடைகாண வேண்டியது இன்றியமையாதது என்பது திருவாளர் பி. டி. எஸ் அவர்களுக்குத் தெரியவில்லை''.

Why the author of the anthology could not have him self read the poems and accepted traditional information

at the time the anthology was made, and supplied the Colophons ; Futher, why the Colophons might not have been added to individual poems earlier than their entry in to an anthology are matters which are apparently not deemed worthy of consideration by Mr. Srinivasa Aiyangar. Page : 9

கொளுக்கள் வரலாற்றுச் சான்றுகளாக ஏற்கத்தக்கன அல்ல என்ற தம்முடிவிற்கு அரண்செய்ய "எல்லாப் பாக்களுக்கும் கொளுக்கள் கொடுக்கப்படவில்லை. புறம் 266-ஆம் எண் பாட்டோடு அது நின்றுவிடுகிறது" என்ற திரு. பி. டி. எஸ். அவர்களின் வாதத்திற்கு, "உண்மையில் எல்லாப் பாக்களுக்குமே கொளுக்கள் கொடுக்கப்பட்டிருந்தன. சிலவற்றிற்குக் கிடைக்காமைக்குப், பழைய ஏட்டுச் சுவடிளிகன் சீர்கெட்ட நிலையே காரணம். இது, அந்நூல் பதிப்பாசிரியரால், அவருடைய முகவுரையில் (14 - 15) தெளிவாக உணர்த்தப்பட்டுளது" என விளக்கம் அளித்திருப்பதின் மூலம், அவர் வாதத்தின் வலிவின்மையை உணர்த்தியுள்ளார்.

"In reality, the colophons were furnished for all the odes and as already stated, it is only the decayed state of the manuscripts, that is responsible for the gaps in our knowledge. This is sufficiently indicated hy the learned editor of the work in his preface" Page : 12

பலநூறு ஆண்டு கால இடைவெளியில் தொகை நூல்களில், பிழைபடு இடைச்செருகல்களே இடம் பெறாது தம் பண்டைய வடிவிலேயே பாக்கள், கிடைத்திருக்க வேண்டும் என எதிர்பார்ப்பது அரிதினும் அரிதாம். ஆகவே, அத்தகு குறைபாடு ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு, அப்பாக்களையும், அப்பாக்களோடு கொடுக்கப்பட்டிருக்கும் கொளுக்களையும் வரலாற்றுச் சான்றுகளாக ஏற்க இயலாது

என அறவே மறுப்பது, வரலாற்று நூல்கள் எழுவதை, இயலாததாக ஆக்கிவிடும், ஒரு தவறான வழிகாட்டு நெறியைக் காட்டுவதாகும்''

''We can hardly expect that in the course of long centuries, the anthologies have been transmitted to us without errors in details have crept in. But for this reason, to cost a doubt on the accouracy of the whole groups of poems and their colophous and to reject them wholesale is to apply standards of criticism, which would render all historical writings impossible'' Page : 18.

புறநானூற்றுக் கொளுக்கள் வரலாற்றுச் சான்றுகளாக ஏற்றுக்கொள்ளத்தக்கன அல்ல எனக் கூறும் திரு. பி.டி.எஸ். அவர்களின் கொள்கைக்கு மேலும் ஒருபடி மேலே சென்று, கல்வெட்டுக்களும், செப்பேடுகளும் அளிக்கும் சான்றுகளை வலுவான சான்றுகளாக ஏற்றுக்கொண்டு, புறநானூறு போலும் தொகை நூல்களையும், அவற்றின் கொளுக்களையும் ஏற்க மறுக்கும் வரலாற்றுப் பேராசிரியர் சிலரும் உள்ளனர்.

அத்தகையோரின் தவறான வழிகாட்டு நெறியினையும் வன்மையாக மறுத்துள்ளார், திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள். இதோ அவர் கூறுவன காண்க:-

திரு. வெங்கையா அவர்கள், ''புறநானூறு எண்ணற்ற சோழ அரசர்களின் பெயர்களை ... அறிவிக்கின்றன ..... ஆனால் அவை தரும் வரலாற்றுச் சான்றுகளையும் குறிப்பிட்ட ஒரு சோழ அரசனோடு தொடர்புபடுத்தும் செய்திகளையும் ஏற்றுக்கொள்வதில் பெரிதும், விழிப்புடையவராக இருக்க வேண்டும்'' எனக் கூறுகிறார் என கொளுக்கள் பற்றிய அவர் கொள்கையை அறிவித்துவிட்டு, அதைக் கீழ்வரும் வரிகளால் வன்மையாகக் கண்டித்துள்ளார்.

''தொகை நூல்கள் தரும் செய்திகள்பால், இத்தகு கட்டுப்பாட்டினை விதிக்கும் திரு. வெங்கையா அவர்கள்,

அந்நிகழ்ச்சிகள் நிகழ்ந்ததற்கு, அதிகம் இல்லை என்றாலும், ஐந்து நூற்றாண்டு காலம் கழித்து, பதினொன்றாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட கல்வெட்டுக்களில் கூறப்பட்டிருக்கும் செய்திகளைச் சிறிதும் தயங்காமல் ஏற்றுக் கொள்கிறார்...

"ஏதேனும் ஒரு செய்தி, பனைஓலை ஏடுகளிலோ, அல்லது அதனினும் எளிதாகப் பாழ்பட்டுப் போகும் ஒரு பொருள்மீதோ எழுதப்படாமல், கல்லின் மீதும், செப்புத் தகட்டின் மீதும் பொறிக்கப்பட்டிருக்கிறது என்பதனாலேயே, அது முழு நம்பிக்கைக்கு உரியதாம் தகுதியைப் பெற்றுவிடுமா என்ற வினாவையும், அத்தகு கல்வெட்டுச் செப்பேடுகளில், மிகப்பெரிய பொய்யான இடைச்செருகல்கள் இடம் பெற்று விடவும், இலக்கிய ஆவணங்களைப் பெயர்த்து எழுதும் படிவங்களில் உண்மையான மரபு வழிச் செய்திகள், அப்படியே இடம் பெற்று விடவும் இயலாதா என்ற வினாவையும் எவர் ஒருவரும் எழுப்பக் கூடும்...

"கல்வெட்டுத் திறனாய்வாளர்களின், இலக்கியச் சான்றுகளை அணுகும் நிலையில் மேற்கொள்ளும் தேவையில்லா விழிப்புணர்வும், கல்வெட்டுச் செப்பேடுகளில் இடம் பெற்றிருக்கும் மிகப்பெரிய பொய்ச் சான்றுகள்பால் காட்டும் இறுபிள்ளைத்தனமான நம்பிக்கையும், அவர்களின் போக்கு குறித்த முறையான ஐயப்பாட்டினை எழுப்புகிறது:

Mr. Vengayya remarks: "the Tamil anthology Purananuru, for instance, furnishes the names of a number of chola kings...But the evidence furnished by these documents and the tredition connecting then with particular chola kings have to be received with caution" (Archaeological survey of India: 1905-6 P-174 N: 7)

But then, having imposed this reserve on himself in the evidence of literary tradition, Mr. Venkayya

proceeds forth with to accept unreservedly all the statements made in eleventh century inscriptions about events that happend, if at all, five centuries before their date...Now, one may ask whether any statement gains in trust worthiness mearly because, it is engraved on copper or stone and not written on palm leaf or other more perishabile material, and whether it is not possible for a delliberate inventom to get in to an epigraph, or for a correct tradition to be transmitted in successive copying of literary documents. The exaggerated caution assumed by some epigraphists in their approach to literary evidence, and the childish faith they occasionally exhibit in hugging the most palpable lies set down on stone and copper, may raise, a legitimate doubt". Page: 5.)

புறநானூற்றுக் கொளுக்கள், வரலாற்றுச் சான்றுகளாக ஏற்றுக்கொள்ளத் தகுதியில்லாதன என்ற தம் கொள்கையில் திருவாளர் அய்யங்கார் அவர்களும் விடாப்பிடியாக இருப்பவர் அல்லர்.

367ஆம் எண் புறநானூற்றுப் பாட்டின் கொளு இது; "சேரமான் மாரி வெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை ஔவையார் பாடியது".

இது குறித்துத் தம் கருத்தினைக் கூறும் திரு. அய்யங்கார் அவர்கள், "கொளுவில் கூறப்பட்டிருக்கும் மூவேந்தர் பெயர்கள், பாட்டில் இடம் பெறவில்லை எனினும் கொளு கூறும் செய்தி நம்புதற்கு உரியதே என நான் கருதுகின்றேன்" என அவரே கூறுவது காண்க. (பக்கம்: 461)

# அதிகாரம் : XXIII

# பாண்டிய அரசர்கள்

## முதுகுடுமிப் பெருவழுதி :

தொகைப் பாக்களிலிருந்து விளக்கம் பெறக் கூடிய முதல் பாண்டிய அரசன், முதுகுடுமிப் பெருவழுதி.... அவன், பிராமண வேள்வியாசிரியர்கள் செய்த யாகங்களுக்குப் பேராதரவு தந்து பெரும்புகழ் கொண்டான். யாகங்கள் பலவற்றிற்குத் துணை நின்றவன் எனும் பொருளுடைய, "பல்யாக சாலை" என்ற சிறப்பினைத் தன் பெயர் முன் கொள்ளுமளவு, யாகங்களுக்கு ஆதரவு அளித்தான். வேத யாகம் செய்ய, ஓர் அரசன், முதற்கண் சத்திரிய கோத்திரம் சிலவற்றோடு இணைக்கப் படவேண்டும். பண்டைய பாண்டிய மன்னர், அவ்வகையில் முழுமையாகவும், முறையாகவும் ஆரிய வளையத்துக்குள் உட்படுத்தப்பட்டு, ஒரு கோத்திரத்துக்கு உரியவராக ஆக்கப் பட்டனர் என்பதற்கான அகச்சான்று எதுவும் இல்லையாகவே அத்தொடர், பற்பல வேதயாகங்களைச் செய்த ஒருவன் எனும் பொருள் உணர்த்துவதாகக் கொள்ளத் தேவை இல்லை. புறம் : 15ல் இவ்வாறு கூறப்பட்டுளது : "குற்றம் இல்லாத நல்ல தரும நூலிலும், நான்கு வேதங்களிலும் சொல்லப்பட்ட, பெறுதற்கரிய புகழ் வாய்ந்த இரு பொருள் களோடு, நெய்யை நிறையப் பெய்தலால், புகை, பெருக எழுந்து படரப் பல்லாற்றானும் மாண்புற்ற, கெடலறியாத் தலைமை வாய்ந்த யாகங்களை முடித்துத் தூண் நடப்பெற்ற அகன்ற வேள்விச் சாலைகள்."

"...............புரையில்
நற்பனுவல், நால் வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங் கண்ணுறை
நெய்ம்மலி ஆவுதி பொங்கப், பன்மாண்

வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியன்களம் பல.''

—புறம் : 15 : 16 - 21.

இப்பாண்டியனால் போற்றிப் புரக்கப்பட்ட ஒரு யாகம்; வேள்விக்குடிச் செப்பேட்டில் (Ep. Ind. 18 : P. 291) குறிப்பிடப் பட்டுளது. பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியால் வழங்கப்பட்டுப் பின்னர்க் களப்பிர அரசன் ஒருவனால் திரும்ப எடுத்துக்கொள்ளப்பட்ட ஓர் உடைமையின் உரிமையை, மீட்டு அளித்தல் காரணமாக, இக்கொடைப்பட்டயம், பெரும்பாலும், எட்டாம் நூற்றாண்டின் நாற்கூறுகளில், மூன்றாவது கூற்றின்போது வெளியிடப் பட்டதாகும். இந்நன்கொடை முதன்முதலாக, எந்தச் சூழ்நிலைகளில் வழங்கப்பட்டதோ, அந்தச் சூழ் நிலைகள், எட்டாம் நூற்றாண்டில் வெளியிடப்பட்ட, இந்நன்கொடை ஆவணத்தில் இவ்வாறு விரித்துரைக்கப் பட்டுள்ளன : [இந்தியக் கல்வெட்டுக்கள் (Epigraphia India) என்ற நூலில், கொடுக்கப் பட்டிருக்கும், அப்பட்டயத்துக்கான மொழிபெயர்ப்பு பிழையுடையதாக இருப்பதால், என்னுடைய மொழி பெயர்ப்பைக் கொடுத்துள்ளேன்.] ''வண்டுகள் மொய்த்து ஓலமிடும் குளிர்ந்த அரும்புகளைக் கொண்ட நாகமரங்களும், மாமரங்களும் செறிந்த மலர்ச்சோலைகள் சூழ்ந்த பாகனூர்க்கூற்றம் என்ற நிலவளமும், நீர்வளமும் மிகுந்த நாட்டில் வாழும், கற்று வல்ல வேள்வியாசிரியர்கள் சொல்லித் தந்த ச்ருதி-மார்க்கம் தவறாத, கொற்கைக்கிழான், நற்கொற்றன் என்பான், வேள்வி ஒன்று செய்யத் தொடங் கினான்: ''வேள்வியை முற்றுவிக்கத் துணைபுரிவான் வேண்டி, கொல்லும் போர் வல்ல களிறுகள் எண்ணற்றன போக்கிப் பகை மன்னர் குலங்களை அழித்து ஒழித்த பல்யாக - முது குடுமிப் பெருவழுதி [அரசன் பட்டப் பெயரில் ''சாலை'' எனும் சொல், காலவெள்ளத்தால் கைவிடப்பட்டுளது:] என்னும் பாண்டியாதிராசன் [''அதிராஜர்'' என்ற பட்டம்; பாண்டிய அரசர்களாலும், பிற தமிழ் அரசர்களாலும், ஆறாம் நூற்றாண்டு முடிவுற்ற பின்னர், தமிழ் நாடு,

முழுமையாக ஆரிய மயமாக்கப்பட்டுவிட்ட பின்னரே மேற்கொள்ளப்பட்டது. பழங்காலப் பாண்டியர், அப்பட்டத்தை எந்நிலையிலும் மேற்கொண்டிருக்கவில்லையென்றாலும், இக்கல்வெட்டு ஆசிரியரால், ஈண்டு, அப்பட்டம், அவனுக்குக் கொடுக்கப்பட்டுவிட்டது.] துணையை வேண்டுவாயாக என, வேதங்களில் வல்ல வேள்வியந்தணர் நற்கொற்றனிடம் கூற, அவனும் அவ்வாறே வேண்ட, வெற்றிமாலையணிந்த வேந்தன், அப்போதே, வேள்விச்சாலை முன் நின்று, அவ்வூரை, வேள்விக்குடி எனும் பெயர்சூட்டி, அந்நகர்க்கு அழகும், திருவும் பெருக. வழி செய்து, நீர் வார்த்துக் கொடுத்துவிட்டான்: அவ்வகையில், அவ்வூர், நெடுங்காலம், தானம் பெற்றவரால் அனுபவிக்கப்பட்டு வந்தது. பின்னர், எண்ணற்ற அதிராசர்களை வென்று துரத்தி, அவர் நாட்டைக் கைக்கொண்டுவிட்ட களப்பிரர் எனும் கலிஅரசன், அவ்வூரின் தான உரிமையை அழித்துத் தானே எடுத்துக்கொண்டான்.''

[களப்பிரரால் வென்று துரத்தப்படுவதன் முன்னர், நாட்டை நெடுங்காலம் ஆண்டுவந்த பண்டைய அரசர்களின் வழிவந்தவர் போலும், இவ்வதிராஜாக்கள்.]

[கொல்யாளை பல ஓட்டிக், கூடாமன்னர் குழாம் தவிர்த்து பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி எனும் பாண்டியாதிராஜன் நாகமா மலர்ச்சோலை நளிர்சினை மிசை வண்டுஅலம்பும் பாகனூர்க்கூற்றம் என்னும் பழனக்கடக்கை நீர் நாட்டு சொற்கண்ணாளர் சொலப்பட்ட ச்ருதி மார்க்கம் பிழையாத, கொற்கைக்கிழான் நற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்க கேள்வியந்தணாளர் முன்புகேட்க என்று எடுத்துணர்த்த வேள்விச்சாலை முன் நின்று, வேள்விகுடி என்ற பதியைச் சீரொடு திருவளரச் செய்தார், வேந்தன் அப்பொழுதேய் நீரோட்டிக் கொடுத்தமையான நீடுபுக்தி துய்த்தபின், அளவரிய ஆதிராஜரை அகல நீக்கி, அகல் இடத்தைக்

களப்ரன் என்னும் கலிஅரசன் கைக்கொண்டு அதனை இறக்கிய பின்.]

நன்கொடை ஆவணங்களைக், கல்லின் மீதோ, செப்புத் தகடுகள்மீதோ செதுக்கிப் பொறிக்கும் வழக்கம், கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னர், அதாவது, தமிழ் நாடு, முழுமையாக ஆரிய நாகரீகச் செல்வாக்கிற்கு ஆட்பட்டுக், கோயில்களுக்கும், பிராமணர்களுக்கும் தானங்கள் செய்வது முறையான வழக்கமாகிவிட்ட அந்தக் காலத்துக்கு முன்னர்த், தொடங்கப்படவில்லையாகவே, முதுகுடுமி, தன் தானத்தோடு, செப்புப் பட்டயத்தை உடன் வழங்கவில்லை. ஆகவேதான் கி. பி. 600 வரையான தமிழக வரலாற்றிற்கு ஒளி காட்ட, எந்தக் கல்வெட்டும் முன்வரவில்லை. நற்கொற்றன் வழிவந்த, காமக்காணி நற்சிங்கன் என அழைக்கப்படும் ஒருவனுக்கு, இம்முறை, தெய்வத்துக்குப் படைக்கப்படும் புனித தீர்த்தமாம் நிலைபேறில்லாத் தண்ணீர் வார்த்து அளிப்பது மட்டுமல்லாமல், செப்புத்தகட்டில் செதுக்கிப் பொறிக்கப்பட்ட, அழிக்கலாகா, நன்கொடை ஆவணமும் தொடர, நெடுஞ்சடையன், அச்சிற்றூரை மறுவலும் தானம் செய்த சூழ்நிலைகள் பின் வருமாறு: "இவன் (நெடுஞ்சடையன்) ஆட்சியின் மூன்றாம் ஆண்டு நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது ஒருநாள், மாடங்களையும், மதில்களையும் கொண்ட மதுரையில், சிலர் கூடியிருந்து, உரத்த குரலில் முறையிட்டுக் கொண்டிருந்தனர். அரசன், அவர்களைத் தன் அருகில் அழைத்து, உம் முறை யாது எனக்கேட்டான். அவர்கள், "பலம் வாய்ந்த பெரும்படைக்குரிய ஆற்றல் மிகு அரசே! வெல்லற்கரிய தன் வேற்படை வீரர் துணையால், கடல்சூழ் உலகைக் காத்துவந்த பேரரசனாம், பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியாம் உன் குல முன்னோனால், வானளாவும் மலர்ச் சோலைகள் மலிந்த பாகனூர்க் கூற்றத்தைச் சேர்ந்த ஒரு சிற்றூர், வேள்விக்குடி எனப் பெயரிடப்பட்டு, அறநெறி மாறுபடா நிலையில் தானமாக அளிக்கப்பட்டது. அவ்வாறு நின் முன்னோனால் அளிக்கப்பட்ட அவ்வூர், பின்னர், அழிக்கலாகாக் கடல் போலும் பெரும்படையுடைய களப்

பிறரால் எடுத்துக்கொள்ளப்பட்டது; இதுவே எம் முறை'' என்றனர். அரசன், சிறிதே முறுவலித்து, ''நல்லது, தங்களுடைய பழைய உரிமையை மக்கள் மன்றத்து நிலை நாட்டி, மீட்டுக் கொள்வீராக'' எனப் பணிக்க, முறையிட்டாளனும், அது செய்ய, வில்லேந்திய தடந்தோளனாகிய வேந்தன், ''எம் குல முன்னோரால், முறைப்படி வழங்கப் பட்டது என்றாலும் தரப்பட்டதாக் கொள்க'' எனச் செம்மாந்து கூறி, நெடிய தேரும், கடல்போலும் பெரிய தானையும் கொண்ட அக்காவலன். முறையிட்டாளனாகிய, கொற்கைக்கிழான் காமக்காணி நற்சிங்கர்க்கு நீர்வார்த்துக் கொடுத்தான்.

''மற்றவன்தன் ராஜ்யவத்ஸரம் மூன்றாவது செலாநிற்ப,
ஆங்கொரு நாள்
கூடமாமதில் கூடற்பாடு நின்றவர் ஆமோதிக்கக்,
கொற்றவனே, மற்றவரைத் தெற்றென நன்கு கூவி,
''என்னை நுங்குறை'' என்று முன்னாக பணித்தருள,
''மேனாள் நின்குரவரால் யான்முறையின் வழுவாமை
மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்
கூற்றப்படுத்துவது,
ஆள்வதானை அடல்வேந்தே! வேள்விக்குடி எனும்
பெயருடையது
ஒல்காத வேல்தானை ஒடாதவேலி உடன் காத்த,
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி எனும் பரமேசுரனால்
வேள்விகுடி எனப்பட்டது கேள்வியில் தரப்பட்டதனைத்
துளக்கமிலாக் கடல்தானையாய களப்பரரால்
இறக்கப்பட்டது''
என்று நின்றவன் விஜ்ஞாப்யம் செய்ய
''நன்று நன்று'' என்று முறுவலித்து
''நாட்டான் நின் பழமையாதல்
காட்டி நீ (''கொள்க''வென்)ன

நாட்டால்தன் பழமையாதல்
காட்டினான் அங்கு அப்பொழுதெய்
காட்ட, ''மேனாள் எம்குரவரால் பன்முறையில்
தரப்பட்டதனை
எம்மாலும் த - ப்பட்டது'' என்று
செம்மாந்து அவன் எடுத்தருளி.
விற்கைத் தடக்கை விறல்வேந்தன்
கொற்கைகிழான் காமக்காணி நற்சிங்கர்க்குத்
தேரோடும் கடல்தாளையன் நீரோட்டிக்
கொடுத்தமையின்''

நெடுஞ்சடையன் வேள்விக்குடியை மறுபடியும் தானம் செய்வதை வாய்மொழிச் சான்றுகளைக் கொண்டே உறுதி செய்தான் ஆகவே, முதுகுடுமி, அவனுக்கு மூன்று நூற்றாண்டு காலத்துக்கு மேற்பட்ட காலத்தில் வாழ்ந்திருக்க முடியாது என்பதும் இடையில் குறிப்பிடத்தக்கதாம்.

பிறிதொரு புறநானூற்றுப் பாட்டில் புலவர் முதுகுடுமிப் பெருவழுதியைப் பார்த்து, ''நெடிது வாழ்க!'' என வாழ்த்தும் அவ்வாறு வாழ்த்தும் அறிகுறியாகத் தங்கள் கைகளை உயர்த்தும் நான்கு வேதங்களையும் கற்றறிந்த பார்ப்பனர்கள் எதிரில் வணங்கி நிற்பாயாக'' எனக் கூறுகிறார்:

''இறைஞ்சுக! பெரும! நின்சென்னி, சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே''

—புறம் : 6 : 19-20

முக்கண் இறைவன் கோயிலை வலம் வரும்போது மட்டுமே அரசர்களின் வெண்கொற்றக் குடை தாழ்த்தப்படுமா என்றும் அவர் கூறுகிறார்.

''பணியியரத்தை, நின்குடையே, முனிவர்
முக்கண் செல்வர் நகர்வலம் செயற்கே.''

—புறம் : 6 : 17-1

எனக்குத் தெரிந்த வரையில், தமிழிலக்கியத்தில், முக்கண் இறைவனைப் பற்றிய குறிப்பு, இதுவே பழமையானது. [அடுத்தது, பண்டைப்புலவர் வரிசையில், கடைசியில் இருப்பவராகிய பரணரால், அகம் : 181 ல் கூறப்பட்டிருப்பது ''நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்'']

அரசன் புகழ், நிலம், ஆகாயம், சுவர்க்கம் என்ற மூன்றும் ஒன்றுகூடிய ஒரு கூட்டமாக அடுக்கப்பட்ட வரிசைக்கண், முதற்கண்ணதாகிய நீர்நிலைக்கண் நிற்கும் உலகின் கீழும், மேலதாகிய ஆன் உலகத்தும் வாழ்வாரை அச்சுறுத்த வல்லதாம் என்றும் அப்பாட்டில் கூறப்பட்டுளது.

''முப்புணர் அடுக்கிய முறைமுதல் கட்டில்
நீர்நிலை நிவப்பின் கீழும், மேலது
ஆனிலை உலகத்தானும் ஆனாது
உருவும் புகழ்'': —புறம் : 6 : 5-8.

இவை அனைத்தும் ஆரியக் கருத்துக்கள். அவை, இப்பாட்டில் இடம் பெற்றிருப்பது, ஆரியக் கலாச்சார வெள்ளம், கரிகாலன் காலம் தொட்டு, தமிழ் மக்கள் உள்ளத்தில், கடுவேகமாகப் பெருக்கெடுத்துப் பாயத் தொடங்கிவிட்டது என்பதைக் காட்டுகிறது. மேலும், வடக்கில் இமயத்தையும், தெற்கில் குமரியையும், கிழக்கிலும், மேற்கிலும் இரு கடல்களையும் எல்லையாகக் கொண்ட ஒரே நாடு இந்தியா என்ற கொள்கை, இப்பாட்டில், தமிழ் இலக்கியத்தில் முதன் முறையாக இடம் பெற்றுளது. அப்பகுதி, ''முதுகுடுமியின் புகழ், வடக்கில், பனி தவழும் பெருமலைக்கு அப்பாலும், தெற்கில், அச்சம் தரும் குமரிக்கு அப்பாலும், கிழக்கில், சகரரால் தோண்டப்பட்ட கீழ்க்கடலுக்கு அப்பாலும், மேற்கில் நனிமிகப் பழைய கடலுக்கு அப்பாலும் பரவியிருந்தது'' எனக்கூறுகிறது:-

''வடாஅது, பனிபடு நெடுவரை வடக்கும்;
தெனாஅது, உருகெழு குமரியின் தெற்கும்;

> குணாஅது, கரைபொரு தொடுகடல் குணக்கும்;
> குடாஅது, தொன்றுமுதிர் பெளவத்தின் குடக்கும்"
> —புறம் ; 6 ; 1-4;

[புறநானூற்றில், இக்கருத்தில், வேறு இருகுறிப்புகளும் உள்ளன. முதலாவது, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்தது:- "தென்குமரி வடபெருங்கல்" (புறம் : 17 ; 1). இரண்டாவதாக, மிகவும் பிற்பட்ட காலத்தவனாகிய, பெரும்பாலும் 6 வது நூற்றாண்டைச் சேர்ந்தவனாகிய, பெருங்கோக்கிள்ளிக் கோப்பெருஞ்சோழனைக் குறிப்பது: அதில், ஓர் அன்னப்பறவை, குமரிக்கரையில் அயிரை மீன் அருந்திச், சோழ நாட்டைக் கடந்து, வடநாட்டுப் பெருமலைக்குச் செல்வதாகக் கூறப்பட்டுளது:-

> "குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி,
> வடமலைப் பெயர்குவை யாயின், இடையது
> சோழ நன்னாட்டுப் படினே". —புறம் : 67 : 6-8]

நால்வேத நாகரீக வளர்ச்சிக்குப் பேராதரவு நல்கும் பெருஞ்செயல்கள் அல்லாமல், முதுகுடுமிப், பகையரசர்களோடு போர் மேற்கொள்வதும் செய்திருந்தான். குறிப்பிட்ட ஒரு சோழ, அல்லது பாண்டிய அரசனோடு போரிட்டதாகக் கூறப்படவில்லை. சில குறுநிலத்தலைவர்களை அவன் வென்றிருக்கக் கூடும். புலவர் இவ்வாறு கூறுகிறார்: "பகைப்படையைச் சேர்ந்த தேர்கள் விரைந்து ஓடி ஓடிப் பண்ணிய குழிகளைக் கொண்ட, அப்பகைவரின் பேரூர்த் தெருக்களில், வெள்ளிய வாயையுடைய கழுதைகளை, ஏர்களில் வரிசை வரிசையாகப் பூட்டி உழுது, அப்பகைவரின், அகன்ற பெரிய அரண்களைப் பாழ்படுத்தினை; பகைவர் நாட்டின் பறவைக் கூட்டம் ஓயாது கூடியிருந்து ஒலிக்கும் வண்ணம் வளம் கொழிக்கும் விளை நிலங்கள், வெள்ளிய தலையாட்டம் கொண்ட, போர்ச் செருக்குமிக்க குதிரைகளின் குளம்புகளால் பாழுற்றுப் போமாறு, போர்த்

தேர்களை விரைந்து போக்கினை; ஆடும் இயல்பும், பெரிய கழுத்தும், பருத்த கால்களும், சினம் கொழிக்கும் சிறு கண்களும், ஒளி விளங்கும் தந்தங்களும் உடைய நின் படைக் களிறுகளை, அப்பகைவரின், காவல்மிக்க உண்ணு நீர்க்குளங்களில் குளிப்பாட்டினை -" அவன் வெற்றி கொண்ட போர்க் களம், இது எனத் தெளிவாகக் குறிப்பிடப்படாத நிலையில், இது அவ்வரசனைப் பற்றிய பொதுவான புகழ் உரைகளே யல்லது வேறு அன்று என்றே கோடல் வேண்டும்:

"கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்,
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்,
பாழ்செய்தனை, அவர் நனந்தலை நல்எயில்;
புள்ளினம் இமிழும் புகழ்சால் விளைவயல்
வெண்டளைக் கலிமான் கவிகுளம்பு உகளத்
தேர்வழங்கினை, நின் தெவ்வர் தேஎத்து;
துளங்கு இயலான், பணை எருத்தின்,
பாஅடியான், செறல் நோக்கின்
ஒளிறு மருப்பின் களிறவர
காப்புடைய கயம்படியினை,"    —புறம் 15 : 1-10

**தலையாலங்கானத்துச் செருவென்றான்**

இவ்வரசன் (முதுகுடுமிப் பெருவழுதி) இறந்த பின்னர்த் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஆட்சி புரிந்தான். பத்து புறநானூற்றுப் பாடல்களிலும், ஒன்பது அகநானூற்றுப் பாடல்களிலும், வேறுசில சிறு பாடல்களிலும் குறிப்பிடப்பட்டிருப்பது மட்டுமல்லாமல், பத்துப்பாட்டில், மிக நீண்ட பாட்டாகிய மதுரைக்காஞ்சி, அதனினும் சிறிய பாட்டாகிய நெடுநல்வாடை ஆகிய இரு பாடல்களின் பாட்டுடைத் தலைவனும் அவன் இவன். அக்காலத்திய பாண்டிய அரசர்களில், இவனே மிகச்சிறந்தவனாதலின் போலும் இவனைப் பற்றிய பாடல்கள், இத்துணைப்

பெருமளவில் கிடைக்கலாயின. இவன், நனி இளையனாக இருக்கும்போது, இவன் காலத்திய சோழ, சேர அரசர்கள் இவனை எதிர்த்துப் படைதொடுத்து வந்தபோது, இவன், பாண்டியர் அரியணையில் அமர்ந்தான். இவன் பகைவர்கள், "நாமோ சிறந்தவர்கள்; மேலும் அனைத்து நிலையாலும் பெரியவர்கள்; நம் பகைவனாகிய இவனோ நனிமிகச் சிறியவன்; ஆனால், வென்று கொள்ளலாம் பொருளோ அளப்பரியன" என எண்ணினர்.

> "விழுமியம்; பெரியம் யாமே; நம்மில்
> பொருநனும் இளையன்; கொண்டியும் பெரிது"
> —புறம் : 78 ;5-6.

படையெடுத்து வந்தாரை, நெடுஞ்செழியன், மதுரையி லிருந்து துரத்தி அடித்தான். புலவர் இவ்வாறு கூறுகிறார்:— "மலர்மாலையினையும், தலையில் மை பூசப்பட்ட யானைப் படையினையும் உடைய, வீரம் செறிந்த போரில் வல்ல பாண்டியன், எக்காலத்தும் நின்று போகாது தொடர்ந்து நடைபெறும் விழாக்கள் மலிந்த, தன் மதுரை மாநகர்க்கு, அணித்தாக நடைபெற்ற போர்க்களத்தில், தம்முள் ஒன்றுகூடி வந்து போரிட்ட, சேர, சோழர்களாம் இரு பெருவேந்தர் களின் கடல் போல் பரந்த பெரும்படையினை, நிலைகுலைந்து போகுமாறு தாக்கி ஒலிக்கும் அவர் முரசுகள், ஒலி அவிந்து போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கத் தோற்று ஓடும் அவர் புறமுதுகைக் கண்டான்".

> "மலர்தார்,
> மையணி யானை, மறப்போர்ச் செழியன்,
> பொய்யா விழவின் கூடற் பறந்தலை
> உடன்இயைந்து எழுந்த இருபெரு வேந்தர்
> கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி,
> இரங்கிசை முரசம் ஒழியப், பரந்து அவர்
> ஓடு புறம் கண்ட." —அகம் : 116 : 12 : 12-18;

இது, அவன் காலத்தில் பாடப்பட்ட பாட்டு அன்று; நெடுஞ்செழியன் காலத்திற்குப் பின்னர், பரணரால், அவருடைய நினைவில் நின்ற நிகழ்ச்சியாகப், பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டுவிட்ட ஒரு கணவன், அப் பரத்தையோடு புதுப்புனல் ஆடினான் என்பது குறித்து ஊரில் பலர் கூறும் அலர் உரை, கூடற்பறந்தலைப்போரில் எழுந்த பேரொலியிலும் அதிகமாம் எனக் கூறப்பட்டுளது.

இப்போர், புறநானூற்றுப் பாட்டு ஒன்றில், இன்னமும் தெளிவாக விளக்கப்பட்டுளது: ''விண்மீன்கள் ஒளிவீசும் வானத்தில், உலகில் பரந்திருக்கும் இருள் நீங்க, உயர்ந்து செல்லும் ஒழுக்கமாம் தன் இயல்பில் தவறாது, கொடிய வெப்பத்தால், மிக்க அச்சத்தைத் தரும் ஞாயிறு, ஒளி விளங்கும் திங்களோடு நிலவுலகில் வந்துவிட்டாற்போல, பகைகொள்ள எவரும் அஞ்சத்தக்க பேராற்றலோடு இன்னது செய்து முடிக்கேமாயின் இன்னது ஆமேம் என்பது போலும் வஞ்சினம் கூறிப் போரிட வந்த, சேர, சோழராம் இரு பெருவேந்தர்களும், களத்தில் இறந்து போகப் போரிட்டு, வார்கொண்டு வலித்துப் பண்ணப்பட்ட, அப்பகைவரின் போர் முரசையும் கைக்கொண்டு, தன்னைச் சூழ்ந்துகொண்டு போரிடும் பகைவீரர்களின் தகுதியும் திறமும் அறிந்து, அதற்கேற்பப் போரிட்டு அழிக்க, அந்நிலையில், களத்தில் உயிரிழந்தாரின் மனைவியர், கருந்துயர் மிக்குத், தம்மார்பில் அறைந்து கொள்வதால், அறிவும் பிறிதாகி அழுவது ஓயாது, கைம்மை நோன்பு மேற்கொண்டு, அதன் அறிகுறியாக, ஆற்று அறல் போல, அடர்ந்து நீண்டு, இளமை அழகு காட்டிடும் கரிய கூந்தலைக் கொய்து கொள்ளும், அக்கொடு நிலையைக் கண்ணுற்ற பின்னரே, தன் போர்த் தொழிலைக் கைவிட்டது, செழிய! நின் கை வேல்!

'மீன்திகழ் விசும்பில், பாயிருள் அகல,
ஈண்டுசெலன் மரபின் தன்இயல் வழாஅது,
உரவுச்சினம் திருகிய உருகெழு ஞாயிறு,
நிலவுத்திகழ் மதியமொடு நிலம்சேர்ந் தாஅங்கு,

உடலரும் துப்பின் ஒன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை உணங்கப் பண்ணிப்,
பிணியுறு முரசம் கொண்ட காலை,
நிலைதிரிபு எறியத் திண்மடை கலங்கிச்
சிதைதல் உய்ந்தன்றோ நின்வேல்! செழிய!
முலைபொலி ஆகம் உருப்ப நூறி,
மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்
ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூர
அவிர் அறல் கடுக்கும் அம்மென்
குவைஇருங் கூந்தல் கொய்தல் கண்டே''3

—புறம் : 25

இம்போருக்குப் பிறகு (கூடற் பறந்தலைப்போர்) வென்ற பாண்டியன், குறுநிலத்தலைவர் ஐவர் படைத்துணை பெற்றுத் தலையாலங்கானம் எனும் இடத்தில் பாடிகொண்டிருந்த பகைவரைத் தொடர்ந்து சென்று தாக்கினான். பகைவர் எழுவரையும், பாண்டியன் வெற்றி கொண்டான்; சேர, சோழ வேந்தர்களோடு, அக்களத்தில் தோல்வி கண்ட குறுநிலைத்தலைவர் ஐவரின் பெயர்கள், அப்போர் நிகழ்ச்சிக்குப் பிறகு பாடப்பட்ட அகநானூற்றுப் பாடல் ஒன்றில் கொடுக்கப்பட்டுள்ளன. ''பிடரிமயிர் கொய்யப்பட்ட குதிரைகள் பூட்டப்பட்டு, வெற்றிக்கொடி பறக்கும் தேரினையுடைய பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானம் எனும் இடத்தில் நடைபெற்ற போர்க்களம், பகைவர் குருதி வெள்ளத்தால் செந்நிறம் பெற, சேரன், சோழன், சினம் மிக்க திதியன், போரில் வல்ல யானைகளைக் கொண்ட, பொன் அணிகள் பூண்ட எழினி, பன்னாடையால் அரித்து எடுக்கப்பெறும் கள்ளால் களிப்புறும் எருமையூரன், மாலை மலர்களின் தேன் மணக்கும் மார்பில் பூசிப்புலர்த்த சாந்தினையுடைய இருங்கோவேண்மான், இலக்கண வகையில் இயற்றப்பட்ட தேரினைக் கொண்ட பொருநன் என்ற இவ்வேழரசர்களின், அதுகாறும் அவர்கள் பெற்றிருந்த வெற்றிப் புகழெல்லாம் அழிந்துபோக, ஒரே பகலில், அவர்களின் போர்

முரசுகளோடு, வெண்கொற்றக் குடைகளையும் கைக் கொண்டு, தன் வெற்றிப்புகழ் உலகெலாம் சென்று பரவும் வண்ணம், அவர்களையும், அவர்தம் படைவீரர்களையும் கொன்று, களவேள்வியும் செய்து முடித்த அந்நாள்.''

''கொய்சுவல் புரவிக், கொடித்தேர்ச் செழியன்,
ஆலங் கானத்து அகன்தலை சிவப்பச்,
சேரல், செம்பியன், சினங்கெழு திதியன்,
போர்வல் யானைப், பொலம்பூண் எழினி,
நார்அரி நறவின் எருமை யூரன்,
தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்,
இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன், என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்
முரசொடு, வெண்குடை அகப்படுத்து உரைசெலக்
கொன்று களம் வேட்ட''. —அகம் : 36 : 13-23.

[இதுவும் மேலே கூறியவாறு ஓர் உவமையாகவே இடம் பெற்றுளது.]

இப்போர்க்கள நிகழ்ச்சிக்குப் பிறகு, அவன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என அழைக்கப் பட்டான்; அப்போர்க்கள நிகழ்ச்சிகளை, உவமைகளாக மேற்கொள்ளும் அளவிற்கு, அப்போர், அவன்காலப் புலவர் களைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. ஆலம்பேரி சாத்தனார் என்ற புலவர், காற்றெனை விரையும் நெடிய தேரினையும், வழங்கத் தவறா வண்மையினையும் உடைய, பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துப் போரை வென்று உயர்த்திய வேற்படை குறித்துப் புகழ்ந்து பேசுகிறார் :-

''காலியல் நெடுந்தேர்க், கைவண் செழியன்
ஆலங் கானத்து அமர்கடந்து உயர்த்த,
வேல்.'' —அகம் : 175 : 10-12

பழந்தமிழ்ப் புலவர்களாம் பேரறிஞர் குழாத்தின், பிற்கால உறுப்பினராம் கல்லாடனார், "பொன்னால் அணி செய்யப் பட்ட, நெடிய தேர்ப்படையினையுடைய பாண்டியப் பேரரசனாம், கணைய மரம் போலும் திண்ணிய வலிய தோளினையும், தன் விருப்பிற்கேற்ப இயங்கவல்ல தேரினையும் உடைய நெடுஞ்செழியன், தன்னோடு பகை கொண்டு போர் தொடுத்து வந்த ஏழரசர்களையும், முற்றவும் வெற்றிகொண்டு, தலையாலங்கானத்துப் போர்க்களத்தில் எழுப்பிய வெற்றி ஆரவாரப் பேரொலியினும் பெரிது, தலைவிக்கும், தலைவனுக்கும் இடையில் ஏற்பட்டிருக்கும் களவுக் காதல் குறித்து, ஊரில் அம்பல் கூறித்திரிவார் எழுப்பும் அவர் உரை" என்கிறார்.

"பொன்அணி நெடுந்தேர்த், தென்னர் கோமான்
எழுவுஉறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்
நேரா எழுவர் அடிப்படக் கடந்த
ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிதே"

—அகம் : 209 : 3 - 6

இப்போர், மதுரைக் காஞ்சியிலும் விளக்கப்பட்டுளது: அதில் இவ்வாறு கூறப்பட்டுளது: "காற்றுபோல் விரைந்து சென்று, பகைவர் நாடுகள் அழிந்து போக ஆங்கெல்லாம் எரியைப் பரப்பித், தலையாலங்கானத்துப் போர்க்களத்தில் பகைவர்க்கு அச்சம் மிகுமாறு இருந்து, முடிமன்னர் இருவரும் குறுநிலத் தலைவர் ஐவரும் ஆக எழுவரும் இறந்து போகப் போரிட்டு, அப்பகைவரின் போர் முரசுகளைக் கைக்கொண்டு களவேள்வியும் கண்டு புகழ் கொண்ட, மாற்றாரை அழிக்கும் ஆற்றல் மிகு உயர்ந்த புகழ் கொண்ட வேந்தன்."

"கால்என்னக் கடிது உராஅய்,
நாடுகெட எரிபரப்பி
ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்த,
அரசுபட அமர் உழக்கி

முரசுகொண்டு களம் வேட்ட
அடுதிறல் உயர்புகழ் வேந்தே!''
—மதுரைக்காஞ்சி: 125 - 130

வெற்றிகண்டு எடுத்த களவேள்வி, மாங்குடிகிழாரால் புறம் 26ல் விரிவாக விளக்கப்பட்டுளது:- மிக்க ஆழம் வாய்ந்த, பரந்த கடலில், காற்றால் உந்தப்படும் மரக்கலம், அந்நீரைக் கிழித்துக்கொண்டு ஓடுவதுபோல, போர்க்களிறுகள், போர்க் களத்துள் புகுந்து பிளவுபடுத்தி இடம் உண்டாக்கிவிட, அவ்வகையால் இடம் அகன்ற களத்தில், வேலேந்திப் புகுந்து, இருபெரும் வேந்தர்களும் இறந்து போகக் கடும்போரிட்டு, அவ்வெற்றிப் புகழ் பரவ, அவர் போர் முரசுகளைக் கைக் கொண்டதோடு அமையாது, அப்பகையரசர்களின் முடித் தலைகளை அடுப்பாக அடுக்கிப், பகைவரின் செங்குருதியாம் உலையில், தசையையும், மூளையையும் இட்டு, வெட்டுண்டு வீழ்ந்து கிடக்கும் வீரவளை அணிந்த தோள்களைத் துடுப்பாகக் கொண்டு துழாவிச் சமைத்த உணவுகொண்டு, களவேள்வி செய்து முடித்த, கொல்லும் போர்வல்ல செழிய! ஆன்று அமைந்த கேள்வி நலத்தையும், ஐம்புலன் அடக்கிய கோட்பாட்டினையும், நான்கு வேதங்களை உணர்ந்த அறிவு மேம்பாட்டினையும் உடைய அந்தணர்கள், சுற்றமாக இருக்க, உன் ஆட்சிக்கு அடங்கிய வேந்தர்கள் எல்லாம், ஏற்ற ஏவல்களை இனிதே முடிக்க, நிலைபேறுடைய வேள்வியைச் செய்து முடித்த அதற்குத் துணையாக வாய்த்த வாள் வலியுடைய பெருவேந்தே! பாண்டியன் பகைவர் எனும் பெயர்பெற்று, உன்னோடு போரிடமாட்டாது உயிரிழந்து, துறக்கம் புகுந்து வாழும் நின் பகைவர்கள், தவஞ் செய்வார் யாவரினும் நனி மிகச் சிறந்தோரே ஆவர்.''

'நளிகடல் இருங்குட்டத்து,
வளிபுடைத்த கலம் போலக்,
களிறுசென்று களன் அகற்றவும்,
களன் அகற்றிய வியல் ஆங்கண்,

ஒளிறு இலைய எஃகு ஏந்தி,
அரைசுபட அமர் உழக்கி,
உரைசெல முரசு வெளவி,
முடித்தலை அடுப்பாகப்,
புனல்குருதி உலைக்கொளீஇத்,...
தொடித்தோள் துடுப்பின் துழந்த வல்சியின்,
அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய!
ஆன்ற வேள்வி, அடங்கிய கொள்கை,
நான்மறை முதல்வர் சுற்ற மாக,
மன்னர் ஏவல் செய்ய, மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே!
நோற்றோர் மன்ற, நின் பகைவர், நின்னொடு
மாற்றார் என்னும் பெயர் பெற்று,
ஆற்றார் ஆயினும், ஆண்டு வாழ்வோரே''

—புறம்: 26.

புறம் 24, நெடுஞ்செழியன் மழலைக் கூற்றம், முத்தூற்றுக் கூற்றங்களை இணைத்துக்கொண்டதாகக் கூறுகிறது. [முத்தூறு வெற்றி, அடியார்க்கு நல்லாரால் முத்தூர் என வழங்கப்பட்டு, அவ்வுரையாசிரியரால், பாண்டிய முன்னோன் ஒருவன் செயலாகக் கூறப்பட்டுளது; ''அங்ஙனமாகிய நிலக்குறைக்குச் சோழ நாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும், சேரமானாட்டுக் குண்டூர்க் கூற்றமும் என்னும் இவற்றை, இழந்த நாட்டிற்காக வாண்ட தென்னவன்'' சிலம்பு: 11: 17-22 உரை—அது ஒரு பழங்கதை; ஆனால், நெடுஞ்செழியன் வெற்றி, அவன் காலத்தே வாழ்ந்த ஒருவரால் உறுதி செய்யப்பட்ட ஓர் உண்மை நிகழ்ச்சி.] ''வரையாது வழங்கும் பெரிய கொடை வள்ளலாம் வேளிர் தலைவனாம் எவ்வி என்பானுக்குரிய, வயல்களுக்கு நீர் வழங்கும் எண்ணற்ற மதகுகளைக் கொண்ட மிழலைக் கூற்றத்தோடு, நெல்வயல்களின் கயல்மீன்களைக் கவர்ந்து

உண்ணும் நாரைக்கூட்டம், வயல்களின் அயலிடத்தவான நெற்போர்களில் உறங்கும், நெல் வளம் மிக்க, பொன்னால் ஆன முகபடாம் அணிந்த யானைகளைக் கொண்ட பழம் பெரும் குடியினராம் வேளிர்க்கு உரிய முத்தூற்றுக் கூற்றத்தையும் கைக்கொண்டே வெற்றிக்கு உரிய, வெண்கொற்றக் குடையினையும், வெற்றிக்கொடியால் அழகு பெறும் தேரினையும் உடைய செழிய!''

''ஓம்பா ஈகை மாவேள் எவ்வி
புனலம் புதவின் மிழலையொடு, கழனிக்
கயல்ஆர் நாரை போர்வில் சேக்கும்
பொன்அணி யானைத் தொன்முதிர் வேளிர்
குப்பை நெல்லின் முத்தூறு தந்த,
கொற்ற நீள்குடைக், கொடித்தேர்ச் செழிய!''

—புறம்: 24 : 18 - 23.

பிற பாக்களால் கொடுக்கப்படும் செய்தியை, மதுரைக் காஞ்சி உறுதிசெய்கிறது. அவை கொடுக்கும் செய்திகளோ, மேலும் சில செய்திகளை இணைக்கிறது. நெடுஞ்செழியனின் மேற்கூறிய வெற்றிகளோடு, அவன் நெல்லால் பெயர் பெற்ற நெல்லின்ஊர் எனும் ஊரைக் கைக்கொண்டதையும். [''சீர் சான்ற உயிர் நெல்லின் ஊர் கொண்ட உயர் கொற்றவ'' — மதுரைக்காஞ்சி : 87 - 88.] சேரப் பேரரசுக்கு அடங்கிய குட்டநாட்டு மக்களை வெற்றி] இது, உறுதியாக, தமிழ்நாட்டு எல்லைக்கண் உள்ள பேரூரும், பழங்காலத்தில் தமிழ்நாட்டின் துறைமுகமும் ஆன நெல்லூரே ஆகும். நச்சினார்க்கினியர், இந்நகரை, மதுரைக்கு வடக்கில் நெடுந்தொலைவில் இல்லாத, சோழநாட்டுக் கடற்கரை ஊராம் சாலியூராகக் கொள்வதையே விரும்புகிறார். நெடுஞ்செழியன், இதைத் தன் கப்பற் படைத்துணையால் கைப்பற்றினான்.] கொண்டதையும் [''பல்குட்டுவர் வெல்கோவே''—ஷை : 105] செல்வ வளம் கொழிக்கும் முது வெள்ளிலை என்ற நகரையும் அழும்பில் என்ற நாட்டினையும் கைப்பற்றியதையும்,

"முதுவெள்ளிலை....தொழில் கேட்ப"—ஷை : 119 - 124 ; 'அரும்பில் அன்ன நாடிழிந்தனரும்"—ஷை : 345.] அது, குறிப்பிடுகிறது.

நெடுஞ்செழியன் குறித்த பாடல்களில், மதுரைநாட்டை, ஆரிய மயமாக்கும் நிலை, விரைந்து முன்னேறுகிறது என்பது காணப்படும். மேலே எடுத்துக் காட்டிய ஒரு பாட்டில், நான்கு வேதங்களிலும் வல்ல பிராமணர்களின் வழிகாட்டு நெறியின்கீழ், வேந்தன் வேள்வியாகம் செய்தான் என்பது கூறப்பட்டுளது. ஒருவன் பிறந்த நாண்மீன் குறிப்பிடப்பட்டு, "நீ, நீடு வாழ்க!" என வாழ்த்துதற்கு மாறாக, "நீ பிறந்த நாண்மீன் நிலைமேலுடையதாக நிற்குமாக!" எனும் வாழ்த்தும் நிலைபற்றிய ஒரு குறிப்பும் உளது. ["நின்று நிலைஇயர் நின் நாண்மீன்". —புறம் : 24 : 24.] இது, பெரும்பாலும், தென்னாட்டில் இடம் பெற்று விட்ட ஓர் ஆரிய முறையாகும். பொதுவாக, அமைப்பு முறையில், பட்டினப்பாலை போன்றதான மதுரைக்காஞ்சி, முன்னது, காவிரிப்பூம்பட்டினத்தை விளக்கிக் கூறுவது போலவே, மதுரை மாநகர் அமைப்பை விரித்து உரைத்து, அந்நகரில் உள்ள இறைத்தன்மை வாய்ந்த இடங்களையும் குறிப்பிடுகிறது:

## மதுரையில் ஆகம வழிபாட்டு நெறிகள்

ஆகம வழிபாட்டு நெறிகள், மதுரை மாநகரில் விரைந்து பரவியதற்கான அகச்சான்றுகளை மதுரைக் காஞ்சியில் நாம் பெறுகிறோம். அப்பாட்டின் ஆசிரியர் இவ்வாறு விளக்கியுள்ளார் :- "நீர், நிலம், நெருப்பு, காற்று, நால்வேறு திசைகளைக் கொண்ட வான்வெளி ஆகிய ஐம்பெரும் பூதங்களையும் ஒருசேரப் படைத்த, மழுவாகிய வாட்படையுடைய பெரியோனாம் சிவனை முதல்வனாகக் கொண்டு, தெய்வத் தன்மையால், நிறைந்த ஒளியினையுடைய வாடாத மலர்களையும், இதழ்குவியாக் கண்களையும், அவியாகிய உணவினையும் உடைய, ஆக்கம் தரும் மாயோன், முருகன்

முதலாம் தெய்வங்கட்கு, அகத்தும், புறத்தும் அழுக்கற்றுத் தூய்மையுடையராய், மாற்றுதற்கரிய இயல்பினதான உயர்ந்த பலிகளைக் கொடுத்து வழிபடுவதற்கு, அந்திப் போதில், விழாக்குறித்து இசைக்கருவிகள் முழங்கும்."

''நீரும், நிலனும், தீயும், வளியும்
மாக விசும்போடு ஐந்து உடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக,
மாசற விளங்கிய யாக்கையர், சூழ்சுடர்
வாடாப்பூவின், இமையா நாட்டத்து,
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்
அந்தி விழவின் தூரியம் கறங்க''

—மதுரைக்காஞ்சி : 453-460.

அவ்விளக்கம், இன்றைய நடைமுறையில் இருக்கும், எந்த வழிபாட்டு முறையோடும் இனம்காண மாட்டா அளவு, தெளிவற்றதாக அமைந்துளது. உறுதியாக வரையறுக்கப் பட்ட, பிற்காலத்திய வழிபாட்டு நெறி எதனோடும், இனம் காட்டமாட்டா அளவு, வழிபாட்டு முறையும், பெரும்பாலும் நெகிழ்ச்சி உடையதாகவே அமைந்துளது.

இதுவல்லாமல், விஷ்ணு வழிபாடும் இடம்பெற்றிருந்தது. பேரொளி வீசும் சிறந்த அணிகலன்களையுடைய, அறிவு தன்மை வாய்ந்த சிறு பிள்ளைகள், கூட்டத்தில் பிரிந்து போய்விடாவாறு காத்தற்பொருட்டுத், தம் கைகளால், இறுக அணைத்து, அவர் மேல் கொண்ட அன்புப் பெருக்கால் ஆரத் தழுவிக் கொண்டு, மகரந்தம் செறிந்த, தாமரை மலரைப் பற்றினாற் போன்று, அப்பிள்ளைகளின் கைகளைத், தம் கைகளால் பற்றிக் கொண்டு, தாமும் அவரும் ஓரிடத்தே இருக்க, கண்டார் விரும்பும் அழகு வாய்ந்த பேரிளம் பெண்டிர், வழிபாட்டுக்கு வேண்டும், பூவும், புகையும்

காண்டு நாவார வாழ்த்துதலால் சிறப்புற்று, அவர்களைக் ாக்கும் கடவுளாம் விஷ்ணு இடங்கொண்டகோயில்.''

''திண்கதிர் மதாணி ஒண்குறுமாக்களை
ஓம்பினர்த் தழீஇத், தாம் புணர்ந்து முயங்கித்,
தாதுஅணி தாமரைப் போது பிடித்தாங்குத்
தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்,
காமர் கவினிய பேரிளம் பெண்டிர்,
பூவினர், புகையினர், தொழுவனர், பழிச்சிச்
சிறந்து புறம் காக்கும் கடவுள் பள்ளி.''

—மதுரைக்காஞ்சி ; 461-467.

வைதீக வழிபாட்டு முறையும், சிலரால் பின்பற்றப் பட்டது. ''சிறந்த வேதங்களை, அவற்றின் பொருள் விளங்குமாறுபாடி, அவை கூறும் மிகச் சிறந்த ஒழுக்க நெறியில் வாழ்ந்து, நால்வகை நிலவளமும் வாய்ந்த இந்நில உலகில் சிறந்த தலைமையுடையார் தாம் ஒருவரே ஆகுமாறு உயர்ந்து, உயர்ந்த நிலையுடையதான வீட்டுலக இன்பத்தை, இவ்வுலகில் இருந்தவாறே அடைவதற்கு வழியாக, அற வழியில் திரியாது நின்று, உயிர்கள் மாட்டு அன்பு செலுத்தும் உயர்ந்த உள்ளம் வாய்ந்த பெரியார்கள், விரும்பி இனிதே வாழும் மலையைக் குடைந்து ஆக்கினாற்போலும், அந்தணர் குடியிருப்புக்கள்.''

''சிறந்த வேதம் விளங்கப் பாடி,
விழுச்சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து,
நிலம்அமர் வையத்து ஒருதாம் ஆகி,
உயர்நிலை உலகம் இவண் நின்று எய்தும்,
அறநெறி பிழையா, அன்புடை நெஞ்சின்
பெரியோர் மேஎய் இனிதின் உறையும்
குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளி.''

—மதுரைக்காஞ்சி : 468-474.

சமண, பௌத்த முனிவர்கள், அடுத்த நூற்றாண்டில் நகரத்தே மடங்களில் வாழ்வது போல் அல்லாமல், நகர்ப் புறத்தே பூம்பொழில்களில் வாழ்ந்தனர்: "வண்டுகள் வந்து மொய்க்குமாறு, மலரும் பருவம் வந்துற்ற, தேன்நிறைந் திருக்கும் தோற்றத்தை உடைய மலர்களையும், மணம் தரும் புகைகளையும் ஏந்தி, இரவு உண்ணாவிரதம் கொண்டோர், வாழ்த்தாநிற்ப, இறந்த காலத்தையும், எதிர்காலத்தையும், இன்று இவ்வுலகில் நடைபெறும் நிகழ்கால நிகழ்ச்சிகளோடே உணர்ந்து. தேவருலக நிகழ்ச்சிகளையும், இந்நிலவுலக நிகழ்ச்சிகளையும் முழுமையாக உணரவல்லாரும், தமக்கு ஏற்புடைய விரதங்களையும், அவ்விரதங்கள் மேற் கொள்வதால் தளர்ந்துவிடாயாக்கை நலத்தையும், கல்வி கேள்விகளால் நிறைந்தும் செருக்குதல் அறியா அடக்கத் தையும் உடைய ஆன்றோர் பெருமக்கள், ஒன்று கூடியிருந்து நோற்பதற்குக் கல்லைப் பொளிந்தாற் போன்ற ஒடுங்கிய வாயையுடைய நீர்நிறை குண்டிகையைப், பல வடங்களைக் கொண்ட நூல் உறியில் ஏந்தி, உலகத்து உயிர்களுக்கு அருளுதலையே செய்ய இருந்து அறம் நோற்கும், கண்டார் வியக்கும் கவின்மிகு பூஞ்சோலைகளாம் அமண் பள்ளிகள்."

"வண்டுபடப் பழுநிய, தேன்ஆர் தோற்றத்துப்,
பூவும், புகையும் சாவகர் பழிச்சச்,
சென்ற காலமும், வரூஉம் சமயமும்,
இன்று இவண் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்து,
வானும், நிலனும், தாம் முழுதுணரும்,
சான்ற கொள்கைச், சாயா யாக்கை,
ஆன்று அடங்கு அறிஞர், செறிந்தனர் நோன்மார்,
கல்பொளித்தன்ன இட்டுவாய்க் கரண்டைப்
பல்புரிச்சிமிலி நாற்றி, நல்குவரக்,
..........................................
இறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கை"
—மதுரைக்காஞ்சி : 475-483 : 487.

மேலே எடுத்துக் காட்டிய நான்கு பகுதிகளுக்கும் பொருள்விளக்கம் காண்பதில், உரையாசிரியர் பொருள் விளக்கத்திலிருந்து முழுதும் மாறுபட்டுள்ளேன்.

இவ்வடநாட்டு வழிபாட்டு நெறிகள், பழைய தமிழர் வழிபாட்டு நெறிகளை, இடங்கொண்டு விடுவதோ, அழிந்து விடுவதோ செய்யவில்லையாதலாலும், அரசர்களின் பேராதரவைப் பெறவில்லையாதலாலும், ஏழாவது முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரையான காலத்தில், அவை நடந்து கொண்டதுபோல், தமக்குள்ளே கடுமையான போர் மேற்கொண்டு விடாமல் அடுத்தடுத்து இயங்கி வந்தன.

### மதுரை மாநகர் : ஒரு விளக்கம் :

திருவாளர் சுந்தரம்பிள்ளை அவர்கள், மதுரைக் காஞ்சியின் பெரும் பகுதியை, மதுரை மாநகரின் விளக்க உரையாக வடித்துத் வந்துள்ளார். மிகத்தெளிவாக உளது என்றாலும், அஃது ஒரு கற்பனைக் காட்சி அன்று: மாறுக, இப்பாட்டில் இடம் பெற்றிருக்கும் செய்திகளையே அடிப்படையாகக் கொண்டது. அது, சென்னைக் கிறித்துவக் கல்லூரி 1901 ஆம் ஆண்டு மலரில் வெளியிடப்பட்டது: ஈண்டு, அது எடுத்தாளப்பட்டுளது; “கதவில் பொறிக்கப் பட்டிருக்கும் காவல் தெய்வத்திற்கு, வழிபடு முறையாக, நாள்தோறும் எண்ணெய் வார்ப்பதால் கறுத்துக் காணப்படும் கதவுகள் பொறுத்தப்பட்ட, மழைமேகங்கள் தவழும், உயர்ந்த மலைபோலக் காட்சி தரும் வாயிலை அடைகிறோம். புதுவெள்ளம் பெருக்கெடுத்தோடும் வையைபோல, மக்கள் வெள்ளம் வழங்கும், அவ்வாயில் ஊடே, நெருக்கித் தள்ளிக் கொண்டு உட்புகுகிறாம். தெருக்கள் ஆறுபோல் அகன்று உள்ளன. தெருவின் இருமருங்கிலும் உள்ள வீடுகள், காற்றும் ஒளியும் நன்கு உட்புகுவதற்கு ஏற்ப, கணக்கிலாக் காலதர்களைக் கொண்டுள்ளன. தெருவுகளில் போக்குவரவும் இடையற்றுப் போகா: எழும் பேரொலியும் இடையற்றுப் போவதில்லை. அத்தகு தெருவுகளில், நாளின் இருபத்து

நான்கு மணிகளிலும் நிகழும் பல்வேறு சிறப்புகளைப், புலவர், மீண்டும் நினைவில் கொண்டு எண்ணிக் காண்கிறார்.

''பெரும்பாலும், விடியற்போதை உடன் கொண்டே, வைகை ஆற்றின் பக்கம் இருந்து நகரை நோக்கிச் செல்லத் தொடங்குகிறோம். ஏறத்தாழ ஏழுமணி அளவில் தெருவுகளை அடைகிறோம். என்றாலும் அவை, அப்போதே நிறைந்து, விரைந்து தொழில்படத் தொடங்கிவிட்டன.

கடல் அலைபோல் மோதும் மக்கள் பெருங்கூட்டம், வருவதும் போவதுமாக எங்கும் அலைந்து கொண்டிருந்தது: பல்வேறு மொழியினரும் ஒரு சேர எழுப்பும் பேரொலிக் கலவையில், காற்றால் போதுண்ணும் கடலின் பெருமுழக்கே போலும் முழக்கினைக் கேட்பதல்லது. எதையும் தெளிவாகக் கேட்பது நம்மால் இயலவில்லை. நால்வேறு திசைகளிலும், நிகழும் முரசு முழக்கமும், பாட்டும், ஆட்டமும், வாணிகத்திலுல், இன்ப நுகர்ச்சிகள் எழுப்பும் பேரிரைச்சலே பெரிதாம் என்பதை உணர்த்துவதாக இருக்கும். நம் காதுகள், இவ்வாறு, எல்லாத் திசைகளிலிருந்தும் எழும் பல்வேறு ஒலிகளால் தாக்குற்றிருக்க, சூழ இருப்பனவற்றைக் கண்டு களிப்பதில், நம்மை, மீண்டும் ஒப்படைத்துக் கொள்கிறோம். முதன் முதலில் நம் கண்ணில் படுவன எங்கு நோக்கினும், நம் கண்களை மறைக்கும் கொடிக் காடுகள். நகரில், காலம் தவறுமல் முறையாக நடைபெறும் விழாக்கள் குறித்து ஏற்றிய கொடிகள் காற்றில் பறக்கவிடப்பட்டிருக்கும் ஒருபால்; பெரும் படைத்தலைவர்கள், நாட்டிற்காக ஆற்றிய அரும் பணிகளைப் பாராட்டி எழுப்பிய கொடிகள், அலை அலையாகப் பறந்து கொண்டிருக்கும் மற்றொரு பால்; இங்கும், அங்கும் காணும் இடம் எங்கும் விற்கும் கள்ளின் இணையிலா நலம் நவிலக் கள்கடைகள் தோறும் கட்டிவிடப் பட்டிருக்கும் இன்பத் துகிற்கொடிகள் களிநடம் புரியும் ஒவ்வொரு வாணிகம் அல்லது வணிகக் குழுவும், தத்தமக்கே உரிய தனித்தனிக் கொடிகளையும் கொண்டிருந்தன, நாலா பக்கங்களிலும் அலைந்து கொண்டிருக்கும் நம் கண்களை,

ஆங்கிருந்து மீட்டு, நமக்கு அணித்தாக உள்ளனமீது போக்கின், நம்மைச் சூழ இருக்கும் மக்கள் கூட்டம், பண்ணியம், பன்னிறமலர்கள், மணமாலைகள், மணம் தரு பொருள்கள். வெற்றிலை, பாக்கு, மற்றும் இன்ன பிற பொருட்களை ஏந்திவிற்கும் சிறுவணிகர்களை மையமாகக் கொண்டு, சின்னம் சிறு வட்டங்களாகத் தனித்தனியே சுழன்று சுழன்று வருவது காணலாம். மதுரை, ஒருபடைத்தள நகரமும் ஆம் ஆதலின். மாநகர் வீதிகளின் போக்குவரத்து, அவ்வப்போது, அரசனின் நாற்படை நடமாட்டத்தால் நிலை குலைந்து போவதும் உண்டு. கொடிய சுழற்காற்றால் மேலுண்டு நங்கூரக் கல்லோடு பிணிக்கப்பட்ட வலியகயிறு அறுபட்டுப் போகக் கடலின் நெடுஞ்சுழியில் அகப்பட்டு அலையும் கலங்கள் போலப், போர்க்களிறுகள், கட்டுத்தறிகளோடு பிணிக்கப்பட்ட கயிறுகளை அறுத்துக்கொண்டு, கூடத்தினின்றும் வெளிப்பட்டு, வீதிகளில் புகுந்து விடும். தேர்கள், காற்றெனெ விரையும்: படைப் பயிற்சி குறித்துக் குதிரைகள் விரைந்து நடைபோட்டுச் செல்லும். இவை அனைத்திலும் கேடாகக் கள்ளுண்டு அளிக்கும் படைவீரர் கூட்டம். இடையூறு விளைக்கும் இவை, வீதிகளின் ஊடே செல்லுங்கால், மக்கள்கூட்டம், உயிருக்கே ஊறுநேர்ந்து விட்டாற்போல் அஞ்சி விதப்புற்று, இங்கும் அங்கும் ஓடிச் சிதறுண்டு போவர். இவ்வமளி அடங்கி, அமைதி நிலவ சிறிது நாழிகை ஆகும். அதன் பின்னர், பண்டங்களைத் தலையில் சுமந்து விற்பாரும், சின்னம் சிறு வணிகர்களும், வீதியின் இருமருங்கிலும் உள்ள பலவடுக்கு மாளிகைகளின் நிழல்களில், தம் வாணிகத்தை மீண்டும் தொடங்கிவிடுவர்; தங்கள் மகளிரின்த்துப் பலவீனத்தைத் தெரிந்து வைத்திருக்கும் முதிய பெண்டிர் சிலர், மனைகளின் அகத்தே வாழ்வாரி, வெளிப்போந்து, தவறாது வாங்கிச்செல்லத் தூண்டும் வகையில், தாம் விற்கும் இனிய பணியாரங்கள், மணம்நாறும் மலர்கள் ஆகியவற்றின் நலங்களை நாவாரக் கூறியவாறே, வீடு வீடாகச் செல்வது, களிப்பூட்டும் கண்கொள்ளாக் காட்சி ஆகும். கார்மேகம் குடித்து விடுவதால் குறைவதோ,

கடுமழைவரவால் மிகுவதோ செய்யாது, என்று ஒரு படித்தாகவே இருக்கும் கடல்போல, மக்கள் வாங்கி விடுவதால் குறைந்து போவதோ, புதுவரவால் மிகுந்து போவதோ இல்லாமல், வாணிகம், என்றும் ஒரே படித்தாக, இரவு பகல் எப்போதும் நடைபெற்றுக் கொண்டேயிருக்கும்.

நகரில், காலம் விரைந்து கடந்து கொண்டே உளது, நாட்பொழுது, பையப் பையக் கழிய, காட்சியும் மாறுகிறது. மாலைப் பொழுது கழியும் அக்காலத்தில், அந்நகரத்துப் பெரு நிதிக்கிழவர்கள், காலாட்கள் சூழ்ந்துவரத் தேர் மீதும், குதிரைகள் மீதும், வீதிகளில் உலாவருவர். அந்திவானத்தைச் செந்நிறத்தை நினைவூட்டும், செந்நிறம் வாய்ந்து, ஒள்ளிய பூத்தொழில் செய்யப்பட்ட மேலாடை அணிந்திருப்பர். பொற்பிடி வாய்ந்த வாள், அவர் இடையில் கட்டித் தொங்க விடப்பட்டிருக்கும்: இறவாப் புகழ் வாய்ந்த வெற்றி மாலைகள் அவர் மார்பில் கிடந்து புரளும். மிகப்பெரும் செல்வர் ஆதலின், நாளின் வெப்பம் மிகு நாழிகைப்போதினை, இவர்கள், தங்கள் இல்லத்தே, இன்பச் சூழ்நிலைகளில், இனிதே கழிப்பர். வானுலக மாதர்கள் வந்து குதித்து விட்டனரோ என எண்ணி வியக்கத்தகும் அவர்களின் மகளிர், வானளாவ வரிசை வரிசையாக உள்ள மாடங்களின் நிலா முற்றங்களிலே காட்சி அளிப்பர்: அவர்கள் மீதிருந்து எழும் நறுமணம், நகரின் நால்வேறு தெருக்களிலும் சென்று மணக்கும். அவர்தம் முகங்கள், மலைமுகட்டில் கூட்டப் பட்டுக் காற்றில் ஆடிக் கொண்டிருக்கும் கொடிகளால் அவ்வப் போது மறைக்கப் படுவதால், முகிலால் மறைப்புறும் முழுமதி போல் காட்சி அளிக்கும்.

வலியரான் மெலிவுற்று முறை கேட்டு வருவார், நீதி கிடைக்குமோ, கிடைக்காதோ என்ற அச்சமோ, தோல்வி உற நேர்ந்து உள்ளத்தில் நடுக்கமோ கொள்ளாவாறு, ஒருவர் மீது வெறுப்போ, பிறிதொருவர் பால் விருப்போ கொண்டு விடாமல், துலாக் கோல்போல், நடுநிலை பிறழாது, நின்று தீர்ப்பு வழங்கும் அறங்கூர் அவை, அண்மையில்

அமைந்திருக்கும். நன்மை தீமைகளைக் கண்டறியவல்ல அறிவாற்றலால் சிறந்து, உள்ளத்தைத் தீதின்பால் செல்ல விடாது அடக்கி, தம்மை விட்டு அகன்றுவிடாவாறு. அன்பையும், அறனையும் தம்மகத்தே அடக்கிப், பழியொடு பட்டன தம்மை அண்டாவாறு அகற்றிப் பெரும்புகழ் வாய்ந்து, காவிதிப்பட்டம் வழங்கப்பெற்ற அமைச்சர் பெருமக்களின் பெருமனைகள் அடுத்து அமைந்திருக்குக். கொடுப்பது குறைபடாக், கொள்வது மிகைகொளா, வணிக அறம் பிழையாப் பெருஞ்செயலாலும், மாநிதி உடைமையாலும் புகழ் வாய்ந்த, மலைபடு பொருட்கள், நிலந்தரு பொருட்கள், கடல்படு பொருட்களாம் பல்வகைப் பண்டங்களில் வாணிகம் நடாத்தும், நாடாளும் மன்னர் நிகர். வணிகப் பெருமக்களின் வாழிடங்கள், அடுத்து இடப்பெற்றிருக்கும். அரசியல் அங்கமாம், ஐம்பெருங்குழுவில், அமைச்சர் நீங்க உள்ள நால்வராம், புரோகிதர், படைத்தூதுவர், ஒற்றர் ஆகியோர் குடியிருப்புக்கள் அடுத்து வரும். இவ்விடங்களை அடுத்து, சங்கறுத்து வளையல் முதலியன வனைவார், முத்து மணிகளுக்குத் துளையிடுவார், பொன்னணி புனையும் தட்டார், செப்புக்கலங்கள் செய்வார், ஆடைகள் நெய்வார், அழகிய உடைகள் தைப்பார், மணப்பொருளும், மலர்களும் விற்பார், எத்தகு நிகழ்ச்சியையும், இனிய உவமைகள் மூலம், வண்ணக்கலவையில் வரைந்து காட்டவல்ல ஓவியர் போலும் கைவினைஞர்கள் வாழும் குடியிருப்புக்கள் வரிசை வரிசையாக இடம் பெற்றிருக்கும். இவர்களும், இவர் போலும் பிறருமாகிய மாநகரத்து மக்கள், வாணிகம் கருதியும், வளமார் இன்ப நாட்டம் கொண்டு, வீதிகளில், இயங்குதற்கு இனி இடம் இல்லையாமாறு வந்து குவிந்து விடுவதால், நாம், ஒருவர் காலோடு, ஒருவர் கால் வந்து நிற்க வேண்டியதாகிறது. அம்மக்கள் கூட்டம் எழுப்பும், காது செவிடு படுத்தும் பேரொலிகள் ஒருபால் இருக்க, நகரின் நால்வேறு தெருக்களிலும், பலாச்சுளை, மாங்கனி, மற்றும் பல்வேறு கனிவகைகள், காய்கள், கீரைகள், கற்கண்டு, உண்டற்கினிய வள்ளிக்கிழங்கு, உண்பார் அனைவரும்,

புகழப்பண்ணப்பட்ட, இறைச்சி கலந்த இனிய சோறு ஆகிய வற்றை, வருவார்க்கெல்லாம் விருந்தாகப் படைப்பது நிகழும் அந்தி அங்காடியின் ஆரவாரம், நாளங்காடி ஆரவாரத்திலும் மிக்க ஒலிக்கும். ஆங்குக்காணலாம் அத்துணைக் காட்சிகளும், காற்றால் கொண்டு வரப்பட்டு கரை சேர்ந்திருக்கும் கலங்கள், பண்டங்கள் இறக்கப்பட்டும், ஏற்றப்பட்டும், பாய்விரித்த, எழுந்து அடங்கும் கடல் நீரில் மீண்டும் புகுந்து ஓடும் கடற்கரைக் காட்சியைக் காட்ட வல்லவாம்.

ஞாயிறு வீழந்து விட்டது: திங்கள் எழுந்து விட்டது. என்றாலும், நகரம், இன்னமும் ஓய்வு காணவில்லை. மனைகளில் விளக்கேற்றல், மாநகரத்து அழகிய மகளிர், தங்களை, இன்ப நாட்டங்களுக்குத் தயார் செய்து கொள்ளும் அறிகுறியாய் அமைந்தது. அதுபோலவே, ஆடவர், மகளிர் என்ற இரு சாராரிலும், நாணித்தலைகுனியவைக்கும் பழிமிகு இழிகுணம் வாய்ந்தார், புறம் போந்து திரிவதற்கும், அவருள்ளும் ஒரு சிலர், பாகனையே கொன்று வீழ்த்துமளவு, களிறுகள் மதங்கொண்டு விடும்போது, அவை, மேலும் ஓடாவாறு, அவற்றின் கால்களைக் குத்திப் புண்ணாக்கித் தடுக்கும் வண்ணம், அவற்றைச் சுற்றிக் கொட்டப்பட்டிருக்கும் ஆணிகள், தம் கால்களை உறுத்தி ஊறு விளைப்பதையும் உணர்ந்து கொள்ள இயலாவாறு, கள்ளை மிகக்குடித்து மயங்குவதற்கும், அதுவே ஏற்புடைக் காலமாம். ஆனால், பிறரால் பெரிதும் மதிக்கத் தக்க பெருமக்களும், அத்தெருக் களில் காணப்படுவர், அண்மையில் முதல் மகவு ஈன்ற இளமகளிர், ஈன்ற புனிறு தீர்ந்து புனிதம் பெறக் குளத்தில் சென்று நீராடப் போவர். முதற் கருவுற்ற இளமகளிர் இனிதே மிகப்பெற்று, அவரொப்ப வாழ்வு பெறுவான் வேண்டித் தேவராட்டியைப் பணிந்து வழிபடப் புறம் போவர், நடந்தனவும், நடக்க இருப்பனவும் அறிந்து உரைக்கும் வெறியாடு வேலன் குலத்து வந்தார், காதல் நோயுற்று வருந்திக் கிடக்கும் இளமகளிர் மனைகளில் வந்து குழுமி, அந்நோய், எந்தக் கடவுளால் வந்தது எனக் கண்டு கொள்வரோ, அக்கடவுள் புகழ்பாடும் பாக்களைக் காது

செவிடுபடப் பாடி, அக்கடவுளின் சினத்தைத் தணிவிப்பர். இவையல்லாமல், ஒவ்வொரு தெருவும், அவற்றிற்கே உரிய ஆடல்களாலும், ஆரவாரம் மிக்க களியாட்டங்களாலும் நிறைவுற்றிருக்கும்.

ஆடலும் பாடலும், படிப்படியாக உரம் இழந்து அடங்கிப் போகும். நடுயாமம் வரையும், இரவு இவ்வாறு கழிந்தது. சிறுகடையாளர்கள், மூங்கிலிலான படல்களைக் கால் இறக்கித் தாழ்த்திக் கொண்டு உறங்கலாயினர்: இனிய தின்பொருள்களை விற்கும் எளிய வணிகர், அக்கடைகள் முன்னரே கிடந்து உறங்கலாயினர்; கூத்தாடுவாரும், வேறுபல இன்பக் களியாட்டம் காட்டுவாரும், அவ்வாறே ஓய்வு கொள்வாராயினர். அலை யோசை அடங்கிய கடலே போல், மாநகரம், உறக்க மயக்கத்தால் போர்க்கப்பட்டுவிட்டது. மதுரை மாநகர், மீண்டும், கடலே போல் நிரந்தர ஓய்வு கொண்டு விடவில்லை. காரணம்: ஒழுக்க நெறி நிற்பார் உறங்கச் சென்று விட்டனர் என்றாலும், பேயும், பேய் நிகர் மாந்தரும், அணங்குகளும், தங்கள் அழிவுச் செயல்களை ஆற்றுவான் வெளிப்பட்டுவிட்டனர். நம்புலவர் ஆவியுலகக் கோட்பாட்டாளர் அல்லர்; அதனால், அணங்குகள், ஆவியுருவப் பேய்கள் பற்றிய விளக்கங்களைக் கூறத் தவறி விட்டார், அதற்கு மாறாகத் தொட்டுத் தொடர்பு கொள்ளத் தகு இனமக்கள் குறித்து, அவர் மிகமிகத் தெளிவாக உணர்த்திருப்பதாகத் தெரிகிறது. தம் காலத்துக் கள்வர் களின் ஆடைவகைகள் அவர் கையாளும் படைக்கல வகைகளை, மிகவும் நுணுக்கமாக விளக்கியுள்ளார். அவற்றை அப்படியே மீண்டும் உருவாக்கும் வாய்ப்பினை வழங்குவது நம்மால் இயலாது: தற்காத்துக் கொள்ளவும், தாக்கவும் உதவும் படைக்கலங்களே அல்லாமல், அக்கொடியவர்கள், மாளிகைகளின் மேற்கூரைகளையும், மதில்களையும் ஏறி உட்புக நூலேணிகளையும் உடன் கொண்டு செல்வர். என்றாலும், இரவின் நகர்க்காவல், நனி மிகப் பெரிதாம் ஆதலின் அப்படைக்கலங்கள் பயன்படுவ அல்ல; தம் காலத்திய நகர்க் காவலர்தலைவர் பற்றிய, புலவர்

விளக்கம் நம்பக் கூடியதாயின், அவர்கள், வியத்தகு வகையில், திறமை வாய்ந்த, ஒப்புயர் வற்ற ஓர் அமைப்பினராவர். கள்வரையும், அவர்தம் வழிமுறைகளையும். சூழ்ச்சித் திறனையும் கண்டு கொள்ளவல்ல களவியில் அறிவினை முழுமையாகப் பெற்றவராவர். இவை அனைத்தினும் மேலாக அவர்தம் உயர்ந்த கடமையுணர்ச்சி மிகப்பெருமளவில், பாராட்டிற்குரியது. வீதிகளெல்லாம் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடப் பெருமழை பெய்யும் இரவின் நடுயாமத்தும், நகர்க்காவலாம் தம் கடமைமறந்து, செல்லாதிருப்பதோ, இமைப்போதேனும் உறக்கம் கொள்வதோ செய்யார். அத்தகு நகர்க்காவலர் படைத் தொகுதியால் காக்கப்பட்டு வந்தமையால், நகரம் கவலையறியாக் கடுந்துயிலில் ஆழ்ந்து விடுவதில் வியப்பேதும் இல்லை.

ஆனால், அவ்வினிய அமைதிச் சூழ்நிலை, நெடும் பொழுது நிலைத்திருக்கவில்லை. பொழுது விடிவதற்கு நெடு நாழிகைக்கு முன்னரே, மலரும் பருவத்துப் பேரரும்புகளை மொய்த்துக் கொண்டு, வண்டுக்கூட்டம் முரல்வதுபோல, பிராமணர்கள் வேதம் ஓத, நாம் கேட்கிறோம். இசைக் கருவிகள் இனிய இசையெழுப்பும் நிலையினவாக உள்ளனவா என்பதை உணர, இசைவாணர்கள், அக்கருவிகளில் எழுப்பும் இன்னோசை அடுத்துக் கேட்கத் தொடங்கிவிட்டது. இனிய கணவரோடு இன்பம் கண்டு உறங்கிய இல்லறத் தலைவியர், விழித்து எழுந்து தங்கள் மனைகளை, மாட்டுச் சாணங் கொண்டு மெழுகித் தூய்மை செய்யலாயினர்; கள் விலையாளர், கணப்பொழுதும் பின் தங்கி விடுவாரல்லர்; வழக்கமான வாடிக்கையாளர் கூடியிருந்து குடிக்கும், கள் வழங்குமிடங்களை நோக்கிக், களிப்போடு செல்லலாயினர்; வீடுகள் தோறும், வாயிற்கதவுகள் திறக்கப்படுங்கால் எழும் கிரீச் எனும் ஒலி, நகரம், ஆழ்ந்த உறக்கத்திலிருந்து விரைந்து விழித்துக் கொள்கிறது என்பதை அறிவிப்பதாய் அமைந்தது. நெடுந்துயில் கொள்ளும் இயல்பினவாய கோழிச் சேவல்களின் கூவலோடு, அதிரமுழங்கும் முரசுகளின் முழக்கம், பல்வேறு பறவைகளின் பாட்டொலி, மயில்களின் அகவல், விலங்குப்

புகலிடங்களில் அரசு வைத்து வளர்க்கும், களிறுகளின் பிளிறல், புலிகளின் முழக்கம் ஆகியனவும் பங்கு கொண்டன. செல்வர்களின் மாளிகை முற்றங்கள், பேணப்படும் பொருளாக முன்னாள் கருதப்பட்டு, இன்று குப்பையாகி விட்ட, சூடிக்கழித்து உதிர்த்த மலர்வாடல்கள் அகற்றப் பட்டுத் துப்புரவு செய்யப்பட்டன. பொழுது, விரைந்து புலரவும், பல்வேறு போர்க்களங்களிலிருந்து மீளும் வேந்தன் நாற்படை. களிறுகள், குதிரைகள், கைப்பற்றிய கோட்டை களின், அணி நலம் சிறந்த அழகிய வாயிற்கதவுகள், பகைவர் நாட்டை எரியூட்டிக் கவர்ந்து, பகைகொல்லும் வேற்படைக் காம்புகளையே, கோலாகக் கொண்டு ஓட்டி வந்த பசுநிரைகள், ஆகிய திறைப் பொருள்களையும் உடன் கொண்டு வருவவாயின, வெற்றி கொள்ளப்பட்ட சிற்றரசர் கூட்டம், மதுரை மாநகரத்து வேந்தன் விழித்து எழுந்ததும், அவன்பால் சமாதானத்தை இரந்து பெறுவான் வேண்டி, அவ்வெற்றிப் படைகளின் அணி வகுப்பைத் தொடர்ந்து வரலாயினர். வெற்றி, கொண்டு மீளும் நாற்படைகளின் பேரணி, அதைத் தொடர்ந்து, தோற்ற அரசர்கள், திறை தந்து பணிந்து போக வருவது ஆகிய இவை, மதுரை மாநகர்க்கு நாம் சென்ற அற்றைக் காலைப்போதில் மட்டுமே நிகழ்ந்த நிகழ்ச்சிகளாக நாம் கருதி விடுவதைத் தடுப்பான் வேண்டி, கங்கைப் பேராறு, தான் கொண்டு வரும் அரும் பொருட்குவியல்களையெல்லாம் கடலில் சேர்ப்பது போல, உலகத்துப் பொருட்கள் எல்லாம், இன்று போலவே, ஒவ்வொரு நாளும், அம்மாநகருள் வந்து பாயும் என்பதையும், புலவர், சேர்த்துக் கூறியுள்ளார். ஊர்வலம், நம்மைக் கடந்து கொண்டிருக்கும்போதே, வானத்தில் ஞாயிறு எழுந்து விடுகிறான்; மதுரை மாநகரும், முன்னாள் காலையில்,

அம்மாநகருள் நுழைந்தபோது, நாம் கண்ணுற்ற, மக்களின் ஆரவாரப் பெருங்கூட்டத்தையும், குழப்பத்தையும் மீண்டும் காட்டத் தொடங்கி விட்டது. Madras Christian College Magazine 1901. P. 120-124.

**புலவர்களைப் புரத்தல்:**

பழைய தமிழரசர்கள் பலரையும் போலவே, நெடுஞ்செழியனும், புலவர்களைப் பேணிகாக்கும் மிகப்பெரிய புரவலனாவன். புகழ் பெற்ற தலையாலங்கானப் போர் நிகழ்வதற்கு முன்னர்ப், பதினெட்டு வரிகளைக் கொண்ட ஒரு பாடலை அவனே பாடியுள்ளான். அதில் அவன் இவ்வாறு கூறுகிறான்; "இவன் ஆளும் நாட்டைப் புகழ்ந்து கூறுவார் நம்மால் எள்ளி நகையாடற்குரியர் என்றும், இவனோ நனிமிகு இளையன் என்றும், நான் வெறுக்கப் பழித்துரைத்து, ஒலிக்கும் மணிகள், இருபக்கமும், ஒன்றோடொன்று மாறி ஒலிக்க, எடுத்து வைக்கும் பெரிய கால்களைக் கொண்ட நெடிய களிற்றுப் படையினையும், தேர்ப்படையினையும், குதிரைப் படையினையும், படைக்கலப் பயிற்சி வல்ல வீரர்களையும் உடையேம் யாம் எனக்கூறிச் செருக்குற்று, என் பேராற்றல் கண்டும் அஞ்சாது, ஆணவம் மிக்க புல்லிய சொற்களைச் சொல்லிய அப்பகையரசர்களைப், போரில் சிதைந்தோடப் போரிட்டு வென்று, அவர்களின் போர் முரசுகளோடு அவர்களையும் கைக்கொள்ளேனாயின், என்குடை நிழற்கீழ் வாழும் என் நாட்டு மக்கள், தாங்கள் வாழத் தகுதி வாய்ந்த நிழல்தரு நிலம் காண மாட்டாது, கொடியன் எம் காவலன் என, என் அரசைப் பழிதூற்றும் கொடுங்கோலன் ஆவேனாகுக நான்; சிறந்த தலைமையும் பரந்த கேள்வியும் வாய்ந்த மாங்குடி மருதன் முதலாக உள்ள, உலகெலாம் புகழும் புலவர் பெருமக்கள், என்னையும் என் நாட்டையும் பாராட்டுவதைக் கைவிடுவாராக! என்னால் புரக்கப்பட வேண்டிய என் சுற்றத்தாரின் வறுமைத் துயர்க் கொடுமை பெருகுமளவு, நான் வறுமையுற்றுப் போவேனாகுக."

"நகுதக்கனரே, நாடுமீக்கூறுநர்!
இளையன் இவன் என உளையக் கூறிப்,
படுமணி இ ட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும், தேரும், மாவும்,
படையமை மறவரும் உடையம்யாம் என்று,
உறுதுப் பஞ்சாது உடல்சினம் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை,
அருஞ்சமம் சிதையத் தாக்கி, முரசமொடு
ஒருங்கு அகப்படேஎனாயின், பொருந்திய
என்நிழல் வாழ்நர், செல் நிழல் காணாது
கொடியன் எம் இறை எனக் கண்ணீர் பரப்பிக்,
குடிபழிதூற்றும் கோலேனாகுக!
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி,
மாங்குடி மருதன் தலைவனாக,
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாதுவரைக என் நிலவரை!
புரப்போர் புன்கண்கூர
இரப்போர்க்கு ஈயா இன்மை யான் உறவே!"

—புறம் : 72.

தன் அரசவைப் புலவர் குழாத்தின், மாங்குடி மருதனாரின் தலைமை பற்றிய நெடுஞ்செழியனின் நற்சான்றிதழ், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் புகழ் பாடுவதாகக் கூறப்படும், பத்துப்பாட்டில் ஒன்றாகிய, நெடுநல்வாடையின் ஆசிரியராகிய நக்கீரர், மதுரையில் நிலவிய தமிழ்ச் சங்கத்திற்குத் தலைவராவர் என்பது ஒரு கட்டுக் கதையே என்பதை உணர்த்துவதாகும் என்பது, ஈண்டு, இடையில், குறிப்பிடல் ஆகும். நக்கீரர், சிவனைப் பற்றிப் பாடியுள்ளாராதலின், இக்கட்டுக்கதை சைவர்களால் கட்டிவிடப்பட்டதாகும். இன்றைய எழுத்தாளர் சிலரால், இக்கதை, நெடுஞ்செழியன் தானே

அளிக்கும் அகச்சான்றுக்கும் மாறாக, வேதவாக்காகக் கொள்ளப்படுகிறது.

**இக்காலத்திய கடைசி பாண்டிய மன்னன்**

இப்பழைய பாண்டியர் குலத்துக் கடைசி மன்னன், உக்கிரப் பெருவழுதி, அல்லது உக்கிரபாண்டியன் ஆவன். சமஸ்கிருதப் பட்டப்பெயரோடு, பழைய தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரே பாண்டியன். இவன் ஒருவனே என்பது குறிப்பிடல் தகும். ஆகவே, இவனைப், பழைய சோழர்குலத்தில், இராசசூயம் வேட்ட என்ற சமஸ்கிருதப் பட்டத்தைத் தன் பெயரிலே கொண்டவனின் சமகாலத்தவனாக, நண்பனாகக் கண்டுகொள்வதில் ஏதும் வியப்பு இல்லை. உக்கிர பாண்டியன் புகழுக்கு உரிய ஒரே போர்க்கள நிகழ்ச்சி. வேங்கை மார்பன் என்ற ஒரு குறுநிலத் தலைவனுக்குரிய கானப்பேரெயில் என்ற கோட்டையைக் கைப்பற்றியது மட்டுமே; ஒரே ஒரு புறப்பாட்டு (எண்: 21) இவன் புகழ் பாடுகிறது. பழந்தமிழ்ப் புலவர்களில், கடைசி புலவரும், புகழ் பெற்ற பெண்பாற் புலவருமான ஔவையாரால் பாடப்பெற்ற மற்றொரு புறப்பாட்டு, (எண்: 377) கொளுவின் கூற்றுப்படி, உக்கிரபாண்டியன், பெருநற்கிள்ளி, சேரர் குலத்தலைவன் மாரிவெண்கோ ஆகிய மூவரும் ஒருங்கிருந்தவழிப் பாடப்பட்டதாகும்; மூலம், அப்பெயர்களைக் குறிப்பிடவில்லை ஒன்றாலும், கொளுவில் உள்ள செய்தி நம்புதற்குரியது என்றே நான் கருதுகின்றேன்.

செவிவழிச் செய்தி, உக்கிர பாண்டியன், அகநானூற்றுப் பாடல்களை, ஒரு தொகை நூலாகத் தொகுக்க ஆணையிட்டான் எனக் கூறுகிறது. இக்கூற்று, மூன்றாம் சங்கம் இவனோடு முடிவுற்றது என்ற இறையனார் அகப்

பொருள் உரைக் கூற்றோடு பொருந்தியுளது. அங்ஙனமாயின், இப்போது, நாம் பெற்றிருக்கும் அகநானூற்றில் உள்ள ஒவ்வொரு பாட்டும், காலத்தால், உக்கிரப் பெருவழுதிக்கு முந்தியது என்பது பொருளாகாது, தற்காலிக முதல் தொகுப்பு அவன் காலத்தில் செய்யப்பட்டது: அத்தொகை நூல், நானூறு என்ற முழு எண்ணைப் பெறும் வரை அது, பிற்காலத்தே பெருகியிருக்க வேண்டும். உக்கிரபாண்டியன், கடைசி பாண்டியனாக, அகப்பொருள் உரையாசிரியரால் குறிப்பிடப்பட்டிருப்பது, தமிழகத்துச் சிறந்த வரலாற்றின் பெரும்பகுதியை மறைந்துவிட்ட ஒரு பேரழிவு தமிழகத்தை மேற்கொண்டு விட்டது என்பதைக் குறிப்பிடுவதாம். அப்பேரழிவு என்ன என்பது, பின்வரும் அதிகாரம் ஒன்றில் விவாதிக்கப்படும்.

இவ்வதிகாரத்தில் குறிப்பிட்ட அரசர்களே அல்லாமல், புறநானூற்றுக் கொளுக்கள், ஒவ்வொன்றும் பாண்டியர் என்னும் பொருளே உடையதான, செழியன் பஞ்சவன், தென்னவன், வழுதி, மாறன் மீனவன், கௌரியன் என்ற பட்டப் பெயர்களில், ஒன்றையோ ஒன்றுக்கு மேற்பட்டன வற்றையோ கொண்டுள்ள, வேறுசில அரசர்களையும் குறிப்பிடுகின்றன. அவர்கள் ஒவ்வொருவரும் தமக்குள்ளே என்ன உறவுடையர் என்பதைக் கண்டறிவது இயலாது; பாண்டியப் பேரரசன் தலைநகரில் இருந்து ஆட்சிபுரியும்போது, ஏனையோர், குறுநில மன்னர்களாக இருந்து ஆட்சி புரிவது இயல்புடையதே. பாண்டியர், ஆரியமயமாக்கப்பட்ட பின்னர், அவர்கள், திங்களின் வழிவந்தவர். பாண்டியர் அரச குமாரி சித்ராங்கதா வழி பிறந்த அர்ச்சுனன் மகன், சித்ராங்கதாவின் தந்தைக்குப் பிறகு பாண்டியர் அரியணை ஏறினான். அதன் பின்னர், பாண்டவர்களைப் போலவே, பாண்டியரும் ஒரு காலத்தே ஐவர் ஆயினர் என்ற பழங்கதைகள் எழலாயின: அன்றுதொட்டு அவர்களுக்குப் பஞ்சவர் என்ற பட்டம் வழங்கப்பட்டது: [வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பாண்டியன், புறநானூற்று செய்யுள் ஒன்றில், "பஞ்சவர் ஏறு" (ஐவருள் கொல்லேறு போன்றவன்) என அழைக்கப்பட்டான்;

"செருமான் பஞ்சவர் ஏறே" (58 : 8.)] பாண்டவர் வழி வந்தவர் என்ற மரபு தோற்றுவிக்கப்பட்ட பின்னர், இம் மரபின் பெருமையைக் காத்தற்பொருட்டு, பாண்டிய அரசர்களும், கி. பி. 13ஆம் நூற்றாண்டில் நடைபெற்றதாகக் காணப்படுவதுபோலவே, ஒரே காலத்தில் ஆட்சி புரிந்த, ஐந்து சிற்றரசர்களாகவே கணக்கிடப்பட்டனர்.

---

## அதிகாரம் : XXIV

# "அகத்திலும், புறத்திலும் ஆரியக் கருத்துக்கள்"

**கடவுள்கள் :**

கடவுள்கள் : கி. பி, நான்காம், மற்றும் ஐந்தாம் நூற்றாண்டுகளில் பாடப்பட்ட பாடல்களில், வடஇந்திய (ஆரிய) கருத்துக்கள், கொள்கைகள், நம்பிக்கைகள், மூட நம்பிக்கைகள், பெரும்பாலும், இடைப்பிறவரலாம் குறிப்புக்களாக, பையப் பைய, மிகமிகப் பையப் பைய நுழைந்து விட்டன. இவை, பெரும்பாலும், பிற்காலப் புலவர்களால் பாடப் பெற்ற பாக்களிலேயே காணப்படுகின்றன. தூய தமிழ்க் கருத்துக்கள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகிய வற்றோடு ஒப்பிட்டு நோக்கின், இவை போலும் ஆரிய இடை நுழைவுகளின் மொத்த எண்ணிக்கை மிகமிகக் குறைவே. ஆரிய இடை நுழைவுகளை, அவை முக்கியமாக இடம் பெற்றிருக்கும் அகநானூறு, புறநானூறுகளிலிருந்து எடுத்து, இவ்வதிகாரத்தில் தொகுத்தளித்துள்ளேன். சிவன், அகத்தில் ஒரு முறையும், புறத்தில் ஐந்து முறையும் குறிப்பிடப் பட்டுள்ளான். ஒரு குறிப்பு, மலையை வில்லாகவுப், பாம்பை வில் நாணாகவும் கொண்டு, ஒரு கணை ஏவி, மூன்று கோட்டைகளையும் அழித்து, அசுரர்களை அடக்கித் தேவர்களுக்கு வெற்றி தேடித் தந்தது. அதில், சிவன், அழகிய நீலநிறக் கழுத்துடையனாகவும், அழகிய தலையில், பிறைத் திங்களைச் சூடியவனாகவும், ஒளிவிடும் நெற்றிக் கண்ணை உடையவனாகவும் குறிப்பிடப் பட்டுள்ளான் :

"ஓங்குமலைப் பெருவில், பாம்பு ஞாண் கொளீஇ,
ஒருகணை கொண்டு, மூவெயில் உடற்றிப்,
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த,

கறைமிடற்று அண்ணல், காமர் சென்னிப்
பிறை நுதல், விளங்கும் ஒருகண் போல''

—புறம் : 55 : 1-5.

ஏனைய வெல்லாம், அவனுடைய முக்கண் - ''முக்கண் செல்வர்'' (புறம் ; 6 : 18), சடைமுடி, ''நீள் நிமிர்சடை முது முதல்வன்'' (புறம் : 166 : 1-2), நீலநிறக் கழுத்து, தலையில் கூடிய பிறைத்திங்கள் பற்றிய வெறும் குறிப்புகளே. [பால் போலும் ஒளிவிடும் பிறைத் திங்கள் கூடிய தலையையும், நீலமணி போலும் நிறம் வாய்ந்த கழுத்தினையும் உடையான்.]

''பால்புரை பிறைநுதல் பொலிந்தசென்னி
நீலமணி மிடற்று ஒருவன்''

— புறம் : 91 : 5-6.

அகத்தில் வரும் ஒரு பகுதி, முக்கண் சிவனைக் குறிப்பிடுகிறது. ''உலகமெல்லாம் சென்று பரவும், நலம் தரும் நல்ல புகழ் வாய்ந்த நான்மறையாகிய முதுபெரும் நூலை அருளிய, முக்கண் கடவுள் வீற்றிருக்கும் ஆலமரம் நிற்கும் மன்றம் அழகுபெற இயற்றப்பட்ட.''

''ஞாலம் நாலும் நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல், முக்கண் செல்வன்,
ஆலமுற்றம் கவின்பெறத் தைஇ''

—அகம் : 181 : 15-18.

[புறம் : 198, வரி 9ல், ''ஆலமர் கடவுள்'' என்ற தொடர் வருகிறது. அத்தொடர்க்கு, ''ஆல் இலையின் கண் மேவிய திருமால்'' எனப்பொருள் கொண்டுள்ளார்; அத் தொடர், பழந்தமிழ் இலக்கியங்களில், சிவனை மட்டுமே, குறிக்க வழங்கும் பொதுவான சிலப்புத் தொடர் ஆதலின் உரையாசிரியன் உரை விளக்கம், காலத்தொடு முரண்படு வதாகும்.]

புறநானூற்றுப் பாட்டு ஒன்றில், சிவன், பலராமன், கிருஷ்ணன், மற்றும் சுப்பிரமணியன் ஆகிய கடவுள்கள் விளங்க உரைக்கப்பட்டுள்ளனர். "ஆனேற்றின் மீது அமர்ந்து உலா வரும், எரிபோல் ஒளிவிடும் சடைமுடி, பகைவரால் வெற்றி கோடற்கு அரிய மழுப்படை, நீலமணி போலும் கழுத்து ஆகிய இவற்றை உடையோனும், கடல்வளர் வலம்புரிச்சங்கு நிகர்க்கும் வெண்ணிறத் திருமேனியினையும், கொலை விரும்பும் கலப்பைப் படையினையும், பனைக்கொடியினையும் உடையோனும், மாசு போகக் கழுவப் பட்ட நீலமணி போலும் நிறம் வாய்ந்த மேனியினையும், வானுற ஓங்கிய கருடக் கொடியினையும் உடைய, எக்காலத்தும் வென்றியே விரும்புவோனும் நீலமணி நிறம் வாய்ந்த மயிலைக் கொடியாக உயர்த்திய, மயில் அல்லது யானை மீது உலாவரும், எக்காலத்தும் வெற்றியே காணும், செய்யோன்":

"ஏற்று வலன் உயரிய எரிமருள் அவிர்சடை,
மாற்றரும் கணிச்சி, மணிமிடற்றோனும்,
கடல்வளர் புரிவளை புரையும் மேனி
அடல் வெம்நாஞ்சில் பனைக் கொடியோனும்,
மண்ணுறு திருமணி புரையும் மேனி
விண்உயர் புட்கொடி விறல்வெய்யோனும்,
மணிமயில் உயரிய மாறா வென்றிப்
பிணி முக ஊர்தி ஒண் செய்யோனும்."

—புறம் : 56 : 1-8

கிருஷ்ணனையும் பலதேவனையும் போலக் காணப்படுகின்றனர் என ஒரு சோழனையும், ஒரு பாண்டியனையும் ஒரு சேர வைத்துப் பாராட்டும் நிலையில், கிருஷ்ணனும், பலதேவனும் மேலும் ஓர் இடத்திலும் குறிப்பிடப்பட்டு உள்ளனர் :

"பால்நிற உருவின் பனைக் கொடியோனும்,
நீலநிற உருவின் நேமியோனும்:"

—புறம் : 58 : 14-5

கிருஷ்ணனைப் பற்றிய மேலும் இரு குறிப்புகளும் உள்ளன. ஒன்றில், பொருள் உரைத்து விளக்கம் அளிப்பதில் வல்ல மாயோனைப் போன்று முழுப்புகழ் வாய்ந்தவன் என ஒரு பாண்டியனைப் புகழும் இடம் ஒன்று :

> "மாயோன் அன்ன
> உரை சால் சிறப்பின் புகழ்"
>
> —புறம் : 57 : 2 - 3.

கிருஷ்ணன் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றும் புறநானூற்றில் விளக்கப்பட்டுளது : "பிறரை வருத்தும் அச்சம் மிகுந்த அசுரர் கூட்டம், வானத்து உச்சியில் விளங்கும் ஞாயிற்றைக் கவர்ந்து கொண்டு போய் மறைத்து விட்டார்களாக, ஞாயிற்றைக் காண மாட்டாமையால், காரிருள் உலகத்தார் கண்களை மறைத்துவிட உலகத்து உயிர்கள் பட்ட துன்பமெல்லாம் அகலுமாறு வலிமை வாய்ந்த, அஞ்சன வண்ணனாம் கிருஷ்ணன், அஞ்ஞாயிற்றை மீட்டுக் கொணர்ந்து நிறுத்தி, உலகத்தார் துயர் தீர்த்தாற்போல்."

> "அணங்குடை அவுணர்கணம் கொண்டு ஒளித்தெனச்
> சேண் விளங்குசிறப்பின் ஞாயிறுகாணாது
> இருள்கண் கெடுத்த பரிதி ஞாலத்து
> இடும்பைகொள் பருவரல் தீரக், கடுந்திறல்
> அஞ்சன வண்ணன் தந்து நிறுத்தாங்கு."
>
> —புறம் : 174 : 1-5.

அகநானூற்றின் [59 : 5-6] ஒரு தொடர், ஆயர்மகளிர், ஆடையாக உடுத்திக் கொள்ள இளந்தளிர்களைக் கொய்து கொள்வதற்கு வாய்ப்பாக, மரக்கிளைகளை மிதித்துத் தாழ்த்திக் கொடுத்த திருமாலின் செயலைக் குறிப்பிடுகிறது :

> "அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்,
> மரம் செல மிதித்த மாஅல் போல."

இக்கதையின் மூலம், எனக்குத் தெரிந்தவரை, சமஸ்கிருதத்தில் காணப்படவில்லை; இது, ஒரு, வேளை, கிருஷ்ணன் பற்றிய ஆரியப் பழங்கதை அல்லாமல், மாயோன் பற்றிய தமிழ்ப் பழங்கதை யாதல் கூடும்.

அக்கதையின், இன்றைய வடிவம் சிறிதே மாற்றப் பட்டுளது. ஆயர் மகளிர், கிருஷ்ணன் திருடிச் சென்ற தங்கள் ஆடைகளை அணிந்து கொள்ளவே விரும்பினர்.

பரசுராமன் அகத்தில், ஒருமுறை குறிப்பிடப் பட்டுள்ளான்: அது, பின்னர், எடுத்துக் காட்டப்படும். அகத்தில் கிருஷ்ணன் பற்றிய, மேலும் ஒரு குறிப்பும் உளது. "நிறைந்த ஒளிக் கதிர்களின் ஒழுங்கினைக் கொண்ட ஆழிப் படையுடைய திருமாலின் பகைவர் அழிவுக்குக் காரணமாய அகன்ற மார்பில் கிடக்கும் மலர் மாலை போலப் பன்னிறம் வாய்ந்த, அழகிய வானவில்:"

"நேர்கதிர் நிரைத்த நேமிஅம் செல்வன்
போர்அடங்கு அகலம் பொருந்திய தார்போல்
திருவில்."

—அகம் : 175 : 14-16.

இராமன், புறத்தில் ஒரு முறையும், அகத்தில் ஒரு முறையும் குறிப்பிடப்பட்டுள்ளான்: முன்னதின் பாட்டில், இராவணன், தன்னுடைய வான் ஊர்தியில் தூக்கிச் சென்ற போது, சீதை கழற்றி எறிந்த அணிகலன்களைக் குரங்குகள் பொறுக்கி எடுத்து, அணியும் முறை அறியாமையால், தலைகீழாக அணிந்து கொண்டன எனக்கூறப்பட்டுளது.

[பெரிய வலிய தேர் உடையோனாகிய இராமன் மனைவி சீதையை, வலிய இராவணன் கவர்ந்து சென்றபோது, நிலத்தில் சிதறிக் கிடந்த சீதையின் சிறந்த அணிகலன்களைக், கண்ணுற்ற, செம்முகக் குரங்குப் பெருங்கூட்டம், அவ் வணிகளை அணிந்து கொண்டு பொலிவுற்றாற் போல."]

''கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வெளவிய ஞான்றை
நிலம்சேர் மதர்அணி கண்டகுரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தாஅங்கு.''

—புறம் : 378 : 18-21.

அகத்தில், கீழ்வரும் உவமை இடம் பெற்றுளது. ''வெற்றி, மிகு வேற்படை உடைய பாண்டியர்க்கு உரிய, மிகப்பழைய கோடிக்கரை (தனுஷ்கோடி) யின்கண், ஓயாது முழங்கும் இயல்பு வாய்ந்த பெருங்கடலின் அலை ஒலிக்கும் துறைக்கண் உள்ள, பல் விழுதுகளைக் கொண்ட பெரிய ஆலமரத்துப் பறவைகளின் ஆரவாரப் பேரொலி, வெல்லும் போர் வல்ல இராமன், அரிய நான்மறையின் பொருளை ஆய்வதற்கு வேண்டும் அமைதிக்காக, அடங்கியது போல.''

''வென்வேல் கவுரியர் தொன்முது கோடி
முழங்கு இரும் பெளவம் இரங்கும் முன் துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம் போல.''

—அகம் : 70 13-16.

[சீதையின் அணிகலன்களைக், குரங்குகள், அணியும், முறை தெரியாமல் அணிந்து கொண்ட கதையைப் போலவே, ஆலமரத்தில் வாழும் பறவைகள் ஒலி அடங்கிய கதையும், சமஸ்கிருத இலக்கியங்களுக்குத் தெரியாதனவாம். பாண்டியர் கெளரியை, அதாவது மீனாட்சியை வழிபட்டதனால், அவர்கள் கெளரியர் என அழைக்கப்பட்டனர் போலும்.]

**சுவர்க்கம்**

ஆரியப் பழங்கதைகளிலிருந்து, தமிழகத்தில் இறுதியாக, இடங்கொள்ளத் தொடங்கிவிட்ட ஆரிய நம்பிக்கைகள் பக்கம் திரும்புவோமாக. ஆரியத் தேவர்களின் உலகம் ஒருசில பகுதிகளில் காணப்படுகின்றன. ''பொற்பூக்கள் மலரும்

பூஞ்சோலைகள் மலிந்த உலகத்துக் குடிவாழ்நர், தேவர்கள்". [''பொலம் பூங்காவின் நன்னாட்டோரும்.'' (புறம் : ச8 : 12)] ''மக்கள் மிகவும் அருகிச் சென்றடையும் உலகம்'', [''அரிது செல் உலகு'' (புறம் : 260 : 21)], கடவுளர் உலகம் : [''புத்தேள் உலகம்'' (புறம் : 22 : 35)], ''தேவர் உலகம்'' (புறம் : 228 : 11), ''சிறந்த மக்கள் சென்றடையும் 'உலகம்,'' [உயர்ந்தோர் உலகம் ''(புறம் : 176 : 20)] மக்களில் தலையாய மக்கள் வாழும் உலகம்,'' [மேலோர் உலகம் புறம் : 229 : 22)] என்றெல்லாம் சுவர்க்கம் அழைக்கப்படும். உலகத்தின் முடிவிடம் என்றும் அது அழைக்கப்படுகிறது. ''நிலம் ஆகாயம், சுவர்க்கம் என மூன்றும் கூடிய புணர்ச்சியாக அடுக்கப்பட்ட அடுக்கில், முதற்கண்ணை தாகிய நீர்நிலைக்கண் ஓங்கிய நிலத்தின் கீழும், மேலதாகிய கோலோகத்தின் கண்.'

> ''முப்புணர் அடுக்கிய முறைமுதல் கட்டில்
> நீர்நில நிவப்பின் கீழும், மேலது
> ஆன்நில உலகத்தானும்.''
>
> —புறம் : 6 : 5-7

அது, வாடாத மலர்களையும், இமையா நாட்டத்து இறைவர் களையும், நறுமணம் நாறும் உணவுப்பொருள்களையும் கொண்ட உலகம்,'' [எளிதில் அடைய இயலாதது] என, அது, மீண்டும் விளக்கப்பட்டுளது.

> ''வாடாப்பூவின், இமையா நாட்டத்து,
> நாற்ற உணவினோரும் ஆற்ற
> அரும் பெறல் உலகம்.''
>
> —புறம் : 62 : 16-1

காலன் என்று அழைக்கப்படும் அருள் நோக்கு இல்ல தான் கொண்டு செல்ல, மேலோர் உலகம் சென்றான்.

> ''காலன் எனும் கண்இலி உய்ப்ப
> மேலோர் உலகம் எய்தினன்.''
>
> —புறம் : 240 : 5.

**கர்மா**

இப்பிறவியில் செய்த நல்வினைப் பயன்களை, இறந்து பெறும் பிறவியில் அறுவடைசெய்து அனுபவிப்ப தாம் கர்மா பற்றிய விதிமுறை, ஒரு பாடற் பகுதியில் கூறப்பட்டுளது. [''ஈண்டுச் செய் நல்வினை யாண்டுச் சென்று உணீஇயர்'' (புறம் : 214 : 19)] மற்றொரு பாடற்பகுதியில், ஒருவன் செய்த நல்வினைப்பயனை, மறுஉலகில் சென்று நுகர்வதா, அல்லது, இவ்வுலகிலேயே மறுபிறவி எடுத்து நுகர்வதா என்பது பற்றிய வாதம் இடம் பெற்றுளது. இப்பாட்டு, உயிர்துறக்க வடக்கிருந்த போது, கோப்பெருஞ்சோழனால் பாடப்பட்டது. [''உயர்த்தனவே உள்ளும் உயர்ந்த உள்ளம் வாய்ந்த உயர்ந்தோர்க்கு, அவர் செய்து நல்வினைப் பயனை அனுபவிக்க நேரின், அவர்க்கு, நல்வினை தீவினை இல்லா உம்பர் உலகத்தில் இன்பம் அனுபவித்தல் கூடும். அது கூடிதாயின், இவ்வுலகில் மாறிப் பிறப்பே இல்லையாகும்: மாறிப் பிறவாராயினும், இமயத்துச் சிகரம் போலும் தம் பெரும் புகழை, இவ்வுலகில் நிலை நாட்டிவிட்டு, வசையிலாத் தம் உடலோடு கூடியிருந்தே இறந்து போவர்: அதுவே தலையாய செயலாம்'']

''உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசினோர்க்குச்,
செய்வினை மருங்கின் எய்தல் உண்டு எனின்,
தொய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்;
தொய்யா உலகத்து நுகர்ச்சி இல்எனில்,
மாறிப் பிறப்பின் இன்மையும் கூடும்;
மாறிப் பிறவரீர் ஆயினும், இமயத்துக்
கோடு உயர்ந்தன்ன தம் இசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தல் தவத்தலையே.''

— புறம் : 214 : 6-13.

இப்பாட்டின் ஈற்றடிகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் மறுபிறப்புக் கொள்கை, '' இப்பிறவியில், நீயும் யானும் கூடி

இன்புற்றிருப்பது போல, மறுபிறவியிலும், இடைவிடாது காட்சி அளிக்கும் உன்னோடு கூடிவாழும் நிலையைச் சிறந்த விதி கூட்டி வைக்குமாக'' எனக்கூறும் பிறிதொரு பாட்டிலும் இடம் பெற்றுளது.

''இம்மை போலக் காட்டி, உம்மை
இடையில் காட்சி நின்னோடு
உடன் உறை வாக்குக உயர்ந்த பாலே''

—புறம் : 236 : 10-12.

[பிற்காலத்தில் நடைபெற்றது போல் அல்லாமல், இப்பாட்டில், இம்மை, உம்மை, பால் என்ற சொற்களுக்கு நிகரான சமஸ்கிருதச் சொற்கள் ஆளப்படாமல், இம்மை, உம்மை, பால் என்பனவே ஆளப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது.] மற்றொரு பாடற்பகுதி, "இவ்வுலகின் இயல்போ கொடிது: ஆதலால், இதன் இயல்பினை உணர்ந்தவர், வீடு பேற்றினைத் தரும் நல்லறச்செயல்களை அறிந்து செய்வாராக'' எனப்பொருள் செய்யப் படுகிறது. ஆனால், ''இவ்வுலகின் இயல்பினை உணர்ந்தவர்கள், அது தரும் இன்னல்களையெல்லாம் இனியனவாகவே ஏற்றுக் கொள் வாராக'' என்பதே அதன் பொருந்து பொளாகத் தெரிகிறது:

''இன்னாது, அம்ம! இவ் உலகம்;
இனிய காண்கு இதன் இயல்பு உணர்ந்தோரே.''

—புறம் : 194 : 6-7.

**வேத வேள்விகள் :**

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ் ராஜாக் களால் அளிக்கப்பட்ட, யாகங்களுக்கான பேராதரவு, முந்தைய இரு அதிகாரங்களில் விளக்கப் பட்டது; அது, ஈண்டு, மீண்டும் எடுத்துக் கூறத் தேவையில்லை. புறநானூற்றின் கடைசிபாட்டு, நலங்கிள்ளி நாட்டு, வேள்வித் தூண்களைக் குறிப்பிடுகிறது: ''கேள்வி மலிந்த வேள்வித் தூண்'' (புறம் : 400 : வரி : 19.) வேள்வித் தீயை அணைய

விடாது ஓம்பும் அந்தணர்களால் நிறைந்தது எனக், குறுநிலத் தலைவன் காரியின் நாடும் சிறப்பிக்கப்பட்டுளது :

"நின் நாடே,
அழல் புறந்தரூஉம் அந்தணரதுவே."

பிற்காலப் புறநானூற்றுப் பாட்டு ஒன்றில், வேள்வித்தீ. அழகிய ஓர் உவமையாக ஆளப்பட்டிருப்பதை, நான் கண்ணுற்றேன். வேந்தனின் வெண்கொற்றக்குடை, அந்தணர் ஓம்பும், முத்தீப்போல, ஒளிபெற்றுக் காட்சி அளித்தது என்பது அது :

"இரு பிறப்பாளர்,
முத்தீப்புரைய, காண்தக இருந்த
கொற்ற வெண்குடை."

—புறம் : 367 : 12-14.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழரசர்கள்: இவ்வாறு, வேதவேள்விகளைப்போற்றிப் புரந்து வந்தாலும், தமிழ் அரசர்களால், வேதவேள்விகள். புரக்கப்படுவதைச், சிறப்பித்துக்கூறும் - அப்பாக்களிலேயே, அவ்வரசர்களின் கொடிய போர்க்கள நிகழ்ச்சிகள், பாணர், பொருநர், விறலியர்க்குக் கறிசோறும், கள்ளும் கொடுத்துப் புரப்பது ஆகியனவும் சிறப்பிக்கப் பட்டுள்ளன. பல யாகசாலைகளுக்கு உரியோனாகிய பாண்டியன், (பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி) பகைவர் நாட்டுத் தெருக்களைக் கழுதைகள் பூட்டிய ஏர் கொண்டு உழுது பாழ் செய்தான்.

"வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
பாழ் செய்தனை."

—புறம் : 15 : 2-3.

கரிகாலனின், வேள்வியை விளக்கிக் கூறும் அதே பாட்டு, அவன், போரில், பலகோட்டைகளை அழித்தான் : தன் ஆயத்தாரோடு இருந்து பலகுடங் கள்ளைக் குடித்துக் களித்தான் என்றும் கூறுகிறது.

"அருப்பம் பேணாது அமர் கடந்ததூஉம்
துணைபுணர் ஆயமொடு தசும்பு உடன்தொலைச்சி".
—புறம் : 224 : 1-2.

ஆரிய வழிபாட்டு நெறிகளுக்கு அளித்த ஆதரவு, பழந்தமிழ் மரபு நெறிகளிலிருந்து பெரும்பிரிவினை வலிந்து கொண்டு போய் விடவில்லை என்பதையே இது உணர்த்துகிறது.

புறத்தின் தோழமைத் தொகை நூலாம் அகத்தில், தமிழ் ராஜாக்களால் போற்றி வளர்க்கப் பெற்ற வேத வேள்விகள் பற்றிய குறிப்பு எதுவும் இடம் பெறவில்லை. ஆனால் பரசுராமன் மேற்கொண்ட வேள்வி ஒன்று விரித்துரைக்கப் பட்டுளது. அத்தொகைப் பாக்களில் இடம் பெறும் பல்வேறு உவமைகளில், ஓர் உவமை, இவ்வாறு கூறுகிறது : "மன்னர் குலத்தை அழித்த மழுப்படை யுடையோனாகிய பரசுராமன், முன்னர், அரிதின் முயன்று செய்து முடித்த வேள்விக்கண், இடையில் கயிறு சுற்றப்பட்டு, அழகு செய்யப்பட்ட, அரிய காவலும் அமைந்த உயர்ந்த வேள்வித் தூண் போல."

"மன் மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
முன் முயன்று அரிதினின் முடித்த வேள்விக்
கயிறு அரையாத்த காண்தகு வனப்பின்
அருங்கடி நெடுந் தூண் போல."
—அகம் : 220 : 5-8.

**பிராமணர் :**

யாகங்கள் செய்யாத பிராமணன், அகத்தில் குறிப்பிடப் பட்டுள்ளான். ["வேளாப் பார்ப்பான் வாளரம் துமித்தவளை" (அகம் : 24 : 1-2.)]

[உரையாசிரியர், 'வேளாப் பார்ப்பான்' என்ற தொடர்க்கு 'யாகம் பண்ணாத ஊர்ப்பார்ப்பான்' எனப் பொருள் கூறியுள்ளார். அத்தகைய பார்ப்பனர் சங்கை

அறுத்து வளை பண்ணும் தொழில் மேற் கொண்டிருப்பர் என்று கூறுகிறார்.]

தமிழிலக்கியங்களில், ஆகம நெறி வழிபாட்டு முறைகள் இடங்கொண்டு விட்டதிலிருந்து, எங்கும் இயல்பாகக் காணப்படும், சமயம் சாராத் தொழில் மேற்கொண்டு விட்ட, சமய ஒழுக்கம் கெட்ட பிராமணர்கள் குறித்த, முதல் குறிப்பு இதுவே ஆம்.

இதற்குமாறாக, வேத வேள்விகளைப் போற்றும் பிராமணர்கள், மிக உயர்வாகப் புகழப்பட்டனர். அத்தகு பிராமணன் ஒருவன் குறித்த புகழ் உரை இது: "நீண்ட சடை உடையோனாகிய, முதுபெரும் இறைவனாம் சிவனின், முற்றவும் ஆராயப்பட்ட வாக்கு நெறியை விட்டு, என்றும் பிறழாது, அறம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, நான்கு கூறுகளையுடையதாய், ஆறங்கங்களாலும் உணரப் பட்ட, பழம் பெரும் ஒப்பற்ற நூலாம் வேதத்தோடு மாறுபடும், நூல்களை மட்டுமே கண்டவராகிய, புத்தர் முதலாம் புறச்சமயத்தவரது செல்வாக்கை அழிப்பான் வேண்டி, அவர்தம், மெய்போலத் தோன்றும் பொய்க் கருத்துக்களை, மெய்ப் பொருள் எனக்கொண்டு மயங்காமை யோடு, அவ்வுண்மைப்பொருளை, அவர்களுக்கு ஏற்குமாறு சொல்லி, இருபத்தொரு வேள்வித் துறைகளையும் முட்டறச் செய்து முடித்த, புகழ்வாய்ந்த சிறந்த அறிவுடை ஆன்றோர் வழி வந்தவனே."

"நன்று ஆய்ந்த, நீள்நிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகாது
ஒன்றுபுரிந்து ஈர்இரண்டின்
ஆறுஉணர்ந்த ஒரு முதுநூல்,
இகல் கண்டோர், மிகல் சாய்மார்,
மெய்யன்ன பொய் உணர்ந்து,
பொய் ஓராது, மெய் கொளீஇ

மூவேழ் துறையும் முட்டின்று போகிய
உரைசால் சிறப்பின் உரவோர் மருக!''

—புறம் : 166 : 1-9.

முன்பே எடுத்து ஆளப்பட்டு மொழி பெயர்க்கப் பட்ட அகம்: 181: "நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்'' வரி 15. சிவன், வேதம் ஓதுவதைக் குறிப்பிடுகிறது. வேதநெறி பிறழ்ந்தவர் என்ற குறிப்பு. பௌத்தர்களையும், சமணர்களையும் குறிப்பதாம். பழைய தொகை நூல்களில் காணப்படும் ஒரே குறிப்பும் அதுவாம். [நூலாசிரியர் கூறுவதுபோல், பௌத்தர்கள் சமணர்களைப் பற்றிய குறிப்பு, இப்பாட்டில் எங்கும் இடம்பெறவில்லை: ஆகவே, பௌத்த, சமண நெறிகள், தமிழகத்தில் சங்க காலத்திலேயே இடம் பெற்று விட்டன என்பதற்கு, இப்பாட்டு சான்றாக அமையாது. மொழிபெயர்ப்பு ஆசிரியர்] இப்புறச் சமயிகள், நகரங்களுக்கு அப்பால், மலைக்குகைகளில் வாழ்ந்து வந்தனர். ஆறு, ஏழாம் நூற்றாண்டுகளில், அரசர்களின் ஆதரவு பெற்று, அவர்களைத் தங்கள் மாணவர்களாகவும் கொண்டுவிட்டபோது, ஒருபால் அவர்களுக்குள்ளேயும், மறுபால் அவர்களுக்கும், சைவ, வைஷ்ணவர்களுக்கும் இடையேயும், கி. பி. 600க்கும் 900க்கும் இடையில், சிவன் குறித்தும், விஷ்ணு குறித்தும் பாடப்பெற்ற வழிபாட்டுப் பாடல்களில் பல இடங்களில் குறிப்பிடப்படும், கொடிய சமய வாதங்கள் தொடங்கலாயின. வேதவேள்விகள் பற்றிய குறிப்பு அகத்திலும் புறத்திலும், இவ்வகையில் ஒருசிலவே. வேதவேள்விகளைப் போற்றிப் பாராட்டும் பாக்களும், போற்றிப் புரக்கும் அரசர்களும், நாம் ஆய்ந்துகொண்டிருக்கும் காலகட்டத்தின் இறுதிக் காலத்தே வாழ்ந்தவராதல் வேண்டும் என்பது, தொல்காப்பியம், ஆரியர்களின் நால்வருணக் கோட்பாட்டைத், தமிழர்கள் மீது திணிக்க முயல்கிறது என்றாலும், அது ஆரிய தர்ம சாஸ்திரத்தில் வகுத்த பிராமணர்களின் அறுவகைப் பணிகளையும், அரசர்களின் ஐவகைப் பணிகளையும் குறிப்பிடு

கிறது என்றாலும், அது, தமிழ் அரசர்களின், வேதவேள்விக் கடமைகளை வகுக்கவில்லை என்ற உண்மையிலிருந்து காணக்கூடும்.

[தொல்காப்பியப் பொருளதிகாரம் 76ஆம் எண் சூத்திரத்தில், ஆசிரியர், தமிழ் அரசர்களின் போர்க் கடமைகளை மட்டுமே பேசுகிறார்.] தொல்காப்பியம், தம் காலத்தில் வழக்கில் இருந்த செய்யுட்களை ஆதாரமாகக் கொண்டே இயற்றப்பட்டது; அக்கால அரசர்கள், ஆரியப் பழக்க வழக்கங்கள் பால் அன்பு காட்டும் நிலையை இன்னமும் மேற்கொள்ளவில்லையாகவே, அப்பாக்கள், வேதவேள்விகள் பற்றிக் குறிப்பிடவில்லை என்பதே அதற்குக் காரணமாம். பழக்க வழக்கங்கள் தமிழர் வாழ்வில் இடம் பெற நிச்சய மாகச் சில காலத்தை எடுத்துக் கொண்டிருக்கும்,

## உடலெரியூட்டல்

வேத வேள்வித்தீ வழிபாட்டின் விளைவாக, வட இந்தியாவில் முகிழ்த்துவிட்ட வழக்கங்களுள் ஒன்று, இறந்தார் உடல்களை எரித்தல். இச்சமயக் கோட்பாட்டு முறையின் அடிப்படைத் தத்துவம், கடவுள்களில் ஒரு வருக்கோ, பலருக்கோ படைக்கும் படையல்கள் அனைத்தும், அக் கடவுள்களின் வாய் (''முக்ஹ''-Mukha) அக்னி ஆதலின், புதிதாக எழுப்பும் வேள்வித் தீயில் இடப்படல் வேண்டும் என்பதாம். அப் படையல்கள், அப் படையல்களுக்காக என்றே கொண்டுவந்து கொல்லப்படும் விலங்குகளிலிருந்து பெறப்படும் ''மெத்ஹ'' (Medha) என அழைக்கப்படுவதாம். ''மெத்ஹ''க்களில் பெரிய ''மெத்ஹ'', வேள்விக் குதிரை யிலும் பெரிய ''மெத்ஹ'', மனிதன். ஆகவே, வேள்வித்தீ மூலம், பலியிடப்பட்ட ஏனைய உயிர்கள் எல்லாம், கடவுள் களுக்குப் படைக்கப்பட்டு புனிதத் தன்மை பெற்றுவிடுவது போலவே, இறந்த மனிதனும், கடவுள்களுக்கான பொருந்தும் படையலாகக் கருதப்பட்டு, புனிதத்தன்மையுடையனாக்கப் படுகிறான். இக்கணக்கின் அடிப்படையில், அங்கெல்லாம் தீ வழிபாட்டு நெறி பரவிற்றோ, அங்கெல்லாம் இறந்தார்

உடலைத் தீயிட்டு எரிக்கும் வழக்கமும் மேற் கொள்ளப் பட்டது. இவ்வழக்கம் எழுவதற்கு முன்னர், உயிர் பிரிந்த உடல், முழுமையாகவோ, அல்லது உயிர் உண்ணும் பறவை களால் விரைந்து உண்டு தீர்ப்பதற்கு வாய்ப்பாகப் பல்வேறு துண்டுகளாக வெட்டப்பட்டோ எறியப்படும்; அல்லது, பெரும்பாலும், தாழிகளில் இடப்பட்டு மண்ணுள் புதைக்கப் படும். தென்னிந்தியாவில், தீ வழிபாட்டின் தெய்வீகத் தன்மையை ஏற்றுக் கொண்ட குடும்பங்கள், உடலுக்குத் தீயூட்டும் வழக்கத்தை ஏற்றுக் கொண்டன. பலநூறு ஆண்டு களுக்கு முன்னர் தீ வழிபாட்டு நெறி, மிகவும் சீர் கெட்ட நிலையில், பண்டைய கிரேக்கத்தையும், பண்டைய உரோமை யும் சென்று அடைந்தது, அதைத் தொடர்ந்து பிணம் சுடும் முறையும் சென்று சேர்ந்தது. ஆரிய வழிபாட்டு நெறி வளையத்துக்கு வெளியில் இருப்பதை உறுதியாகக் கடைப் பிடித்து வந்த ஒரு பிரிவு மக்கள், இன்னமும், பிணங்களைப் புதைப்பதையே மேற்கொண்டிருந்த தென்னிந்தியாவில், பிணம் சுடும் வழக்கம், மெதுவாகப் பரவத் தலைப்பட்டது. [சந்நியாசிகள் புதைக்கப்பட்டனர்; எரிக்கப்படவில்லை; இதற்குக் காரணம், ஒன்று, சந்நியாசிகள், மிகவும் சிறப் பிக்கத்தக்க புனிதம் வாய்ந்த வாழ்க்கையை மேற்கொண்டு வந்தனர் ஆதலின், அவர் உடல்கள், நிலையால், அச் சந்நியாசிகளைவிடச் சிறந்தவர்கள் அல்லாத கடவுள்களுக்குப் படைக்கப்படுவதன் மூலம், அவ்வுடல்களின் புனிதத்தன்மை கெடுக்கப்பட்டுவிடும்; அல்லது, புதைப்பதே, தொன்று தொட்டுவந்த வழக்கமாம் ஆதலின் அது அவர்களுக்காக என வரையறுக்கப்பட்டிருந்தது] சுடுதல் குறித்துப் புற நானூற்றில் காணப்படும் குறிப்புக்கள் கீழ்வருவனவே. "காட்டினை வெட்டிச் சுட்ட கொல்லை நிலத்தில், குறவன் தறித்துப் போட்ட மரத்துண்டுகள் போன்ற கருத்த விறகால் அடுக்கப்பட்ட ஈமத்தின்கண் எரிகின்ற ஒள்ளிய தழல்".

> "எறிபுனக் குறவன் குறையல் அன்ன
> கரிபுற விறகின் ஈம ஒள்ளழல்"
>
> —புறம்: 231: 1-2

"மரப் பொந்து ஆகிய தான் வாழும் இடத்தில் இருந்தவாறே, பிளந்து வைத்தாற் போலும் வாய் அலகு வாய்ந்த பேராந்தை, சுட்டுக்குவி, சுட்டுக்குவி எனச் செத்தாரை அழைப்பது போலக் கூவும், கள்ளிச் செடி வளர்ந்த பாழிடமாம் புறங்காட்டில் ஒரு பால் கிடந்து, ஒள்ளியதீச் சுட உடல் அழிந்துவிட்டது."

"பொத்த அறையுட் போழ்வாய்க் கூகை,
சுட்டுக்குவி எனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை ஒருசிறை அல்கி
ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது"

— புறம் : 241 : 7-10

"கள்ளிச் செடி வளர்ந்த புறங்காட்டில், வெற்றிடையில் மூட்டப்பட்ட தீயைக் காக்கும் சிறிய விறகுகளால் ஆன படுக்கையின்கண் ஒள்ளிய அழலாகிய பாயலில் சேர்த்து"

"கள்ளிய போகிய களரியம் பறந்தலை
வெள்ளிடைப் பொத்திய விளைவிறகு ஈமத்து
ஒள்ளழல் பள்ளிப் பாயல் சேர்த்தி"

—புறம் : 245 : 3-5

"பரந்த புறங்காட்டில் உண்டாக்கப்பட்ட, கரிய பெரிய மரக் கட்டைகளால் அடுக்கப்பட்ட பிணப்படுக்கை."

"பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்".

—புறம் : 266 : 11

"பிணம் சுடும் புறங்காட்டின் அதிபதியாகப் போயினர்."

"சுடுபிணக்
காடுபதியாகப் போகி;"

—புறம் : 363 : 4-5

**உடலைப் புதைத்தல்**

இறந்தார் உடலைச் சுடும் வழக்கத்தை அடுத்தடுத்து, மண்ணுள் புதைக்கும் வழக்கமும் தொடர்ந்து வந்துளது. மேலே எடுத்துக்காட்டிய பாடற் பகுதிகளில், சுடுதல், அரசர்கள் அரசர் நிகர் செல்வர்களைத் தொடர்பு படுத்தியே கூறப்பட்டுளது. ஏழை எளிய மக்கள் வெறும் நிலத்தில் புதைக்கப்பட்டனர்; அரசர், அரசர் நிகர் மேலோர், தாழியுள் இட்டுப் புதைக்கப்பட்டனர்:

"வியன்மலர் அகன்பொழில் ஈமத்தாழி
அகலிதாக வனைமோ", —புறம் : 256 ; 5-6.

அரசர்கள் புதைக்கப்படவேண்டுமா, எரிக்கப்பட வேண்டுமா என்பது விருப்பத்தைப் பொருத்தே இருந்தது என்பது தெளிவு. குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் இறந்த பின்னர், புலவர், ஐயூர் முடவனார், ஊர்க்குயவனைப் பார்த்து, "அத்தகு பெரியோனை அடக்கம் செய்யவல்ல பெரிய தாழியை வனைய நீ விரும்புவையாயின், எப்படியும், பெரிய இந்நிலைப் பரப்பையே உருளியாகக் கொண்டு, உயர்ந்த பெருமலையையே மண்ணாகக் கொண்டு வனைய வேண்டி வருமே! அது! உன்னால் இயலுமா?" என வினவுகிறார்.

"அன்னோன் கவிக்கும் கண்ணகன் தாழி,
வனைதல் வேட்டனையாயின், எனையதூஉம்,
இருநிலம் திகிரியாப், பெருமலை
மண்ணா, வனைதல் ஒல்லுமோ நினக்கே?"
—புறம் : 228 : 12-15.

சுடுதல் பற்றிய குறிப்புகள், புறத்தில் ஒரு சிலவே; ஆனால், ஈமம், காடு என்ற சொற்களுக்குச் சுடுகாடு எனும் பொருள் உடையதாகத், தொடர்ந்து பொருள் கூறுவதன் மூலம், படிப்பவர், அந்தகைய குறிப்புகள் மிகப்பலவாம் எனக்

கருதுமாறு செய்துள்ளார் உரையாசிரியர். காடு என்ற சொல் மனைப்புறத்தே, மரம், செடி, கொடிகள் மண்டிக்கிடக்கும் இடமாகிச், சுடுகாடாகவோ, இடுகாடாகவோ பயன்படத் தக்கதாம். இன்றைய நாட்களில், எரிப்பது உலகவழக்காகி விட்டமையால், எங்கெல்லாம் காடு என்ற சொல் குறிப்பிடப் படுகிறதோ, அங்கெல்லாம், அது, உரையாசிரியரால், சுடுகாட்டை உணர்த்துவதாகப் பொருள் கூறப்பட்டுளது. இடமும் சூழ்நிலையும் காட்டுவது போல், அப்பொருள் கோள், தெளிவாகப் பிழைபட்டதே. பின்வரும் தொடர்களில் காடு எனும் சொல், இடு காட்டையே குறிக்கும். "கள்ளிச் செடிகள் அடர்ந்த களர் நிலமாகிய பாழ்பட்ட இடத்து முட்கள் நிறைந்த பெரிய புறங்காடு"

"கள்ளி போகிய களரியம் பறந்தலை
முள்ளுடை வியன் காடு"

—புறம் : 225 : 7-8.

"பிணம் இட்டுப் புதைக்கப்பட்ட பெரிய தாழியின் குவிந்த புறத்தே இருந்த சிவந்த காதுகளைக் கொண்ட கழுகின் சேவலும், பொகுவல் என்னும் பறவையும், வலிய வாயுடைய காக்கையும் கோட்டானும் கூடிப் பேய்க்கூட்டத்தோடு விரும்பியவாறெல்லாம் இயங்கும் இடுகாடு"

"கவி செந்தாழிக் குவிபுறத்து இருந்த
செவிசெஞ்சேவலும், பொகுவலும், வெருவர
வாய்வன் காக்கையும் கூகையும் கூடிப்
பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்
காடு."

—புறம் : 238 - 1-5.

"களர்நிலமாய், கள்ளிச்செடிமண்டி, பகற்போதிலும் கூவும் கோட்டான்களோடு, பேய்மகளிர், ஈமவிளக்கொளியில் பிறழ்ந்து ஆடும் மேகங்கள் தவழும் இடுகாடு அச்சம் தருவது ஒன்று."

''களரி பரந்து கள்ளி போகிப்
பகலும் கூவும் கூகையொடு, பிறழ்பல்
ஈமவிளக்கில் பேஎய் மகளிரொடு
அஞ்சுவந்தன்று இம்மஞ்சுபடு முதுகாடு''
—புறம் : 356 : 1-4.

புறம் 359, இடுகாடு பற்றிய, இறுதியாக விடுபட்டுப் போன குறிப்புக்களைக் கொண்டுளது. அது கூறுகிறது: ''முற்றவும் தேய்ந்து பாழுற்ற, முட்செடிகள் மூடிக்கிடக்கும் மயக்கும் பல கால்வழித்தடங்களைக் கொண்ட பரந்த இடத்தில், வேறுவேறுபட்ட ஒலிகளை மாறி மாறி எழுப்பும் குரலினையும், கொடிய வாயினையும் உடைய கோட்டானோடு பிணந்தின்னும் குறுநறிகளும் கூடி ஒரு பால் இருந்து, பற்களில் சிக்கிக்கொள்ளுமளவு தசையினைக் கடித்துத் தின்று கொண்டிருக்க, பெண் பேய்கள், பிணங்களைத் தழுவிக்கொண்டு, வெள்ளிய தசையைத் தின்றதனால், வெறுக்கத்தக்க புலால் நாற, களர் பரந்த அவ்விடத்தில், இடுகாட்டு விளக்கொளியில் மாறிமாறி அடிவைத்துக் கூத்தாடிக் காண்பவர் அஞ்சத்திரியும் இடுகாடு.''

''பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல,
பேய் மகளிர் பிணம் தழூஉப் பற்றி
விளர் ஊன் தின்ற வெம்புலால் மெய்யர்
களரி மருங்கின் கால்பெயர்த்து ஆடி
ஈம விளக்கின் வெருவரப் பெயரும்
காடு.''

—புறம் : 359 : 1-8.

எடுத்துக் காட்டிய இப்பாடற் பகுதிகள் அனைத்திலும், காடு என்ற சொல், ஆளப்பட்டிருக்கும் இடம் நோக்க, இடுகாடு என்றே தெளிவாகப் பொருள் உணர்த்துவதாக

இருக்கவும், உரையாசிரியர், அச்சொற்குச் சுடுகாடு என்றே விடாது பொருள் கொண்டுள்ளார் என்பது மீண்டும் குறிப்பிடத்தக்கதாம். உயிர் பிரிந்த உடலை அப்புறப்படுத்தும் ஆரியத்திற்கு முந்திய முறை, மண்ணுள் புதைப்பதே; தீயிட்டு எரித்தல், ஆரியச்செல்வாக்குத் தமிழர் உள்ளத்தில் ஆட்சி செலுத்தத் தொடங்கியபோது, தீ வழிபாட்டு நெறியைப், பின் பற்றுவோரால் நுழைக்கப்பட்டது என்பதைப் புரிந்து கொள்ளாத காரணத்தின் விளைவே, அவ்வாறு பொருள் கொள்ளுதல்.

இறந்த உடலை அப்புறப்படுத்தியது தொடர்ந்து மேற்கொள்ளும் ஈமச்சடங்குகள், அவைபற்றிக் கூறும்பாடற் பகுதிகள், ஆரியச் செல்வாக்குடையவாகப் பொருள் கூறப் பட்டுள்ளன என்றாலும், அவை, ஆரிய ஈமச் சடங்கு முறைகளால் பெரிய அளவில் ஆட்கொள்ளப்படவில்லை: "இறந்தவன்பால் மாறா அன்புடைய அவன் மனைவி, பெண் யானையின் அடிஅளவான செய்த மண் மேட்டை மெழுகிப், புல்லைப் பரப்பி, அதன் மீது, அவனுக்காக எனப் படைத்த, இனிய சிறிய சோற்றுப் பிண்டம்," கூறப்பட்டுளது.

"பிடியடி அன்ன சிறுவழி மெழுகித்
தன் அமர் காதலி, புல்மேல் வைத்த
இன் சிறு பிண்டம்."

—புறம்: 234: 2-4.

புல் என்பது தருப்பைப்புல் எனப்பொருள் கூறப்பட்டு, இது, ஆரியச் சடங்கு முறையாக விளக்கம் அளிக்கப்பட்டுளது. அவ்வாறு இருக்க முடியாது. காரணம், ஆரியச் சடங்கு முறையில், பிண்டம் கொடுப்பது, இறந்தவனின் வழித் தோற்றலாம் மகனே அல்லது மனைவியாம் கைப்பெண் அல்லள். இது, பழைய தமிழ்ச் சடங்காம் என்கிறது. வேறு ஒரு பாடற்பகுதி. அது, இவ்வாறு கூறுகிறது; "பாடையை ஒரு பால் வைத்த பின்னர், புல்மீது வைக்கப் பட்ட, கள்ளையும், சிறிய சோற்றுத் திரளையும்," தின்னு

வாயாக எனப் புலையன் ஆணையிடப், புல்மேல் அமர்ந்து உண்டு அழல் வாய் புகுந்த.''

''வெள்ளில் நிறுத்த பின்றைக், கள்ளொடு
புல் அகத்து இட்ட சில் அவிழ் வல்சி
புலையன் ஏவப் புல்மேல் அமர்ந்து உண்டு
அழல்வாய்ப் புக்க''

—புறம் : 360 : 17-20;

பிறிதொடுபாட்டில், இறந்தானின் மனைவி, முறம் அளவான சிறிய இடத்தைத் துப்புரவாக்கி அழுகை ஓயாக் கண்ணளாய்த் தன் கண்சொரியும் நீரில், ஆவின் சாணத்தைக் கரைத்து மெழுகுவது குறிப்பிடப்பட்டுளது.

''சுளகின் சீறிடம் நீக்கி
அழுதல் ஆனாக் கண்ணள்
மெழுகும் ஆப்பி கண்கலுழ் நீரானே.''

—புறம் : 249 : 12-14;

மற்றொரு பாட்டில் இவ்வாறு கூறப்பட்டுளது : கள்ளிச் செடிகள் பரந்து, முட்செடிகள் முடிக்கிடக்கும் புறங்காட்டில், விளாமரம் நிற்கும் அகன்ற இடத்தில், உப்பிடாது ஆக்கிய சோற்றைக் கையில் கொண்டு, பின்புறம் பாராதே வந்து புலையன் கொடுக்க, நிலத்தை உண்கலனாகக் கொண்டு விரும்பாத பலியுணவை உண்ணும்.''

''கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்,
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு, பிறக்கு நோக்காது
இழி பிறப்பினோன் ஈயப்பெற்று
நிலம் கலனாக விலங்குபலி உண்ணும்''

—புறம் : 363 :

உயிர்பிரிந்த உடலைத் தீயிட்டு எரிக்கும் வழக்கம் சில இடங்களில் மேற்கொள்ளப் பட்டாலும், இயல்பான ஈமச் சடங்குகள், உரையாசிரியர்களால், வேறுவகையாகக் காட்டப்பட்டாலும், பழந்தமிழ் வழக்கத்தைச் சேர்ந்தனவே என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

## ஒரு வியத்தகு வழக்கம் :

புகழ்பெற்ற பெண்பாற் புலவர் ஔவையார் அதியமான் நெடுமான் அஞ்சி குறித்துப் பாடிய பாட்டில், ஒரு வியத்தகு வழக்கம் விளக்கப் பட்டுளது.'' போரில் தோற்றுப் போவதில் பழகி விட்ட பெருமையிலா அரசர்களின் போர்க் களத்தில் வாள்பட்டு அல்லாமல், வெறும் நோய்வாய்ப்பட்டு உயிரிழந்து போன உடலை, அவர் மீது கொண்ட அன்பையும் மறந்து, வாள்வடுப்படாப் பெரும்பழியை அவரை விடுத்து நீக்கு வான் வேண்டி, அறமே விரும்பும் கொள்கையுடைய, நான்கு வேதங்களிலும் வல்ல அந்தணர் கூறிய நல்வழியில் நின்று, தருப்பைப் புல்லைப் பரப்பி, அதன் மீது அவர் உடலைக் கிடத்தித் தம் பேராண்மையே பற்றுக் கோடாகக் கொண்டு பெரும் போரில் வீழ்ந்த, வீரக்கழல் அணிந்த விழுமிய வேந்தர்கள் செல்லும் வானுலகிற்கு. இவர்களும், செல்வாராக என்று கூறிய வாறே, அவர் உடலை வாளால் வெட்டிப் புதைக்கும்'' வழக்கம் கூறப்படுவது காண்க.

> 'ஓடல் மரீஇய பீடுஇல் மன்னர்
> நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்,
> காதல் மறந்து, அவர் தீது மருங்கு அறுமார்,
> அறம்புரி பசும்புல் பரப்பினர் கிடப்பி,
> மறம் கந்தாக நல் அமர் வீழ்ந்த
> நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்க என.
> வாள் போழ்ந்து அடக்கல்.''
>
> —புறம் : 93 : 4-11.

இதே வழக்கம், மணிமேகலையில், அரசன் அரசிளங்குமரர் அரசமாதேவி முதலாம் அரண்மனைப் பெண்டிர், ஆகியோர்க்கு அறிவுரை வழங்கி, அறநெறிகாட்டும், வாசந்தவை எனும் நரைமூதாட்டி, அரச மாதேவிக்குக்கூறும் பின்வரும் அறவுரையிலும் குறிப்பிடப் பட்டுளது.'' தருப்பைப் புல்மீது இடப்பட்டு, வாளால் வெட்டப்பட்டு. ''அரச உரிமையைத் தம்கொற்றத்தால் பெற்றும், குடிகளைக் குறை நேராவாறு காத்தும், தம்மீது சினங்கொள்ளும் பகைவர் நாடுகளைத் தம் நாடாகக் கொண்டும், என்றும் போரே விரும்பும் பேரரசர்கள் செல்லும் சிறந்த வானுலகிற்கே இவரும் செல்வாராக'' எனக்கூறி. அடக்கம் செய்வதற்கு வாய்ப்பளித்துப், போர்க்களத்தில் உயிரிழந்து போகாது, வறிதே மூத்து நோயுற்று உயிர் இழந்து போதல், சோழர் குடிப்பிறந்தார்க்கு, நாணத்தக்க இழிசெயலாம்: இது கூற என் நாக்கும் செயல்பட மறுத்துவிடுகிறது.''

> ''கொற்றம் கொண்டு, குடிபுறம் காத்து,
> செற்ற தெவ்வர் தேஎம் தமதாக்கியும்,
> தருப்பையிற் கிடத்தி, வாளிற் போழ்ந்து,
> செருப்புகல் மன்னர் செல்வுழிச் செல்கென
> மூத்துவிளிதல் இக்குடிப் பிறந்தோர்க்கு
> நாப்புடைபெயராது: நாணுத்தகவு உடைத்தே.''
>
> —மணிமேகலை : 23 : 11-16.

ஔவையார், இதை, பொதுவான ஒரு வழக்கம் எனக்கூறியுள்ளார்; அது செயலாற்றப் படுவதை நேரில் கண்டிருக்கக் கூடும் என்பதும், ஆனால், மணிமேகலை ஆசிரியர் சாத்தனார், அதைச், சோழர் குடிக்கே உரிய சிறப்பு வழக்கமாக ஆக்கி பெரும்பாலும், காதுவழிச் செய்தியிலிருந்தே கூறியுள்ள என்பதும் குறிப்பிடத் தக்கனவாம். மேலும், ஔவையா பழந்தமிழ்ப் புலவர்கள் வழியைப் பின்பற்றிச் சமஸ்கிரு சொல்லாம் தருப்பை என்பதை ஆள்வது விடுத்துத் தமி சொல்லாப் புல் என்பதை ஆண்டுள்ளார். ஆனா

சாத்தனார், தருப்பை என்பதையே ஆண்டுள்ளார். இது, பிற அகச்சான்றுகளாலும் உறுதி செய்யப்பெறும் முடிவான, சாத்தனார், ஔவையாரினும். மிகவுப்பிற்பட்ட காலத்தவர் என்பதையே காட்டுகிறது. காரணம், அவர் இயற்றிய மணிமேகலை, ஆரிய, நாகரீகமும், பிராமண, பௌத்த, சமண இலக்கியங்களும், தமிழகத்து வாழ்க்கையில் ஆட்சி செலுத்தத் தொடங்கிவிட்ட காலத்தைச் சேர்ந்ததாம். போர்க்களத்தில் உயிர் இழக்காத அரசர் உடல்களை வெட்டிப் போலியான வீரத்தை அவர்க்கும் உரிமையாக்கும் வழக்கம், ஒரு வட இந்திய வழக்கமா, அல்லது, தென்னிந்தியாவில், தங்களுடைய புனிதத் தன்மையை நிலை நாட்டிவிட்ட நிலையில், முன்னின்று செய்துவைக்க, பிராமணர்கள் அழைக்கப்பட்ட, தமிழ் வழக்கமா என்பதை உறுதி செய்ய என்னால் இயல வில்லை. இது போலும் வழக்கப் பற்றிய குறிப்பு ஏதேனும், அவற்றிடையே உளவா என்பது குறித்துக் காப்பியங்களையும், புராணங்களையும், தர்ம சூத்திரங்களையும் ஆய்வது பயனுடைய ஒன்றாம்.

**வான நூல் அறிவும், கணிநூல் அறிவும் :**

புறநானூற்றிலும், அகநானூற்றிலும், மிகமிக அருகி இடம் பெற்றிருக்கும் வேத வேள்விகள், காப்பிய புராணக் கட்டுக் கதைகள் அல்லாமல், வானஇயல் கருத்துக்கள், சோதிட இயல் மூடநம்பிக்கைகள் போலும் பிற அறிவியல் கருத்துக்களும், பையப்பைய வட இந்தியாவிலிருந்து, தென்னிந்தியாவுள் பரவலாயின, இது தொடர்பாக, வேத காலத் தொடக்கத்தில், வானவீதியில், திங்களின் பாதை, இருபத்தேழு அல்லது இருபத்தெட்டு நக்ஷத்திரங்களோடு தொடர்பு கொண்டிருந்தது என்பது நினைவில் கொள்ளத் தக்கதாம், அவ்வாறு கொள்வதன் பொருள், தொடக்கத்தில், வானத்தில், ஞாயிறு, திங்கள்களின் இடங்களைக் குறிப்பிட, வானநூல் அறிஞர்களுக்குத் துணை நின்ற சில விண்மீன் குழுக்களோடு பின்னர், ஞாயிறு செல்வதாகத் தோன்றும் ஒளிவட்டப் பகுதியோடு, தொடர்புடையதாயிருந்தது

என்பதாம். ஞாயிறு வழி ஆண்டுகளையும், திங்கள் வழி ஆண்டுகளையும், தொடர்பு படுத்திக் காணவும். ஐந்து ஆண்டுகளைக் கொண்ட ஒவ்வொரு யுகத் தோடும், திங்கள் வழி மாதங்கள் இரண்டை மேலும் கூட்டிப் பஞ்சாங்கத்தைத் திருத்திக் கொள்ளவும் அவர்கள் கற்றிருந்தனர் என்பதை நினைவில் கொள்ளுதல் வேண்டும். ஆனால், வேதங்களிலோ, அவற்றிற்குத் துணையான வேத இலக்கியங்களிலோ, வான் கோள் அடிப்படையிலான, சோதிடம் மற்றிய சிறு குறிப்பு தானும் அறவே காணப்படவில்லை; வானத்தில், விண்மீன் களின் நிலைமாறா, சீரான ஒட்டத்திற்கு மாறாக. கோள்களின் அவற்றிற்கே தனித்தன்மை வாய்ந்த, ஒழுங்கற்ற ஒட்டம் பற்றிய சிறு கருத்துதானும் அவற்றில் இடம் பெறவில்லை. இந்துக்களைச் சார்ந்த கிரேக்கர்களாம். யவனர்கள், காந்தாரத்திலும், சிந்துவெளிப் பள்ளத்தாக்கிலும் தங்கள் ஆட்சியை நிலைநாட்டிக் கொண்ட பின்னர், இந்திய வானியல் நூல், கிரேக்கர்களின், வானியல் விஞ்ஞானம், மற்றும் சோதிட இயல் விஞ்ஞானப் போலிகளின் கலவையால் ஆட்கொள்ளப்பட்டது. ஞாயிறும், திங்களும், மனித வாழ்வின் போக்கை ஆட்சி செய்யும் குறிப்பிட்ட நாட்கள், நாழிகைகளின் ஆட்சியினவாகும் கோள்களின் கடவுளாம் நிலக்குத் தாழ்த்தப் பட்டு விட்டனர். ஞாயிறு, திங்கள் களோடு, வியாழனும், வெள்ளியும், செவ்வாயும்; மிகமிக எளிதில் காணலாம் புதனும், சனியும் இணைக்கப்பட்டன. சோதிடஇயல் ஏழு கோள்கள், அவை ஆட்சி செலுத்தும் வாரத்தின் ஏழு நாட்கள் என்ற கொள்கை முடிவும் நிலை பெற்று விட்டது. கூறிய, இக்கோள்களின் பாதை, மனிதனின் எதிர் காலத்தைக் கணித்துக் கூறும், காரணம் குறித்து, பனிரெண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. இக்கருத்துக்கள், கிரேக்கத்திலிருந்து, இந்தியாவுக்குக், கி.மு. 200க்கும், கி. பி. 400க்கும் இடையில், வடித்து வழங்கப்பட்டன. நனி மிகப் பழைய இந்திய வானியற்கலையும், யவனர்களின் சோதிடக்கலையும் பிரிவு அறக்கலந்து, முழுக்க முழுக்க, அறிவியற்சார்புடையதான வேதாங்க சோதிடத்தின் வேறு

பட்டதும், வானியற் கலையிலிருந்து, சோதிடக்கலையை மிகமிக அருகியே வேறு பிரித்துக் காணத் தக்கதான, அறிவியற் சார்புடைய எனப்போலியாகக் கருதப்படுவதுமான, பிற்காலத்திய சோதிடமாக உருவெடுத்து விட்டன. முரண்பட்ட இயல்பினவாய இக்கோள்களின் கூட்டத்தில், ராகு, கேது என்ற, மேலும் இரண்டு உருப்படிகளும் சேர்க்கப் பட்டன. புறநானூறு, அகநானூறு பாக்களில் மிகவும் பிற்பட்டகாலத்துப் பாக்களில், சோதிடக்குறிப்புக்கள் பெரும்பாலும், அருகிய நிலையில் இடம் பெற்றுள்ளன ஆதலின், இப் புதுக்கருத்துக்கள், தென்னிந்தியாவை, ஏறத்தாழ, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டளவில் அடைந்திருக்க வேண்டும். புறம் 229ல், வானத்திலிருந்து எரிமீன் ஒன்று வீழ்ந்த நிலையைக், கூடலூர்கிழார் விரிவாக, விளக்கியுள்ளார். கலைத்துறை சார்ந்த சொற்களையும், சமஸ்கிருதத்திலிருந்து உடன்பெறும் பழைய வழக்கத்தை, அப் புலவர் பின்பற்றியுள்ளார் என்பது கருத்தில் கொள்ளத் தக்கது; ஆறு விண்மீன்களின் தொகுதியாகிய அனுடத்தின் வடிவம், உண்மையான அல்லது கற்பனையான வளைந்த பனைமரம் போல் காட்சி அளிக்கும் ஆதலின், அது முடப்பனை எனப்பட்டது. புனர்பூசம், அது போலும் காரணம் கருதி [குளம் வடிவில் உளது ஆதலின்] கடைக்குளம் எனப்பட்டது. இவைபோலும் விண்மீன் கூட்டங்களுக்குத், தமிழர்கள், வெளியார் கலைத்துறைத் துணை இல்லாமலே பெயர் சூட்டுவது இயலாத ஒன்றன்று. ஆனால், கார்த்திகை விண்மீன் கூட்டத்திற்குச் சூட்டியிருக்கும் அழற்கூட்டம் என்ற பெயர், நெருப்பு நக்ஷத்திரம் எனும் பொருளுடையதான், அதற்கே உரிய சமஸ்கிருதப் பெயர்களுள் ஒன்றான, அக்னி நட்சத்திரம் என்பதன் மொழி பெயர்ப்பே ஆகும். [இது அகம் 141ல் ''அறுமீன்'' (ஆறு விண்மீன்களின் கூட்டம்) எனவும் — ''அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்'' - மலைபடுகடாத்தில், ''ஆல்'' (நெருப்பு) எனவும்,—''அகல் இரு விசும்பின் ஆல்'' (100) அழைக்கப்படுகிறது. ரோகினி, அகத்தில் ''சகடம்'' (தட்டு, அல்லது வண்டி) என அழைக்கப்

பட்டுள்ளது.—திங்கள், சகடம் மண்டிய துகளீர் கூட்டம்" (136).] ஆடு என்பது தானும், கிரேக்க "அனரஸ்" என்பதன் மொழி பெயர்ப்பாகிய மேஷ என்பதன் மொழி பெயர்ப்பே. பழந்தமிழ் மரபுகளை இவ்வாறு விடாது பற்றி நிற்கிறது என்றலும், அப்பாட்டு, செய்யுள் நடை கருதி, பிராகிருத மொழியிலிருந்து கடன் பெற்ற, கிழக்கு எனப் பொருள்படும் பாசி, மேற்கு எனப்பொருள்படும் ஊசி எனும் சொற்களை மேற்கொள்ளுமளவு காலத்தால் பிற்பட்டதாகும். பங்குனி என்ற சொல் அப்படியே கடனாகப் பெறப்பட்டுளது; மொழிபெயர்க்கப் படவில்லை. இச்செய்யுளில் புலவர், வானில், ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து விண்வீழ் கொள்ளி ஒன்று வீழ்ந்ததைத் தாம் பார்த்ததாகவும், அது, கோச் சேரமான் யானைக்கண் சேய் இரும்பொறைக்குவர இருக்கும் இறப்பைக் குறிப்பால் உணர்த்துவதாகத் தாம் கருதியதாகவும் கூறுவதால், அவன் மிகப்பிற்பட்ட காலத்துக் காவலன் ஆகிறான்:

"ஆடியல் அழல்குட்டத்து
ஆரிருள் அரைஇரவில்
முடப்பனையத்து வேர்முதலாகக்
கடைக்குளத்துக் கயங்காயப்,
பங்குனி உயர்அழுவத்துத்
தலை நாண்மீன் நிலைதிரிய
நிலைநாண்மீன் அதன் எதிர் ஏர்தரத்
தொல் நாண்மீன் துறைபடியப்,
பாசிச் செல்லாது ஊசிமுன்னாது
அளக்கர்த்திணை விளக்காகக்
கனைஎரிபரப்பக் கால் எதிர்பு பொங்கி
ஒருமீன் வீழ்ந்தன்றால், விசும்பி னானே;
அதுகண்டு, யாமும் பிறரும் பல்வேறு இரவலர்
பறைஇசை அருவி நன்னாட்டுப் பொருநன்

நோயிலன் ஆயின் நன்றுமன் : தில்என
அழிந்த நெஞ்சம் அடியுளம் பரப்ப
அஞ்சினம் : எழுநாள் வந்தன்று : இன்றே
மேலோர் உலகம் எய்தினன்.''

பின்வரும் பாடற் பகுதியில், அங்காரகன், அல்லது செவ்வாய், செம்மீன் என அழைக்கப்பட்டுளது. ''கடல் நடுவே தோன்றுகின்ற, மீன்பிடிபடகுகளில் இடப்பட்ட விளக்குபோலச் செவ்வாய்மீன் விளங்கும், மாகம் எனவும் அழைக்கப்படும் விசும்பின் உச்சிக்கண் நின்ற உவாநாள் திங்களைக் கண்டு, காட்டு மயில்போல, காட்டுவழியில் நடை பயிலும், ஒருசில வளையங்களே அணிந்த விறலியும் யானும், மிகவிரைந்து கைகூப்பித் தொழுதோம்.''

''முந்நீர் நாப்பண் திமில் சுடர் போலச்,
செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்
உச்சிநின்ற உவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும், வல்விரைந்து
தொழுதனம்.''

—புறம் : 60 : 1-6.

வெள்ளிக்கோள், வெண்ணிறம் வாய்ந்தது : சனிக்கோள் கருநிறம் வாய்ந்தது : '' சனிமீன், புகைகளோடு கூடிப் புகையினும், எல்லாத் திசைகளிலும் புகை தோன்றினும், தென்திசைக்கண்ணே, வெள்ளிக்கோள் போகினும், வயல்கள் விளைவு பெருக.''

'மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்
வயலகம் நிறைய'' —புறம் : 117 : 1-3.

**அடிக்குறிப்பு :**

தொல்காப்பியத்தில், "ஓரை" என்ற சொல் ஆளப்பட்டிருப்பது கொண்டு, அது, கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்திலேயே எழுதப்பட்டதாகும் (தமிழர் வரலாறு : பக்கம் 70) எனக்கூறும். திருவாளர் அய்யங்கார் அவர்களின் முடிவு தவறாது என்பது, மொழிபெயர்ப்பு ஆசிரியரின் "தொல்காப்பியர் காலம்" என்ற தலைப்பில் விரிவாக ஆராயப்பட்டுளது.

வானநூல் அறிவும், கணித நூல் அறிவும், இந்துக்களைச் சார்ந்த கிரேக்கர்களாம் யவனர்கள், காந்தாரத்திலும், சிந்து வெளிப் பள்ளத்தாக்கிலும், தங்களுடைய ஆட்சியை நிலைநாட்டிக் கொண்ட பின்னர், கி. மு. 200க்கும், கி.பி. 400க்கும் இடையில் வடஇந்தியாவிற்குக் கொண்டுவரப்பட்டு அக்காலத்திற்குப் பின்னரே, தமிழ் நாட்டிற்குக் கொண்டுவரப்பட்டது; ஆகவே, வானகோள்கள் பற்றிக் குறிப்பிடும் அகப்புறப் பாடல்களைப் பாடிய புலவர்களும், அப்பாக்களின் பாட்டுடைத் தலைவர்களாம் அரசர்களும், கி. பி. 400க்கும் பிற்பட்ட காலத்தவராவர் எனக்கூறும், திருவாளர் அய்யங்கார் அவர்களின் இம்முடிவும், சரியான முடிவு அன்று என்பதற்கு வேறு காரணங்கள் காட்டத் தேவை இல்லை. தொல்காப்பியர் காலம் குறித்து அய்யங்கார் அவர்களின் முடிவை மறுத்ததற்குக் காட்டிய காரணங்களே போதும், ஆண்டுக் கண்டு கொள்க.

வெள்ளி, தென்திசை நோக்கிச் செல்வது, வர இருக்கும் கேட்டினை அறிவிக்கும் அறிகுறி என்பது, பட்டினப்பாலையிலும் கூறப்பட்டுளது. ["வயங்கு வெண்மீன் திசை திரிந்து தெற்கேகினும்"—1-2.]

இவையெல்லாம், வர இருக்கும் கேட்டின் அறிகுறிகள், திங்கள் ஒளி மறைப்பு, திங்களைப் பாம்பு விழுங்குவதால் ஏற்படுகிறது என்ற விளக்கம் பின்வரும் தொடர்களில் இடம்

பெற்றுள்ளது. "வளைந்தோடும் பாம்பின் கூரிய பற்களிருந்து மீண்டு உயிர் பிழைத்த மதி"— "வளைஇய பாம்பின், வை எயிற்று உய்ந்த மதி" (புறம் : 260 : 16-17). மலைவாயில் வீழ்ந்து மறையும் ஞாயிறு, பாம்பால் விழுங்கப்பட்ட மதி போல் விரைந்து மறையும். "கல்சேர் ஞாயிறு, அரவுநுங்கு மதியின் ஐயென மறையும்"—(அகம் : 114 : 4-5.) "பாம்பால் விழுங்கப்பட்ட திங்கள் போல் நெற்றி ஒளி இழந்தது. "அரவுநுங்கு மதியின்நுதல் ஒளிகரப்ப" (அகம் : 313 : 7).

## ஆரியக்கருத்துக்களின் எண்ணிக்கைச் சிறுமை

குறுந்தொகை, நற்றிணைப் பாக்களில், ஆரியக்கருத்துக் குறிப்பீடுகள், புறக்கணிக்கத்தக்க அளவு, நனி மிகக்குறைவு. இத்தொகை நூல்களில் இடம் பெற்றிருக்கும் பெரும்பாலான பாக்கள், அகநானூறு, புறநானூறுகளில் இடம் பெற்றிருக்கும் பாக்களினும் பழையன என்பது ஒரு காரணம். பின்னர்க் கூறிய இரண்டினும், புறநானூற்றிலும், அகநானூறு பழம் பாடல்களை அதிகமாகக் கொண்டுளது. அதுவுமல்லாமல், காதற் கருப்பொருள், போர் பற்றிய கருப்பொருளினும், மிகப்பழைய தமிழ் மரபுகள் மேற்கொள்ளப்படுவதைத் தேவைப்படுத்துகிறது. இந்நான்கு தொகை நூல்களில், புறநானூறு, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவும், அவற்றிலும் பிற்பட்ட 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தனவும் ஆய பிறபட்டகாலத்துப் பாக்களைப் பெருமளவில், கொண்டுளது: கரிகாலன் காலத்திற்குப் பின்னரே, அரசர்கள் புலவர்களின் கற்பனைகளில் பெரிதும் விரித்துரைக்கப் பட்டனர். அரசர்களைப் புகழ்ந்து பாடிய அவர் பாடல்களும் பேணிக் காக்கப்பட்டன. பழங்காலத்தில், பெருநிலம் முழுதாளும் மன்னர்கள், குறுநிலத்தலைவர்களைப் பாராட்டிப் பாடப்பெற்ற பாடல்கள், அப்பாட்டுடைத்தலைவர்களின் மறைவுக்குப் பின்னர், சிறப்பிழந்துபோயின. ஆனால், அகப்பாக்களைப் பொருத்தபட்டில், காதல், மக்களுக்கு எக்காலத்தும் இன்பந்தரும் பொருளாதலின், அந்நிலயினை அடைந்துவிடவில்லை. நனி மிகப்பழங்காலத்திலிருந்தே,

நமக்குக் கிடைத்து வந்த, அகத்துறைப் பாடல்கள், புறத் துறைப் பாடல்களை, எண்ணிக்கையில் வெற்றிகொண்டிருப் பதன் உண்மைக் காரணத்தை இது விளக்குகிறது. கிடைத் திருக்கும் நனி மிகப்பழைய தமிழ்ப்பாக்களைப் பெருமளவில் கொண்டிருக்கும் தொகை நூல்களில், ஆரியக்கோட்பாடுகள் பெற்றிருக்கும் சிற்றிடம், கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னர், ஆரியக் கருத்துக்கள், தமிழர்களால் சிறிதளவே கவரப்பட்டது என்பதை உணர்த்துகிறது. இவை, உண்மையில், நனி மிகச்சிலவே என்பது, தம்மைப் பற்றிய ஆய்வு மிகப் பெரிய நூலாகி விடுமளவு, தமிழ்ச்சடங்கு செயல்பாடு களையும், நம்பிக்கை மூடநம்பிக்கைகளையும், பழக்கவழக்க, பண்பாடு மரபுகளையும், நூற்றுக்கணக்கில், இப்பாக்கள் குறிப்பிடுகின்றன என்பதைக் கருத்தில் கொள்ளும் போது தெளிவாக உணரப்படும். இக்காலத்தைச் சேர்ந்த மக்களில் மிகப்பலரும், புலவர்களில் பெரும்பாலானோரும் பிற்கால அரசர்களால், அவ்வப்போது பெருமைப் பட்டுக்கொள்ளும், பிராமணர்களுக்கே உரிய ஆரிய நாகரீகத்தை எளிதில் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதை இது உணர்த்துகிறது; இவ்வரசர்களில் சிலர், அவர்களின் தனிப்பட்ட இல்லற வாழ்க்கை பழந்தமிழ்ப் பண்பாட்டு நெறியில் நடைபெற்றது என்றலும், ஆரிய நாகரீகத்தோடு இணைந்து வாழ்வதையும் விரும்பினர். அவர்கள் யாகங்களை ஆதரித்தனர்; வட இந்திய க்ஷத்திரிய ராஜாக்களின் குடிவழிப்பட்டியலில் இடம் பெறவும் விரும்பினர். பிராமணர்களும், அவர்கள் ஆசைக்கு இணங்கி, அத்தகு குடிவழி உரிமையைக் கொடுக்கவும் செய்தனர். [உ.ம்; பாரிமகளிரை மணக்க மறுத்த இருங்கோ வேளைப் பழித்துப் பாடும் புலவர் கபிலர், அவனை வடக்கத்திய முனிவன் ஒருவனின் ஓமகுண்டத்தில் தோன்றி, துவார்பதி ஆண்ட வேளிர் வழிவந்தவன்; "வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச், செம்பு புனைந்து இயற்றிய சேண் நெடும் புரிசை, உவரா ஈகைத் துவரையாண்டு நாற்பத் தொன்பது வழிமுறைவந்த வேள்" [புறம்: 201 : 8-12] எனக் காண்க.]

தொகை நூல்களில், புறநானூறு ஒன்றுதான், பழைய உரையோடு, முதன் முதலாக 1894ல் அச்சடிக்கப்பட்டது. அது ஏனைய மூன்று தொகை நூல்களும் போலும் பழைய உரை ஒன்றைப் பெற்றிருக்கவில்லை பெருந்தேவனாரால் பாடப்பெற்ற, அதன் பாயிரப் பாடல், காலத்தால் மிகவும் பிற்பட்ட பாடல் ஆதலின், சிவனை முழுக்க முழுக்க, சமஸ்கிருதப்பாடல் பாணியில் வருணித்துள்ளது. அத்தொகை நூலின் முதற்பாடலாகிய அடுத்த பாடல், முழுவதும் ஆரியக் கருத்துக்களையே கொண்டுளது அதை அடுத்து வரும் பல பாடல்கள், பிற்காலப் பாடல்களாம். பெரும்பாலான மக்கள், இவற்றைப் படிப்பதோடு நிறுத்திக் கொள்கின்றனர்: ஏனைய மூன்று தொகை நூல்களையும், தொல்காப்பியப் பொருளதிகாரத்தையும் படிப்பதில்லை: அதனால், சமஸ்கிருதப் பாடல்கள் தென்னிந்தியாவை அடைந்த பிறகே, தமிழ்ப் பாக்கள் எழலாயின என்ற தவறான முடிவுக்கு வந்து விடுகின்றனர். மற்றும் சிலர், மேலும் ஒரு படி சென்று, தமிழ்ப்பா, சமஸ்கிருதப் பாவின் மகளாம் என நம்பவும் செய்கின்றனர்.

## அதிகாரம் : XXV

# சேர அரசர்கள்

**பெருஞ்சேரல் ஆதன் :**

இவ்வேந்தன் வெண்ணிப் போர்க்களத்தில் கரிகாலனால் தோற்கடிக்கப்பட்டு, அப்பழி துடைத்தற்பொருட்டு அப் போர்க்களத்திலேயே வடக்கிருந்து உயிர் துறந்தான். ஆகவே, இவன், கி. பி. 400க்கு முன்னர் அதாவது, கரிகாலன் சோழ நாட்டின் மரபுவழி எல்லைக்கு அப்பாலும் தன் பேரரசை விரிவாக்கியதற்கு முன்னர் வாழ்ந்திருக்க வேண்டும். இவ்வாதன் அவ்வப்போது பாடப்பட்ட பல்வேறு பாக்களில் குறிப்பிடப்பட்டுள்ளான். ஆனால் ஐந்து ஆறாம் நூற்றாண்டு களைச் சேர்ந்த பேரரசர்கள் குறுநிலத்தலைவர்களின் புகழ் பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து போலும் பெயரிய பாக்கள் எவையும், இவன் புகழ்பாட இயற்றப்படவில்லை. அவன் வாழ்க்கையில் அறியப்பட்ட ஒரே நிகழ்ச்சி, மேலே குறிப் பிட்ட ஒரே பொருள் குறித்த, கீழே வரும் கையறு நிலைச் செய்யுட்பொருள் ஒன்றே. முழவு மார்ச்சனை இடுதல் ஒழிய, அதாவது முழங்குவதைக் கைவிட, யாழ் பண்ணிசை எழுப்புவதைக் கைவிட அகன்ற பெரிய பால்பானை, பால் இன்மையால் கவிழ்த்துப் போடப்பட்டு நெய்கடை தலை இழக்க, பாணர் பொருநர், புலவர் போலும் இரவலர், வண்டுகள் மொய்க்கும் புதுமதுவை உண்ணுவதை மறக்க, உழவர், உழவுத் தொழில் ஓசைகளைக் கேளாது ஒழிய அகன்ற நெடிய தெருவுகளையுடைய சீறூர்கள் விழாக்களை இழந்துபோக, முழு நிலா வந்து கூடிய நாளின் மாலைப் போழ்தில், ஞாயிறும் திங்களும் ஆகிய இரு சுடர்களும் தம் முன் எதிர் நின்று பார்த்து, இறுதியில், அவற்றுள் ஒருசுடர் புல்லிய மாலைப் போதில், மலையுள் புகுந்து மறைந்தா போல, தன்னையொத்த பேரரசன், வெற்றியாக எண்ண

உண்டாக்கிய புறப்புண்ணுக்கு நாணி, மறம்செறிந்த வேந்தன் வாளோடு வடக்கிருந்து உயிர்துறந்தான். இனி, ஞாயிறு காயும் பகல், அவனை இழந்து தனித்து வாழும் எமக்கு, முன்பு கழிந்த நாட்கள் போல, இனிமையுடையவாகக் கழியா.''

''மண்முழா மறப்ப; பண் யாழ் மறப்ப;
இருங்கண் குழிசி கவிழ்ந்து இழுது மறப்பச்
சுரும்பு ஆர் தேறல் சுற்றம் மறப்ப,
உழவர் ஓதை மறப்ப, விழவும்
அகல்உள் ஆங்கண் சீறூர் மறப்ப,
உவவுத்தலை வந்த பெருநாள் அமையத்து
இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்,
புன்கண் மாலை மலை மறைந்தாங்குத்,
தன் போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப்புண் நாணி, மறந்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தனன்; ஈங்கு
நாள்போல் கழியல, ஞாயிற்றுப் பகலே''

—புறம்: 65.

பாட்டின் கொளுவிலிருந்து, வாள் வடக்கிருந்து உயிர் துறந்த வேந்தன் சேரமான் பெருஞ்சேரலாதன் என அறிகிறோம்.

இதே நிகழ்ச்சி, அல்லது அதன் விளைவுகள் அகநானூற்றில் விளக்கப்பட்டுள்ளன. ''கரிகால் வளவனொடு வெண்ணிப் போர்க்களத்தில் போரிட்டு, புறப்புண் பட்டமைக்கு நாணிய பெருஞ்சேரலாதன், போரிட்டு அழிந்த அக்களத்தின் ஒருபால், வாளோடு வடக்கிருந்து உயிர் துறந்தான் என்ற, இன்னாமையும் இனிமையும் கலந்த செய்தியைக் கேட்ட சான்றோர்கள், பெறுதற்கரிய துறக்கத்திற்கு, அவனோடு செல்லும் பொருட்டுத் தாமும் உயிர் விட்டனர்.''

"கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்,
பொருது புண்நாணிய சேரலாதன்,
அழிகள மருங்கின் வாள் வடக்கு இருந்தென
இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்
அரும் பெறல் உலகம் அவனொடு செலீஇயர்".

—அகம் : 55 : 10 - 14.

இப்பாட்டு, பிற்காலப்புலவராகிய மாமூலனாரால் பாடப்பெற்றது: ஆகவே, அது, வீர சுவர்க்கம் அடைய வடக்கிருந்து உயிர்துறக்கும், ஓர்ஆரியக் கோட்பாட்டைப் பேசுவதன் பொருத்தத்தை விளக்குகிறது. இப்பாட்டு, அவ்வரசனைச், சேரலாதன் என்கிறது; புறம் 65ன் கொளு, "பெரும்" என்ற அடையினை, முன்னே கொடுத்துப், பிற சேரலாதன்களினின்றும் வேறுபடுத்துகிறது. மற்றொரு பாடம், அவனைப் 'பெருந்தோள் ஆதன்" "பெரிய தோள் களையுடைய ஆதன்" ஆக்குகிறது.

## பெருஞ்சோற்று உதியன் :

வரலாற்றுச் செய்திகள் சில, நமக்குத் தெரியவிருக்கும் முதல் சேரப்பேரரசன், பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் ஆவன். இவன் பெயருக்கு முன்னால் கொடுக்கப்பட்டிருக்கும், பெருஞ்சோறு என்ற அடைமொழி அவன் சமகாலப்புலவர் முரஞ்சியூர் முடிநாகராயர், அவனைப் புகழ்ந்து பாடிய ஒரு புறப்பாட்டு, முழுமையாக எடுத்துக் கூறப்பட்டு, வரிக்கு வரி ஆராய்ந்து நோக்க வேண்டுமளவு, பண்டைக்காலத்தி - லிருந்தே, பெரிதும், தவறாகப் பொருள் கொளளப்பட்டு வந்துளது ; பொருளற்ற கற்பனைக் கதைகள் எழச்செய்து விட்டது. அது இவ்வாறு கூறுகிறது ! "அணுத்திரள்களால் செறிந்த நிலமும், அந்நிலத்தை அடிப்படையாகக் கொண்டு ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தழுவி வரும் காற்றும், அக்காற்றின்கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீரும் எனக்கூறப்பட்ட ஐம்பெரும் பூதங்களின்

தன்மைபோலப், பகைவர் பிழை செய்தால் அப்பிழையைப் பொறுத்துக்கொள்ளுதலும், அவர் செய்த பிழை, பொறுத்துக் கொள்ளலாகாப் பெரியதாயின், அவரை அழித்தற்காம் வழிமுறைகளை ஆராய்ந்து நோக்கும் பரந்த ஆராய்ச்சி உணர்வும், அவரை அழித்து ஒழித்தற்கேற்ற மனவலி, படைவலிகளும், அவற்றால் அவரை அழித்தலும், அவர் பணிந்து வழிபட்டால் அவர்பால் காட்டும் அருளும் ஆகிய இவ் வகைப் பண்புகளையும் உடையோய்! நினக்கு உரிமை யுடைய கீழ்க்கடலில் காலையில் தோன்றும் ஞாயிறு, மீண்டும் உனக்கு உரிமையுடையதான, வெஃளிய தலைகளையுடைய அலைகளைக் கொண்ட மேல் கடலில் மூழ்குதற்கு ஏற்ப, இடையறாப் புதுவருவாய்களைக் கொண்ட ஊர்களையே கொண்ட, மிகப்பரந்த நல்ல நாட்டின் வேந்தே! வானவரம்பன் எனும் பெயர் உடையாய்! பெருமானே! அசையும் தலையாட்டம் அணிந்த குதிரைப்படையுடைய பாண்டவர் ஐவருடன், சினங்கொண்டு, அவர் நிலத்தைத் தமதாகக் கொண்டுவிட்ட, பொன்னால் ஆன தும்பை மாலை யுடையோனாகிய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் போரிட்டு, போர்க்களத்தின்கண் அழியும் வரை, பெருஞ் சோறு ஆகிய மிக்க உணவை, அவ்விருவர் படைக்கும் வரை யாது வழங்கியவனே! பால், தன் இனிமைப் பண்பை இழந்து புளிப்பினும், ஞாயிறு, ஒளிதரும் தன் இயல்பு கெட்டு இருளினும், நான்கு வேதங்களின் ஒழுக்க நிலைகெட்டு வேறு படினும், தம் இயல்பில் வேறுபாடு இல்லாத, சூழ்ச்சித் திறம் மிக்க மந்திரச் சுற்றத்தாருடன், அழியாது நெடுங்காலம், புகழ்மிகவாழ்ந்து, நடுக்கம் இன்றி நிலைத்து நிற்பாயாக! பக்கமலைக்கண், சிறிய தலைகளையுடைய குட்டிமான்களைக் கொண்ட, பெரிய கண்களையுடைய பெண் மான் கூட்டம்,

அந்திக்காலத்தில், அந்தணர்கள், தாம் ஆற்றவேண்டிய செயற்கரிய கடனாகிய, ஆவுதி அளித்து எழுப்பும் முத்தீ அளிக்கும் பேரொளியின்கண், அச்சம் ஒழிந்து இனிதே உறங்கும் பொற்சிகரங்களையுடைய இமயமலையும், பொதிய மலையும் போல, உயர்ந்து நின்று, நடுக்கின்றி, நெடிது வாழ்க!''

''மண் திணிந்த நிலனும்,
நிலன் ஏந்திய விசும்பும்,
விசும்பு தைவரு வளியும்,
வளி தலைஇய தீயும்
5. தீ முரணிய நீரும் என்றாங்கு,
ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்,
போற்றார்ப் பொறுத்தலும், சூழ்ச்சியது அகலமும்,
வலியும், தெறலும், அளியும் உடையோய்!
நின்கடல் பிறந்த ஞாயிறு, பெயர்த்தும் நின்
10. வெண்தலைப் புணரி குடகடல் குளிக்கும்,
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந!
வான வரம்பனை! நீயோ, பெரும!
அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ,
நிலந்தலைக் கொண்ட, பொலம்பூந் தும்பை,
15. ஈரைம்பதின்மரும், பொருது களத்து ஒழியப்
பெருஞ்சோற்று மிகுபதம்வரையாது கொடுத்தோய்!
பாஅல் புளிப்பினும், பகல் இருளினும்,
நாஅல் வேத நெறி திரியினும்,
திரியாச் சுற்றமொடு முழுது சேண் விளங்கி:
20. நடுக்கின்றி நிலியரோ! அத்தை; அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை,
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்

முத்தீ விளக்கில் துஞ்சும்
பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே''.
—புறம் : 2.

பதினைந்து பதினாறாம் வரிகள் பொருள் தெளிவில்லாமல் உள்ளன: ''போர்க் களத்தில் ஈரைம்பதின்மர் வீழ்ந்து ஒழிய பெருஞ்சோற்றினை வரையாது வழங்கின'' என்கின்றன அவ்வரிகள். ''ஒழிய'' என்ற வினையெச்சம், பல் பொருள் தரவல்லது : 1) அவர்கள் வீழ, அதன் காரணத்திற்காக, 2) அவர்கள் வீழ்ந்த போது என்ற இவ்விரு பொருள்கள், அவற்றுள் முக்கியமானவை. இவ்விரண்டனுள், பின்னது, அவர்கள் வீழ்ந்த அந்தக் காலம், அல்லது, அவர்கள் வீழ்ந்த பின்னர், (அது, எவ்வளவு காலத்திற்குப் பின்னர், நாம் அறியோம்) என, இவ்விருவகையாலும் பொருள் படுமாதலின், அது, தவறான பொருள் கொள்ளவும் இடந்தரவல்லதாம். வீழ, அதன் காரணமாக என்ற முதற்பொருளே, பொருந்தும் பொருள் ஆகும். ஆனால், தொடக்க நாட்களிலிருந்தே. தமிழ்ப் பேராசிரியர்கள், உதியஞ்சேரலாதன். அப்போர்க் களத்தில் இருந்தான் என்ற யூகத்தைத் தேவையுடையதாக்கும் வகையில், அத்தொடர்க்கு, அவர்கள் வீழ்ந்த அந்தக் காலம் என்ற பொருளே கொண்டுள்ளனர். அவர்களைப் பின்பற்றிப், பெரும்பாலான பழந்தமிழ் உரையாசிரியர்களைப் போலவே, புறநானூற்று உரையாசிரியரும், தம்முடைய உரையில், மூலத்தில் காணப்பெறாத, ஆனால், தம்முடைய பரந்த நூலறிவு, நுண்ணிய ஆராய்ச்சிகளின் பயனாகக்கண்டு கொண்ட பலசெய்திகளைக் கொண்டு வந்து இணைத்து, இச்சேர வேந்தன், போரிடும் இருதிறப் படைகளுக்கும், பெரும்பாலும் அப்போர் முடியுங்காறும், வரையாது உணவு வழங்கினான் என்று கூறியுள்ளார். [உணவை இரு படைக்கும் வரையாது வழங்கினோய்!''—புறம் : இரண்டாப்பதிப்பு: பக்கம் ; 7] இப்புதுக் கருத்தைத், தம் உரையில் நுழைப்பதில், இவ்வுரையாசிரியர், பழந்தமிழ் அரசர்கள் பற்றிய கற்பனைக் கதைகளின், வரைந்து காணமாட்டாக் கருவூலமாய

சிலப்பதிகாரக் காப்பியத்தையே பெரிதும் துணைகொண்டு உள்ளார். அப்பாட்டில், "உதியஞ்சேரல், ஐவர்க்கும், நூற்றுவர்க்கும் இடையில் நடைபெற்ற போரில், பெரிய அளவிலான சோற்றை வரையாது வழங்கிய சேரன், பொறையன்," என அழைக்கப்பட்டுள்ளான் :

"ஓர் ஐவர், ஈர்ஐம்பதின்மர் உடன்று எழுந்த
போரில் பெருஞ்சோறு போற்றாது தான்அளித்த
சேரன், பொறையன், மலையன்"

—சிலம்பு : 29 : ஊசல்வரி : 2.

உதியன் இருதிறப் படையினர்க்கும் உணவளித்தான் எனக் கூறுவதன் மூலம், இந்தியாவின் தென் கோடி முனையைச் சேர்ந்த ஓர் அரசன், கோதுமை உணவுண்ணும், துரியோதனன், யுதிஷ்டிரர் படைவீரர்களுக்கு உணவு படைக்க, அரிசியையும், அறுசுவையூட்டும் உணவுப் பொருட்களையும் குருக்ஷேத்திரத் திற்குச் சுமந்து சென்றான் எனக் கூறுவதில் உள்ள பொருத்த மின்மையை உணராமலே, உரையாசிரியர், அம் மூலவரிகளில் குறிப்பாக உணர நின்ற ஒன்றை, வேறு வகையில் விரித்துணர வைத்துள்ளார்.

[இந்தியாவின் தென் கோடி முனையைச் சேர்ந்த ஓர் அரசன், அரிசி முதலாம் உணவுப் பொருட்களைக், குருக்ஷேத் திரத்திற்குச் சுமந்து சென்றான் என்பது பொருத்தமில்லா கூற்று என்ற இந்நூலாசிரியர் கருத்து பற்றி, மொழிபெயர்ப் ஆசிரியரின் விளக்கத்தைச் "செங்குட்டுவன் வடநாட்டு படையெடுப்பு உண்மை நிகழ்ச்சி அன்று ; வெறும் கட்டு கதை" என்பது சரிதானா ? என்ற தலைப்புள்ள கட்டுரையி கண்டுகொள்க.]

நான் கூறியதுபோல், மக்களுக்கு உணவு படைப்பத மூலம், உதியன், கௌரவர்கள் இறந்த நாளைக் கொண்ட டினான் என்பதே, அவ்வரிகளில் பொருந்தும் பொருளாம் இக்கொண்டாட்டம், பெரும்பாலும், சிரார்த்தம் என்பத

இயல்புடையதாகும். அல்லது, ஒருக்கால், பாரதப்போர் குறித்த நாடக நிகழ்ச்சிகளின் இறுதி நாள் விழா ஆதலும் கூடும்: ஏனைய நிகழ்ச்சிகளைப் போலவே, மகாபாரத நிகழ்ச்சிகளில் உள்ள கதாபாத்திரங்களைப்போல ஒப்பனை செய்து கொண்டு, இசையும் பாட்டும் தொடர, நடிகர்கள் ஆடிக்காட்டும் ஊமை நாடகமாம், அந்நாட்டிற்கே உரியதான, கதகளி என அழைக்கப்படும் நாடகத்தால், சேரநாடு, பண்டைக் காலந்தொட்டே புகழ் வாய்ந்தது. அதுபோலும் கதகளியின் முடிவில், பெருஞ்சோறு படைத்தல், பெரும்பாலும் நிகழக் கூடியதே. ஆண்டாண்டு காலத்திற்கு முன்னரே இறந்துபட்ட வீரர்களுக்கு, இவைபோலும் இறுதிச் சடங்காம் பலியுணவு வழங்குதல் தமிழ் நாட்டில் பரவிய வழக்கமாகும். இறந்தோர்க்கு மரியாதை செய்யும் முறையாக, உணவு படைக்கும் இவ்வழக்கப் ''பட்டவர்குறி'' என அழைக்கப் படும். பண்டைப் பெருவீரர்களின் அருஞ்செயல்கள், நாடகமாக நடிக்கப் பெறுவதும், நாடகமுடிவில் பெரிய விருந்து நடைபெறுவதும், தமிழ் நாட்டில், தொன்றுதொட்டு நடைபெற்று வரும் பெருவழக்கமாம். அது, இப்பொழுது, ''கம்பசேர்வை'' அல்லது ''கம்பக்கூத்து'' அல்லது ''களைக் கூத்து'' என அழைக்கப்படுகிறது. அதன் முடிவில், அக்களி யாட்டத்தில் பங்கு கொள்ளும், பண்ணையாட்களாம் ''கம்பஞ்செய்மக்கள்,'' அவ்வூரின் விளை நிலங்களுக்கு உரிய வராகிய பெரும் பண்ணை முதலாளிகளால், விருந்து படைக்கப்பெறுவர்.

## பெருஞ்சோறு குறிக்கும் பிறபாக்கள்:

அகநானூற்றில் காணப்படும் இரண்டு குறிப்புகளும் கூட, இவ்வுண்மையையே கூறுகின்றன: அதிலும் ஐயத்திற்கு ...மில்லா வகையில். ஆகவே, பெருஞ்சேரலாதனின், பெரிதும் ...ாட்டிற்குரியதாகி விட்ட பெருஞ்சோறு படைப்பு, ...ந்தார் நினைவாக மேற்கொள்ளும் நிகழ்ச்சி, அல்லது ஓர் ...ன் விழாநாள் இறுதி நிகழ்ச்சியாம் என்ற முடிவிற்கு வர, ...க்க முழுக்க அனுமானம் ஒன்றையே நாம் சார்ந்திருக்கத்

தேவை இல்லை. ஒரு பாட்டு, கோட்டம்பலத்துத்துஞ்சிய சேரமான் என்ற சேரர்குலச் சிற்றரசன் பாடிய, நல்ல ஆனிரைச் செல்வங்கள் மலிந்த குழூமூர் என்னும் ஊரில், வருவார்க்கு வழங்குதலாம் கொடையாகிய கடமையினை ஏற்றுக் கொண்டவனும், நடுநிலை பிறழா நெஞ்சுடையவனு மாகிய உதியன் என்பானின் அட்டிற்சாலையில் எழும் ஆரவாரப் பேரொலியை உவமையாகக் கொண்டுளது :

"நல்லான் பரப்பின் குழூமூர் ஆங்கண்
கொடைக்கடன் என்ற, கோடா நெஞ்சின்
உதியன் அட்டில் போல"

—அகம் ; 168 : 5-7.

இப்பாட்டு, புகழ்பெற்ற அப்பெருவிருந்து நடை பெற்ற இடமாக, பெரும்பாலும், அதே பெயரில் கோவை மாவட்டத்தில் உள்ள குழூமூரைக் குறிப்பிடுகிறதேயல்லது: குருக்ஷேத்திரத்தை அன்று. மற்றொரு பாட்டு, "இறந்து துறக்கலோகம் அடைந்த இறவா நற்புகழ் வாய்ந்த முன்னோர்கட்குத் தென்புலக் கடன் ஆற்றுவான் வேண்டி. உதியன் சேரலாதன் பெருஞ்சோறு படைத்தபோது, கரிய பெரிய பேய்க் கூட்டம் கூடியிருந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடு கிறது:

"துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய, உதியஞ் சேரல்,
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை, இரும்பல்
கூளிச்சுற்றம் குழீஇ இருந்தாங்கு".

—அகம் : 233 : 7 - 10.

இப்பாட்டு அப்பெருஞ்சோறு வழங்கல் போர் நிகழ்ந்த போது நடைபெறவில்லை. அதற்கு மாறாக, அதற்கு மிக மிகப் பிற்பட்டகாலத்தே அப்போர் நினைவாக மேற்கொள்ளப் பட்ட விழாவின் போதே நடைபெற்றது என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது: அவ்விழா குழூமூர் என்னும்

இடத்தில் நாடகமுடிவில் நடிகர்களும், நாடகம் காண வந்தவர்களும் பெருஞ்சோறு படைக்கப்பட்ட நாடக விழாவாக அல்லது வேறு எதுவாக இருக்க இயலும்?

இப்பாட்டு பழைய தொகை நூல்களில் இடம்பெற்ற பாக்கள் சிலவற்றைப் பாடிய, காலத்தால் பிற்பட்ட புலவர்களுள் ஒருவராய மாமூலனாரால் பாடப்பெற்றுளது. ஆகவே, உதியஞ்சேரலாதனின் காலம், நனிமிகப்பழைய காலத்தது ஆதல் இயலாது.

[இக்கருத்து ஏற்புடையதன்று என்பது, மொழிபெயர்ப்பு ஆசிரியரின் "மாமூலனார் காலம்" என்ற திறனாய்வில் விளக்கப்பட்டுளது.]

இந்த உதியஞ்சேரல், பெருவீரனாகக் காணப்படுகிறான். நற்றிணை "உதியஞ்சேரலாதன், கடுஞ்சினம்மிக்குப் புகுந்த, ஒலி அடங்கா அகன்ற போர்க்களத்தில் களம்பாடு ஓர் பாட்டிற்கு ஏற்ப, கருவிஇசை எழுப்புவார், ஆம்பல் என்னும் பண்எழ விரைவாக ஊதுகின்ற புல்லாங்குழல், இனியஇசை எழுப்பினாற் போல" என்ற ஓர் உவமையினைக் கொண்டுளது:

"உதியன் மண்டிய ஒலிதலை ஞாட்பின்
இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பலங் குழலின்"

—நற்: 113: 9 - 11.

அகநானூறு, "பிறர் நாடுகளை வென்று, தன் நாட்டின் எல்லையை விரிவாக்கிக்கொண்ட உதியஞ்சேரலாதனைப் பாடிச் சென்ற பரிசிலர், பெரும் பொருள் பெற்று மகிழ்வது போல" என்ற உவமையினைக் கொண்டுளது.

"நாடு கண் அகற்றிய உதியஞ்சேரற்
பாடிச் சென்ற பரிசிலர் போல"

—அகம்: 65; 5 - 6

ஆகவே, இவ்வுதியன், பெரியவீரன்; புலவர்களையும், பிற இரவலர்களையும் மேலும் பெரியவள்ளல். ஆனால் குருக்ஷேத்திரத்தில், போரிட்ட இருதிறப் படையினர்க்கும் உணவு ஆக்கிப் படைக்கும் சமயல்காரனாதல் அரிதிலும் அரிதாம்.

பெருஞ்சோறு படைத்த காலம் :

இப்புறப்பாட்டிற்கும், அது பாடிய புலவனுக்கும், அப்பாட்டுடைத் தலைவனுக்கும், கி. பி. ஐந்தாம் நூற்றுண்டிற்கும் முற்பட்ட காலத்தை வகுத்தல், பிறிதொரு வகையில் நோக்கிலும் நனிமிகப் பொருத்தமில் செயலாம். அப்பாட்டின் முதல் ஆறுவரிகள், கட்புலனுக்கு உள்ளான இந்நிலவுலகை, சாங்கியத்தத்துவம் எந்த அடிப்படைக்கு உட்படுத்தி ஆய்வுசெய்யுமோ, அந்த அடிப்படையினவாய, ஐவகைப்பட்டநிலைபேறுடையஉணர்வுகளின்இயற்கைகளாம். ஐம்பெரும் பூதங்களின், கற்பனைவளம் சார்ந்த எண்ணிக்கை வகைப்படுத்தி அளிக்கின்றன. இது போலும் குறிப்பீடுகள், தமிழர் உள்ளங்களை, ஆரியக் கருத்துக்கள் முழுமையாகக் கவர்ந்துவிட்ட பின்னரே இடம் பெறக்கூடும். அதுபோலவே, பிற்காலப் பாக்களில் மட்டுமே இடம் பெறும் பொன்முடி சூடிய இமயமலை பற்றிய குறிப்பும் இடம் பெற்றுளது. அகச்சான்றுகளைக் கொண்டு மதிப்பிடும் நிலையில், பெருஞ்சேரலாதன் குறித்து, அவன்காலப் புலவர் ஒருவர் பாடிய பாட்டு, உதியன் குறித்து, அவன் காலப் புலவர் ஒருவர் பாடியபாட்டினும், காலத்தால் முற்பட்டதாம் ஆதலின், பெருஞ்சேரலாதனுக்குப் பிறகு வாழ்ந்தவன் உதியன், என நாம் முடிவு செய்யலாம்.

பதிற்றுப் பத்து :

இவ்வுதியனுக்குப் பிறகு அரசு கட்டில் ஏறிய அரசர்கள் பற்றிய செய்திகளைப், பதிற்றுப் பத்திலிருந்து பெறலாம்;

ஒவ்வொன்றும் வேறுவேறுபட்ட நீளம் உடையவாய, பொதுவாக, சராசரி இருபது அடிகளைக்கொண்ட பத்துப்பத்து பாடற்றொகுதிகளாகப் பத்துத் தொகுதிகளைக் கொண்ட தொகைநூல் பதிற்றுப்பத்து. தனிப்பாடல்களாக அல்லாமல், ஒவ்வொரு தொகுப்பும், குறிப்பிட்ட ஒரு பேரரசன் அல்லது ஒரு குறுநிலத்தலைவன் பற்றி விரிவாகப் பாராட்டும், வரையறுக்கப்பட்ட காரணம் குறித்துப் பாடப்பட்ட பத்துப் பத்துப் பாடல்களைக் கொண்ட பத்து தொகுப்புக்களைக் கொண்ட முதல் தொகை நூல் இது. இவற்றுள் முதல் பத்தும், இறுதிப் பத்தும் கிடைக்கவில்லை. ஒவ்வொரு பத்தும், ஒரு சேரவேந்தன் அல்லது, சேரர்குலத்தலைவனைப் பற்றியது. ஒவ்வொரு பத்தும், பாக்கள் மட்டுமே இடம் பெற்ற, கையெழுத்துப் படிகளில் அல்லாமல், பாடல்களோடு, அவற்றிற்கான உரைகளும் இடங்கொண்ட கையெழுத்துப் படிகளில் மட்டுமே, இடம் பெறும் பதிகங்களைக் கொண்டுளது. அப்பதிகங்கள், அப்பாடல்களின் பாட்டுடைத் தலைவர்கள் பற்றிய, மூலங்களில் காணப்படாத வரலாறு அல்லது கற்பனைக் கருத்துக்களைக் கொடுத்து உதவுகின்றன. வழக்கம் போலவே இன்றைய எழுத்தாளர்கள், பதிகங்களையும், பாக்களையும் ஒன்றாகவே கொண்டு மயங்கி, அவை அனைத்துமே பதிற்றுப் பத்துத்தான் எனக்கூறுவதோடு, அகச்சான்றாக எடுத்து ஆளக்கூடிய தகுதியை, மூலம், பதிகம், உரை ஆகிய மூன்றிற்குமே ஒரு படித்தாக வழங்குகின்றனர்.

பதிற்றுப்பத்து ஆசிரியர்களெல்லாம், கி. பி. ஐந்து, ஆறாம் நூற்றுண்டுகளைச் சேர்ந்த பிராமணர்கள். ஆகவே தான், அப்பாக்கள், ஆரியக்கருத்துக்கள், ஆகமப் பழக்க வழக்கங்களால் பொங்கி வழிகின்றன. ஆகவே, அவை

தமிழ் நாட்டில் ஆகமநெறிக் கோயில்வழிபாடுகள் பரவியதற்குப் பின்னர்ப் பாடப்பட்டனவாதல் வேண்டும்; அவ்வகையில், இரண்டாம்பத்தின் நான்காம் பாடலின் தொடக்க வரிகள், அப்பாட்டுடைத் தலைவன், ''நிலம், நீர், காற்று, விசும்பு என்ற இந்நான்கினையும் போல் அளந்து காண மாட்டாப் பெருமையும், நாண்மீன்களும், கோள்களும், திங்களும், ஞாயிறும், ஊழிப்பெருந்தீயும் ஒருங்கு கூடி நின்ற வழிப் பிறக்கும் பேரொளி போலும், புகழ்ப்பேரொளியும் உடையவனாகப் புகழப்பட்டுள்ளான். இப்பகுதியில், கிரேக்க வானியல்கலையிலிருந்து பெறப்பட்ட கருத்தான நாண்மீன்களுக்கும், கோள்களுக்குமிடையிலான வேறுபாடு மட்டுமல்லாமல், வானிடை நாண்மீன்களும், கோள்களும் ஒருயுகத் தொடக்கத்தில் ஓரிடத்தே ஒன்றுகூடும் என்ற இந்திய, பிற்காலக் கோட்பாடு பற்றிய குறிப்பும் இடம் பெற்றுளது:

> ''நிலம் நீர் வளி விசும்பு என்ற நான்கின்
> அளப்பு அரியையே;
> நாள் கோள் திங்கள் ஞாயிறு கனைஅழல்
> ஐந்து ஒருங்கு புணர்ந்த விளக்கத்து அனையை.''
>
> —பதிற்று : 14 : 1 - 4;

21 ஆம் பாட்டின் முதல் இருவரிகள் அரசர்களின் நல்லாட்சிக்கு, ஐம்பெரும் துணைகளாக, சொல்இலக்கணம் பொருள்இலக்கணம், சோதிடம், வேதம், ஆகமம் ஆகிய ஐந்தினைக் குறிக்கின்றன;

> ''சொல், பெயர், நாட்டப், கேள்வி
> நெஞ்சம் என்று ஐந்து''
>
> —பதிற்று : 21 : 1 - 2;

சேர அரசர்கள், ஆண்டாண்டு காலமாக நிலைபேறு கொண்டிருந்த பழம்பெரும் மரபுகளை உடைத்து உட்புகு வதற்கு வேண்டுமளவு, ஆரிய மயமாக்கப்பட்டுவிட்டனர், ஆனால், அதே நிலையில், ஐம்பெருந்துணைகள், சமஸ் கிருதத்தின் தனித்தமிழ் மொழிபெயர்ப்புச் சொற்களாலேயே அழைக்கப்பட்டுள்ளன. அவற்றுள்ளும், "நாட்டம்" "கேள்வி" ஆகிய இருசொற்களும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன என்பதை நோக்க, மொழியாட்சி நிலையில், பழைமை போற்றும் உறுதிப்பாடு இன்னமும் ஆட்சிபுரிந்து கொண்டி ருந்தது என்பதை இவ்வரிகள் உணர்த்துகின்றன. அக்கால கட்டம், ஒன்றிலிருந்து ஒன்றிற்கு நிலைபெயறும் ஒன்றாம் என்பதைக் காட்டும் வகையில், அரசர்களின் உள்ளங்களி லிருந்து பண்டைமரபுகள் மெல்ல மெல்ல பிடிப்பிழந்து போக, பிராமணர்களின் போதனைகள் வலுவாக இடம் பெறலாயின. அரசின் ஒழுக்க நெறிகளைக் காக்கும் காவலர் களாகப் பிராமணர்கள் உயர்வு பெற்று விட்டனர் என்பது, "மறை ஓதுதல், வேள்விவேட்டல், அவை இரண்டையும் பிறரைச் செய்வித்தல், வறியார்க்கு ஈதல், பிறர் தமக்குக் கொடுப்பதை ஏற்றல் என்ற ஆறு தொழில்களையும் செய்து ஒழுகும், எக்காலமும் அறநூற் பயனையே விரும்பும் அந்தணர்களை வழிப்பட்டு ஒழுகி" என அரசர்கள் புகழப்படும் அப்பாடற் பகுதியால் உறுதி செய்யப் பட்டுவிட்டது:

"ஓதல், வேட்டல், அவை பிறர்ச் செய்தல்,
ஈதல், ஏற்றல் என்று ஆறு புரிந்து ஒழுகும்
அறம்புரி அந்தணர் வழிமொழிந்து ஒழுகி"

—பதிற்று; 24: 6-8.

புதிய வழிமுறைகள், தமிழ் நிலத்தில் பரவத் தலைப்பட்டு விட்டன என்பதற்கான பிற எடுத்துக்காட்டுகள், ஓர் அரசன், கோயில்களுக்கும் பொன் அணிகளை வழங்கினான் என்ப தற்கான குறிப்பிடும்—"புரைவயின் புரைவயின் பெரிய நல்கி," (பதிற்று: 15 : 37); காடுகளை அழித்து ஆங்கே கோயில்கள் கட்டப்பட்டதற்கான குறிப்பீடும் "காடே

கடவுள் மேன" (பதிற்று: 13 : 20) ஆம். இக்கோயில்களில் ஆகம நெறி வழிபாடே பின்பற்றப் பட்டது: பின்வரும் பாடற்பகுதியைக் காண்க: "உயர்ந்த மிகத்தெளிந்த ஒலி எழுப்பவல்ல மணியை இயக்குவார், அம்மணியிடையே கல் எனும் ஓசை எழுமாறு இயக்க, உண்ணா நோன்பு மேற் கொண்டிருக்கும் விரதியர், குளிர்ந்த நீர்த்துறைக்குச் சென்று நீராடித், திருமகள் வீற்றிருக்கும் மார்பில் அணிந்துள்ள, வண்டுகள் வந்து மொய்க்குமளவு, புதுமை பொலியும் மாலையாம், மணம் கமழும் கொத்துக்களால் தொடுக்கப் பெற்ற துளசி மாலையும், காண்பவர் கண்களைக் கூசப் பண்ணும் பேரொளி வீசும் ஆழிப்படையும், உடைய, செல்வப் பெருமகனாம் திருமாலின், சிறந்த திருவடிகளில் வணங்கி வாழ்த்தி, நெஞ்சம் நிறைந்த மகிழ்ச்சி உடையராய்த், தாம் தாம் இனிது வாழும் தத்தம் ஊர்களுக்குத் திரும்பச்செல்ல."

"தெள்ளுயர் வடிமணி எறியுநர் கல்என,
உண்ணாப் பைஞ்ஞிலப் பனித்துறை மண்ணி,
வண்டூது பொலிதார்த் திருஞெமர் அகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரல் துழாஅய்
அலங்கல் செல்வன் சேவடி பரவி,
நெஞ்சுமலி உவகையர் துஞ்சுபதி பெயர"
—பதிற்று: 31: 5—10.

என்றாலும், பழந்தமிழ்ப் பழக்க வழக்கங்கள், ஆரியப் புதுவரவுகளால், இன்னமும், வெளியேற்றப் பட்டுவிடவில்லை. காரணம், போர்க் களங்களில் அரசர்களால் ஆடப் பெறும் துணங்கை ஆட்டம் பற்றிய நான்கு குறிப்புகள் இடம் பெற்றுள்ளன: அவற்றுள் பின் வருவது ஓர் எடுத்துக்காட்டு: "பிணங்கள் குவிந்து கிடக்கும் கொடிய போர்க்களத்தின் இடையே நின்று, பகைவர் நாடுகளைக் கைக்கொண்டு கைக் கொண்டு, வலிமை பெற்ற திண் எனத்திரண்ட தோள்களை உயரத்தூக்கி வீசித் துணங்கைக் கூத்து ஆடு." –

"நிலம்பெறு திணிதோள் உயர ஓச்சிப்
பிணம்பிறங்கு அழுவத்துத் துணங்கை ஆடி;"
—பதிற்று : 45 ; 11-12.

துணங்கைக் கூத்து பற்றிய ஏனைய குறிப்புகள், பதிற்று: 13 : 5; 52 : 14; 57 : 4; மற்றும் 77 : 4 ஆகிய அடிகளில் இடம் பெற்றுள்ளன. பிறிதொரு பழமை வாய்ந்த கூத்தாம் குரவைக் கூத்துப் புகாரில் நிகழ்ந்ததாகக் கூறப்பட்டுளது. "குரவை அயரும் புகார்" (பதிற்று : 73 : 7-9) போர்க்களத்தில் நிகழும் பண்டைத் தமிழ் வெற்றித் திருக்கூத்தும் விளங்கக் கூறப்பட்டுளது: ' வெற்றி முரசம் ஓங்கி ஒலிக்க, வாளை உயர ஓச்சி, ஒளிவீசும் பொன் அணிகளை அணிந்து, பொன்னாற் பண்ணப்பட்ட உழிஞைக் கொடிசூடி, போர்க் களத்தில் ஆடும் பேரரசன்."

"வலம்படு முரசம் துவைப்ப, வாள் உயர்த்து,
இலங்கும் பூணன், பொலங்கொடி உழிஞையன்,
.......போர்க்களத்து ஆடும் கோவே."
—பதிற்று : 56 : 4-8.

இறந்தோர் உடல்கள், அவை, அரசர் உடல்களே ஆயினும், மண்ணுள் புதைக்கப்படும் வழக்கம் தொடர்ந்து நிகழ்ந்து வந்திருப்பது, தமிழ்ப் பழக்க வழக்கங்கள், அழிவுற்றுப் போகாமல் நிலைகொண்டிருந்தமைக்கான பிறிதோர் அகச்சான்றாம். "மன்னர்களை இட்டுப் புதைக்கும் பெருமக்கள் தாழிகளைக் கொண்ட, வன்னிமரங்களால் ஆன மன்றங்களால் பெருமை பெற்ற இடுகாடு"

"மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே."
—பதிற்று : 44 ; 22-23.

தம்மைப் புரந்தார் மறைவு குறித்து இரங்கி அழுவார். ஓர் அவையில் கூடியிருந்தாற் போல, அம்மரத்தடியில் அமர்ந்

திருத்தன்ர் என விளக்கம் தருவர் உரையாசிரியர்கள். ஆரியப் புதுக்கடவுள்களுக்கு எதிராக, பண்டைய தமிழ்க் கடவுள்களும், தங்கள் இடங்களை உறுதியாகத் தக்க வைத்துக்கொண்டு இருந்தன. அதற்கேற்ப, வெற்றிப்போர் முரசின் கடவுள் பாராட்டப் பெற்றுளது: ஆனால், மந்திர வழிபாட்டுடன் கலந்தே பாராட்டப் பெற்றுளது. "முழங்கு மந்திரத்து அருந்திறல் மரபின் கடவுள் பேணியர்" (பதிற்று: 30 : 33-34). அம்மந்திரங்கள், வடமொழி மூலமந்திரங்களாக அல்லாமல், புதிதாக ஆரிய மயமாக்கப்பட்ட அரசர்களின் பயன்கருதி, புதிதாக உருவாக்கிய வடமொழி மந்திரப் போலிகளாதல் கூடும். வெற்றித் திருமகள் இன்னமும் வாகை மரத்திலேயே குடிகொண்டுள்ளான். "கடவுள் வாகை." (பதிற்று: 66 ; 15).

ஆகவே, ஆரியத் தலையீடுகள், சென்ற நூற்றாண்டைக் காட்டிலும், மிகமிக நெருக்கமாம் என்றாலும், அப்பாக்களில். தமிழ் இலக்கிய மரபுகள் தொடர்ந்து இருந்து வரலாயின என்பது தெளிவு. அப்பாக்கள் ஒவ்வொன்றிற்கும், தொல் காப்பிய இலக்கண முறை வகுத்த துறை, திணைகள் அளிக்கப் பட்டு உள்ளன. பாணர்களுக்கும், விறலியர்க்கும், கறிஉணவும் கள்ளுமல்லாமல், பொன்னணிகள், பரி, கரி, தேர் முதலாம் பரிசில் பொருட்களை வழங்குவது போலும் மிகப் பழைய விளக்கச் செய்திகள் பதிற்றுப்பத்தில் நிரம்ப இடம் பெற்றுள்ளன. பதிற்றுப்பத்தின், ஒவ்வொரு பத்தின் அடிப்படைக் குறிக்கோள், சேரப் பெருவீரன் ஒருவன் புகழ் பாடுவதாகும். முதல் பத்து அழிந்துவிட்டது! அது, உதியஞ்சேரல் புகழ்பாடுவதாக இருக்கக் கூடும் எனக்கருதப் படுகிறது. இரண்டாம்பத்து, அவன் மகன் நெடுஞ்சேரல் பற்றியது ; ஏனைய பத்துக்கள், இச்சேரர் குலத்துத் தூரத்து உறவினர், அல்லது இளைய பிரிவினர் பற்றியன. அச்சேரப் பெருவேந்தர் இருவரின் பெருஞ்செயல் குறித்த ஆய்வு இனி மேற்கொள்ளப்படும்.

திருவாளர் இராகவையங்கார் அவர்கள், "சேரன் செங்குட்டுவன்" என்ற தம் நூலில், பதிற்றுப்பத்தில்

இப்போது கிடைக்கும் எட்டுப் பத்துக்களிலும் பாராட்டப் பெற்றிருக்கும் சேர அரசர்களின் வீரப்பெருஞ்செயல்களைத் தேர்ந்தெடுத்துச் சுருக்கமாக எடுத்துக் கூறியுள்ளார். அவர் பதிற்றுப் பத்தின் சமகாலப்புலவர்கள் கூறும் செய்தி களையும், சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டிருக்கும் பிற்காலச் செய்திகளையும், பதிற்றுப்பத்துப் பாக்கள் பாடிய காலத்திலும், பல நூறு ஆண்டுகள் பிற்பட்ட காலத்தே பாடப்பெற்றனவும், பாடற்பகுதிகள் நம்புதற்கும் ஒண்ணா நிலையில், பெருமளவில் திருத்தப்பட்டிருப் பனவுமாகிய பதிகங்களில் கூறப்பட்டிருக்கும் செய்திகளையும், பதிகங்களில் கூறப்பட்டிருக்கும் சேரஅரசர்கள் பற்றிய செய்திகளைப் பதிற்றுப்பத்துப் பாடல்கள் ஓரளவேனும் உறுதி செய்யுமாயின் ஏற்றுக்கொள்ளக்கூடும் என்ற நிலை இருக்கவும், ஒத்த வரலாற்றுச் சிறப்புடையவாகக் கொண் டுள்ளார். அத்தகைய உறுதிப்பாடு ஏதும் கிடைக்காத போது, அப்பதிகங்களில் கூறப்பட்டிருக்கும் செய்திகளை, உண்மையானவை என ஏற்றுக்கொள்ளுதல் அரிதாம். அவற்றில் அரசர் சிலரின் ஆட்சிக்கால அளவிற்கு, நம்பு வதற்கு இயலாத மிக நீண்டகாலம் கொடுக்கப்பட்டுளது. மேலும், அப்பாடல்கள் தாமும், முந்தைய தொகை நூல்களில் காணப்படாத அளவு கலப்படங்களையும் கொண்டுள்ளன. இப்பகுதியை, அடுத்து வரும் பகுதியில், ஆராயப்படும் அரசர் குறித்த ஆய்வில், இதற்கான ஓர் எடுத்துக் காட்டு கொடுக்கப்படும். இம்மிகைப் படக்கூறல், பட்டாங்கு கூறும் பழைய இயல்புநிலை, மெல்ல மெல்ல இடம் இழந்து போக, சமஸ்கிருத காவியம் போலும் கற்பனை முறைகள், தமிழ்ப் புலவர்களை ஆளத்தொடங்கிவிட்டது என்பதையே காட்டுகிறது.

## இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் :

பதிகத்திலிருந்து, வெளியன் வேண்மான் மகள் நள்ளினி வழி பிறந்த உதியஞ்சேரலாதனின் மகன் நெடுஞ்சேரலாதன் என அறிகிறோம். பகையரசன் ஒருவனின் அரசுரிமைச்

சின்னமாகக், கடம்பமரம் வளர்க்கப்பட்டிருந்த கடலிடை நாடு ஒன்றிற்குக், கலத்தில் சென்றதே, இவ்வரசரின் மிகப் பெரும் வீரச்செயலாம். இவை போலும் மரங்கள், காவல் மரங்கள் எனப்படும். ஒவ்வொரு தமிழ் வேந்தனும், அல்லது குறுநிலத்தலைவனும், தன்னுடைய ஆட்சித்திறனின் அடையாளமாக, ஒருக்கால், அவன் அரசகுலச் சின்னமாக, அவன் பேராண்மையோடு தொடர்புடையதாக்கிக், குறிப் பிட்ட ஒரு மரத்தை வளர்த்து வந்தான். அம்மரத்தை வெட்டி வீழ்த்துவது, அவ்வரசனின் ஆட்சிக்கொடியைக் கைப்பற்றியது போலாம். இக்கடம்பமரமும், பானவாசிக் கடம்ப அரசர்கள் தங்கள் அரசகுலப் பெயரைப் பெறுவதற்குக் காரணமாம் கடம்ப மரமும் ஒன்றாம் எனக் கருதப்படுகிறது. நெடுஞ்சேரலாதன் சிறப்புற விளங்கிய கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில், இக்கடம்பர் உயர்நிலை பெற்றிருந்தமையால், மேலே கூறிய ஒருமைப்பாடு, இயலக்கூடாத ஒன்றன்று. இப்பெருஞ்செயலின் பாராட்டே, இரண்டாம் பத்து முதற் பாட்டின் பொருளாகும். அது, அப்பத்தின் இரண்டு, ஏழு, பத்து ஆகிய பாக்களிலும் குறிப்பிடப்பட்டுளது. வெட்டப் பட்ட அம்மரத்துண்டைத், தன் கலத்தில் ஏற்றிச்சென்று, தங்கள் பகையரசர்களின் காவல் மரத்துண்டங்களை ஏனைய அரசர்கள் பயன்படுத்துவது போலவே, அம்மரத்துண்டங் களிலிருந்து, போர்முரசு செய்துகொண்டான். "மிகப் பெரும் நாற்படையினைக் கொண்ட நெடுஞ்சேரலாதன் பெரிய கடலின்கண் பகைவர்களை வென்று ஓட்டி, அவர் தம் காவல் மரமாம் கடம்பினை அறுத்துச்செய்த, முரசின் கண் முழங்கினாற் போல" எனக்கூறும் அகநானூற்றுப் பாடல் ஒன்றில், ஒரு உவமையில், நெடுஞ்சேரலாதன் அவ்வாறு செய்தான் என, மாமூலனாரால் கூறப்பட்டுளது.

"சால்பெரும் தானைச் சேர லாதன்
மால்கடல் ஓட்டிக் கடம்பு அறுத்து இயற்றிய
பண்ணமை முரசின் கண் அதிர்ந்தன்ன."

—அகம் : 347 : 3 - 5

**நெடுஞ்சேரலாதனும் வேதவேள்விகளும் :**

பதிற்றுப்பத்தின் இப்பாடல்கள், பெரும்பாலும் பேரரசர்கள், குறுநிலத் தலைவர்களின், பொதுவான புகழுரைகளையே கொண்டுள்ளன ; என்றாலும், நம் வீரன் குறித்த, மேலும் சில செய்திகளையும், அவற்றிலிருந்து திரட்டக்கூடும். அவ்வகையில், அவன், காடுகளை அழித்து நாடுகண்டான். கோயில்கள் பல கட்டினான் ; அக்கோயில் களுக்குப் பல்வேறு வழிபாட்டு நன்கொடைகளை வழங்கினான். ''காடே கடவுள்மேன'' (பதிற்று : 13 : 20), ''புரைவயின் புரைவயின் பெரிய நல்கி'' (பதிற்று. 15 : 37) என்ற தொடர்களைக் காண்க. ஆகவே, இவ்வரசனின் ஆட்சிக் காலத்தில், அரசவையில், பிராமணர்கள் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தனர் எனக் கொள்ளலாம். பெரும் பாலும், இதனாலேயே இந்நெடுஞ்சேரலாதனின் தம்பியாம் பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாடிய புலவர் கௌதமனார், அவ்வரசன் துணையால் பல வேள்விகளைச் செய்தார் ; பத்தாவது வேள்வி செய்திருக்கும் போது, மனைவியோடு சுவர்க்கம்புகுந்தார் என்ற கட்டுக்கதை, பிற்காலத்தில் எழவும் ஆயிற்று.

[இவ்வருஞ்செயல் குறித்த, மிகப்பழைய குறிப்பு, வழக்கம் போலவே, கற்பனைக் கதைக் களஞ்சியமாம் சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுளது. ''நான்மறையாளன் செய்யுள்கொண்டு மேனிலைஉலகம் விடுத்தோன்'' (சிலம்பு: 28 ; 137—138)]

**நெடுஞ்சேரலாதனின் வெற்றிகள் :**

பதிற்றுப்பத்து இரண்டாம்பத்தின் முதல்பாட்டு, ''முருக்க மரங்கள் நிறைந்த மலையிடத்தே உறங்கும் கவரிமான்கள் பகற்போதில் தாம் மேய்ந்த நரந்தம் புல்லையும், பரந்து விரிந்த அருவி நீரையும் கனவில் கண்டு மகிழ்வதற்கு இடமான, ஆரியர் நிறைந்து வாழும், பெரும்புகழ் வாய்ந்த இமயம், தென்குமரி ஆகிய இவற்றிற்கு இடைப்பட்ட நாட்டில் உள்ள,

செருக்குற்றுத் தம் புகழை உயர்த்திக்கூறும் அரசர்களின் வீரம் கெட்டழியுமாறு அவர்களை வென்று, மார்புமாலை, ஓடையளவும் தாழ்ந்து விளங்கும், பகைவர் கோட்டைகளை அழிக்கும் வெற்றிப்புகழ் வாய்ந்த தந்தங்களைக் கொண்ட, குற்றமில்லாத யானையின் பொன்னரி மாலை அணிந்த பிடரி மீது அமர்ந்து உலாவரும் பலரும்புகழும் உன் செல்வச் சிறப்பினை இனிதே காண்கிறோம்.''

''மார்புமலி பைந்தார் ஓடையொடு விளங்கும்
வலன்உயர் மருப்பின் பழிதீர் யானைப்
பொலன்அணி எருத்தம் மேல்கொண்டு பொலிந்தநின்
பலர்புகழ் செல்வம், இனிது கண்டிகுமே ;
கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி
பரந்து இலங்கு அருவியொடு நரந்தம் கனவும்,
ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங் குமரியொடு ஆயிடை

—பதிற்று. 11 : 17 - 25.

வெறும் வெற்றுப் புகழுரைகளாம் வைக்கோற் போரிலிருந்து உண்மைச்செய்தியாம் மணியனைத் தேடிக் காண்பது அத்துணை எளிதன்று. நெடுஞ்சேரலாதன் சேரநாட்டின் எல்லைக்கு வடக்கில் சில மைல் வரை (கடம்பர் நாட்டிலும், கொண்காளத்திலும்) படையெடுத்துச் சென்று சில வெற்றிப் பொருட்களைக் கொண்டு வந்திருக்கக்கூடும் : புலவர்கள், பரிசில் பெறும் வேட்கை மிகுதியால், அச்செயலை இந்தியப் பெருநாடு முழுவதும் அவன் பேரரசின் விரிவாகக் கொண்டு பாராட்டவும், அதன் காரணத்தால் இமயத்தை எல்லையாகக் கொண்ட பெருநாட்டுக்குரியவன் எனும் பொருளுடையதான ''இமயவரம்பன்'' என்ற பட்டப் பெயரைச் சூட்டியிருக்கவும் கூடும். [இப்பட்டப்பெயர் சிலப்பதிகார, மூன்றாம் காண்டம் வஞ்சிக் காண்டத்துப் பாட்டுடைத் தலைவன் செங்குட்டுவனுக்கும் வழங்கப்பட்டுளது. (இமையவரம்ப! சிலம்பு : 26 : 23 : 30 : 161]

பெரும்பாலும், இவ்வெற்றியின் பயனாய்த் தன் பகையரசர் எழுவரின் முடிகளைக் கவர்ந்து, அவற்றை உருக்கிக் கழுத்தாரமாக ஆக்கிப் புனைந்துகொண்டான் என்பதை அறிவுறுத்தும், "எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்து" (பதிற்று: 14 : 11 ; 16 : 17) எனும் சிறப்புப் பெயரினைப் பெற்றான். இப்பட்டப்பெயர் அவன் மகனால் வழிவழி மேற்கொள்ளப்பட்டு அவனும் "எழுமுடி மார்பின் எய்தியசேரல்" (பதிற்று: 45: 6) என அழைக்கப்பட்டான்.

நெடுஞ்சேரலாதன் காலத்தே பாடப்பட்ட பாட்டில், குமட்டூர்க் கண்ணனார், அவருடைய தலைவன், "ஆரியர்கள் நிறைந்த இமயம் வரையான நாடுகளில் உள்ள வட அரசர்களின் ஆற்றல் அழிய வென்றான்" எனப் பொதுப் படையாகவே கூறியுள்ளார் (பதிற்று: 11 ; 23-25) மழை பொய்யாது பெய்து காத்தலால் வளம் சிறந்து, ஆரியர் வாழும் பொன்வளம் மிக்க பெரிய இமய மலையை ஒக்கும் "மாரி புறந்தர நந்தி, ஆரியர் பொன்படு நெடுவரை புரையும்" (அகம் : 398 : 18-19) என வேறு ஒரு பாடற்பகுதியும் கூறுவதால், இமையமலையை ஆரியரின் வாழிடமாகக் கூறுவது ஒரு மரபு வழித்தொடராகும். ஆனால் நெடுஞ் சேரலாதனின் மகன் குட்டுவன் புகழ்பாடிய பாணர், இக் கதையை மேலும் விரிவுபடுத்திவிட்டார். இச்சேரலாதன், ஆரிய அரசர்கள் அலறுமாறு அவர்களைத் தாக்கிப், பெரும் புகழ் வாய்ந்த, நனிமிகப் பழையதான இமைய மலையின் மிது, வளைந்தவில்லாம் தன் இலச்சினையைப் பொறித்துக் கொடிய சினம் மிக்க அப்பகை வேந்தரைச் சிறை செய்தவன். "ஆரியர் அலறத் தாக்கிப், பேரிசைத் தொன்று முதிர் வட வரை வணங்கு வில் பொறித்து வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்" (அகம்: 396 : 16-18).

குமட்டூர்க் கண்ணனாரின், வடஅரசர்களை "மறந்தபக் கடந்தது" ஒரே தலைமுறையில், "வேந்தரைப் பிணிப்பதாக" வளர்ந்து விட்டது!

தம்முடைய பாக்களில், தமக்கு முன் வாழ்ந்த எண்ணற்ற அரசர்கள், குறுநிலத்தலைவர்களைக் குறிப்பிடும், பிற்காலப் புலவராம், மாமூலனார், நெடுஞ்சேரலாதனின், வெற்றிச் செயல்களையெல்லாம், "வெற்றி தரும் போர் முரசினை யுடைய நெடுஞ்சேரலாதன், கடலிடையே சென்று, அங்கு அரசு செய்திருந்த கடம்பரின் காவல் மரத்தை வெட்டி, இமையமலையில், தனது முன்னோரைப் போலவே வளைந்த வில்லாம் தன் இலச்சினையைப் பொறித்து, மாந்தை எனும் ஊரில் உள்ள தன் அரண்மனை முற்றத்தே, பகைவர் பணிந்து வந்து திறையாகக் குவித்த பெருமை மிக்க நல்ல அணிகலன்கள், பொன்னால் செய்யப்பட்ட பாவையினையும், வயிரங்களையும் கொண்டவன்" எனத் தொகுத்துக் கூறியுள்ளார்.

"வலம்படு முரசின் சேர லாதன்,
முந்நீர் ஓட்டிக், கடம்பு எறிந்து, இமயத்து
முன்னோர் மருள வணங்குவில் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்
பணி திறை தந்த பாடுசால் நன்கலம்
பொன் செய் பாவை வயிரமொடு"

— அகம் : 127 : 3-8

நெடுஞ்சேரலாதனின் தந்தை, வானத்தையே நாட்டு எல்லையாகக் கொண்டவன் எனும் பொருள் உடையதான "வானவரம்பன்" ; அவன்மகன். இமையத்தையே நாட்டு எல்லையாகக் கொண்ட, "இமையவரம்பன்" ஆகிவிட்டான்.

## நெடுஞ்சேரலாதன் குறித்த கற்பனைகள்:

நெடுஞ்சேரலாதனின் இமயம் வரையான வெற்றி, குறித்துப் பதிற்றுப்பத்தில் காணப்படும், முரட்டுக்கண்மூடித் தனமான, தெளிவில்லாத கூற்று, இவ்வாறு, அம்மலை உச்சியில் தன் வில் இலச்சினையைப் பொறித்த உண்மையான நிகழ்ச்சியாக உறுதிப்பட்டு விட்டதைக் காண்கிறோம்.

ஆரியக் கோட்பாடுகள் தமிழகத்தில் விரைந்து பரவியதன் விளைவாகத் தமிழ்ப் புலவர்கள், ''சேது முதல் இமயம்வரை'' என்ற ஆரியச் சொற்றொடரை நன்கு அறிந்துகொண்ட ஐந்தாம் நூற்றாண்டில், அவர்கள் தம் பாக்களில் பனிதவழும் இமயத்தைக் குறிப்பிடத் தொடங்கினர்; இந்தியப் பெரு நிலப்பரப்பு அனைத்தையும் வெற்றி கொண்ட தமிழ் அரசர் ஒவ்வொருவரும், தத்தம் கொடிகளை நாட்டுவதினும், வெற்றியின் நிலையான நினைவுச் சின்னமாம் தம் அரச இலச்சினைகளை இமயத்தின் மீது பொறித்ததாகக் கற்பனைக் கதைகளைக் கண்டுபிடித்தனர். இவ்வெற்றிச் செயல், முதன் முதலில் கரிகாலனுக்கு உரிமையாக்கப்பட்டது; பின்னர்ப் பிறர்க்கும் விரிவாக்கப்பட்டது. தமிழர் ஆட்சியைத் தமிழ் நாட்டு எல்லைக்கு அப்பாலும் விரிவாக்கிய முதல் தமிழரசன், கரிகாலன் ஆவன். தமிழ்ப் புலவர்களின் நில இயல் பற்றிய கொள்கை தெளிவற்ற ஒன்றாதலின், தமிழ் நாட்டு எல்லைக்கு அப்பாற்பட்டது எதுவாயினும் அவர்களுக்கு, அது, (சாதாரண ஆங்கிலேயன் ஒருவனுக்குத் தன் தாய்நாடு அல்லாத அனைத்தும், கடலுக்கு அப்பாற் பட்டதாதல் போல், பீகிங்போலவே பாரிசும் கடலுக்கு அப்பாற்பட்டதாதல் போல்) கங்கை வெளியையும், இமயச் சாரலையும் சார்ந்த தாகிவிடும். ஆகவே, ஒரு தமிழ் அரசன், உண்மையாக அல்லது கற்பனையாகத் தமிழ் நாட்டு எல்லைக்கு அப்பால் ஆட்சியாதிக்கம் பெற்றிருந்தால், அவன் இமயத்தில் அரச இலச்சினையைப் பொறித்துவிடுகிறான். அவ்வகையில், கரிகாலன், தன் புலியைப் பொறித்தான். நெடுஞ்சேரலாதன் வில்லைப் பொறித்தான், பெயர் அறியாப் பாண்டியன் ஒருவன் மீனைப் பொறித்தான். சிலப்பதிகாரம், ''முத்து மாலை அணிந்த, வெண் கொற்றக் குடையின் கீழ் அமர்த் திருந்த பாண்டியன், இமயத்து உச்சியில் தான் பொறித்த கயலுக்கு அயலில், புலியையும் வில்லையும் பொறித்த சோழனும், சேரனும், நாவலந்தீவின்கண் உள்ள ஏனைய அரசர்களும் தன் ஏவல் கேட்டு நிற்க நிலம் முழுதும் ஆண்டான்'' எனக் கூறுகிறது.

"கயல் எழுதிய இமய நெற்றியின்
அயல் எழுதிய புலியும் வில்லும்
நாவலந் தண்பொழில் மன்னர்
ஏவல் கேட்பப் பாரர சாண்ட
மாலை வெண்குடைப் பாண்டியன்."

—சிலம்பு: 17 : 1-5.

அந்த இமயத்தை, (அம்மலைத் தொடர்க்கு அவர் இட்டு அழைத்த பெயர்) எல்லாவற்றினும் உயர்ந்த மலைமுகடு, வானவெளியின் காற்றழுத்த மண்டலத்தை எட்டிப்பிடித்துத் தன்னை ஏறி அடைய முயலும் மனித முயற்சியை இரக்க மற்று நகைத்த வாறே நிற்க, ஒன்று, தன்கீழ் உள்ளதைவிட உயர்ந்து, ஒன்றன் மேல் ஒன்றாக, எண்ணிக்கையால் பெருகி நிற்கும் வரிசை வரிசையான மலை முகடுகளாலான, நிலத்துப் புறப்பகுதியின் வரிசை வரிசையான மடிப்புகளாகக் கருதாமல் தனித்த ஒரு பெருங் கல்லாம—["பெருங்கல்"—புறம்: 17 : 1; "நெடுவரை"—புறம்: 6 : 1] என அப்புலவர்கள் கருதினர். தமிழ்ப் புலவர்களால் பொருந்திவிட்ட, இமாலயத்து நிலஇயல் கூறுபாடு பற்றிய அறியாமையே, கரிகாலனை, மிகப்பெரிய அம்மலைத் தொடரின் உச்சியை அடையவும், திபேத்து வரை செல்ல அம்மலையை ஊடுறவவும், பிற தமிழ் அரசர்கள், அவன் முன்மாதிரியைப் பின்பற்றவும் செய்தமைக்குக் காரணமாம்.

நெடுஞ்சேரலாதன் பெயரைச் சுற்றி எழுந்த பிறிதொரு கட்டுக்கதை ஒன்றையும், புலவர் மாமூலனார் பதியவைத்து உள்ளார். அவன் காலத்தே பாடப்பட்ட பாட்டாம் பதினொன்றாம பதிற்றுப்பத்துப் பாடல் அளிக்கும் சான்றுப் படி, யானைமீது அவன் கொணர்ந்த செல்வம் ("யானைப் பொலன் அணி எருத்தம் மேல் கொண்டு பொலிந்த நின் பலர்புகழ் செல்வம்."), மாமூலனார் காலத்தில், அழகிய அணிகலக்குவியல்களாகவும், பொன்னால் ஆன பாவை யாகவும், வைரக்குவியலாகவும் பெருகிவிட்டது. ("பாடுசால்

நன்கலம், பொன் செய்பாவை, வைரமொடு''—அகம்: 127).
நெடுஞ்சேரலாதன் குறித்த பதிற்றுப்பத்து இரண்டாம் பத்தின் பதிகத்தில், அக்கற்பனை மேலும் பலசெய்திகளைக் கொண்டதாகி அளவிலும் பெரிதாகி விட்டது. ''அழகாக உருண்டோடி வரும் அருவிகளைக் கொண்ட இமையத்தே வில் பொறித்தான். அலை ஒலிக்கும் கடல்களை எல்லையாகக் கொண்ட தமிழகம் முழுவதும் தன் செங்கோல் செல ஆட்சி நடத்தினான். தக்க பெரிய புகழ் பெருக பெரிய புகழ் வாய்ந்த ஆரிய அரசர்களை வெற்றி கொண்டான். நயம் இலாச் சொல் வழங்கும் யவனர்களைச் சிறை கொண்டு, அவர்தம் கைகளைப் பின் புறமாகப் பிணித்து, அவர்தம் தலையில் எண்ணெய் வார்த்து, அவர்பால் இருந்த அரிய நன்கலன்களோடு வைரங்களையும் கைக்கொண்டான்'' என்றெல்லாம் அது கூறுகிறது. புலவர்களின் கற்பனை வளம், வரலாற்றோடு வருந்தத் தக்க விளையாட்டை உண்மையில் விளையாடிவிட்டது.

''அமைவரல் அருவி இமையம் வில் பொறித்து,
இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோல் நிறீஇத், தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபின் ஆயர் வணக்கி,
நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபின்கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு''
—பதிற்று: இரண்டாம்பத்து: பதிகம்.

62, 63, மற்றும் 368 எண்ணிட்ட புறநானூற்றுப் பாடல்களின் கொளுக்கள், அம்மூன்று பாடல்களும், ஒருவரோடொருவர் போரிட்டு, இருவருமே போர்க்களத்தில் உயிர்துறந்து போன சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனையும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளியையும் பாடுவனவாகக் கூறுகின்றன. இந்நெடுஞ்சேரலாதன், குடமாநிலம் ஆளும் அரசனாம் குடக்கோ எனப்படுவதால், இவன்,

பதிற்றுப்பத்தின் பாட்டுடைத் தலைவனின், வேறுபட்டவனாவன் என்பது தெளிவு. ஆனால், அக்கொளுக்களில் உள்ள குறிப்பு நம்பக் கூடியதா என்பது ஐயப்பாட்டிற்கு உரித்து.

தமிழ் அரசர்கள், ஆரியர்களோடு நடத்திய போர்கள் மீதான, வரம்பிலாப்பொருளில் கூற்று.

சேரலாதன், பனவாசி அல்லது கொண்கானத்து ஆரியர்களோடு நடத்திய போர்கள் அல்லாமல், பிற்காலப் பாடல்கள், ஆரியர்களோடு நடைபெற்ற மேலும் சில போர்கள் பற்றியும் கூறுகின்றன: அவை பற்றிய ஆய்வினை, ஈண்டு எடுத்துக் கொள்வோம். அவற்றுள் இரண்டு, மருதத்திணை தழுவிய பாடல்களில் உவமைகளாக இடம் பெற்றுள்ளன. அழகுறத் தைத்த தழையாடை உடுத்துத், தனக்கு ஒப்பார் இல்லாதவளாய் விழாக்களமெல்லாம் தன் வரவால் பொலிவு எய்த வந்து நிற்கும் விறலி. கணவனைப், பரத்தையர் உறவு கொண்டு விடாவாறு காத்து நிற்கும் தோழியர் மீது கொண்ட வெற்றிக்குப்புகழ் வாய்ந்த முள்ளூர்ப் போர்க்களத்தில் உறை கழித்த வாளோடு களம் புகுந்த மலையமானது வேற்படை, அக்களத்தில், ஒன்றுகூடி நின்று போரிட்ட ஆரியரை வென்று ஓட்டிப் பெற்ற வெற்றியை உவமையாகக் கூறுகிறது அவ்விரண்டில் ஒரு பாட்டு.

''பிணையல் அந்தழைத் தைஇத், துணையிலள்,
விழவுக்களம் பொலிய வந்து நின்றனளே;
எழுமினோ எழுமின்; எம் கொழுநன் காக்கம்;
ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடியாங்கு, நம்
பன்மையது எவனோ? இவள் நன்மைதலைப் படினே.''

—நற்றிணை: 170

முள்ளூர், மலையமான் திருமுடிக் காரியின் தலை நகராகும். மலையன், மலையமான் என்ற சிறப்புப் பெயர்கள், அவன் சேர அரச இனத்தில் வந்தவன் என்பதைக் காட்டுகின்றன. "சிவந்த வேற்படையினையும், வீரக்கழலினையும் உடைய முள்ளூர்க்கு அரசனாகிய காரி என்பான், அழியா நற்புகழை நிலைநாட்டிய வல்வில் ஓரி என்பானைக் கொன்று, தெய்வ தச்சனால் இயற்றப்பட்ட, பலரும் புகழும் பாவை நிற்கும்; சிவந்த வேர்ப்பலா மரங்கள் நிறைந்த கொல்லி மலையைச் சேரர்க்குக் கொடுத்தான் என்கிறது பிறிதொரு பாட்டு:

"செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழல் தொடிக் காரி,
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று, சேரலர்க்கு ஈத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவுள் ஆக்கிய
பலர் புகழ் பாவை."

—அகம்: 209: 11-17.

காரி, ஓரியைக் கொல்வதற்கு முன்னர்க், கொல்லி மலைப்பகுதி ஓரியால் ஆளப்பட்டு வந்துளது: காரி, ஓரியைக் கொன்ற நிகழ்ச்சி, பழங்காலத்தவர் கருத்தை மிகவும் ஈர்த்துளது என்பது தெளிவு. காரி மற்றும் சேரர்களைப் புகழ்ந்து பாடும் புலவர் கபிலர், "இளையாள் ஒருத்தி, தெருவின்கண் ஒருநாள் சென்றது காரணமாக, வழிவழி வந்த வெற்றிச் சிறப்பினை யுடைய கொல்லிமலைத் தலைவனாகிய வல் வில் ஓரியைக் கொன்ற மலையமான் திருமுடிக்காரி, அவ்வோரிக்கு உரிய ஒப்பற்ற தலைநகர்த் தெருவில் புகுந்ததைக் கண்ட, காரியின் பகைவராகிய அவ்வோரியைச் சார்ந்தவர் ஒன்று கூடி எழுப்பிய பேரிரைச்சல் போல, இவ்வூரிலும் பேரொலி எழுந்து விட்டது எனக்கூறுகிறார்.

"இளையோள் இறந்த அணைத்தற்குப், பழவிறல்
ஓரிக் கொன்ற ஒரு பெருந் தெருவில்

காரிபுக்க நேரார் புலம் போல்
கல்லென் றன்றால் ஊரே.''

—நற்றிணை : 320 : 4 - 7.

காரி, முள்ளூர் மன்னன் என அழைக்கப்படுதல் போலவே, பெண்ணையாற்றை அடுத்த நிலப்பரப்பின் மன்னனாகவும் அழைக்கப்பட்டுள்ளான் — ''பெண்ணையம் படப்பை—நாடு கிழவோனே!'' (புறம் : 126 : 23.) [முள்ளூர் பண்டை அருவா நாட்டின் தென் எல்லைக்கண் செஞ்சிக்கு அணித்தாக உளது] ஆகவே, அவனோடு போரிட்ட ஆரியர்கள் கி. பி. ஆறாம் நூற்றாண்டில், காஞ்சியைத் திரும்பப் பெற்றுக் கொண்டதன் பின்னர்த் தம் நாட்டு எல்லையை விரிவாக்க முயன்ற பல்லவர்களாதல் வேண்டும்.

பிறிதொரு உவமையில், ''வெல்லும் வேற்படையினையும், மாரிபோல் சென்று பாயும் அம்புகளையும், மழை மேகம் போலும் தோலால் ஆன கிடுகிளையும் உடைய சோழர்க்கு உரிய, விற்படை மலிந்த காட்டரணைக்கொண்ட வல்லத்துக்குப் புறத்தே உள்ள காவற்காட்டின்கண் நடைபெற்றபோரில், தோற்று உடைந்து ஓடிப் போன ஆரியர் படைபோல், என் கைவளை உடைவதாக'' எனக் கூறப்பட்டுள்ளான்.

''வென்வேல்,
மாரி அம்பின், மழைத்தோல் சோழர்
வில் ஈண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை
ஆரியர் படையின் உடைக என்
நேரிறை முன்கை வீங்கிய வளையே.''

—அகம் : 336 : 19 - 23

ஈண்டுக் குறிப்பிடப்பட்ட ஆரியர்களும் பல்லவர்களே ஆதல் வேண்டும். தன் காவற்காடு தஞ்சையைக் காத்து நின்ற தான வல்லம், ஈண்டு முதன்முறையாகக் குறிப்பிடப் பட்டுளது. இவ்விரு இடங்களும், மிகவிரைவில் முறையே

முத்தரையர், மற்றும் ஒன்பதாம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட, பிற்காலச் சோழர்களின் தலைநகர்களாக வகுக்கப்பட்டன.

மதுரை ஆண்ட ஒரு சிற்றரசன் ஆரியப்படை கடந்த (அல்லது தந்த) நெடுஞ்செழியன் என அழைக்கப்பட்டுள்ளான். இது, பெரும்பாலும், ஆரியர் படைகளை வென்ற நெடுஞ்செழியன் எனப்பொருள் படுவதாகும். ஆனால், ஆரியப்படையோடு அவன் போரிட்டது எங்கும் குறிப்பிடப்படவில்லை; ஆகவே, அது வெறும் பட்டப் பெயரே ஆதல் வேண்டும். சிலப்பதிகாரம் இரண்டாம் காண்டத்து இறுதிக்கண் வந்துள்ள கட்டுரையில், இவன், கோவலனைக் கொலை புரியுமாறு ஆணையிட்டு, அதனால் கண்ணகியால், சபிக்கப்பட்டு, அதன் விளைவால் உயிர் துறந்தவனாக குறிப்பிடப் பட்டுள்ளான் :

> "வடவாரியர் படைகடந்து
> தென் தமிழ்நாடு ஒருங்கு காணப்
> புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
> அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
> நெடுஞ்செழியன்."

சிலம்பு : காண்டம் : 2 : கட்டுரை : 14 - 18.

ஆனால், சிலப்பதிகார மூலம், அவன் பெயரைக் குறிப்பிட வில்லையாகவே, கட்டுரைக் கண்வரும் இச்செய்திக்கு முக்கியத்துவம் கொடுப்பது இயலாது. அவன் பாடியதாக ஒருபாட்டு வருகிறது. "தன் ஆசிரியனுக்கு ஒரு இன்னல் வந்துபோது, அது தீர முன்சென்று உதவியும், மிக்க பொருளை வாரிக்கொடுத்தும், ஆசிரியனை வழிபடும் நிலையில் வெறுப்பு காட்டாது விரும்பி வழிபட்டும் கற்பது ஒருவனுக்கு அழகு. ஒரே தன்மையான பிறப்புடையராய், ஒரு தாய் வயிற்றில் பிறந்தாருள்ளும் அவர்களின் கல்வி - உடைமை இன்மைகளுக்கு ஏற்ப, தாயின் அன்பும் வேறுபடும்; ஒரே குடியில் பிறந்த பலருள்ளும், கல்லாமையால் மூத்தோனை வருக என்றும் அழைக்காத அரசன் அவருள் அறிவுடையோன்

சொல்வழி கேட்டுத் தன் அரசை நடத்துவன். பிறப்பால் வேறுபாடு காணும் நான்கு குலத்தினுள்ளும் கீழ்க்குலத்தில் வந்தான் ஒருவன் கற்று வல்லனாயிருப்பின், மேற்குலத்தில் பிறந்தவன், இவன் கீழ்க்குலத்தான் என எண்ணாது அவன் பால் சென்று அவனை வழிபட்டு வாழ்வன்'' எனக் கூறுகிறது அப்பாட்டு.

''உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்,
பிற்றைநிலை முனியாது, கற்றல் நன்றே;
பிறப்போரன்ன உடன் வயிற்றுள்ளும்
சிறப்பின்பாலால் தாயும் மனம் திரியும்;
ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்
மூத்தோன் வருக! என்னாது, அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன் கண் படுமே''

—புறம்: 183.

வரலாற்று ஆசிரியனுக்கு, இது, வரலாற்றுச் சிறப்பில்லா ஓர் எளியபாடல்; காவல பாவலனாம், இப்பாடலாசிரியர், தமிழ்நாட்டு அரசர்கள், மக்கள் ஆகியோர் உள்ளத்தில், ஆரிய நாகரீகம் நன்கு இடங்கொண்டு விட்டதற்குப் பிற்பட்ட காலத்தே வாழ்ந்தவராவர் என்பதொன்றே, இப்பாடலிலிருந்து நாம் உணர்ந்து கொள்ளக் கூடியது. பிராமண இனத்தவர், தாழ்ந்த இனத்தவரிடம் கல்வி கற்பது என்பதிலிருந்து, நாம் யூகிக்கக் கூடியது, பிராமணர்கள், தமிழ்ப்புலவர்களிடமிருந்து. தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றதை, இவ்வாசிரியர் ஒரு வேளை குறிப்பிடுகிறார் போலும் என்பதே.

இயற்பெயர் அறிய மாட்டாத, கூடகாரம் எனும் இடத்தில் உயிர் நீத்த, மாறன் வழுதி என்ற மற்றொரு

பாண்டியனும், வடபுலத்து அரசர்களை வாடச்செய்தான் எனக்கூறப்பட்டுளது. ' வடபுல மன்னர் வாட அடல் குறித்து இன்னாவெம்போர் இயல் தேர்வழுதி'' (புறம்: 52 : 5 - 6); அவன் வடபுல அரசர்களை வெற்றி கொண்ட போர்க்களம் எது என்பது குறிப்பிடப் படாமையால், இது வெறும் தற்பெருமையே யாம். இவனைப் பாடியபுலவர், ஆரியக் கருத்துக்கள் பெருமளவில் இடம் பெற்றிருக்கும் மருதக்கலி பாடிய, மருதன் இளநாகனாராதலின், இவன் மிகவும் பிற்பட்ட காலத்தவனாதல் வேண்டும்.

ஈண்டுக் காட்டிய எடுத்துக் காட்டுக்கள், இனிவரும் பகுதிகளில் ஆராயப்போகும் எடுத்துக் காட்டுக்களின் அடிப் படையில், திருவாளர் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் ஆரியர்களின் குடியேற்றத்திற்கு அப்பாலும், மௌரியர்கள், அவர்களுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த ஆந்திரர்களின் கீழ், எண்ணற்ற ஆரியப்படையெடுப்பும் நிகழ்ந்தன என்ற உறுதி யான முடிவினை உருவாக்கியுள்ளார் ஆதலின் இப்பொருள், இத்துணை விரிவாக ஆராயப்பட்டது.

**கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் :**

கடலைப் புறங்காட்டி ஓடப்பண்ணிய வேலுக்கு உரியவனாகிய குட்டுவன், அதாவது கடலோட்டிய வேல்கெழு குட்டுவன். அவன் புகழ்பாடும் பதிற்றுப் பத்து ஐந்தாம் பத்தின் பதிகத்தின்படி, நெடுஞ்சேரலாதன் மகனாவன் ஆனால், இக்குட்டுவனின் தாயின் பெயரைக் குறிப்பிடும் வரி, நம்புதற்கு இயலாவாறு பிழைபட்டுளது. வடவரை அஞ்சப் பண்ணும், வானளாவ உயர்ந்த கொடி உடையவனும், குடவர் கோமானும் ஆகிய நெடுஞ்சேரலாதனுக்குச், சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்'' என்கிறது. (ஐந்தாம் பத்து: பதிகம்: 1 - 3)

''வடவர் உட்கும் வான்தோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேரலாதற்குச்
சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்''.

ஒரு ஆண், பிறிதொரு ஆணுக்கு மனைவியாதல் இயலாது ஆதலின், அம்மூலம் பிழைபட்டுளது என்றே நாம் கோடல் வேண்டும். இப்பாட்டைப் பதிப்பித்த ஆசிரியர் அந்த வரிகளை எந்தக் கையெழுத்துப் படிவத்திலிருந்து எடுத்தாரோ, அந்தப் படிவத்தை நம்மால் பார்வையிட முடியாத வரை, அந்த வரிகளின் உண்மை வடிவம் யாது என்பதை ஊகிக்கவும் இயலாது. மேலும், பழந்தமிழ்ப் பாக்களின் அழிந்துபோன, செல்லரித்துப்போன பனை ஓலையிலான ஏட்டுப் பிரிதிகள் காக்கப்பட்டிருக்கும் இழிந்த நிலையினை அறிந்த எவன் ஒருவனும், அவ்வரிகளில், அப்பிழை எவ்வாறு இடம் பெற்று விட்டது என்பதை ஆராயத் துணியமாட்டான். திருவாளர் எம். சீனிவாச அய்யங்கார் அவர்கள், மணக்கிள்ளியை, நெடுஞ்சேரலாதனின் தங்கை கணவனாகக் கொள்வதன் மூலம், அச்சிக்கலான முடிச்சை அவிழ்க்கத், தைரியமாக முயற்சித்துள்ளார். [Tamil Studies : p. 287] மலையாள நாட்டில், இன்று நடை முறையில் இருக்கும் அரியணைக்கான உரிமை, மாமனிடத்திலிருந்து மருமகனுக்கு என்ற முறைமை, பண்டைக் காலத்திலும் இருந்ததாக அவர் கருதுகிறார். பழைய சேர அரசர்கள், தமிழர்கள் மருமக்கள் தாயத்தைப் பின்பற்றும் மலையாள அரச இனங்கள், கி. பி. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னரே தோன்றின. குட்டுவன் தந்தை, நெடுஞ்சேரலாதன் அரச உரிமையைத் தன் முன்னோர்க்கு மகன் என்ற முறையில் பெற்றானேயல்லது, மருமகன் என்ற முறையில் பெற்றவனல்லன்.

### குட்டுவன் வீரச்செயல்கள் :

குட்டுவன் புகழ்பாடும் பரணரின் கூற்றுப்படி, அவன் வெற்றிச்செயல்கள், அவன் தந்தையின் வெற்றிச்செயல்கள் போலவே ஒரு சிலவாம். அரசவைப் புலவர்கள் செய்வது போலவே இப்புலவரால், தந்தையின் வெற்றிகள் எல்லாம் இவனுக்கும் ஏற்றி உரைக்கப் பட்டுள்ளன. "கற்களால் உயர்ந்த நெடிய மலையாகிய இமயம்

வடஎல்லையாக, தெற்கு எல்லை குமரியாக, அவற்றின் இடையே உள்ள நாட்டில், பகையரசர்களின், முரசுமுழங்கச் செய்யும் போர்கள் எல்லாம் கெட்டு அழிய, வெற்றி ஆரவாரம் உண்டாக, அப்பகையரசர்களின் புகழ் மிக்க நாடுகளுள் புகுந்து, அவற்றின் பண்டை நலங்களைக்கெடுத்து அழித்த, போரில் எதிர்ப்படுவாரை அழித்து வெற்றி கொள்ளும் நாற்படையினையும், பொன்மாலையினையும் உடைய குட்டுவனே?'' என அவன் அழைக்கப்பட்டுள்ளான். பகையரசர் எழுவரின் மணிமுடிகளை அழித்துப் பண்ணிய பொன்மாலையை மார்பில் அணிந்த எனும் சிறப்பும், தந்தையிடமிருந்து மகனுக்கு மாற்றப்பட்டுளது.

''கல்லோங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமயமாகத்,
தென்னங் குமரியொடு ஆயிடை அரசர்
முரசுடைப் பெருஞ்சமம் ததைய, ஆர்ப்பு எழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடுதானைப், பொலந்தார்க் குட்டுவ!''

—பதிற்று: 43: 6-11.

''எழுமுடி மார்பின் எய்திய சேரல்''

—பதிற்று. 45: 6

இவ்வரசனைப் பற்றிய பிறிதொரு பாராட்டு, அவன் பெயரோடு, வேல் எறிந்து கடலைப் புறங்காட்டச் செய்த எனும் பொருள் தருவதான. "கடல் பிறக்கு ஓட்டிய வேல் கெழு'' எனும் சிறப்பு அடைமொழியினை இணைக்க உதவிய ஒன்றாம். கடல் மீது கொண்ட இவ்வெற்றி அடுத்தடுத்துக் கூறப்பட்டுளது. ''வெள்ளிய தலையாட்டத்தினையும், விரைந்த செலவினையும் உடைய குதிரையூர்ந்து செல்லும் நின்கால்கள், ஓவென ஒலிக்கும் அலைகளைக் கொண்ட குளிர்ந்த கடல் காற்றால் அலைப்புண்டு சிறுசிறு திவலைகளாக உடையுமாறு அக்கடலிடையே சென்று போரிட்டன.''

''கால் உளைக் கடும்பிசிர் உடைய, வால்உளைக்
கடும்பரிப் புரவி ஊர்ந்த நின்
படுந்திரைப் பனிக்கடல் உழந்த தாளே.''
—பதிற்று : 41 : 25-27.

பகைவரின் வில்லிலிருந்து தொடுக்கப்படும் அம்புகளின் கடுமையைக் கெடுத்த வலிய வெண்மையான தோலால் ஆன கேடகத்தையும், அவற்றிற்கேற்ற மறப் பண்பு படைத்த படையினையும் உடைய வேந்தர் உள்ளே, மேகம் படிந்து குடித்தலால் குறையாமலும், ஆறுகள் வந்து புகுவதால் மிகாமலும், எதிர்த்து வீசும் காற்று எழுப்பும் அலைகளால் அசைதலையுடைய, மிகநிறைந்த நீரை உடைய முழங்கும் அலைகளோடு கூடிய குளிர்ந்த கடலில், மணிபோலும் ஒளியினையுடைய வேற்படையை எறிந்து, அக்கடல் மீது வெற்றி கொண்டவர், நின்முன்னோருள்ளும் ஒருவரும் இல்லை: இப்பொழுதும் ஒருவரும் இல்லை.''

''தெவ்வர்,
சிலைவிசை அடக்கிய மூரி வெண்தோல்
அனைய பண்பின் தானை மன்னர்
இனி யார் உளரோ? நின்முன்னும் இல்லை;
மழைகொளக் குறையாது, புனல்புக நிறையாது
விலங்குவளி கடவும் துளங்கிரும் கமஞ்சூல்
வயங்குமணி இமைப்பின் வேல் இடுபு
முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசினோரே.''
பதிற்று : 45 : 15-2[illegible]

புலவர், அடுத்தபாட்டிலும், அப்பொருளுக்கே வந்[illegible] ''சங்கு முழங்கும் கடல் கலங்குமாறு, வேற்படை[illegible] ஏவி, உடைந்து தலைமடங்கும் அலைகளைக் கொண்ட நீர் பரப்பாகிய ஒலிக்கும் கடலைத் தோற்று ஓடப் பண்ணி வெல்லும் புகழ் வாய்ந்த குட்டுவ!'' என அழைக்கிறார்.

"கோடுநரல் பௌவம் கலங்க வேலிட்டு
உடைதிரைப் பரப்பின் படுகடல் ஓட்டிய
வெல்புகழ் குட்டுவன்" —பதிற்று : 46 : 11-13

புலவர், அவனை, "அழிக்க இயலாத புகழை நிலைநாட்டி கடலிடையே புகுந்து, அக்கடலோடு பெரும்போர்புரிந்து குளிர்ந்த கடற்றுறைகளைக் கொண்ட பரதவனே!" என மேலும் ஒருமுறை அழைக்கிறார்.

"கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொடு உழந்த பனித்துறைப் பரதவ!"
—பதிற்று : 48 : 3-4

அடுத்து அடுத்துத் திரும்பத்திரும்பக் கூறப்படும் இப்பாராட்டு உணர்த்தும் பொருள் யாது என்பதை யூகித்து அறிதல் கடினம். குட்டுவன் வேல், அவ்வாறு வீசப்பட்டதால் கேன்யூட் (Canute) என்பாரின் உரத்துக்குரல் எழுப்பி இட்ட ஆணை சாதிக்காத எதைச் சாதித்துளது? வேல் எறிதல் குட்டுவனின் கடலாதிக்கத்தை உணர்த்தும் சின்னமாகவே பெரும்பாலும் உள்ளுணர்வோடு நடைபெற்றுளது. பரணர் அகத்துறைப் பாடல் ஒன்றில் அப்பொருள் குறித்து மீண்டும் கூறியுள்ளார். "குட்டுவன், தன்னுடன் போரிடவல்ல பகைவரை, நில எல்லைக்குள் காணாமையால், பொங்கி எழும் சினம் மிகுந்து, போர் புரியும் தன் ஆற்றலால், கடலை வளைத்து ஓங்கி எழும் அலைகளையுடைய கடல் பின்னிட்டு ஓடுமாறு ஓட்டிய, வெற்றி மாண்பு மிக்க வேல்"

"குட்டுவன்
பொருமுரண் பெறாஅது, விலங்கு சினம் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஓட்டிய
நீர்மாண் எஃகம்." —அகம் : 212 : 16-20

கடல்மீது வேல் எறிந்து, அதைப் பின்னடையச் செய்யும் இவ்வீரச்செயல், பிற்காலத்தில், ஒரு பாண்டியன் ஒருவனுக்கும், அதன் காரணத்தால் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் எனும் பெயர் பூண்டானுக்கும் ஏற்றி, உரைக்கப் பட்டுளது: (புறநானூற்று 9 ஆம் எண் பாடலையும், அப் பாடலின் 10 ஆம் வரிக்கு, இன்றைய பதிப்பாசிரியரின் குறிப்பையும் காண்க.) ஈண்டு எடுத்துக் காட்டிய எடுத்துக் காட்டுக்கள், ஓர் எளிய கடல்விழா, எத்துணைப் பெரிய வெற்றிச் செயலாக உருப்பெற்று விட்டது என்பதைக் காட்டுகின்றன.

நெடுஞ்சேரல் காலத்தில், சேரநாடு ஆரிய ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வரப்பட்டு விடவே நெடுஞ்சேரலாதன், கடல் ஒதுங்கி இடம் அளிக்கக் கடல்மீது வேல் எறிந்த பரசுராமன் கதையால் ஊக்கம் பெற்று, அப்பிராமணப் பெருவீரன் செயலை முன் மாதிரியாகக் கொண்டு விட்டது நடந்திருக்கக் கூடியதே. பிற்காலத்தே, மதுரைத்தலபுராணம் உருவாகவே, இவ்வெற்றிச் செயல், பாண்டியன் ஒருவனுக்கும் ஏற்றி உரைக்கப்பட்டது. மதுரையில் கோயில் கொண்டிருக்கும் சிவனிடம் தெய்வத்தன்மை வாய்ந்த வேல் ஒன்றைப் பெற்று, அதை எறிந்ததன் மூலம், தன் கால்களைத் தழுவி நின்ற கடலை வற்றச் செய்த உக்கிரபாண்டியன் கதை திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தில் (20:6) விளங்க உரைக்கும் வகையில் உருவாகிவிட்டது. இக்காலத் தமிழறிஞர் பலரும், வடிம்பலம்ப நின்ற பாண்டியன், புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளான் என்கின்றனர்: புறம்: 9ல் வரும் 10வது வரியாகிய, "முந்நீர் விழவின் நெடியோன்" என்ற தொடர்க்கான விளக்கமாக, பதிப்பாசிரியர் டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர்தாம்,

"முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றான் என்ற வியப்பால் நெடியோன் என்றார்" எனக் கூறுகிறார் ஆதலின் இக்காலத் தமிழறிஞர்கள் கூறுவது தவறு.

## குட்டுவனும் மோகூரும் :

குட்டுவனின் உண்மையான போர்க்கள வீரச்செயல் பின்வருமாறு விளக்கப்பட்டுளது : "பகைவர் அரண் கொள்ளச் செல்வார் அணியும், மெல்லிய உழிஞைக்கொடியின் மலர் அணிந்து, வெல்லும் போரே அறிந்த அறுகை என்பான், சேணிடத்தே இருந்தானாயினும், நண்பன் எனப் பலரும் கேட்க அறிவித்து, மோகூர் மன்னன் பழையனுக்கு அஞ்சித் தன் நாட்டை விட்டு ஓடி ஒளிந்து கொண்டதனால் உண்டாகிய அழியாப் பெரும் பழியைத் துடைத்தற்பொருட்டு, அப்மோகூர் மன்னன் அரண்களைத் தாக்கி, வருத்தும் தெய்வமே அழித்தாற்போல அழித்து, அவன் போர் முரசைக் கைக்கொண்டு, அவன் உரைத்த வஞ்சினத்தை அழித்துத் தன்னைப் பணிய வைத்து, அவன் காவல் மரமாம் வேம்பை வெட்டி வீழ்த்தி, அதை முரசு செய்தற்கேற்ற சிறுசிறு துண்டங்களாக்கி, அத்துண்டங்கள் ஏற்றிய வண்டியை யானைகளைக் கொண்டு ஈர்க்கச் செய்தவனே! கொழுப்பு குறைந்த இறைச்சித் துண்டை வைத்த இடத்தை மறந்து விட்ட, உச்சிக் கொண்டை உடைய கூகையைக் கவலையுறுமளவு வருத்தும் கூகைப் பெடைகள் நிறைந்த சுடுகாட்டில், வெற்றி முரசும், வழிவழியாக வந்த அரசுரிமையும் பெற்ற அரசர் பலரை வென்று, ஓயாது ஆடும் கடல் சூழ்ந்த பரந்த நாட்டை ஆண்டு, நம் வாழ்நாளை இனிதே கழித்த மன்னர்களை இட்டுப் புதைக்கும், வன்னி மரங்கள் நிறைந்த இடுகாட்டில், பெருமக்கட்டாழி, உன்னுடைய நோயற்று வலிவுற்ற உடலினைக் காணாது ஒழிக!"

'நுண் கொடி உழிஞை, வெல்போர் அறுகை
சேணன் ஆயினும், கேள் என மொழிந்து

புலம் பெயர்ந்து ஒளித்த களையாப் பூசற்கு.
அரண் கடாவுறீஇ, அணங்கு நிகழ்ந்தன்ன
மோகூர் மன்னன் முரசம் கொண்டு
நெடுமொழி பணித்து அவன் வேம்பு முதல் தடிந்து
முரசுசெய முரச்சிக், களிறுபல பூட்டி
ஒழுகை உய்த்தோய்! கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றும் குரால் அம்பறந்தலை
முரசுடைதாயத்து அரசுபல ஓட்டித்
துளங்கு நீர் வியலகம் ஆண்டு இனிது கழிந்த
மன்னர் மறைந்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே."

—பதிற்று: 44 : 10-23

மோகூர் மன்னனுக்குப் பல குறுநிலத்தலைவர்கள் துணை புரிந்தனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. "வேற்படையைச் செலுத்தி எழும் பகைவர் முன்னணிப் படையின் இரு பக்கங்களிலும் வரும் பக்கப்படைகளைப் போரிட்டு வெல்லும் கொடிய தூசிப்படையினையும் வெல்லும் போரினையும் உடைய முடிவேந்தர்களும் குறுநில மன்னரும் ஒன்றுகூடித் துணைவர, அதனால், வலுவுற்றுச் செருக்கு கொண்டு அவரோடு கூடிவரும் மோகூர் மன்னனின், வலுவான படையின் நிலைகெட்டுத் தடுமாறுமாறும் நெருக்கித் தாக்கி, குருதி படிந்து கறைபட்ட கையினரான வீரர்களின் மார்புப் புண்களிலிருந்து ஒழுகும் குருதி, நிலத்தில் பாய்ந்தோடி, மழைவெள்ளம்போல் ஆங்காங்குள்ள பள்ளங்களை நிரப்பிப் பாய, இறந்து வீழும் பிணங்கள், குவியல் குவியல்களாகக் குவிய, பற்பல பாழ் செய்து, ஒலி எழுப்பும் கண்ணை உடைய போர் முரசு வெற்றி முழக்கம் எழுப்ப, அப்பழையனது செல்வம் அனைத்தும் அறவே கெட்டழிய, இருந்து வாழ வேண்டியவர் பலரும் இறந்து இலராக, கரிய கொம்புகளைக்

கொண்ட, அவனுடைய வலிய காவல் மரமாம் வேம்பினை வெட்டி வீழ்த்திய மிக்க சினமுடையோனாகிய குட்டுவன்''

''எஃகு துரந்து எழுதரும் கைகவர் கடுந்தார்
வெல்போர்வேந்தரும் வேளிரும் ஒன்று மொழிந்து
மொய்வளம் செருக்கி, மொசிந்துவரு மோகூர்
வலம்படு குழூஉநிலை அதிர மண்டி
நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்
நிறம்படு குருதி நிலம்படர்ந்து ஓடி
மழைநாள் புனலின் அவல் பரந்து ஒழுகப்
படுபிணம் பிறங்கப், பாழ்பல செய்து
படுகண்முரசம் நடுவண் சிலைப்ப
வளனற நிகழ்ந்து, வாழுநர் பலர்படக்
கடுஞ்சின விறல் வேம்பு அறுத்த
பெருஞ்சினக் குட்டுவன்.'' —பதிற்று : 49 : 6-17.

புறம் : 369ல், போர்க்கள நிகழ்ச்சி ஒவ்வொன்றையும், தொடர்பான பல்வேறு தொழில்களாக விளக்கிக் கூறும் உருவக அணியில், குட்டுவனைப் புகழ்ந்து பரணர் பாடியுள்ளார். அப்பாட்டு, இலக்கியச் சிறப்புடையதேயல்லது வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது அன்று; ஆகவே, அது, ஈண்டு எடுத்துக்காட்டப்படவில்லை.

### குட்டுவன் குறித்த கற்பனைக் கதைகள்

ஐந்தாம் பத்தின்பதிகம், குட்டுவன் போர்ச்செயல் குறித்து மூலத்தில் குறிப்பிடப்படாத பலவற்றின் குறிப்புகளைக் கொண்டுளது. ''பத்தினிக் கடவுளுக்குப் படிமம் செய்வதற்கான கல்லைக் கொள்வான் வேண்டி, காற்று விரைந்து வீசும் காடுகளை அம்புபோல் விரைந்து கடந்து, ஆரிய அரசர்களை வென்று, பெரும் புகழ் வாய்ந்ததும், இனிய பல அருவிகளைக் கொண்டதும் ஆன கங்கையில் நீராடி, அந்நாட்டவர்க்குரிய ஆனிரை பலவற்றை, அவற்றின்

கன்றுகளோடு கைக்கொண்டு, தோல்வி காணா வலிய விற்படையுடைய இடும்பில் எனும் இடத்தில் பாடிகொண்டு, வலிய புலியொத்த வீரர்கள் வீழ்ந்து மடிய, சிறுசிறு கொத்துக்களான நெய்தல் மலர் நிறைந்த வியலூரைத் தூள்தூளாக அழித்து, அடுத்த கரை அடைந்து, கொடுகூரை வென்று அழித்து, மோகூர்ப் பழையன் காத்து நிற்கும் அவன் காவல் மரமாம் கரிய கொம்புகளைக் கொண்ட வேம்பினை வெட்டி வீழ்த்தி, களத்தில் கணவரை இழந்தமையால், தம் அணிகலன்களைக் கழற்றி எறிந்துவிட்ட நல்ல பல மகளிரின் அடர்ந்து பெருகிய கூந்தலால் ஆன கயிறு கொண்டு, வேம்பு மரத்துண்டங்கள் ஏற்றிய வண்டியில் யானைகளைப் பூட்டி ஈர்த்துப் பேராண்மை வாய்ந்த பெரிய போர்க்களத்தில், சோழர் குடிவந்த ஒன்பதின்மர் வீழ்ந்தொழிவான் வேண்டி நேரிவாயில் எனும் இடத்தே பாடிக்கொண்டான்.

"கடவுள் பத்தினிக் கல்கோள் வேண்டிக்,
கால் நவில் கானம் கணையிற் போகி,
ஆரிய அண்ணலை வீட்டிப், பேரிசை
இன்பல் அருவிக் கங்கை மண்ணி,
இனம் தெரி பல்லான் கன்றொடு கொண்டு,
மாறா வல்வில் இடும்பில் புறத்திறுத்து,
உறுபுலி அன்ன வயவர் வீழச்,
சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி,
அக்கரை நண்ணிக், கொடுகூர் எறிந்து,
பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்
முழாரை முழுமுதல் துமியப் பண்ணி,
வால் இழை கழிந்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங்கூந்தல் முரற்சியால்
குஞ்சர ஒழுகை பூட்டி, வெந்திறல்

ஆராச் செருவின் சோழர் குடிக்கு உரியோர்
ஒன்பதின்மர்வீழ், வாயில் புறத்து இறுத்து.''
—பதிற்றுப்பத்து : ஐந்தாம்பத்து : பதிகம் : 4-20

ஈண்டு மேற்கோள் காட்டிய பகுதியின் முதல் நான்கு வரிகள், சேரன் செங்குட்டுவனின் வடஇந்தியப் படையெடுப்பு குறித்த சிலப்பதிகாரக் கூற்றிலிருந்து எடுத்த செய்திகளைக் கொண்டுள்ளன. பதிக ஆசிரியர், சிலப்பதிகார ஆசிரியரைப் பின்பற்றிச் செங்குட்டுவனைக், கடலோட்டிய வேல்கெழு குட்டுவனாக அடையாளம் கண்டுள்ளார். அடுத்த ஐந்து வரிகளும், கடைசி நான்கு வரிகளும், பழைய பாடல்கள் எதிலும் விரிந்துரைக்கப்படாத, ஆனால், சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள போர்களைக் குறிப்பிடுகின்றன. [சிலம்பு : 28 : 115-119 காண்க. சோழர்குல இளவரசர் களோடு நடத்திய போர், சிலம்பு : 27 : 118-123லும் குறிப்பிடப்பட்டுளது.] இவ் வேறுபாட்டோடு, நிகழ்ச்சி களின் வரிசையைத் தலைகீழாக மாற்றியுள்ளார். ஏனைய வரிகள், சேரவேந்தன், பழையனோடு மேற்கொண்ட போர்பற்றிக் கூறுகின்றன. ஆனால், வேப்ப மரத்துண்டங்களை மகளிர் கூந்தலால் ஆன கயிறு கொண்டு யானைகளை ஈர்க்கப்பண்ணிய கதையினை நுழைத்துள்ளார். அறிவிக்குப் பொருந்தா இவ்விளக்க நுழைவு, பிந்திய தலைமுறையைச் சேர்ந்த மக்கள், பழங்காலத்திலிருந்து வரும் கதையினை, எவ்வாறு, தங்கள் கற்பனைகளைக் கட்டவிழ்த்து விட்டும், அறிவொடு பொருந்தா அணிகளைப் புதிதாக நுழைத்தும் பெரிதாக்கிக் காட்டுகின்றனர் என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது. இன்றைய அறிஞர்களும் கூட, அவற்றிற்கு, வழிவழிச் செய்தி எனும் பெயர் சூட்டி, எள்ளி நகையாடத்தக்க, ஒவ்வொரு கட்டுக்கதையினையும் அவ்வாறே ஏற்றுக் கொள்ளத் துடிக்கின்றனர். பழம்பெரும் புலவர், இப்பொருள்களைத், தன் பாட்டிடைப் புகுத்தி யிருந்தால், அதைப், பாட்டுடைத் தலைவனைப் புகழ்ந்து பாடும் வழக்கம் உடைய அரசவைப் புலவரின், மன்னிக்கலாம்

மிகைபடக்கூறலாகக் கொள்ளலாம். ஆனால், பலநூறு ஆண்டுகளுக்குப் பிற்பட்ட காலத்தவராய ஓர் உரையாசிரியர், அதைப்புகுத்துவராயின், அது, கட்டுப்பாடற்ற விளையாட்டுக் கற்பனையின் விளைவேயாகும்.

## தமிழ் நாட்டின் மீது மௌரியர் படையெடுப்பு - ஒரு மற்றொன்று விரித்தல்.

சில பல நூற்றாண்டுகளுக்கு முன்னர், திருவாளர் மு. ராகவ அய்யங்கார் அவர்கள், அகநானூற்றிலிருந்து. அது, அந்நிலையிலும் அச்சிடப் படாத நிலையில், மோரியர் என்ற சொல் இடம் பெற்ற மூன்று பாடற்பகுதிகளைக் கண்டு வெளிப்படுத்தினார். அதில் முக்கியப் பகுதி, "வெற்றிக் கொடியினையும், காற்றுப்போல்விரையும், அழகுறப்புனையப் பட்ட தேரினையும் உடைய கோசர், மிகப்பழைய ஆலமரத்தின் அரிய கிளைகளின் கீழான மன்றத்தில், இனிய இசை எழுப்பவல்ல முரசம், குறுந்தடியால் அடிக்கப்பட்டு ஒலிக்க, பகைவர் போர்முனையை அழிந்தபோது, மோகூர் மன்னன் பணிந்து வாராமையால், அவன் பால் பகை கொண்டு வந்த, குதிரைப் படைகள் நிறைந்த பெரிய சேனையினை யுடைய புதிய மோரியர் என்பார் புனையப் பெற்ற தம் தேர்களின் உருளைகள், தடையின்றி உருண்டோடுவதற்காக, உடைத்து வழி செய்யப்பட்ட, ஒளி வீசும் வெண்ணிற அருவிகளைக் கொண்ட மலையிடை வழி" எனக்கூறுகிறது.

> "வெல் கொடித்
> துனைகால் அன்ன புனைதேர்க் கோசர்,
> தொன்மூது ஆலத்து அரும்பணைப்பொதியில்
> இன்னிசை முரசம் கடிப்பு இகுத்து இரங்கத்,
> தெம்முனை சிதைத்த ஞான்றை, மோகூர்
> பணியா மையின் பகைதலை வந்த
> மாகெழு தானை வம்ப மோரியர்

புணைதேர் நேமி உருளிய குறைத்த
இலங்குவெள் அருவிய அறைவாய்.''

அகம் : 251 : 6-14.

இறுமாப்பு மிகுந்த இம் மோகூர் என்பான், குட்டுவனால் தண்டிக்கப்பட்ட மோகூரான் தானா? அல்லது அவன் பெயரே பூண்ட வேறு ஒருவனா என்பதைத் தெரிந்து கொள்வதற்கான வழியேதும் இல்லை. ஆனால், யாரோ, சில மோரியர் என்பார், அவன் பகைவராய், அவனைப் பணியவைக்கக் கோசர் என்பாரை, முன்னதாக அனுப்பிவைத்தனர் என்பது மட்டும் உறுதி. கோசர் என்பார் துளுநாட்டில் வாழ்ந்தவராவர்.

''வாய்மையால் சிறந்த பெரிய அணிகலன்களை உடைய கோசர்க்கு உரிய, குடுமி உடையதான திரண்ட பச்சைக்காய் முற்றிய பாகற்பழத்தைத் தின்ற, பறைபோலும் வட்ட வடிவமான கண்களைக் கொண்ட தோகைகளையுடைய மயில்கள் மிக்க சோலைகளை உடைய துளுநாடு''

''மெய்ம்மலி பெரும்பூண் செம்மல் கோசர்
கொம்மை அம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாகல் ஆர்கைப் பறைக்கண் பீலித்
தோகைக் காவின் துளுநாடு''

—அகம் : 15 : 2-5.

''பொன் வளம் மிக்க, கொண்கானத்தின்கண் உள்ள. நன்னனுக்குஉரிய நல்ல நாட்டில் இருக்கும் அழகு பொருந்திய ஏழில் மலை வளத்தைப் பெறுவதாயினும், உன்னைவிட்டுப் பொருள்வயின் பிரிபவர் யார்?

'பொன்படு கொண்கான நன்னன் நன்னாட்டு
ஏழில் குன்றம் பெறினும், பொருள்வயின்
யாரோ பிரிகிற்பவரே?''

—நற்றிணை : 391 : 6-8

[மேலே கூறிய இரு பகுதிகளையும் இணைத்துத் திருவாளர். எஸ் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள், துளு நாடு அல்லது கொண்கானம், நன்னனுக்கு உரிய நாடாகும்: ஒரு போரில், நன்னன் தன் அரச யானையையும் இழந்து தோல்வியைத் தழுவியதன் விளைவால், அவன் நாடு கோசர் எனும் புதியவரால், அழிவுண்டு பிளவுண்டு போயிற்று என்ற முடிவினைக் கொண்டுள்ளார். (Beginnings of South Indian History, Page: 84 - 85] இக் கூற்றின் பிற்பகுதிக்குச் சான்றாக, "நன்னனுக்கு உரிய காவல் மரமாம் நல்ல மாமரத்தை வெட்டி வீழ்த்தித் தம் நாட்டிற்குக் கொண்டு சென்ற, என்றும் வாய்மையே பேசும் கோசர் போல, சிறிது, வன்கண்மை உடைய சூழ்ச்சியும் வேண்டும்."

"நன்னன்
நறுமா கொன்று நாட்டில் போக்கிய
ஒன்று மொழிக் கோசர் போல
வன்கண் சூழ்ச்சியும் வேண்டும்;"

—குறுந்தொகை : 73 : 2-5.

எனவரும் பகுதியைக் கொண்டுள்ளார்.

குறுந்தொகைப் பதிப்பாசிரியர் ஒருவர், நல்ல மணங்கமழும் மாமரம் எனும் பொருள் உடையதான நறுமா என்பதற்குப் பட்டத்து யானை எனப்பொருள் கூறியுள்ளார். நல்ல மணம் எனும்பொருள் உடையதான "நறு" என்ற சொல் இடம் பெற்றிருப்பதையும் இறந்த ஒரு யானையின் உடலைத் தம் நாட்டிற்குக் கொண்டு சென்றிருப்பராயின் கோசர் அறிவிலாதவராவர் என்பதையும் மறந்து, திருவாளர் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள், அப்பொருளை ஏற்றுக் கொண்டுள்ளார்.

கோசர், துளு நாட்டில் இருந்தவாறே, கொங்கு நாட்டில், அடிக்கடிப் படையெடுத்துச் சென்று, கோசரின் புதிய ஊர் எனும் பொருள் உடையதான கோயம்புத்தூர் நகரைக்

கண்டனர். கோசரின் துளு நாட்டிற்கு வடக்கில், மெளரியர்களின், பெரும்பாலும், பாடலிபுத்திரத்து மெளரிய இனத்து ஒரு பிரிவின் வழி வந்த சாளுக்கிய இனத்து முதலாம் கீர்த்தி வர்மனின் [கி. பி. 566-597] பகைவர்களாகிய மெளரியர்களின் நாடு இடம் பெற்றிருந்தது. கோசரோடு இணைந்து தமிழ் நாட்டின் மீது ஒரு படையெடுப்பை மேற்கொள்ள முயன்ற மெளரியர், இந்த மெளரியராதலே இயலும்.

மெளரியர் பற்றிக் குறிப்பிட்டிருக்கும் பாக்களைப் பாடிய புலவர்களின் கருத்தெல்லாம், கோசர், மெளரியர்களின், அத்துணை முக்கியத்துவம் இல்லாத தனி படையெடுப்புப் பற்றியதாகாது, அவர்களின் தேர்ப்படை இனிது செல்ல, பாறைகளை அகற்றிப் பண்ணிய பாதைகளைக் கொண்ட மலைநாடு, இருக்கும் சேய்மை, பொருள் ஈட்டும் முயற்சி மேற்கொண்டு அதற்கப்பாலும் சென்றிருக்கும் காதலன் பற்றியதேயாம்.

இப்பொருள் பற்றிக்கூறும் இரண்டாம் பாடற் பகுதி இவ்வாறு கூறுகிறது: ''வானளாவ நீண்டுயர்ந்த பெருமலைகளில் செல்லத் தக்க தேர்ப்படையினையுடைய மோரியர், பொன்னால் பண்ணப்பட்ட தங்கள் தேர்களின் உருளைகள் இனிது இயங்க, வெட்டி வழிசெய்யப்பட்ட குன்றுகள்.''

''விண்பொரு நெடுவரை, இயல்தேர் மோரியர்
பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த
அறை.''

—அகம் : 69 : 10-12.

மூன்றாம் பாடற்பகுதி, முதற்பாடற் பகுதியின் ஆசிரியராகிய மாமூலனாரால் பாடப்பட்டது: அது இவ்வாறு கூறுகிறது. ''அசைந்து அசைந்து நடைபோடும் இயல்பு வாய்ந்த இளம் மயில்கள் உதிர்த்து விட்ட தோகையை நீண்ட வாரினால், வலிய வில்லில் வைத்துக்கட்டி, அந்த வலிய வில்லின் அழகிய நீண்ட நாணின் விளிம்பிற்குப் பொருந்திய விரைவுத் தன்மை வாய்ந்த, பேரொலி எழுப்பும் விரைந்த

செலவினையுடைய கொடிய அம்புகளை உடையவராகிய, வலிமை வாய்ந்த வடுகர் என்பார். தமக்குத் துணையாக முன் வரிசையில் வர, மோரியர் என்பார் தென்னாடுகளைக் கைப்பற்ற எண்ணி வந்த படையெடுப்பின்போது, வானளாவ உயர்ந்த பனி படர்ந்த பெரிய மலைகளில், பேரொளி வீசும் தேர்ச்சக்கரங்கள் தடையின்றிச் செல்லப் பிளந்து வழியாக்கிய மலைப்பாறை.''

''ஒல்கியல் மடமயில் ஒழித்த பீலி
வான்போழ் வல்வில் சுற்றி, நோன்சிலை
அவ்வார் விளிம்பிற்கு அமைந்த, நொவ்வியல்
கனைகுரல் இசைக்கும் விரைசெலல் கடுங்கணை
முரண்மிகு வடுகர் முன்னுற, மோரியர்
தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு
விண்ணுற ஓங்கிய பனிஇரும் குன்றத்து
ஒண்கதிர்த் திகிரி உருளியகுறைத்த
அறை.'' —அகம்: 281 : 4 - 12.

கோசர் ஈண்டு, வடுகர் என அழைக்கப்பட்டுள்ளனர்; வடநாட்டவர் எனும் பொருள் உடையதான வடுகர் என்ற அச்சொல், தமிழ்நாட்டிற்கு வடக்கே வாழ்ந்த, தெலுங்கர், கன்னடவர், துளுவர் ஆகியவர் போலும் அனைத்து மக்களை யும் குறிக்க வழங்கப்படும்.

மோரியரைக் குறிப்பிடும் கடைசி பாடற்பகுதி புறநானூற்றில் காணப்படுகிறது. அது இவ்வாறு கூறுகிறது: ''வெற்றிதரும் வேற்படையினையும், வானளாவ உயர்ந்த நெடிய குடையினையும், கொடியணிந்த தேரினையும் உடைய மோரியர், திண்ணிய ஆரக்கால் சூழ்ந்த சக்கரம், நன்கு இயங்குதற்பொருட்டு, வெட்டிக் குறைக்கப்பட்ட, உலக எல்லைக்கு அப்பாற்பட்ட இடத்திற்குச் செல்லும் இடைவழி.''

"வெண்வேல்,
விண்பொரு நெடுங்குடை, கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
உலக இடைகழி அறைவாய்"

—புறம்: 175: 5 - 8.

சந்திரகுப்தன் அல்லது பிந்துசாரன் காலத்தில் மௌரியர்களின் இந்தியப் படையெடுப்பு, என்ற கோட்பாடு, இந்நான்கு பாடற்பகுதிகளை அடிப்படையாகக் கொண்டுளது. இக்கோட்பாட்டிற்கு அரணாக, திருவாளர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள், இப்பாடற்பகுதிகள் கி. பி. முதல் நூற்றாண்டில் கொண்டு வைக்கத்தக்கனவாம் என்று கருதி [Beginnings of South Indian History. p. - 85] மாமூலனார், சோழப் பேரரசன் கரிகாலனின் சமகாலத்தவர் என்பதற்கான அகச்சான்றும் உளது என்று கூறுகிறார். [Beginnings of South Indian History. page: 87] அந்த அகச்சான்று எது என்பதை அவர் அறிவிக்கவில்லை. கரிகாலனின் பகைவனாகிய பெருஞ்சேரலாதன் வடக்கிருந்து உயிர் துறந்தபோது, அது கேட்ட அவன் அவைக்களப்புலவர்களும் வடக்கிருந்து உயிர் துறந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார். [அகம்: 55: 10-14], இது, மாமூலனார் கரிகாலனுக்குப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவர் என்பதை நிலைநாட்டும்; எத்தனை ஆண்டு பிற்பட்டவர் என்பதைக் கூற இயலாது. உண்மையைக் கூறின், தம்முடைய பாக்கள் பலவற்றிலும், இந்நூல் 20, 21, 23, மற்றும் இந்த 25 ஆகிய அதிகாரங்களில் குறிப்பிடப்பட்ட எந்த அரசர்களின், சமகாலத்தவராகத் தம்மை, மாமூலனார் குறிப்பிடவில்லை; மாறாக, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில், சேர, சோழ, பாண்டியராகிய தமிழ் அரச இனம் மூன்றும் வீழ்ச்சி உற்ற பின்னர், ஆட்சிக்கு வந்துற்ற எண்ணற்ற குறுநிலத் தலைவர்களின் காலத்தவராகவே காட்டிக்கொண்டுள்ளார். ஆகவே, பழைய தொகை நூல்களில் தொகுக்கப்பெற்ற பாடல்களைப் பாடிய புலவர்கள்

அடங்கிய கடைச்சங்ககாலப் புலவர்களின் கடையான வராவர்''

திருவாளர் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள், மௌரியர் படையெடுப்பு அலையினை, மதுரை மற்றும் பொதிகை மலைவரை நீண்டு சென்றதாகக் கொண்டுள்ளார். அகம் 251 ல் வரும் ''பொதியில்'' என்ற சொல்லைப் பிழை படப்பொருள் கொண்டு விட்டதே, அவரின் அம்முடிவுக்குக் காரணமாம் ''பொதியில்'' என்றசொல், கோசர் கூடியிருப் பதைச் சுட்டிக் காட்ட வந்திருக்கும் பாடற்பகுதி எதிலும், அது, பொதிகைமலை எனும் பொருள் தரும் வகையில் ''பொதியில் இல்'' என வந்திலது. அக்கோசர் காணப்படும் இடமெல்லாம் சாகாவரம் பெற்ற அகஸ்தியரும் அவர் மாணவர்களும் இடங்கொண்டிருக்கும் மலையோடு இணைக்கக் கூடாத, முதிர்ந்து நன்கு தழைத்த ஆலமரத்து அடிகளே ஆகும்.

இப்பொருள் பற்றிய திறனாய்வில், கோசர்க்குச் சிறப்பான இடம் இருப்பதால், இத்திறனாய்வினை முடிப்ப தற்கு முன்னர்ப் பழந்தமிழ் இலக்கியத்தில், கோசர் பற்றிக் குறிப்பிடப்படும் பலவற்றிலிருந்து இரண்டைமட்டும் ஈண்டு எடுத்துக்காட்டுகின்றேன். முதலாவதும் ஒரு உவமையே; அதன் பொருள் வருமாறு. ''முரசு முழங்கவும், சங்கு ஒலிக்கவும், நனிமிகப் பழமை வாய்ந்த ஆலமரத்து அடியில் உள்ள மன்றத்தில், தங்கித் தோன்றிய நாலூர்க் கோசரின் நன்மொழி போல''

''பறைபடப், ''பணிலம் ஆர்ப்ப, இறைகொள்பு
தொன்மூது ஆலத்துப் பொதியில் தோன்றிய

நாலூர்க் கோசர் நன்மொழி போல''

- குறுந்தொகை : 15 : 1 - 3.

என்று எடுத்துக் காட்டிய அனைத்தும், ஒரே ஒரு நிகழ்ச்சியைக் குறிக்கவே — அதாவது, மோரியரின் தூசிப்படையாக, கண்மூடிக் கண்திறப்பதற்குள் நடந்து விடும் நாடக மேடைக் காட்சிபோல் கோசர் வந்து தோன்றும் அவ்வொன்றைக் குறிப்பனவே. அடுத்து வரும் பகுதி பின் வருமாறு கூறுகிறது. 'மழை பெய்வது இடையற்றுப் போகாமையால் தப்பாத விளைவினையுடைய பழையன் என்பானுக்குரிய மோகூரிடத்து அரசவை பெருமை பெற்று விளங்க, நான்மொழிக் கோசர் என்பார் வீற்றிருந்தாற் போல''

''மழை ஒழுக்கறாஅப் பிழையா விளையுள்
பழையன் மோகூர் அவையகம் விளங்க,
நான் மொழிக் கோசர் தோன்றிஅன்ன''

— மதுரைக் காஞ்சி : 507 - 509.

நான்மொழிக் கோசர் என்பது அக்கோசர், துளு, கன்னடம், தெலுங்கு, தமிழ் ஆகிய நான்கு மொழிகளைப் பேசவல்லவர் என்றே பொருள்படும். கோயம்புத்தூர் தெருக்களில், இந்நான்கு மொழிகளும் பேசப்படுவதை இன்றும் கேட்கலாம். உரையாசிரியர், '' நால்மொழிக் கோசர் ' என்பதை மொழி நால் கோசர் எனச்சொல் மாற்றிக் கொண்டு தாங்கள் கூறிய வாய்மையில் வழுவாது நிற்கும் நால்வகைக் கோசர் எனப்பொருள் கூறியுள்ளார், இது, வலிந்து பொருள்கொள்ளப்பட்டதாம். மேலும், கோசர், நால் வகையினராய் இருந்தனர் என்பது வேறு வகையில் அறியப்படாதது.

**ஏனைய சேரச் சிறப்பாளர்கள் :**

பதிற்றுப்பத்து, புகழ்பெற்ற சேரர் வேறு சிலர் பற்றியும் பாடியுள்ளது; புறநானூறும் மேலும் சிலரைக் குறிப்பிடுகிறது. அவர்கள், பொறையன், மலையன், வானவன், இமயவரம்பன், குட்டுவன், கோதை, மற்றும் வில்லவன் எனும் பட்டப் பெயர்களைக் கொண்டுள்ளனர்; அவர்கள் முடியுடை மன்னர்கள் அல்லர்; அவர் குறித்துப் பாடும் பாடல்களும், வரலாற்றுச் சிறப்பு குறித்தன அல்ல; வெறும் வாழ்க்கை வரலாற்றுச் சிறப்பு குறித்தனவே; ஆகவே, அக்குறுநிலத்தலைவர்கள், ஈண்டுக் குறிப்பிடத் தேவை இலர்.

---

# 25ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு

"மாமூலனார்; தொகை நூல்களில் இடம் பெற்றுள்ள புலவர்கள் வரிசையில் கடைசியில் வைத்து எண்ணத்தக்கவர்: கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர்" எனத் திரு. சீனிவாச அய்யங்கார் கூறுவது (தமிழர் வரலாறு : பக்கம் : 525) ஏற்புடையது தானா?

இதற்குத் திரு. அய்யங்கார் கூறும் காரணங்கள் இரண்டு. ஒன்று: அவர், தமிழர் வரலாறு என்ற தம் நூலின் 20, 22 ஆம் அதிகாரங்களில் ஆராயப் பெற்ற கரிகாலன் உள்ளிட்ட சோழர் குல அரசர்களையோ, 21ஆம் அதிகாரத்தில் ஆராயப் பட்டிருக்கும் ளந்திரையனையோ, 23 ஆம் அதிகாரத்தில் ஆராயப்பட்டிருக்கும் முதுகுடுமிப் பெருவழுதி உள்ளிட்ட பாண்டியர்குல அரசர்களையோ, 25 ஆம் அதிகாரத்தில் ஆராயப்பட்டிருக்கும் பெருஞ்சேரலாதன் உள்ளிட்ட சேரர் குல அரசர்களையோ பாடினார் அல்லர் என்பது. இரண்டு மேலே கூறிய மூவேந்தர்களின் ஆட்சியின் அழிவுக்குப்பின்னர், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஆளத் தொடங்கிய எண்ணற்ற குறுநிலத் தலைவர்களையே பாடியுள்ளார் என்பது.

As a matter of fact Mamulanar speaks in may odes as the cotemporary, not of any of the Kings referred to in chapters XX, XXI, and XXIII and in this chapter [XXV], ut of the numerous chieftains that rose to power, after ıe decline of the three Tamil dynasties at the end of the V entury A. D. and is hence the latest of the galary of oets, whose poems are included in the early anthologies.

—History of the Tamils : Page : 524-25

முதற்கண், அவர் கூறும் இரண்டாவது காரணத்தினை ஆராய்வோம். மாமூலனார், 1) அதியமான் நெடுமான் அஞ்சி; 2) அதியன்; 3) ஆவி; 4) எருமையூரன்; 5) எவ்வி; 6) எழினி; 7) கட்டி; 8) திதியன்; 9) நன்னன்; 10) பாணன்; 11) புல்லி; 12) மத்தி; 13) மோகூர்ப் பழையன் முதலாம் குறுநிலத்தலைவர்களைப் பாடியுள்ளார் என்பது உண்மை.

ஆனால், அவர்கள் அனைவரும், திருவாளர் அய்யங்கார் கூற்றுப்படி, மூவேந்தர் ஆட்சியின் மறைவுக்குப் பின்னர், அரசோச்சத் தொடங்கியவரல்லர். மாறாக, அம்மூவேந்தர் ஆட்சிநிலவிய காலத்திலேயே, அம்மூவேந்தர் ஆட்சிக்கு அடங்கிய சிற்றரசர்களாகவும், அவர்களுக்கு அடங்காது தனியரசு நடாத்தும் சிற்றரசர்களாகவும் இருந்தவர்களே. அவர்களில் ஒருசிலர், அம்மூவேந்தர்களுக்குப் படைத்துணை புரிந்துள்ளனர். ஒருசிலர், அம்மூவேந்தர்களின் பகைவர்களாகி, அவர்களோடு, போரிட்டும் வந்துள்ளனர். மாமூலனாரால் பாடப்பெற்ற இவர்களில் ஓரிருவர் தவிர்த்து, எஞ்சிய ஏனையோரெல்லாம், அம்மூவேந்தர் புகழ்பாடும், பரணர், நக்கீரர், ஔவையார் போலும் முதுபெரும் புலவர்களால், அம்மூவேந்தர்களோடு இணைத்தே பாடப்பட்டுள்ளனர்.

1) அதியமான் நெடுமான் அஞ்சி: தன்னைப்பாடிய அரிசில்கிழார்க்குத், தன் அரசு கட்டிலையும், பாட வந்து முதுமைத் தளர்ச்சியால் உறங்கிவிட்ட மோசிகீரனார்க்கு முரசு கட்டிலும் அளித்த பெருவேந்தனாம் பெருஞ்சேரல் இரும்பொறை பெரும்படை கொண்டு பல நாள் போரிட்ட பின்னரே கைக்கொள்ள முடிந்தது என்ற பெரும்பாராட்டினைத் தரவல்ல, அழிக்கலாகாத் திண்மை வாய்ந்த தகடூர்க் கோட்டைக்கு உரியவனும், சோழனும், பாண்டியனும் துணை வரத் தக்க பேரரசு செலுத்தியவனும் (பதிற்றுப்பத்து: 75), உண்டார் உயிரை நெடிது வாழவைக்கும் அரிய நெல்லிக்கனியைத் தான் உண்ணாது ஔவைக்கு ஈந்து அரும்புகழ் கொண்ட

வனும், (புறம் : 91), பாணனும் பாராட்டிய பெரியோன் என ஔவையாரால் பாராட்டப்பெற்றவனும் (புறம் : 99) ஆவன் அதியமான் நெடுமான் அஞ்சி; இவனை அகம் 372ல் பரணர் பாராட்டியுள்ளார்.

2) அதியன் : தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட, நெடுநல்வாடை பாடிய நக்கீரரால், கொங்கரை வென்று நாடுபல கொண்டவனாகப் பாராட்டப் பெற்றவன் பசும்பூண் பாண்டியன், ['கொங்கர் ஒட்டி நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன்'' (அகம் : 253)] அப்பசும்பூண் பாண்டியன் படைத்தலைவனாகவும், வாகைப் பறந்தலைப்போரில், பட்டத்து யானையோடு இறந்துபட்டான் எனவும், அதனால் பசும்பூண் பாண்டியனின் பகைவராம் கொங்கர் மகிழ்ச்சிப் பெருக்கால் ஆரவாரித்தனர் எனவும் பாராட்டிப் பாடியுள்ளார் பரணர்: [''வாகைப் பறந்தலைப், பசும்பூண் பாண்டியன் வினைவல் அதிகன், களிறொடு பட்ட ஞன்றை ஒளிறுவாள் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே'' (குறுந் : 393)] ஆக பெருவீரர் புகழ்பாடும் கிணைப்பறை ஒலி அவிந்துபோக மறைந்த மேலோன் அதியன் [''அதியன் பின்றை வள்ளுயிர் மாக்கிணை கண் அவிந்தாங்கு'' (அகம் ; 325)] என மாமூலனாரால் பாராட்டப்பெற்ற அதியன், நக்கீரரின் பாட்டுடைத் தலைவனாம் நெடுஞ்செழியனின் பகைவர்களாம் கொங்கர்க்கு மகிழ்ச்சியூட்டுதற்குக் காரணமாய், வாகைப் போர்க்களத்தில், போர்க்களிற்றின் மீதிருந்தே உயிர்நீத்த பெருவீரனாவன் எனப் பரணரால் பாராட்டப்பெற்ற பெரியோனாவன்.

3. ஆவி: ''நெடுவேள் ஆவி, அறுகோட்டு யானைப் பொதினி''; ''நெடுவேள் ஆவி, பொன்னுடை நெடுநகர்ப் பொதினி'' (அகம் : 1 : 61) என மாமூலனாரால் பாடப் பெற்ற நெடிவேள் ஆவி, சிறுபாணாற்றுப்படை ஆசிரியர், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனாரால், ''கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய அருந்திறல் அணங்கின் ஆவியர்

பெருமகன் பெருங்கல் நாடன் பேகன்'' (85-87) எனப் பாராட்டப் பெற்றவனும், கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் போலும் பழம்பெரும் புலவர்களால் பாராட்டப் பெற்றவனும் ஆகிய வையாவிக் கோப்பெரும் பேகனே ஆவன். ஆகவே, அவனும், அவனைப் பாடிய மாமூலனாரும், பரணரின் பாராட்டினைப் பெற்ற இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் (அகம்: 396) சேரன் செங்குட்டுவன் (பதிற்றுப்பத்து: ஐந்தாம் பத்து) சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி (புறம் ; 4) கபிலர் பாராட்டிய, செல்வக் கடுங்கோவாழியாதன், (புறம்: 8 : பதிற்றுப்பத்து: ஏழாம் பத்து), வேள்பாரி (புறம்: 105...) போலும் பேரரசர்கள் வாழ்ந்த காலத்தவரே அல்லது, அவர்களுக்குப் பிற்பட்ட காலத்தவரல்லர்.

4. எருமை ஊரன்: ''நுண்பூண் எருமை'' (அகம்:115) என மாமூலனாரால் பாராட்டப்பெற்ற எருமையூரன், தலையாலங்கானப் போர்க்களத்தில், பாண்டியன் நெடுஞ்செழியனை வந்து எதிர்த்த, அவன் பகைவர் எழுவரில் ஒருவனாவன். ''செழியன், ஆலங்கானத்து அகன்றலை சிவப்பச், சேரல், செம்பியன், சினங்கெழுத்திதியன் போர்வல் யானைப் பொலம்பூண் எழனி, நாரரி நறவின் எருமை ஊரன், தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின் இருங்கோவேண்மாள், இயல்தேர்ப் பொருநன்', என்று எழுவர் நல்வலம் அடங்க'' (அகம்:36) என்றும், ஒப்புக்கூறமாட்டா வலிமிகு தோள் உடையவன்; வடுகர்களின் தலைவன்; பெரும்புகழ் வாய்ந்தவன், ''நேராவன்தோள், வடுகர் பெருமகன்; பேரிசை எருமை'' (அகம்: 253) என நக்கீரரால் பாராட்டப் பெற்றவன் ஆதலின், மாமூலனாரின் பாராட்டினைப் பெறும் அவ்வெருமையூரனும், மூவேந்தர் காலத்தவனே ஆவன்.

5. எவ்வி: திதியனொடு பகைகொள்வது அழிவுக்கே வழி கோலும் என்பதறிந்த எவ்வி, அது செய்ய முனைந்த, தன் நண்பன் அன்னிக்கு அறிவுரை கூறினானாகவும், அவன் அது கேளாதே சென்று, திதியன் காவல் மரமாம் புன்னையை அழித்து, அதனால் சினங்கொண்ட திதியனால் அழிவுற்ற

அன்னியின் செயலைக் கூறுமுகத்தான் வருவது உரைக்கும் எவ்வியின் வளமார் அறிவைப் பாராட்டியுள்ளார் நக்கீரர். ''எவ்வி நயம்புரி நன்மொழி அடக்கவும், அடங்கான். பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித் திதியனொடு பொருத அன்னிபோல விளிகுவை'' (அகம் : 126).

எவ்விக்கு உரிய நீழல் நாடு, மருதவளத்தையும் நெய்தல் வளத்தையும் ஒருசேரக் கொண்டது. மருத நிலத்து உழவர். தாம் அறுத்த நெல்லின் தாள்களைக் கடா விட்டுத் தூற்றுங் கால் எழும் துரும்புகள், அயலே உள்ள நெய்தல் நிலத்து உப்பு வயல்களில் சென்று படியுமாக, அதனால் சினங்கொள்ளும் நெய்தல் நிலத்தவர்க்கும், மருத நிலத்தவர்க்கும் இடையே மூளும் பகையை, அவ்வூர் வாழ் முதுபெரும் மக்கள் தீர்த்து வைத்து, இரு திறத்தவர்க்கும் இனிய மது அளித்து மகிழ்ந்து போகச் செய்வர் என எவ்வியின் நாட்டு நலம் பாடியுள்ளார் குடவாயில் கீரத்தனார். ''போர்பு அழித்துக் கள்ளார் களமர் பகடுதளை மாற்றிக், கடுங்காற்று எறியப் போகிய துரும்புடன், காயல் சிறுதடி கண்கெடப் பாய்தலின், இரு நீர்ப்பரப்பின் பனித்துறைப் பரதவர், தீம்பொழி வெள்ளுப்புச் சிதைதலின் கிளைஇக், கழனி உழவரொடு மாறெதிர்த்து மயங்கி, இருஞ்சேற்றள்ளல் எறி செருக்கண்டு, நரைமூதாளர் கைபிணி விடுத்து, நனைமுதிர் தேறல் நுளையர்க்கு ஈயும் பொலம் பூண் எவ்வி நீழல்'' (அகம் : 366)

எவ்வியின் மிழலைநாடு நீர்வளம் மிக்கது : அவன் நாட்டு முத்தூர் போலும் பேரூர்கள் நெல்வளம் மிக்கது என்பதறிந்து தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், எவ்வியின் மீது படையெடுத்துச் சென்று, அவனையும் கொன்று, அவன் நாட்டையும் கைக்கொண்ட செயலைக் கூறியுள்ளார். அந்நெடுஞ்செழியனை, மதுரைக் காஞ்சி பாடிப் பாராட்டும் மாங்குடிகிழார் : ''தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய, ஓம்பா ஈகை மாவேள் எவ்வி, புனலம் புதவின் மிழலையொடு, கழனிக் கயல் ஆர் நாரை, போர்வில் சேக்கும், பொன்னணி யானைத் தொன் முதிர் வேளிர்,

குப்பை நெலின் முத்தூறுதந்த கொற்ற நீள்குடைக் கொடித் தேர்ச்செழிய!'' (புறம் : 24)

பெருங்கொடை வள்ளலாம் எவ்வி இறந்து விட்டான்: ஆனால், அவன் மறைவினைத் தாங்கிக் கொள்ளமாட்டாப் புலவர் வெள்ளெருக்கிலையார், ''எவ்வி, மார்பில் வேல்பாய்ந்து விழுப்புண் பெற்று வீழ்ந்து விட்டான்'' என விடியற் போதில் பரவிய செய்தி; பொய்யாகிப் போய் விடாதா? பொய்யாகி விடுவதாக'' என வாய்விட்டுப் புலம்பியுள்ளார். ''பொய் யாகியரோ, பொய்யாகியரோ...போரடுதானை எவ்வி, மார்பின் எஃகுறு விழுப்புண் பல, என வைகுறு விடியல் இயம்பிய குரலே'' (புறம்: 233).

ஆனால், எவ்வி இறந்து விட்டது உண்மையாகி விட்டது; அவன் அளிக்கும் பரிசில் பெற்று வாழ்ந்த இரவலர் வாழ்க் கையில் இருள் சூழ்ந்துவிட்டது: துயர் உற்ற அவர்கள், தங்களின் முடிகளில் பூச்சூடுவதையும் கைவிட்ட காட்சியைக் கண்டு கண் கலங்கியுள்ளார். பரணர், ''எவ்வி இழந்த வறுமை யாழ்ப்பாணர், பூவில் வறுந்தலை.'' (குறுன் : 19).

வெற்றியே தரும் வாட்போர் வல்லவனாம் எவ்வி, ஒரு போரில், இறந்து போனானாக, அதுகாறும். அவன் புகழ் பாடிப் பரிசில் பெற்று வாழ்ந்த பாணர். அவனை, இனிப் பாடுவது இல்லாது போகவே, வழிபடுதெய்வம் போல் தங்களால் வழிபடப் பட்டு வந்ததும், வளம் மிக்க இனிய இசை எழுப்ப வல்லதும், வளைந்த தண்டினை உடையதுமான தங்கள் யாழை ஒடித்துப் போட்டுவிட்டனர்'' ''எவ்வி வீழ்ந்த செருவில், பாணர், கைதொழுமரபின் முன் பரித்திடுப் பழிச்சிய, வள்ளுயிர் வளர்மருப்பு'' (அகம் : 115) எனப்பாடி இரங்கும் மாமூலனாரும், பரணரும் நக்கீரரும் வாழ்ந்த காலத்தவரே அல்லது, திரு. பி. டி. எஸ். அவர்கள் கூறுவது போல் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டகாலத்தே வாழ்ந்த வரல்லர்.

6. எழினி : சோழ வேந்தன் ஏவல் கேட்கும் குறுநிலத் தலைவனாய் இருந்தும், அச்சோழன் பணித்த யானை வேட்டைக்குச் சென்று துணைபுரியாமையால், சினங்கொண்ட சோழனால் சிறைபிடித்துப் பல் பறிக்கப்பட்டு, அப்பல்லை வெண்மணிவாயில் கதவில் பதித்துத் தண்டிக்கப் பட்டவனாக மாமூலனார் கூறும் எழினி, [''பிடிபடு பூசலின் எய்தாது ஒழியக், கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி, நெடுஞ் சேணாட்டில் தலைத்தார்ப்பட்ட கல்லா எழனி பல்லெறிந்து அழுத்திய வன்கண் கதவின் வெண்மணி வாயில்'' (அகம் ; 211)], தலையாலங்கானப் போரில், நெடுஞ்செழியன் பால் தோல்வி கண்ட எழுவரில் ஒருவனாக, நக்கீரரால் கூறப்பட்டுள்ளான். [''போர்வல் யானைப் பொலம்பூண் எழினி'' (அகம் ; 36)] ஆகவே, எழினியும், அவனுக்குத் தம்பாட்டிடை இடம் நல்கிய மாமூலனாரும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் காலத்தவரே ஆவர்.

7. கட்டி : தமிழகத்தின் வட எல்லையாம் வேங்கடத் திற்கு அப்பாற்பட்டதான, வேற்று மொழிவழங்கும், வடுகர் என்ற இனத்தவர்க்கு உரிய நாட்டைச் சேர்ந்தவன்; வேற் படையால் வீறுபெற்றவன் என மாமூலனரால் கூறப்படும் கட்டி. [''வடுகர் முனையது, பல்வேல் கட்டி நன்னாட்டு உம்பர் மொழிபெயர் தேஎம்'' (குறுந் ; 11] உறந்தையில் வாழ்ந்து வந்த வீரனும், வள்ளலுமாகிய தித்தன் என்பானோடு போரிட்டு வெல்ல எண்ணிப், பாணன் எனும் மற்போர் வல்லானோடு தமிழகம் வந்து, உறையூரை அணுகிய காலை, தித்தன்பால் பெரும் பரிசில் பெற்ற மகிழ்ச்சியால், அவன் புகழ்பாடும் பாணர் எழுப்பும் இனிய கிணை இசையினைச் செவி மடுத்த அளவே, இத்துணைப் பெரும்புகழ் உடையானை வெல்வது இயலாது என உணர்ந்து போரிடும் எண்ணத்தையே கைவிட்டுப் பாணனோடு ஓடிவிட்டான் எனப்பரணரும், [''பாணனொடு மலிதார்த் தித்தன் வெளியன் உறந்தை நாளவைப் பாடின் தெண்கிணைப் பாடுகேட்டஞ்சிப், போரடு தானைக் கட்டிப் பொராஅது ஓடிய ஆர்ப்பு.'' (அகம் : 226), அவ்வாறு ஓடிய கட்டி, சேரமான் கணைக்கால் இரும்

பொறையின் படைத்தலைவர்களுள் ஒருவனாக இடம் பெற்று வாழ்ந்திருந்த காலை, கழுமலம் எனும் இடத்தில் வந்து எதிர்த்த சோழன் செங்கணான் படைத்தலைவன் பழையனால் அழிவுற்ற, நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், புன்றுறை என்ற அச்சேரர் படைத்தலைவர்களோடு கொல்லப்பட்டான் எனக் குடவாயில் கீரத்தனாரும், [''நன்னன் ஏற்றை, நறும்பூண் அத்தி, துன்னரும் கடுந்திரல் கங்கன், கட்டி, பொன்னணி வல்வில் புன்றுறை என்றாங்கு, அன்றவர் குழீஇய அளப்பரும் கட்டூர்ப் பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டென''... (அகம்: 44)] பாடியிருப்பதால், அக்கட்டியைப் பாடிய மாமூலனார், பரணர் போலும் பெரும் புலவர்களால் பாராட்டப் பெற்ற மூவேந்தர் காலத்து முதியவரே அல்லது, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் அல்லர்.

8. திதியன்: பரணர் முதலாம் இரவலர்கள், பரிசில் பொருட்களாக எண்ணிலாப் பொன் அணிகளையே பெற்றுக் கொண்ட மகிழ்ச்சியால் புகழ்ந்து பாட, நாள்தோறும் நாட்காலைப் போதிலேயே அரசவைக்கு வந்து வீற்றிருக்கும் விழுச்சிறப்பு உடையவனும், தன் பகைவராம் வேளிரொடு மேற்கொள்ள வேண்டிய போருக்காக, வாளை எப்போதும் உறைகழித்தே வைத்திருக்கும் விழிப்புடையானும் ஆகிய திதியன் என்பான் ஒருவனைப் பாடியுள்ளார் மாமூலனார்.

''பாணர் ஆர்ப்பப் பலகலம்உதவி
நாளவை இருந்த நனைமகிழ் திதியன்
வேளிரொடு பொரீஇய கழித்த
வாள்''
—அகம்: 331

தாம் விளைவித்திருந்த பயற்றை, அன்னி மிஞிலி என்பாளின் தந்தை காத்திருந்த பசுநிரை மேய்ந்து விட்டது கண்டு சினங்கொண்ட கோசர், அவன் கண்களையே போக்கி விட்டாராகச், சினங்கொண்ட அவள், அக்கோசரை அழித்துப் பழிதீர்க்கும் வரை நல்ல உணவு உண்பதோ, நல்லஉடை உடுப்பதோ செய்யேன் என வஞ்சினம் உரைத்து விட்டு

அழுந்தூர்த்திதியன் பால்சென்று முறையிட, வீரம் செறிந்த வீரர்கள் நிறைந்த சிறுசிறு காட்டரண்களைக் கொண்டிருந்த வெற்றி வீரனாம் அத்திதியன் அக்கோசர் பலரைக் கொன்று தீர்த்த நிகழ்ச்சியைப் பரணர் பாடியுள்ளார்.

''பாசிலை அமன்ற பயறு ஆபுக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து அருளா
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்
கலத்தும் உண்ணாள்; வாலிதும் உடாஅள்;
சினத்திற் கொண்ட படிவம் மாறாள்;
மறங்கெழு தானைக் குற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற்கு உரைத்து அவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டு சினம் மாறிய
அன்னி மிஞிலி.''

— அகம்: 262.

தன் காவல் மரமாம் புன்னையை வெட்டி வீழ்த்த வேண்டும் என விரும்பி அது செய்யற்க என நண்பன் எவ்வி தடுக்கவும், அது கேளாதே வந்து தன்னை எதிர்த்த அன்னி என்பானைக் கொன்ற கொற்றமிகு திதியன் ஒருவன் புகழ் பாடியுள்ளார் நக்கீரர்.

''எவ்வி, நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான்
பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்
திதியனொடு பொருத அன்னி போல
விளிகுவை,''

—அகம்: 126

குறுக்கைப் பறந்தலைப் போரில், திதியனின் புன்னையை வெட்டிவீழ்த்திய அன்னியின் செயல் கண்டு ஆரவாரப் பேரொலி எழுப்பினர் இரவலர் என்கிறார் வெள்ளி வீதியார்

'அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்

புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்
இன்னிசை ஆர்ப்பு.'' —அகம் : 45

குறுக்கைப் பறந்தலைப் போரில், அன்னியால் வெட்டி வீழ்த்தப்பட்ட திதியனின் புன்னை நிலைகண்டு கண்கலங்கி யுள்ளார் புலவர் கயமனார்,

''அன்னி குறுக்கைப் பறந்தலைந் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிய
நன்னர் மெல்லிணர்ப் புன்னை.'' — அகம் : 145

மாமூலனார் பாடிய திதியின் அன்னிமிஞிலியின் துயர் துடைத்தோனாகப் பரணரால் பாராட்டப்பெற்ற அழுந்தூர்த் திதியனே ஆயினும், எவ்வி அடக்கவும் அடங்காது வந்து புன்னையை வெட்டி வீழ்த்திய அன்னியை வெற்றி கொண்டவனாக, நக்கீரராலும், வெள்ளி வீதியாராலும், கயமனாராலும் பாடப்பெற்ற, குறுக்கைப் பறந்தலைப் போர்த் திதியனே ஆயினும், மாமூலனார் பரணர்காலத்தும், நக்கீரர் காலத்தும் வாழ்ந்த முதுபெரும் புலவரே ஆவர்.

9. நன்னன் : நன்னனுக்கு உரியது பாழி; அது பிறர் அணுகலாகாக் காவல் அமைந்தது. ''நன்னன் பாழி அன்ன கடியுடைவியன் நகர்'' (அகம் : 15) : நன்னன், வேளிர் வழி வந்தவன் ; வியலூர்க்கு உரியவன். ''நன்னன் வேண்மாள் வயலைவேலி வயலூர்'' (அகம் : 97) : நன்னன் ஏழிற் குன்றத்துக்கும் உரியவன். ''நன்னன் நன்னாட்டு ஏழில் குன்றம்'' (அகம் : 349.) நன்னனைக்குறித்து மாமூலனார் கூறுவன இவை:

நன்னன் வேளிர் வழிவந்தவன்; அவனுக்குரிய பாழி அரியகாவல் உடையது ; அதனால், வேளிர், தங்கள் பொரு செல்வங்களை, அப்பாழிக்கண் வைத்துக் காத்து வந்தனர்.' நன்னன் உதியன் அருங்கடிப் பாழித் தொன்முதி வேளிர் ஓம்பினர் வைத்த பொன்'', ''பாழி ஆங்கண், வேள்

முதுமாக்கள் வியன்நகர்க் கரந்த அருங்கல வெறுக்கை'' (அகம் : 258 : 372.)

பாழி நகர்மீது போர்தொடுத்து வந்த, தேர்ப்படை முதலாம் படைவலம் மருந்த மிஞிலி என்பானைத் தன் பொருட்டு எதிர்த்துப் போரிட்டு உயர்நீத்த தன் நண்பன் ஆஅய் எயினனின் உடலைக் காணவும் வராது ஒளிந்து கொண்டு, பழி கொண்டான் நன்னன். ''ஆஅய் எயினன் அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை, இழையணி யானை இயல்தேர் மிஞிலியொடு, நண்பகல் உற்ற செருவில் புண் கூர்ந்து, ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தென ..................நன்னன் அருளான் கரப்ப.'' (அகம் : 208).

நன்னன் பற்றிப் பரணர் கூறியன இவை. ஆக, மாமூலனாரும் அவனால் பாடப்பெற்ற பாழிநகர் நன்னனும், பரணரும், அவரால் பாடப்பெற்ற மூவேந்தர்களும் வாழ்ந்த காலத்தவரே அல்லது, திருவாளர் அய்யங்கார் கூற்றுப்படி கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் அல்லர் என்பது உறுதியாதல் காண்க.

10. பாணன்: தமிழகத்து வடக்கண் உள்ளதான நல்ல நாட்டைச் சேர்ந்தவன் என மாமூலனாரால் கூறப்பட்ட பாணன் [''வடாஅது, நல்வேல் பாணன் நன்னாடு'' (அகம் : 325), தமிழகம் வந்து, கணையன்பால் பயிற்சி பெற்று, வெல்லற்கு அரியவன் எனச் சிறந்து விளங்கிய ஆரியப் பொருநன் என்ற மற்போர் வல்லானை மற்போருக்கு அழைத்து, அவ்வாரியப் பொருநனின், முழவு போலும் தோள்கள், தன் கையகத்தே அகப்பட்டுக்கிடக்க, உடல் இரு கூறுஆகிப்போக வெற்றி கொண்ட செய்தியையும், [''பாணன் மல்லடு மார்பின் வலியுற வருந்தி, எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன், நிறைத்திரள் முழவுத்தோள் கையகத்து ஒழிந்த திறன் வேறு கிடக்கை'' (அகம் : 386)] அவ்வெற்றிக் களிப்பால், கட்டி எனும் மற்றுமொரு வடநாட்டு வீரனையும் துணைகொண்டு, தித்தன் வெளியனையும் வெல்லக்கருதி, அத்தித்தனுக்கு உரிய உறந்தை நக்ரை அணுகிய போது,

அந்நகர் எல்லையிலேயே, அத்தித்தன் புகழ்பாடும் இசைப் பேரொலி கேட்டு அஞ்சிப்போரிடும் எண்ணத்தையே கைவிட்டு ஓடிவிட்ட செய்தியையும் (அகம் : 226) பரணர் கூறியுள்ளார்; ஆகவே, பாணனும் அப்பாணனைப்பாடிய மாமூலனாரும், பரணர் காலத்தவர்; அப்பரணரால் பாராட்டப் பெறும் மூவேந்தர் காலத்து வாழ்ந்த முதியவர் என்பது இதனாலும் உறுதியாயிற்று.

11. புல்லி: வேங்கட நாடுடையான்; கள்வர் கோமான்; மழவரை வெற்றி கொண்டவன்; காட்டில் பிடிகொண்டகளிறுகளின் கோடுகளையும், கள்ளையும் விற்று வாங்கும் நெல் உண்டு வாழும் நல்லவன். புல்லி குறித்து மாமூலனார் கூறுவது இதுவே. "அண்ணல் யானை வெண் கோடு கொண்டு, நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயரும், கழல்புனை திருந்தடிக், கள்வர் கோமான் மழபுலம் வணக்கிய மாவண்புல்லி, விழவுடை விழுச்சீர் வேங்கடம்." (அகம் : 61)].

பிடி யானைகள் காட்டகத்தே நின்று அலறக், களிறு களாம் அவற்றின் கன்றுகளைக் கைப்பற்றிக் கொண்ட உவகையோடு, அவற்றைக் கள்ளின் விலையாகக் கள் விற்கும் மனைகளின் முற்றத்தே பிணிக்கும் வீரர்களைக்கொண்டவன்; வேங்கடத்திற்கு உரியவன் புல்லி. ["மடப்பிடி கானத்து அலறக் களிற்றுக் கன்று ஒழித்த உவகையர்... நறவு நொடை நல்லில் புதவு முதல் பிணிக்கும் கல்லா இளையர் பெருமகன் புல்லி, வியன்தலை நன்னாட்டு வேங்கடம்" (அகம் : 83)] எனக் கூறுவதன் மூலம், புல்லி குறித்து மாமூலனார் கூறியதை அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளார் கல்லாடனார்.

வேங்கட நாட்டில் கொண்ட களிறுகளால் வீறுகொண்ட படையுடையார் பாண்டியர் ["வேங்கடப் பயந்த வெண் கோட்டுயானை மறப்போர்ப் பாண்டியர்" (அகம் : 27)] தென்னாட்டகத்தே உள்ள கௌரியர்க்கு உரிய நல்ல நாட்டில், சிறுசிறு காட்டரண்களை அமைத்துக் கொண்டு, பாண்டியர் தலைமைக்கும் பணிய மறுத்து வாழ்ந்திருந்த சிற்றரசுகளைக்,

கள்வர் கோமான் ஏவல் கேட்கும் வீரர் துணையால் வெற்றி கொண்ட தென்னவன். "தெனா அது வெல்போர்க் கௌரியர் நன்னாட்டு உள்ளதை....கள்வர் பெருமகன் ஏவல் இளையர், தலைவன் மேவார் அருங்குறும்பு எறிந்த ஆற்றலொடு பருந்துபடப் பல்செருக் கடந்த செல்லுறழ் தடக்கைக் கெடாஅ நல்லிசைத் தென்னவன் (அகம்; 342)] எனக் கூறியதன்மூலம், புல்லிக்கும், பாண்டியர்க்கும் உள்ள நட்புறவினை நாட்டியுள்ளார் மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைவராம் நக்கீரரைப் பெற்றெடுத்த பெருமைக்குரிய மதுரைக்கணக்காயனார்.

ஆக, புல்லியும், அம்மதுரைக் கணக்காயர் காலத்தவனே அல்லது பிற்பட்ட காலத்தவன் அல்லன் என்பது உறுதியாயிற்று.

12) மத்தி ; கட்டியின் வாழ்வோடு விளையாடியவன்; கட்டியைப் பாடிய புலவர்களே இம்மத்தியையும், அக் கட்டியோடு இணைத்தே பாடியுள்ளனர்; ஆகவே, கட்டிக்குக் கூறியது மத்திக்கும் பொருந்தும்;

13) மோகூர்ப் பழையன் : கள்ளக்குறிச்சியை அடுத் திருந்த மோகூரில் வாழ்ந்திருந்த குறுநிலத்தலைவன் பழையன்; மோகூர் மன்னன் எனவும் அழைக்கப் பெறுவன்: கோசர் படைத்தலைவனாகிய பழையன், பாண்டியர் படைத்தலைவனாகவும் பணிபுரிந்து வந்தான்: இதைப், "பழையன் மோகூர் அவையகம் விளங்க நான்மொழிக்கோசர் தோன்றியன்ன" (மதுரைக்காஞ்சி : 508-509) : "மாறன் தலைவனாக, ஏந்தடுவாய்வாள் இளம்பல் கோசர் இயல்நெறி மரபின் நின்வாய்மொழி கேட்ப." (மதுரைக்காஞ்சி : 771-776) என, மாங்குடி மருதனார் உரை தெளிவாக்குதல் காண்க.

பாண்டியர் படைத்தலைவனாய்ப் பணிபுரிந்திருந்த போது, வெள்ளம்போலும் பெரும்படையோடு வந்து, பாண்டியர் தலைநகர் கூடலை வளைத்துக் கொண்ட

கிள்ளிவளவனை, அவன் பகைவனாம் கோதை மார்பன் உவக்கும் வகையில் வெற்றி கொண்டு, அவனுக்குரிய குதிரைப்படை களிற்றுப் படைகளைக் கைப்பற்றிக்கொண்ட பழையன் பேராண்மையை, நக்கீரர் பாராட்டியுள்ளார்.

> "பழையன் மாறன்
> மாடமலிமறுகின் கூடல் ஆங்கண்
> வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த
> கிள்ளிவளவன் நல்லமர் சாஅய்க்
> கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி
> ஏதில் மன்னர் ஊர்கொளக்
> கோதை மார்பன் உவகையிற் பெரிதே."
>
> —அகம் : 346.

கிள்ளிவளவனை வெற்றி கொண்ட களிப்பு மிகுதியால் பழையன் மோகூரில் வாழ்ந்திருந்த போது, மாறன் எனப் பாண்டியர்க்குரிய குலப்பெயர் பூண்டும், அவர்க்கு உரிய மரமாம், வேம்பையே தன்னுடைய காவல் மரமாகக் கொண்டும், வாழ்ந்திருந்த பழையன் மீது சினங்கொண்ட செங்குட்டுவன், அம்மோகூர் மீது படையெடுத்துச்சென்று, பழையனை வென்று, அவன் காவல் மரமாம் வேம்பையும் வெட்டி வீழ்த்தித் துண்டுகளாக்கினான். இச்செயலைச், செங்குட்டுவன் அவைக்களப் புலவராம், பரணர் "மோகூர் மன்னன் முரசும் கொண்டு, நெடுமொழி பணித்து, அவன் வேம்பு முதல் தடிந்து" (பதிற்று:44) என்றும், செங்குட்டுவன் உடன்பிறப்பு இளங்கோ அடிகளார் "பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு, வேம்பு முதல் தடிந்த ஏந்துவாள் வலத்துப் போந்தைக் கண்ணிப் பொறைய" (சிலம்பு : 27: 124-126) என்றும் பாராட்டியுள்ளனர்.

இவ்வாறு முடியுடைய மூவேந்தர்களைப் பாடிய நக்கீரரும், பரணரும் பாடிய மோகூர் மன்னன் பழையன், தமிழகத்தைக் கைப்பற்றிக் கொள்ளும் கருத்தோடு நெடிய

பெரிய தேர்ப்படைகளைக் கொண்ட மோரியர் என்ற கங்கைக் கரைப் பேரரசராம் மோரியர், தம் தேர்ப்படை இனிதே செல்ல, இடையில் தடையாக இருந்த மலைகளை யெல்லாம் வெட்டி வழிசெய்து கொண்டு, தமிழகத்துள் புகுந்து விட்டாராகத், தன் கோசர் படைத்துணையோடு அவர்களை வெற்றிகொண்டு, தன் மோகூரைத் தாண்டி அப்பாற் செல்லாவாறு துரத்திவிட்ட அருஞ்செயலை மாமூலனார் பாராட்டியுள்ளார்.

"கோசர்
தொன்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசும் கடுப்பு இகுத்து இரங்கத்
தெம்முனை சிதைத்த ஞான்றை, மோகூர்
பணியாமையின் பகைதலைவந்த
மாகெழு தானை வம்ப மோரியர்" — அகம்: 251

ஆக, நக்கீரரும், பரணரும் பாடிய மோகூர்ப் பழையனும், அவனைப் பாடிய மாமூலனாரும், அம்மூதுபெரும் புலவர்களும், அப்புலவர் பெருமக்களால் பாடப்பெற்ற நெடுஞ்செழியன், செங்குட்டுவன் போலும் மூவேந்தர்களும் வாழ்ந்த காலத்தவரே அல்லது, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்ட காலத்தவர் அல்லர்.

ஆக, மாமூலனார் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பட்ட காலத்தவர் என்பதற்குத், திருவாளர் பி. டி. எஸ். ர்கள் காட்டிய இரண்டாவது காரணமாம், மாமூலனார் டிய எண்ணற்ற குறுநிலத் தலைவர்கள் எல்லாம், வந்தர் ஆட்சி மறைவுக்குப் பின்னர், அதாவது கி. பி. தாம் நூற்றாண்டிற்குப் பின்னர், தமிழகத்தின் பல்வேறு திகளைக் கைப்பற்றிக் கொண்டு அரசோச்சத் தொடங்கிய களாவர் என்ற வாதத்தில் வலுவில்லை என்பது உறுதி ய்யப்பட்டதாகிவிட்டது.

இனி, மாமூலனார் மூவேந்தர் வழி வந்தார் எவரையும் பாடவில்லை என்ற அய்யங்காரின் முதல், காரணத்திலாவது உண்மை இருக்கிறதா என்பதை ஆராய்வாம்.

மாமூலனார், தமிழகம் மூவேந்தர் ஆட்சிக் கீழ் முழுமையாக இருந்த காலத்தில் வாழ்ந்தவர்தாம். அதனால் தான், தமிழகத்துக்கு அப்பாற்பட்ட, வேற்றுமொழி வழங்கும் நாட்டைக் குறிப்பிடும் போது, "தமிழ் கெழு மூவர்காக்கும் மொழிபெயர் தேஎம்" (அகம்: 31) எனக்குறிப்பிட முடிந்தது.

இவ்வாறு பொது வகையால் கூறியதோடு அமையாது, தன்நாட்டு எல்லையை விரிவுபடுத்தி, மறைந்த தன்முன்னோர் நினைவாகப் பெருஞ்சோறு அளித்து, கடம்பரை வென்று, இமயத்தே வில் பொறித்து அக்காரணங்களால், பெருஞ் சோற்று உதியன் சேரலாதன் என அழைக்கப் பெற்ற சேரர் குலம் பெருவேந்தன் ஒருவனைப் பாராட்டியுள்ளார்.

"நாடுகண் அகற்றிய உதயஞ்சேரல்" —அகம்: 65.

"துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியம் சேரல்,
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை" —அகம்: 233

"வலப்படு முரசின் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பு அறுத்து இமயத்து
முன்னோர் மருள வணங்கு வில் பொறித்து"
—அகம்: 12

பெருஞ்சோற்று உதியன் சேரலாதனோடு, குடநாட்டை வளமிக்க நாடாக்கி ஆண்டு வந்த குட்டுவன் என்ற பிறிதொரு சேரர்குலக் காவலனையும் பாடியுள்ளார்.

"குட்டுவன் காப்பப்,
பசிஎன அறியாப் பணைபயில் இருக்கைத்,
தடமருப்பு எருமை தாமரை முனையின்

முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியும்
குடநாடு'' —அகம்: 193

இவ்வாறு சேரர் சிலர் வரலாறு உரைத்த அவர், ''சோழர் வெண்ணெல் வைப்பின் நன்னாடு'' (அகம்: 201) எனச்சோழ நாட்டு நெல் வளத்தையும் கூறியுள்ளார். சோழ நாட்டு வளத்தைப் பொதுவாகப் போற்றிய புலவர், வேலி ஆயிரம் விளையுமளவு சோழநாட்டை வளப்படுத்திய கரிகால் பெருவளத்தானையும், வெண்ணிப் போரில் அவன்பால் தோற்றுப் பெற்ற புறப்புண்ணுக்கு நாணி வடக்கிருந்து உயிர் விட்ட ஆன்றோர்களையும் பாடியுள்ளார்.

''கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்,
பொருதுபுண் நாணிய சேர லாதன்
அழிகள மருங்கின் வாள்வடக்கு இருந்தென
இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெறல் உலகத்து அவனொடு செலீஇயர்
பெரும் பிறிது ஆகியாங்கு'' —அகம்: 55

சேரர் குலத்துக் குட்டுவனுக்கு உரிய அகப்பாவை வென்று, அதைப் பகற் போதிலேயே தீயிட்டு அழித்த பெயர் அறியாச் சோழர்குலச் செம்பியன் ஒருவனையும் பாடியுள்ளார்.

''குட்டுவன்
அகப்பா அழிய நூறிச் செம்பியன்
பகல்தீ வேட்ட ஞாட்பு'' —நற். 14

புல்லியின் பல்வேறு சிறப்புக்களைக் கூறும் நிலையில் அவற்றோடு இணைத்துப், பாண்டியர் பெருமையையும் கூறியதோடு அமையாது பாண்டியர்தம் யானைப்படைப் பெருமை; அப்படையுடைமையால் போர்க்களம் எதுவே ஆயினும், ஆங்கு வெற்றியே பெறும் விழுச்சிறப்பு, உலகம் புகழ் அவர்தம் கொற்கைத்துறை, ஆங்குக் கொட்டிக்கிடக்கும்

முத்து, வலம்புரிசங்கு ஆகியவற்றின் பெருமைகளையும் பாராட்டியுள்ளார்.

> "வினைநவில் யானை விறற்போர்ப் பாண்டியன்
> புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை
> அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி." —அகம் : 201.

ஆக, மாமூலனார், மூவேந்தர்களைப் பாடவில்லை என்ற திருவாளர் அய்யங்கார் அவர்கள் காட்டும் காரணத்திலும் உண்மையில்லை என்று தெளிவாகிறது.

மோரியரின் தென்னாட்டுப் படையெடுப்பைக் குறிப்பிட்டிருப்பவர் மாமூலனார் ஒருவர் மட்டும் அல்லர். மேலும் இருவர் குறிப்பிட்டுள்ளனர். ஒருவர், கள்ளில் ஆத்திரையனார்; மற்றொருவர் குமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார்.

மோரியர் வருகையை, "வென்வேல், விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்" எனப்புறத்தில் (175) குறிப்பிடும் கள்ளில் ஆத்திரையனார், தம்முடைய குறுந்தொகைப் பாட்டு ஒன்றில் "ஆதிஅருமன்" (293) என்பானைக் குறிப்பிட்டுள்ளார். இதே ஆதிஅருமனை, நக்கீரர் நற்றிணைப் பாட்டு ஒன்றில் (367) "மூதில் அருமன்" எனக்குறிப்பிட்டுள்ளார்.

ஆகவே, மோரியர் வருகையைக் குறிக்கும் கள்ளில் ஆத்திரையனாரும், கடைச்சங்கத்துத் தலைவர்களுள் ஒருவராம் நக்கீரர் காலத்தவர் என்பது உறுதியாகிறது.

அதே போல், "விண்பொரு நெடுவரை இயல்தேர் மோரியர்" என மோரியர் வருகையைக் குறிக்கும் பிறிதொரு புலவராம் உமட்டூர்க்கிழார் மகனார் பரங்கொற்றனார். அதே பாட்டில் (அகம்: 69) "அரண்பல நூறி, நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன் சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய்" என ஆயையும் பாராட்டியுள்ளார். இந்த ஆயைப் பாடிய புலவர் பல்லோருள் பரணரும் ஒருவர்." சென்றோர்க்குச் சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும் மாஅல் யானை ஆய்கானம்"

(அகம்: 152), "ஆஅய் நன்னாட்டு அணங்குடைச் சிலம்பு." (அகம்: 198). ஆகவே, மோரியர் வருகைகூறும், உமட்டூர்க் கிழார் மகனார் பெருங்கொற்றனாரும், பரணர்காலமாம் கடைச்சங்கக் காலத்தவர் என்பது உறுதியாயிற்று.

ஆக, மோரியர் வருகையைக் குறிப்பிடும் மாமூலனார், கடைச்சங்க காலப் புலவரே அல்லது, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டவரல்லர் என்பது இவ்வகையாலும் உறுதி செய்யப் படுகிறது.

மோரியர் வருகையைக் குறிப்பிடும் இரண்டு இடங்களில், ஓரிடத்தில், மாமூலனார், அம்மோரியரை, "வம்பமோரியர்" (அகம்: 251) எனக்குறிப்பிட்டுள்ளார்.

"வம்பமோரியர்" என்ற தொடருக்குத் திரு. அய்யங்கார் அவர்கள், புதிய மோரியர் [Moriyar, who newly came" Page: 520.] எனப் பொருள் கொண்டு, "ஈண்டு மௌரியர் எனக் குறிப்பிடப்பட்டிருப்பவர், பாடலிபுத்திரத்தை ஆண்ட மௌரியர் இனத்து வழிவந்த ஒரு கிளையினராய்க் கி. பி. 597ல் அரசாண்டிருந்த சாளுக்கிய இனத்து முதலாம் கீர்த்தி வர்மனின் பகைவர்களாக இருந்தவராதலே வேண்டும். கோசர் தொடர்போடு, தமிழ்நாட்டில் படையெடுத்தவர், மோரியருள், இந்தப் பிற்கால மோரியர் ஆதலே இயலக் கூடிய ஒன்று. [The mauryas, perhaps the descendants of some branch of the Maurya dynasty of Padaliputra, and foes of Kirthivarman I of the Calukya dynasty (566-597 A. D.) These Mauryas were the only possible Moriyar, who in conjunctions with the Kosar, could have attempted a raid in to the Tamil Country" (Page: 522)] எனக் கூறி, மோரியர் படையெடுப்பையும், அதுகூறும் மாமூலனாரையும், கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்குத் தள்ளிவிட்டுள்ளார்.

தொகை நூல்களில் பல இடங்களில் பயில ஆளப் பட்டிருக்கும் வம்பு என்ற அச்சொல், அங்கெல்லாம், நிலையில்லாத என்ற பொருளில்தான் ஆளப்பட்டுளதே

அல்லது, புதுமை என்ற பொருளில் ஆளப்பட்டிலது. கார் காலத்து மழையே நிலைத்துநின்று பெய்யும்மழை; ஒரோ வழி, அக்கார்காலம் தொடங்குவதற்கு முன்பே, கணப்பொழுது கனமழை பெய்து விடுவதும் உண்டு. அம்மழை காணும் அகத்திணைத் தலைவியர், அதைக் கார்காலத்து மழையாகக் கொண்டு, காதலன் கூறிச்சென்ற கார்காலம் வந்துவிடவும், அவன் வந்திலனே என வருந்தும் நிலையில், அவர்களின் தோழியர், இது கார்காலத்தில் பெய்யும் நிலைத்த மழையன்று: கார்காலம் தொடங்குவதற்கு முன்பே, ஒரோ வழி வந்து பெய்து ஓய்ந்து விடும் நிலையில்லாத மழை எனத் தேற்றுங்கால், அம்மழையின் நிலையில்லாத் தன்மையை உணர்த்தக் கையாளும் சொல்லே, வம்பு என்ற இச்சொல். "வம்பமாரி" (குறுந் : 66) ; "வம்புப் பெய்யுமால் மழையே" (குறுந் : 382) என்ற தொடர்களைக் காண்க.

அதேபோல், உயிரிழக்கப் போவதை அறியாதே போரிட வந்த அரசர்களையும், வீரர்களையும் குறிப்பிடும் இடங்களில் மட்டுமே, வம்பு என்ற சொல்லைப், புலவர்கள் ஆண்டுள்ளனர், "வம்ப வேந்தன்" ; "வம்ப வேந்தர்", "வம்ப மன்னர்." (புறம் : 287 ; 345 ; 78.) என்ற தொடர்கள் ஆளப்பட்டிருக்கும் அப்பாடல்களின் சூழ்நிலப் பொருளைக் காண்க.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக, வம்பு, என்ற சொல்லுக்கு நிலையின்மை என்பதே பொருளாம் எனத் தொல்காப்பியரும் இலக்கணம் வகுத்துள்ளார். "வம்பு நிலையின்மை" (தொல். உரி. 29). சூத்திரம் காண்க.

ஆக, "வம்பமோரியர்" என்ற தொடருக்குத் தமிழகத்தின் மீது போர்தொடுத்து வருவதன் விளைவாக, அழிந்து போகப்போகும், நிலையாமையினைத் தழுவப் போகும் மோரியர் என்பதே பொருந்தும் பொருளாகுமே அல்லது, புதிய மோரியர் என்பது பொருந்து பொருளாகாது.

ஆக, வம்ப என்ற ஒரு சொல்லுக்குப் பொருந்தாப் பொருள் கொண்டு விட்டு, அச்சிறு ஆதாரத்தைப் பிடித்துக் கொண்டு, தமிழகம் வந்த மோரியரையும், அவர்களைக் குறிப்பிடும் மாமூலனாரையும், சிலநூறு ஆண்டு காலத்திற்குப் பின் நோக்கித் துரத்திவிடுவது பொருந்தாது.

தென்னிந்திய வரலாறு எழுதிய வரலாற்றுப் பேராசிரியர்களுள், திருவாளர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்களும் ஒருவர். அவர், தம்முடைய தென்னிந்திய வரலாற்றின் தொடக்கம் [Beginning of south Indian History Page : 85]. என்ற நூலில், "மோரியர் வருகையைக் குறிக்கும் பாடற் பகுதிகள், கி. பி. முதலாம் நூற்றாண்டிற்கு உரியவாம் எனக் கொள்ளுதல் வேண்டும்." என்றும், "மாமூலனார் கரிகால் பெருவளத்தான் சமகாலத்தவர் என்பதற்குப் போதுமான அகச்சான்றுகள் உள்ளன" என்றும் கூறிக், கரிகாலன் பகைவனும் பெருஞ்சேரலாதன், போரில் பெற்ற புறப் புண்ணுக்கு நாணி, வடக்கிருந்த உயிர் விட்டது கேட்ட சான்றோர்களும் வடக்கிருந்து உயிர்விட்ட செய்தியைக் கூறும் மாமூலனார் பாட்டைத் (அகம் : 55) தம் கூற்றிற்கு ஆதாரமாகவும் கொண்டுள்ளார்.

இதை எடுத்துக் காட்டியிருக்கும் திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், சந்திரகுப்தன் அல்லது பிந்துசாரன் காலத்தில் மௌரியரின் தென்னிந்தியப் படையெடுப்பு நிகழ்ந்தது என்ற கூற்று, இந்நான்கு பாக்களையே அடிப்படையாகக் கொண்டுளது, எனக் கூறி விட்டு, "திருவாளர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், தம் முடிவிற்குப் போதுமான அகச்சான்று இருப்பதாகக் கூறினாரேயல்லது, அந்த அகச்சான்று யாது என்பதைக் கூறினார் அல்லர்" என்று கூறிவிட்டு, அவர் கூறிய முடிவை மறுக்கவல்ல எந்த வாதத்தையும், தாமும் எடுத்துவைக்காமல், மாமூலனார், கி. பி. 5ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தைச் சேர்ந்தவர் என்ற, தம்முடைய பழைய பல்லவியையே பாடிமுடித்துள்ளார். [The theory of the Mauryan invasion of

India, in the reign of Chandragupta or Bindusara rests on these four passages. Possibly as a prop for the theory, S. Krishnasamy Ayyangar, assumes that these passages are, «ascribable to the first century of the christain era; ''(Page: 85); and says that, "there is enough internel evidence to show that Mamulanar was the exact contemporary of the chola rular Karikala" (Page: 87). He does not tell us what that internal evidence is. He alludes to the fact that, when Peruncheraladan, the foe of Karikal committed suicide, his courtiers heard of it; and they also committed suicide.'' (History of the Tamils Page: 524.]

திருவாளர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் கரிகாலன் காலத்தவர் மாமூலனார்: ஆகவே, கி.பி. முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று கூறியிருக்கவும், அதற்கு அவர் எடுத்து வைத்திருக்கும் சான்றுகளை மறுக்க இயலாத திருவாளர் பி. டி. எஸ். அவர்கள். 'தம் முடிவிற்கு உறுதி செய்யவல்ல போதிய அகச் சான்றுகள் உள்ளன எனக் கூறிய கிருஷ்ணசாமி அய்யங்கார், அந்த அகச்சான்று யாது என்பதைக் கூறவில்லை'' என்று மட்டுமே கூறித் தம் வாதத்தின் வலுவின்மைக்கு, மறைமுகமாக ஒப்புதல் அளித்திருக்கும் நிலையில், மோரியர் தென்னாட்டுப் படையெடுப்பு, கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே நடைபெற்றிருக்க வேண்டும் என்ற கொள்கை, மேலும் சில வரலாற்றுப் பேராசிரியர்களிடையேயும் நிலவி வருகிறது என்பதும் ஈண்டுக் குறிப்பிடல் தகும்.

மதுரை நாயக்க மன்னர்கள் (Nayaks of Madura) சென்னைப் பல்கலைக்கழகச் சார்பில், 1944ல், திரு. சத்திய நாத அய்யரால் நிகழ்த்தப்பட்ட இரண்டு சொற்பொழிவுகளின் தொகுப்பாம் ''தொண்டை மண்டலத்தின் பழைய வரலாறு''

(The Ancient History of Tondai mandalam) என்ற நூல்களின் ஆசிரியரும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வரலாற்றுத் துறையில் பணிபுரிந்தவரும் ஆகிய, ஆர். சத்திய நாத அய்யர், தம்முடைய நூல்களில், தென்னாட்டு மீதான படையெடுப்பு மேற்கொண்டவன் மௌரியப் பிந்துசாரனே எனக் கூறியுள்ளார்.

அவருடைய, இந்திய வரலாறு என்ற நூலின் நான்காம் அதிகாரத்தில், பிந்துசாரன் (கி. மு. 301-273) என்ற பெருந்தலைப்பின் கீழ் உள்ள, "தென்னிந்திய வெற்றி" என்ற குறுந்தலைப்பின் கீழும் பக்கம்: 121; தொண்டை மண்டலத்தின் பண்டைய வரலாறு" என்ற நூலில், "பிந்துசாரன்" என்ற தலைப்பின் கீழும் பக்கம்: 10; பின் வருமாறு கூறியுள்ளார்.

"அசோகனின் பேரரசில், விந்தியத்திற்கு அப்பாற்பட்ட நிலப்பரப்பின் பெரும்பகுதியை இணைத்திருப்பது, அப்பகுதியின் வெற்றி குறித்துக் கேள்வி எழுப்பியுளது. கி. மு. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தவரான சந்திரகுப்தனுக்கு, அதுபோலும் வெற்றியை உரியதாக்கும் தெளிவான அகச்சான்று எதுவும் இல்லை. அசோகன் பெற்ற வெற்றி, கலிங்கம் ஒன்றே என மதிப்பிடலாம். திபேத்திய வரலாற்றுப் பேராசிரியர் தாரநாதன் என்பார், கௌடல்யன் துணையோடு, 16 பெருநாடுகளை அழித்துக், கிழக்கு மேற்குக் கடற்கரைகளுக்கு இடையிலான நாடுகளை இணைத்துக் கொண்ட நிகழ்ச்சியைப் பிந்துசாரனுக்கு உரியதாக்குகிறார். கௌடல்யனுக்கும் பிந்துசாரனுக்கும் உள்ள உறவு, "ஆரிய மஞ்சூரி முலகப்பா" என்ற நூலின் ஆசிரியரான ஏமச்சந்திர ராலும் உறுதி செய்யப்பட்டுளது. "பிந்துசாரன் அரியணை ஏறும்போது நனிமிக இளையன்; ஆகவே அவனுடைய தென்னாட்டுப் படையெடுப்பு, அவன் ஆட்சிக்காலத்தில், அதாவது, கி. மு. 298க்கும், கி. மு. 278க்கும் இடையிலான காலத்தில் நடைபெற்றிருக்க வேண்டும் என்கிறார் ஏமச்சந்திரர். தாரநாதர் குறிப்பிடும் 16 அரசுகளின்

அழிவினை வடநாட்டில் எண்ணிப் பார்க்கவும் இயலாது; சங்க காலத் தமிழ் இலக்கியங்களில், மோரியர் படையெடுப்பு பற்றிய குறிப்புக்கள் (மாமூலனாரின் இரண்டையும் சேர்த்து) நான்கு உள்ளன. கரவேலனின் அதிகும்பா கல்வெட்டு, தன் கேட்டிற்குக் காரணமாய் இருந்த, தமிழ் நாட்டரசர்களின் மிகப்பெரிய கூட்டணி ஒன்றைக் குறிப்பிடுகிறது. அந்தக் கூட்டணி கி. மு. 278ல் தோன்றியிருக்க வேண்டும். இந்த நாள் பிந்துசாரன் ஆட்சிக்கால எல்லைக்குள் அடங்குகிறது;''

''தமிழ் அரசர்கள், ஆரியரை வென்ற நிகழ்ச்சி, தமிழிலக்கியங்களில் பரவலாகக் குறிப்பிடப்பட்டுளது. இது, கரவேலனின் அதிகும்பா கல்வெட்டு குறிப்பிடும் தமிழரசர் களின் கூட்டணியை உறுதிசெய்கிறது. கலிங்கம், பிந்து சாரனால் வெற்றி கொள்ளப்படாமல், அசோகனால் கொள்ளப்பட்டமைக்கும், தமிழரசுகள், அசோகனின் ஆட்சிக்கு அடங்காத் தனிநாடுகள் என, அசோகனால் குறிப்பிடப்பட நேர்ந்தமைக்கும் காரணம், பிந்துசாரன் தமிழகத்தில் பெற்ற தோல்வியே காரணம்,'' என்றெல்லாம் கூறியுள்ளார், திரு; சத்தியநாதய்யர்;

The inclusion in Asoka's empire of a substantial part of cis-vindhyan India, raises the question of its conquest; There is no definite ascription of such a consequet to Chandragupta. (325-301. B. C.) We may regard Kalinga as the only region conquerred by Asoka. To Bindusara is ascribed by Taranatha, the Tibetan historian, the destruction, with the help of Kautilya, of the Kings and ministers of about sixteen towns, as well as the annexation of the territory, between the Eastern and Western oceans. The association of Kautilya with king Bindusara is supported by Hemachandra, the author of ''Arya-Manjus Mulakalpa''. Hemachandra says, that Bindusara Was a ''bala'' (young

boy), when he was crowned King and that after attaining manhood he became warlike. Therefore he must have invaded South India, a few years after his accession in 301 B. C., say in 293 B. C., and before 278 B. C., The destruction of sixteen Kingdoms mentioned by Taranatha, could not be thought of in Northern India. There are four references in the Tamil Literature of the Sangam age, including two by Mamulanar to the invasion of South India by the Mauryas. The Hathigumpha inscription of Kharavela mentions a league of Tamil states, which had been in existence for 113 years and was a source of danger to him, There fore this formidabale league must have originated in 278 B. C. and this date falls within the religion of Bindusara.

In the light of the victories claimed by the Tamil Kings over the Aryan forces, mentioned in Sangam literature where are justified in thinking, that the league of 278 B. C, must have expelled the Mauryan Army. The probable partial unsuccess for the fact that he did not attempt the consequent of Kaling, so that Asoka could truely describe it as an unconquered country.

1) History of India Vol. I. Page 121, 122

2) Studies in the Ancient History of Tondaimandalam Page No. 10, 11 Both by Thiru Prof. R. Sathianathaier.

ஆக, மாமூலனாரும், பிறரும் கூறும் மோரியர் படையெடுப்பு, கி. மு. மூன்றாம் நூற்றாண்டில், பிந்துசாரன்

மேற்கொண்ட தென்னாட்டுப் படையெடுப்பையே குறிக்கும் என்பதும், ஆகவே, மாமூலனார், அப்படையெடுப்பு நிகழ்ந்த காலத்தை அடுத்து வாழ்ந்தவரே அல்லது, திருவாளர் பி. டி. எஸ். அவர்கள் கூற்றுப்படி, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டாம் நனிமிகப் பிற்பட்ட காலத்தவரல்லர் என்பதும், திருவாளர் சத்தியநாதராலும் உறுதி செய்யப் படுகிறது என்பது தெளிவாயிற்று.

---

## அதிகாரம் : XXVI

# பழைய அரச இனங்கள் ஒளிகுன்றல்

**கடைசி, பாண்டிய சோழ அரசர்கள் :**

இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், தமிழ்ச் சங்கம் நிறுவிய உக்கிரப் பெருவழுதியைப், பாண்டியர்களில் கடைசி அரசனாகக் கொண்டது, குறிப்பிடத்தக்கது. தொடர்ந்து வந்துகொண்டிருந்த பண்டைய பாண்டியர் வழியை, ஏதோ சில அவப்பேறு துண்டித்து விட்டது என்பதை, இதிலிருந்து உய்த்துணர்ந்து கொள்ளலாம். புறநானூறு 367 ஆம் எண் செய்யுளுக்கு இணைத்திருக்கும் கொளுவின்படி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, இவ்வுக்கிரப் பெருவழுதியின் நண்பனாவன். இந்த அரசர்களின் காலத்திற்குப் பிறகு பாடிய புலவர்களெல்லாம், சிறுபாணாற்றுப் படை ஆசிரியரைப் போலவே, பாண்டிய அல்லது சோழஅரசர்களைப் பாராட்டிப் பாடாமல், இப்பழைய அரச இனங்களின் வீழ்ச்சிக்குப் பின்னர்ப் பெருமை பெற்ற குறுநிலத் தலைவர்களையே பாடியுள்ளனர் ஆதலாலும், சோழ பாண்டிய அரசர்களைக் குறிப்பிடும் போதும், கலித்தொகை பாடிய புலவர்களைப் போலவே, ஆளும் அரசர்களைப் பெயர் சுட்டிக்குறிப்பிடாமல், பொதுவாகவே குறிப்பிட்டுள்ளனர் ஆதலாலும், இப்பெருநற்கிள்ளியோடு சோழ அரசு இனத்து வழியும், பெரும்பாலும் இடையறவு பட்டிருக்க வேண்டும். ஆகவே, இவ்விரு அரசர்கள் காலத்தில், இப்பழம் பெரும் அரச இனங்களின் செல்வாக்குச் சிறப்பில், ஏதோ ஒரு நிலைகுலைவு ஏற்பட்டிருக்க வேண்டும் என நம்பலாம்.

சமண, புத்தசமயங்களின் செல்வாக்கு உயர்தல்

நெடுஞ்செழியன் காலத்தில், மதுரைப்புறநகரில், ஆரிய சமயங்கள், குறிப்பாக, புத்த, சமணசமயங்கள் வழக்கத்தில் இருந்தன. [மதுரைக்காஞ்சி: 475 - 483, 487 வரிகளைக் காண்க.] அரசர்களால் பெரிதும் பேணப்பட்டவை, பழைய தமிழ்ச்சமயங்களே; என்றாலும், கி. பி. 470ல், சமணப் பேரவை ஒன்று மதுரையில் நிறுவப்பட்டது. [தமிழ் வரலாறு பக்கம் : 247 அடிக்குறிப்பு காண்க.] இந்நிகழ்ச்சி, சமண எழுத்தாளர் ஒருவரால் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுளது. ஆகவே, தமிழ் நாட்டில், ஆரிய சமயம் ஒன்று ஆதரவைப் பெற்றுவிட்டது. தமிழகத்தில் உறுதியான ஓர் இடத்தைப் பெற்றுவிட்டது என்பதற்கான ஒரு நிகழ்ச்சியாகவே, இதை எடுத்துக்கொள்ளலாம்.

இவ்வுண்மையோடு, இதே காலத்தில், காவிரிப்பூம் பட்டினத்தில், புத்தசமயத்திற்கும் இதுபோலும் சிறப்பிடம் அளிக்கப்பட்டிருந்தது என்பதையும் இணைத்துக் கொள்ள லாம். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் கடைசி நான்காம் பாகத்தின்போது, புத்தகோசருக்குக் காலத்தால் முற்பட்ட வராகிய, புத்த தத்தர் பௌத்த நூல்கள் பலவற்றைச் சோழ நாட்டிலிருந்து எழுதினார். அபிதம்மாவதாரம் என்ற தம் நூலின் இறுதியில் இவ்வாறு கூறியுள்ளார். "இழிந்த சாதியினராகாமல் உயர்ந்த சாதியினராகிய ஆடவர், மகளிரைப் பெருந்திரளாகக் கொண்டதும், ஒரு பெரு நகருக்குத் தேவைப்படும் அனைத்தையும் பெற்றிருப்பதும், ஆற்றிலிருந்து வந்து பாயும் பளிங்குபோல் தெளிந்த நீரைக் கொண்டதும், பல்வகை நவரத்தினங்களால் நிறைந்ததும், பல்வேறு வகை அங்காடிகளைக் கொண்டதும், பற்பல மலர்ச் சோலைகளால் அழகு பெற்றதும், சுற்றுச்சுவர்களில், பல்வேறு வகைப்பட்ட அழகிய கோபுரவாயில்களைக் கொண்டதாய்க் கண் ஹதாசர் என்பவரால் கட்டப்பெற்றதும், கைலாய மலைமுகடுக்கு நிகரான உயர்வுடைய மாளிகையால் அழகு பெற்றதுமாகிய அழகிய, இனிய தவப்பள்ளியினைக்

கொண்டதுமாகிய அழகிய காவிரிப்பூம்பட்டினத்தில், ஆங்குள்ள ஒரு பழைய வீட்டில் வாழ்ந்திருந்த போது, நல்ல தலைப்புக்களில் அழகாக எழுதுவது போலும் சிறந்த பண்புகளால் புகழ் பெற்றிருந்தவனும், சிறந்த அறிவுடைய வனும், நல்லவனும் இரந்து உண்போனும் ஆகிய என்னால் இது எழுதப்பட்டு, விரிவாக விளக்க உரையும் செய்யப் பட்டது.

நர நாரீகணாகிண்ணெ அசங்கிண்ண குலாகுலெ
பீதெ சப்பன்க கம்பன்னெ பகன்ன சரிதாதகெ
நாநாரதன சம்புண்ணெ விவிதாபண சங்கதெ
காவெரீ பட்டனெ ரம்மெ நாநாராமொ பசொப்ஹிதெ
கெலாச சிகராகார பாசாத பதி மண்டிதெ
காரிதெ கண்ஹதாசென தஸ்ஸநீயெ மனொரமெ
விகார விவிதாகாரசாரு பாகார கொபுரெ
தத பாசீன பாசாதெ மயா நிவசதா சதா
ரம்ம கல்லெக சாகல்ய சீலதி குண சொப்ஹினா
சுயம் சுமதினா சாது யாசிதெனா கதொா ததொா.

அபிதம்மாவதாரம்: சுலோகம் : 1409 - 1413.

வாழ்த்துப் பாக்களின் முடிவில், பிற்கால எழுத்தாளர் சிலர், "அபிதம்மாவதாரம் என்ற இந்நூல், உரகபுரத்தில் (உறையூரில்) வாழ்ந்திருந்த பஹதந்த புத்ததத்த ஆச்சாரி யரால் இயற்றப்பட்டது" என்ற பின்னுரையினை இணைத் துள்ளனர். [உரகபுர நிவாசிகென ஆசிரியென ப்ஹதந்த புத்ததத்தென கதொா அவிதம்மாவதொரொ, நாமாயம்." உரகபுரத்தில் வாழ்வோன் என்பதன் பொருள் பெரும்பாலும் அந்நகரின் குடிமகன் என்பதே ஆம்.

விநய விநிச்சயம் என்ற நூலின் முடிவுரையில், புத்த தத்தர் இவ்வாறு கூறுகிறார். "அனைத்துவகை மக்களைக் கொண்டதும், சோழப் பேரரசின் கடற்றுறை நகரானதும், வாழைத் தோட்டங்களாலும், பனை தென்னைத் தோப்புக்

களாலும் நிறைந்ததும், தாமரை, அல்லி மலர்களால் முழுதும் மறைவுண்ட நீர்நிலைகளால் ஒளி பெற்றதும், காவிரி பாய்வதால் மண் வளம்பெற்றுத் தூய்மை பெற்றதும், வளம் கொழித்து, ஒரு நகரின் தேவை அனைத்தையும் கொண்டதுமாகிய, குழப்பம் இன்றி, அமைதிநிலவும் பூத மங்கலம் என்ற பெருநகரில், நன்கு கட்டப்பெற்ற வெளிப் புறச்சுவர் அகழ்களால் வெணுதாசன் என்பானுக்கு உரியதும், ஆற்றங்கரையில் வரிசையாக வளர்க்கப் பட்ட வாநீர மரங்களால் சிறப்புற்றதும், பல்வேறு இனப்பறவைகளைக் கொண்டு, மக்கள் உள்ளங்களுக்குக் களிப் பூட்டுவதும், இனிய தாமரை மலர்களால் முழுமையாக மூடப் பெற்ற குளங்களால் அழகு பெற்றதும், இனிய நீரால் நிறைந்த சிறந்த கிணறுகளால் சிறப்புற்றதும், பரந்து அகன்ற வான் சுதை தீட்டப்பெற்று ஒளி பெற்ற எண்ணிலா வீடுகளைக் கொண்டதும், கைலைமலை முகடுகளை வெற்றி கொண்டு எள்ளி நகையாடும் உயர்வுடையதும், கூதிர்ப் பருவத்து வான் முகில் போலும் ஒளியுடையதுமான கோபுரங் களால் பிளவுண்ட மண் உடையதும் ஆகிய தவப்பள்ளியில் மக்கள் உள்ளத்தை ஐயத்தின் நீங்கித் தெளிவு பெறச் செய்யும் ஒரு மாளிகையில் வாழ்ந்திருந்த என்னால் என் மாணவர்களின் நலம் கருதியும், வினயம் என்ற நூலைக் குறுகிய காலத்தில் எளிதில் கற்றுக்கொள்ள விரும்பும் பிக்கு களின் ஒற்றுமைக்காகவும், புத்தசிம்மர் போதித்த கொள்கை களையொட்டி, இத்தொகுப்பு நூல், புத்தசிம்மரைப் பெருமை செய்வான் வேண்டி, தொகுக்கப் பெற்றது.''

இது, களப்பிரர் குலத்தைச் சேர்ந்த, குற்றத்தின் நீங்கிய, அச்சுத விகண்டன் காலத்தில் தொடங்கப் பெற்று முடிக்கப் பெற்றது.

செட்டஹஸ்ஸ சொளரத்ஹஸ்ஸ நாப்ஹிழ்தெ
நிராகுலெ
சப்பஸ்ஸ பன லொகஸ்ஸ காமெ சம்பிண்டிதெ விய
கடலீசாதாலுச்சுனா விகெரவனாகுலெ
கமலுப்பலசஞ்சன்ன சலிலாசய சொய்ஹிதெ

காவெரி ஜலகம்பாத பரிபூதம ஹீதலெ
இத்ஹெ சப்பங்க சம்பான்னெ மங்கலெ பூதம்ஙகலெ
பவராகார பாகாரபரிக்ஹா பரிவாரிதெ
விகாரெ வெண்ஹு தாசஸ்ஸ தஸ்ஸனீயெ மனொரமெ
தீரன்தரு ஹவானீர தருராஜி விராஜிதெ
நானாதிஜ கணாராமெ நாநாராம மனொரமெ
சாருபங்கஜ சங்கிண்ண தளாக சமலங்கதெ
சுரசொதக சம்புண்ண வர கூபொபசொப்ஹிதெ
உக்கதென ச தூபென ப்ஹெத்வா வ தரணீதலம்
ஜித்வா வ் அவஹசன்தென க்ஹெலாசிக் ஹரம்கரம்
கரதம்புதசங்காஸெ தஸ்ஸநீயெ சம்முஸ்ஸிதெ
பஸாதஜனனெ ரம்மெ பாசாதெ வசதா மயா
வுத்தஸ்ஸ புத்த சீஹென வினயஸ்ஸ வனிச்ஹயொ
புத்தசீஹம் சமூத்திஸ்ஸ மம சத்ஹிவிஹாரிகம்
கதொ யம்பன பிக்கூனம் ஹிதத்ஹாய சமாசதொ
வினயஸ்ஸாவ பொத்ஹத்ஹம் சுக்ஹென் எவாசீரென ச
அச்சுத் அச்சுத விக்கண்தெ கலப்ஹகுலனன் தனெ
மஹிம் சமனுசாசன்தெ ஆரத்ஹொ ச கமாபிதொ''

விநயவிநிச்சயம்: 3165 - 3179.

### புத்ததத்தரின் சான்றிலிருந்து உய்த்துணரக் கூடியன

புத்த தத்தரின் பெயரைத் தன் பெயராகக் கொண்டிருக்கும் ஈழத்தைச் சேர்ந்த திருவாளர் ஏ. பி. புத்த தத்தரின் தலைமையில் இயன்ற பதிப்பாசிரியர் குழுஅச்சிட்ட புத்ததத்தரின் நூலிலிருந்து [முதல்பதிப்பு: 1915 இரண்டாம் பதிப்பு : 1928] எடுத்துக் காட்டப்பட்ட இவ்விரு பகுதிகளிலிருந்து, ஐந்தாம் நூற்றாண்டின் கடைசியில், மக்களால் நிரம்பி, விலை மதிக்கவொண்ணா அரும்பொருள்களைக் கொண்ட அங்காடிகளையுடைய வளமான நகரமாகவே காவிரிப்பூம்பட்டினம் இருந்து வந்துளது என்பதை

அறிகிறோம்: காவிரிப்பூம்பட்டினம் பற்றிய இவ்வருணனை மணிமேகலை இருபத்தைந்தாவது அதிகாரம், 199 - 204 வரிகளில் கூறப்பட்டிருக்கும் புகார் நகரத்துக் கடல் கோளும் மக்கள் அந்நகர் விட்டுப்போனதும், ஒன்று வெறும் கற்பனைக் காவியக்கதையாதல், வேண்டும், அல்லது ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர் எப்போதாவது நிகழ்ந்திருக்க வேண்டும் என்பதையே உணர்த்துகிறது: கனகதாசன் போலும் ஆர்வலர்களால் அழகிய தவப்பள்ளிகள் பல கட்டப் பட்டுள்ளன ஆதலின் கரிகாலன் காலத்திலிருந்து, காவிரிப்பூம் பட்டினத்தில், பௌத்த சமய வளர்ச்சி, நனிமிக விரைவுடைய தாகும். சோழப்பேரரசை அகற்றி விட்டு அரியணை ஏறிய அரசனும், பௌத்த சமயத்தின் பால் ஆர்வம் உடையவனும், பௌத்தத் துறவிகளுக்காகத் தவப்பள்ளிகள் நிறுவுவதை ஊக்குவித்தவனும் ஆதல் வேண்டும். பூதமங்கலத்திலும் அது போலும் தவப்பள்ளிகள் காணப்படுகின்றன ஆதலின், விநய விநிச்சகத்தில் அச்சுத விக்கந்தன் என அழைக்கப்படும் அவ்வரசன், சோழநாடு முழுவதிலும் கோலோச்சியதாகத் தெளிவாகத் தெரிகிறது. திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள இன்றைய பூதலூரே, அப்பூத மங்கலம் ஆதல் வேண்டும். இச்சிற்றூரின் அணித்தாக வடக்கில் உள்ள பகுதிகள், புத்த தத்தரின் விளக்கங்களோடு ஒத்துள்ளன. தஞ்சை நாமக்கல் நெடுஞ்சாலையை அடுத்திருக்கும் இப்பகுதி களில், பௌத்த, சமண சமயச்சார்புடைய பழம் பொருள்கள் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. அண்மைக்காலம் வரை, இப்பகுதி ஆரிய சமய விளக்க மையங்களைக் கொண் டிருந்தன.

அச்சுத விகண்டன், களப்பிரர் அரச இனத்தைச் சேர்ந்தவன். அந்நூலைப் பதிப்பித்த ஆசிரியர் களப்பிரர் அரச இனத்தைக் கேட்டறியாதவர்; கதம்ப இனத்தை அறிந்தவர் ஆதலின், களப்பிரர் என்பதற்குப் பதிலாகக் கதம்பர் என்பதையே பாடமாகக் கொண்டுள்ளார். ஆனால் கதம்பர்களோ, வெகுதொலைவில் உள்ள பனவாசேவை ஆண்டவர்; அவர்கள் பௌத்தர்களும் அல்லர்; ஆய்வுக்குரிய

இக்கால அளவில் களப்பர் இனத்துப் பேராசன் ஒருவன் ஆட்சி புரிந்தான் ஆதலாலும், களப்பன் என்ற தமிழ்ச் சொல், பாலிமொழியில் கலப்பஹ என ஆகும் ஆதலாலும், கலப்பஹா என்ற பிறிதொரு பாடபேதச்சொல்லையே நான் கொண்டுள்ளேன்.

தமிழ் இலக்கியத்தில், பழைய களப்ப அரசர்களும், குறிப்பிடத்தக்க அண்மைக்காலம் வரை களப்ப மரபினரும் இருந்தமை பற்றிய குறிப்பு இருக்கிறது. பதின்மூன்றாம் நூற்றாண்டில், இக்காலச் சைவ சமய நெறிகண்ட மெய் கண்ட தேவரின் தந்தையார் அச்சுத களப்பாளர் என அழைக்கப்பட்டுள்ளார். இவ்வுண்மை, என் கருத்தைக் களப்பாள இனத்தின் மீது போக்கி, புத்ததத்தர் கூறும் அச்சுதகளப்பன், இந்தத் தமிழ் இனத்தைச் சார்ந்தவன் எனக் குறிப்பிடச் செய்தது.

தமிழ் நாவலர் சரிதையில் [அதிகாரம் 22ல் தமிழ் நாவலர் வரலாறு குறித்துக் குறிப்பிட்டுள்ளேன். வரலாறு, சரிதை இரண்டும் ஒரு பொருள் குறித்த இருசொற்களாம் எனினும், தமிழ்நாவலர் சரிதை என்பதே அந்நூலின் வழக்க மான பெயராம்] முதற்பாட்டு சேரனாலும், இரண்டாம் பாட்டு, சோழனாலும், ஏனைய இரண்டும் பாண்டியனாலும் பாடப்பெற்ற நான்கு வெண்பாக்கள் உள்ளன. அப்பாக்களின் அடியில் கொடுக்கப்பட்டிருக்கும் கொளுக்களின்படி, அம்மூவரும் அச்சுதகளப்பாளனால் விலங்கிடப் பட்டவராவர் முதல்பாட்டு, "தினை விதைத்துப் பயிர் செய்தவர் முற்றங் களில் தினை உலரும்; செந்நெல் விளைத்துப் பயிர்செய்தார் முற்றங்களில் செந்நெல் உலரும்; போர்முரசும் சங்கும் ஒலிக்கும்; அச்சுதன் முற்றத்தில் பெரிய தேர்ப்படையுடை யராகிய அச்சுதனின் பகையரசர் இருந்து உலர்வர்." என்கிறது.

தினைவிளைத்தார் முற்றம் தினைஉணங்கும்; செந்நெல்
தனைவிளைத்தார் முற்றம் அதுதானாம்—கனைசீர்

முரசுஉணங்கச் சங்கு உணங்கும் மூரித்தேர்த்தானை
அரசு உணங்கும் அச்சுதன் முற்றத்து."

சோழனால் பாடப்பெற்ற இரண்டாவது பாடல் இவ்வாறு கூறுகிறது; "அரசர்குல திலகனாகிய அச்சுதனுடைய முற்றத்தில், அவன் பிறந்த நாள் விழா அன்று முரசுகள் அதிரக்கொட்டிவிடுவதால் எழும் ஓசையைக் காட்டிலும், அவன் பகை அரசர்களாம் பேரரசர்களின் உரிமைகளைத் திரும்பத் தந்து, அவர்களை நாட்டிற்குப் போக விடுவதற்கு முன்னர், அவர்களின் கால்களில் பண்டு இட்டிருந்த விலங்குகளை வெட்டி விடுவதால் எழும் பேரொலியே பெரிதாம்" என்கிறது.

"அரசகுலதிலகன், அச்சுதன் முற்றத்தில்
அரசர் அவதரித்த அந்நாள்—முரசுஅதிரக்
கொட்டிவிடும் ஓசையினும், கோவேந்தர் கால்தளையை
வெட்டிவிடும் ஓசைமிகும்."

பாண்டியன் பாடிய முதற்பாட்டு இவ்வாறு கூறுகிறது: "வாழ்க்கையில் குறையிலாதவர், உலகில் எங்கே இருக்கிறார்கள்; தன் மனைவியைப் பிரியவிட்டு, கூரியவேல் உடையோனாகிய இராமனே, வாலியின் தம்பியாம் சுக்கிரிவன் மலைக்கு முன்பே, ஓர் ஆறு மாதம் முழுவதும் காத்திருந்தான்; போர் எனக்கேட்டுப் பூரிக்கும் படையும் அசையும் மாலையும் உடையோனாகிய அச்சுதன் முற்றத்தின் முன் நான் காத்துக் கிடக்கின்றேன்."

"குறையுளார் எங்கிரார்? கூர்வேல் இராமன்
நிறையாறு திங்கள் இருந்தான்—முறைமையால்
ஆலிக்கும் தானை அலங்குதார் அச்சுதன்முன்
வாலிக்கு இளையான் வரை."

இப்பாட்டில், பாண்டியன், தன்னை இராமனாகவும், அச்சுதனை, இராமனை வழிபடும் குரங்கினத்தவனாகவும்

கூறிவிடவே, கோபங்கொண்ட அச்சுதன், பாண்டியன் கால் விலங்கை இரட்டிப்பாக்கிவிட்டான். ஆகவே பாண்டியன் மேலும் ஒரு பாட்டு பாடவேண்டி நேர்ந்தது அது :

"தென் தில்லைக்கு உரியோனாகிய அச்சுதா! உன் முற்றத்தே முழங்கும் முரசொலி கேட்ட மேலைத்திசை வாழ்வார், அது கீழ்க்கடல் ஒலியோ எனக்கொண்டு அஞ்சி ஆரவாரித்தனர்- கீழ்த்திசை வாழ்வார் அது மேலைக்கடல் ஒலியோ எனக்கொண்டு அஞ்சி ஆரவாரித்தனர்." என்கிறது.

"குடகர் குணகடல் என்று ஆர்த்தார்; குடநர்க்கு
இடவர் குடகடல் என்று ஆர்த்தார்—வடகடல்
தென்கடல் என்று ஆர்த்தார் தென்தில்லை அச்சுதா!
நின்தன்
முன் கடை நிற்றார்க்கும் முரசு"

சேர, சோழ, பாண்டியராகிய இவ்வரசர்கள் எல்லாம் திரண்டிருந்த தென்தில்லை, ஆரிய மயமாக்கப்பட்ட அந்நாள் தொட்டுத் தங்கள் முடிசூட்டு விழாவினைச் சோழர்கள் மேற்கொள்ளும் இடம் சிதம்பரமே ஆம். சிதம்பரம் பெரிய கோயில், அக்காலத்தில் தெய்வத்தன்மைக்காகப்புகழ் பெற்று விளங்கியதால், அச்சுதனும், அவ்வழக்கத்தை மேற்கொண்டான் போலும்.

பாண்டியர்கள், கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் மீண்டும் செல்வாக்கு பெற்றுவிட்டனர் ஆதலாலும், பல்லவர்கள், அந்நூற்றாண்டின் இடைக்காலத்தில் காஞ்சியைக் கைப்பற்றிக் கொண்டனர் ஆதலாலும், தமிழ்நாடு முழுமைக்கும் பேரரசனான ஒரு களப்பாளனுக்குக் கி. பி. 450க்கும் 550க்கும் இடைப்பட்ட காலத்தில் தான் இடம் காண முடியும். ஆகவே, இந்த அச்சுத களப்பாளன், புத்தத்தர் கூறும் அச்சுத களப்பாளனே ஆதல் வேண்டும். ஒரே அரசன் சைவ, பௌத்த, சமண சமயங்களைப்

புரந்திருக்க முடியாது என்றும், தில்லைச் சிவன் கோயிலில் முடிசூட்டு விழா மேற்கொண்டு, சோழநாட்டில் புத்த விகாரங்களை ஆதரிப்பதும், மதுரையில் திராவிட சமண சங்கத்தை ஆதரிப்பதும் செய்யஇயலாது என்றும் கூறும் தடை, மதிக்கத்தக்க தடையாகாது. தென்இந்தியாவில், ஆரிய சமயங்கள் பரவத்தொடங்கிய பழங்காலத்தில், அவர் களிடையே புறச்சமயவெறுப்பு சிறிதளவே குடிகொண் டிருந்தது. புறச்சமய வெறுப்பு முதன்முதலில் தலைதூக்கிய கி.பி. 600க்குப் பிறகே அவர்கள் சண்டை தொடங்கலாயிற்று; மகேந்திர விக்ரம பல்லவன் சமணர்களுக்கும், சிவனுக்கும், விஷ்ணுவுக்கும், திரிமூர்த்திக்கும் கற்கோயில்கள் கட்டினான். அவனுடைய காலத்தில்தான். சமணர்களுக்கும் சைவர் களுக்கும் இடையில் எழுந்த முதல்வாய்ச்சண்டையினைக் கேட்கிறோம். ஒரு நூற்றாண்டிற்குப் பின்னர், வைஷ்ணவர்கள், சைவர்களை எள்ளி நகையாடுவதையும் சைவர்கள், விஷ்ணுவை மதிக்காது பழிப்பதையும் நாம் காணுகிறோம். ஆனால் கி. பி. 6௦0க்கு முன்னர், ஆரியச் சமயநெறி நிற்போர், செல்வாக்கு பெறத்தொடங்கிய போது, அவர்கள் ஒருவரையொருவர் எதிர்ப்பதை நாம் கேட்கவில்லை. ஆகவே அச்சுதகளப்பாலனும், அச்சுத களப்பனும் ஒருவரே என எடுத்துக்கொள்ளலாம்.

23வது அதிகாரத்தில் ஆராயப் பெற்ற வேள்விக்குடி செப்பேடு, களப்ரன் அதாவது, களப்ரர் வழிவந்தவன் என்ற கொடுங்கோல் அரசன் ஒருவன் பல அதிராஜாக்களையும், பழையதமிழ் அரசர்களையும் வென்று, ஏனைய தமிழ் மாவட்டங்கள் அல்லாமல் மதுரையிலும் தன் ஆட்சியை நிறுவினான் எனக்கூறுகிறது. பாலிமொழி, "களப்ஹ", சமஸ்கிருதத்தில் "கலப்ர" என முறையாகத் திரியும் ஆதலின், வேள்விக்குடிச்செப்பேட்டின் களப்ர அரசன், அச்சுத களப்பன், மற்றும் அச்சுத களப்பாளனே ஆவன் என்பது தானே பெறப்படும். தமிழ்நாட்டினைத் தன் ஆட்சிக் கீழ்க் கொண்டு வருவது முழுமை பெற்றுவிட்டது எனக் கூறப்படும் நிலையிருந்தாலும், பழைய தமிழ் அரச இனங்கள்,

வேரோடு கல்லி எறியப்பட்டு விடவில்லை. பாண்டியர்கள், கடுங்கோன் ஆட்சியின் கீழ், கி. பி. 600ல், தம் பெருமையை மீண்டும் நிலநாட்டிக் கொண்டனர்; சேர, சோழ, பாண்டியர் மற்றும் களப்பிரர், இரண்டு நூற்றாண்டு வரை, பல்வேறு கல்வெட்டுக்களிலும், செப்புப்பட்டயங்களிலும், முதலில் பல்லவரின் பகைவர்களாகவும், பின்னர்ச் சாளுக்கியர் பகைவர்களாகவும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

மூவேந்தர்களும், களப்பாளரைத் தமிழிலேயே பாடிப் பாராட்டியுள்ளமையால் உறுதிப்படுவதால், களப்பாளர்கள், தமிழ்க் குறுநிலத் தலைவர்களே ஆவர். அவர்கள், ஆரிய சமயங்களைப் பேணிப்புரந்தமையால், அவர்கள், அறவே ஆரிய மயமாக்கப் பட்டுவிட்டனர். தமிழ் நாகரீகத்தைப் பல நூறு ஆண்டுகாலமாகச் சுற்றிவளைத்துக் கிடந்த, ஆரிய நாகரீகம், பழையதமிழ் மரபுகளைப் பேணிக்காத்துவந்த, பழந்தமிழ் அரச இனம் மூன்றும், அச்சுதன் ஆற்றலின் முன் நிலைகுலைந்து போன அந்நாள் தொட்டு, தமிழர் சிந்தனைச் செல்வங்களை வியத்தகுநிலையில் கைப்பற்றிக் கொண்டது.

**களப்பிரர், கள்வரா ?**

திருவாளர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், களப்பிரர், பழந்தமிழ்ப்பாக்களில் இடம் பெற்றிருக்கும் கள்ளர் ஆவர் என்ற கொள்கைக்குத்துணை செய்கிறார். "கள்ளர்" என்பதற்குக் "கள்வர்" என்ற மாற்றுவடிவம் உண்டு; "களவர்" என்பது, பழைய ஓலைச்சுவடிகளில் "ள" என்பதன் கண் உள்ள புள்ளி இடப்பெறாமல் "களவர்" என ஆதலும் உண்டு. "களவர்" என்ற அது, "களபர்" "களபா" "களப்ஹர" என்றும் இறுதியாக "களப்ஹ்ர" என ஆகும்; ஆனால், "களப்ஹ" என்ற சொல் பாலிமொழியிலிருந்து கண்டுகொண்டோம் ஆதலின், இதற்குத் தமிழில் சொல்லாக்க விதிகளைத் தேடி அலையத்தேவையில்லை. அது மட்டும் அல்லாமல் பண்டைக் காலத்தில், கள்வர், குறுநிலத் தலைவர்

களுக்கு மேலாவர் என்பதற்கான அகச்சான்று எதுவும் இல்லை.

## ''கலப்பாளர்'' என்ற சொல்குறித்து ஒரு வார்த்தை

மெய்கண்ட தேவரின் தந்தையார் அல்லாமல் மேலும் பல களப்பாளர்கள், தமிழ்இலக்கியங்களில் காணப்படுகின்றனர். நெடுமாறன் கிழான் என்ற ஒரு களப்பாள அரசன், பதினாறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தாம் கண்டு பிடித்த கல்வெட்டு ஒன்றிலிருந்து திரு. எஸ். சோமசுந்தர தேசிகர் அவர்களால், நம் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டுள்ளான். [செந்தமிழ் பகுதி; 12 பக்கம் : 268] அறுபத்திமூன்று சைவ நாயன் மார்களில் ஒருவரான கூற்றுவ நாயனார் ஒரு களப்பாளன் எனத் தம்முடைய திருத் தொண்டர் திருவந்தாதியில், நம்பியாண்டார் நம்பி அவர்களால் [பத்தாம் நூற்றாண்டு] அழைக்கப்பட்டுள்ளார். [செய்யுள் 47; வரி 4] இவன் சேக்கிழாரால் [பதினொன்றாம் நூற்றாண்டு] ''களந்தை முதல்வனார்'' என்றும் ''களந்தை வேந்தர்'' என்றும் அழைக்கப்பட்டுள்ளான் [பெரியபுராணம்; கூற்றுவநாயனார் புராணம்] உமாபதி சிவம் அவர்களின் திருத்தொண்டர் புராணசாரத்திலும் அவ்வாறே குறிப்பிடப் பட்டுள்ளான். இவற்றிலிருந்து களப்பாளர், தொடக்க காலத்தில், தஞ்சை மாவட்டத்துப் புகழ் பெற்ற கோயில் ஊராகிய களந்தை என்ற ஊரைச்சேர்ந்தவராவர் என உணர்ந்து கொள்ளலாம். ''ஆளர்'' என்ற விகுதி, பிராமணர் களைக் குறிக்கும் தமிழ்ச்சொல்லாகிய அந்தணாளர் என்பதில் வரும் விகுதி போன்றதே ஆம். இச்சொல்லாக்கம் குறித்து ஒன்றும் ஏற்றுக்கொள்ளக் கூடாததான நகைப்பூட்டவல்ல சொல்லாக்கங்களை, உரையாசிரியர்கள் கண்டுபிடித்துள்ளனர். களப்பாளர் என்பது, பாலியில் ''களப்ஹ'' என்றும் தென்னாட்டுச் சமஸ்கிருதத்தில் ''களப்ஹர'' என்றும் உருவுதிரியும் ''களப்ப'' என்பதன் மறுவடிவமே ஆம்.

அதிகாரம் : XXVII

# பத்துப்பாட்டின் பிற்காலப் பாடல்கள்

## எஞ்சியுள்ள ஆறு பாடல்கள்

பத்துப்பாட்டு என்ற தலைப்பின்கீழ்த் தொகுக்கப்பெற்ற பாடல்களில், நான்கு பாடல்கள் முன்னரே, ஆய்வு செய்யப் பெற்றன. ஏனைய ஆறும் பிற்காலத்தவை : கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சார்ந்தவை. அப்பாடல்களில் இடம் பெற்றிருக்கும் ஆரியக்கருத்துக்கள், வெளிநாட்டவரின் அரைகுறை நம்பிக்கைகளின் போகிற போக்கில் இடம் பெற்றுவிட்ட, குறிப்புகளாக, தமிழர் உள்ளத்தில் இடம் பெறுதற்காம் தொடக்க நிலை முயற்சியாக அல்லாமல், தமிழரின் வாழ்க்கை முறைகளில் இரண்டறக் கலந்து நன்கு வேருன்றி விட்ட, தமிழரின் பழம்பெருங் கொள்கைகளை விரைந்து அழித்து ஒழிக்க வல்லனவாம் என்ற உண்மை நிலையால், இது உறுதி செய்யப்படும். மேலும், இப்பாடல்கள், கரிகாலன் அல்லது இளந்திரையன், அல்லது நெடுஞ்செழியன் போலும் பெரிய வெற்றி வீரர்களைப் பாடவில்லை; மாறாக, சேர சோழ, பாண்டியப் பேரரசுகளின் வீழ்ச்சிக்குப்பிறகு அரசாளத் தொடங்கிய ஒரு குறுநிலத்தலைவனையோ, அல்லது முருகன் போலும் கடவுளையோ, அல்லது குறிப்பிட்ட ஒருபாட்டுடைத் தலைவன் இல்லாத நிலையிலேயே பாடப் பெற்றுள்ளன. மேலும், இப்பாடல்கள், அப்போது நடைமுறையில் இருந்த தொல்காப்பிய இலக்கண விதிமுறைகளை ஒட்டியே பாடப் பெற்றுள்ளன. அதாவது, அவை, காவியம், நாடகங்களின் விதிமுறைகள் யாவை என்பவை அரிஸ்டாட்டில் அறிந்து கொள்ளத் துணைபுரிந்தனவாய, ஹோமரின் வீரகாவியங்கள், பழைய கிரேக்க நாடகங்கள் போலப், புலவர்களின் இயற்கை யோடு ஒட்டிய கற்பனை வளம் காரணமாக கருவிலே

வாய்த்த திருவாக, இயல்பாக வெளிப்பட்டு எழுத்துருவம் பெற்றன அல்ல; மாறாக, அரிஸ்டாட்டில் ஹொராஸ் ஆகியோரின் செய்யுள் விதிமுறைகளை அடியொற்றிப் பின் பற்றிப் பாடப்பட்ட, பதினேழாம் நூற்றாண்டுப் பிரெஞ்சு மொழி இலக்கிய நாடகங்கள் போலப் பாடப்பெற்றுள்ளன. இவ்வாறு கூறுவதால், பழைய தமிழ்ச் செய்யுட் பேரொளி மங்கிவிட்டது என்பது இல்லை; அது, அந்தப் பழைய பேரொளியோடு ஒளிவிடத்தான் செய்கிறது; ஆனால், கவிதைக்கலை, திறனாய்வாளரால் போலியாக்கப் பட்ட ஆட்சிப் பிடியின்கீழ் மெல்ல நகருகிறது. இது அடுத்து வரும் பகுதிகளில் விளக்கப்படும்.

**நெடுநல்வாடை :**

உரையாசிரியர் நச்சினார்க்கினியர் கூற்றுப்படி, இப்பாடல், நெடுஞ்செழியன் புகழ்பாட நக்கீரரால் பாடப்பட்டது. ஆனால், அப்பாட்டின் மூலத்தில் அவ்வரசன் பெயர் குறிப்பிடப்படவில்லை. இப்பாட்டின் பாட்டுடைத்தலைவன், "பகைவர் பலரோடு பகைகொண்டு பாசறைக்கண் இருக்கும் போது, இரவின் நடு யாமத்தும் உறக்கம் கொள்வது மறந்து, ஏவலர்சிலர் பின்வர, அப்பாசறைக்குள்ளேயே சுற்றிச்சுற்றி வரும் ஒரு வேந்தன்"

> "நள்ளென் யாமத்தும் பள்ளிகொள்ளான்
> சிலரொடு திரிதரும் வேந்தன்
> பலரொடு முரணிய பாசறைத் தொழிலே;"
>
> — நெடுநல்: 186-188.

முனையில் வேப்பிலை கட்டப்பெற்ற, வலிய கொம்பிலே கோக்கப் பெற்ற வேற்படை ஏந்திவருவன். "வேப்பு தலையாத்த நோன்காழ் எஃகமொடு" (நெடுநல்; 176) கூறிய விளக்கங்களிலிருந்து, நெடுநல்வாடையின் பாட்டுடைத் தலைவன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் ஆவன் என்பது, ஒரு முரட்டுத்தனமான முடிவு

ஆகும். கணவனைப் பிரிந்து தனித்து இருப்பதால் உற்ற அரச மாதேவியின் துன்பத்தையும், கணவன் விரைந்து மீண்டு, தன் தோளைத் தழுவுவதற்காக, அவன் வெற்றிக்கு வழி செய்யுமாறு, தமிழரின் பண்டைப் போர்க்கடவுளாம் கொற்றவையை அவள் வழிபடுவதையும் விளக்குவதே, இதன் பாடற்பொருளாம். அரசமாதேவி, இவ்வாறு, தமிழ்க் கடவுளாம் கொற்றவையை வழிபடுகின்றனள் என்றாலும், ஆரியக் கொள்கைகளும் கோட்பாடுகளும், தமிழர் வாழ்வில் உறுதியாக இடம் பெற்றுவிட்ட பின்னரே, இப்பாடல் பாடப் பெற்றது என்பது தெளிவான ஒன்று. ஆரியக் கலாச்சாரம் பற்றிய குறிப்புக்கள் இங்கொன்றும் அங்கொன்றுமாக அல்லாமல், அடுத்தடுத்துப் பெருகவே இடம் பெற்றுள்ளன. கட்டிடக்கலை நூல் இவ்வாறு குறிப்பிடப்பட்டுளது. "சிற்ப நூலை அறிந்த அறிஞர்கள், மெல்லிய நூலைக் கூரிதாக நேரே பிடித்துத், திசைகளைக் குறித்துக் கொண்டு, அத்திசைகளுக்கு உரிய தெய்வங்களையும் பார்த்து, பெரும் புகழ் வாய்ந்த மன்னர்க்கு ஏற்புடைய மனைகளை வகுத்தனர்."

"நூலறிபுலவர் நுண்ணிதின் கயிறிட்டுத்
தேஎம் கொண்டு, தெய்வம் நோக்கிப்
பெரும் பெயர் மன்னர்க்கு ஒப்ப மனை வகுத்து"
—நெடுநல்வாடை ; 76-78.

வாயிற்படியின் மேல்பகுதி பொருத்தப்படும் சுவரின் பகுதி உத்தர கற்கவி என அழைக்கப்படும்; அச்சொல் வானநூலொடுபட்ட சிலேடையாகக்கூறப்பட்டுளது. ஒருவிண் மீனின் பெயரால் பெயர் பெற்ற வாயிற்படியின் மேல்பகுதி பொருத்தப் பெற்ற கற்கவி எனும் பொருளில், "நாளொடு பெயரிய கோள் அமைவிழுமரம்" (நெடுநல் : 82) எனக் கூறப் பட்டுளது ; ஈண்டுக்குறிப்பிடப்பட்ட விண்மீன் உத்தரம்; அம்மரம், உத்தரம் என அழைக்கப் பெறும். அரண்மனைக் குள்ளே, அரசன் இருந்து ஆட்சி நடத்தும் உள்அறை, திருக்கோயிலில், அக்கோயிலுக்குரிய தெய்வத் திருமேனி

இடங்கொண்டிருக்கும் இடத்தைப் போலவே கர்ப்பக்கிரகம் அதாவது அவ்வீட்டின் கருப்பை, அல்லது கருப்பையாகிய வீடு என்றே அழைக்கப்படும்; கர்ப்பம், தமிழில் கருவாம். கரு எனப் பெயர் பெற்ற காண்பதற்கு இனிய நல்ல வீடு எனும் பொருளில், "கருவொடு பெயரிய காண்பின் நல்இல்" (நெடுநல்; 114) எனவந்துளது. பிறிதோரிடத்தில், நாற்பது என்ற தமிழ்ச்சொல், "தச" என்ற வடமொழிச் சொல்லும், நான்கு என்ற தமிழ்ச் சொல்லும் இணைந்த தொகைச் சொல்லாகிய "தச நான்கு" (நெடுநல்; 115) என வந்துளது. வான வீதியில் கிரகங்கள் செல்லும் பாதை நன்கு விளக்கப் பட்டுளது. "உறுதி வாய்ந்த கொம்புகளை உடைய மேடராசி முதலாக, ஏனையராசிகள்" எனும் பொருளில் "திண்ணிலை மருப்பின் ஆடுதலையாக" (நெடுநல்: 160) எனும் தொடர் வந்துளது. ஆடு என்பது மேஷம் என்பதன் தமிழ் மொழி பெயர்ப்பாம்; மேஷம் என்ற அச்சொல்தானும், "அரைஸ்" என்ற கிரேக்கச் சொல்லின் மொழி பெயர்ப்பாம். "ரோகிணி" அதன் தமிழ் வடிவமாம் "உரோகிணி" என வந்துளது. (நெடுநல்; 163). ஆரியக் கருத்துக்கள், இவ்வாறு ஊடுருவத் தொடங்கிவிட்ட நிலையிலும், தமிழ்ப்பாடல்கள் இயற்கை வளங்களை விளக்குவதில், தம் இயல்பான இயற்கையோடு ஒட்டிய உண்மை நிலையினை இன்னமும் விடாது கொண்டு உள்ளன. இதோ ஒரு விளக்கம்: "பருவம் பொய்யாது பெய்யும் கார்முகில், தான் படிந்து கிடந்த மலையை வளைத்து எழுந்து, உலகத்தவரெல்லாம் குளிரால் நடுங்குமாறு, கார் காலத்துப் புதுமழையைப் பொழிய, இம்மழையால் பெருகிய வெள்ளத்தைப் பெருத்த வளைந்த கோலினைக் கையிலே கொண்டஇடையர், கொல்லேறுகளோடு கூடிய ஆனிரைகளை, மேட்டுப்பாங்கான வேற்று நிலங்களில் மேயவிடுத்து, தாம் வாழ்ந்த இடங்களைப் பிரிந்த தனிமைக்கு வருந்தி, காந்தள் மலரின் நீண்டஇதழ்கள்கொண்டுகட்டிய தலைமாலையிலிருந்து சொட்டும் நீர் அலைப்பதால் மேலும் கலக்கம் உற்று உடல் குளிர் மேலும் நடுங்கப் பண்ணவே, அக்குளிர் போக்க பலரும் ஒன்று கூடியிருந்து நெருப்புக் கனலைக் கைகளில் விடாது

பற்றியிருக்கவும், குளிர்மிகுதியால், பற்பறை கொட்டி நடுங்க, விலங்குகள் தம் மேய்தல் தொழிலை மறக்க, குரங்குகள் உடல் குன்னிக்கிடக்க, மரத்தில் படிந்துகிடக்கும். பறவைகள், ஆங்கு இருக்க மாட்டாது கீழே வீழ்ந்து விட, கறவைகள், தம் கன்றுகளைப் பால் உண்ணவிடாது கடிந்து உதைக்க, குன்றையும் நடுங்கப் பண்ணுவது போலும் கூதிர்காலம்.''

''வையகம் பனிப்ப, வலஏேர்பு வளைஇப்
பொய்யாவானம் புதுப்பெயல் பொழிந்தென
ஆர்கலி முனைஇய கொடுங்கோல் கோவலர்,
ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பிப்
புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோடல்
நீடிதழ்க் கண்ணி நீர் அலைக்கலாவ
மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்
கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க,
மா மேயல் மறப்ப, மந்திகூரப்,
பறவை படிவன வீழக், கறவை
கன்று கோள்ஒழியக் கடியவீசிக்
குன்று குளிர்ப்பன்ன கூதிர்''

—நெடுநல்வாடை : 1 - 12.

இதோ ஒரு பனிக்காலக்காட்சி: ''மெல்லிய கொடியினை யுடைய முசுட்டைச்செடியின் பருத்தவடிவினவாகிய வெண்ணிறப்பூக்கள், பொன் போன்ற நிறமுடைய பீர்க்கம் பூக்களோடு, சிறுசிறு தூறுகள் தோறும் மலர்ந்துகிடக்க, பசியகாலையும் மெல்லிய சிறகையும் உடைய கொக்குக் கூட்டம், வண்டல் இட்ட கரிய சேறுபடிந்த, வெள்ளிய ஈர மணற்பரப்பில், சிவந்தவாயினவாய நாரைகளோடு கூடி இருந்து, எல்லா இடங்களிலும் கவர்ந்து கொள்ளுவதற்கு வாய்ப்பாக கயல்மீன்கள், நிலத்தில் அறல்பட ஓடும் வெள்ளத்தை எதிர்த்து ஏறிவர, பெரும் பெயல்பெய்து ஓய்ந்து விட்டமையால், வானில் உயர்ந்து எழுந்துவிட்ட, நீர் அற்ற

வெண்மேகம் அகன்ற பெரியவானிடத்திலிருந்து சிறுசிறு துவலைகளைத் தூவிக்கொண்டே இருக்க, அழகிய அகன்ற பெரிய வயல்களில் நிறைந்த நீரால் செழித்து வளர்ந்த வளமான தோகைகளைக் கொண்ட நெற்பயிரிலிருந்து வெளிப்பட்ட கதிர்கள் முற்றித் தலைசாய்த்துக் கிடக்க, பெரிய அடியினையுடைய பாக்குமரத்தின் நீலமணி நிறங் காட்டும் கழுத்தில், வளமாகக் கொழுத்தமடலில் பாளை விரிந்த பெரிய குலைகளில், நுண்ணிய நீர் திரளும்படிப் பருத்துத்திரண்டு, தெளிந்த காய்கள் இனிமையுற முற்ற, அடர்ந்த கிளைகளில் நெருக்கமுற மலர்ந்த மலர்களைக் கொண்ட அகன்ற பெரிய மலர்ச்சோலைகள்.''

''புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூப்,
பொன்போல் பீரமொடு புதல்புதல் மலரப்,
பைங்கால் கொக்கின் மென்பறைத் தொழுதி
இருங்களி பரந்த ஈரவெண் மணல்
செவ்வரி நாரையொடு எவ்வாயும் கவரக்
கயல் அறல்எதிரக், கடும்புனல் சாஅய்ப்
பெயல்உலந்து எழுந்த பொங்கல் வெண்மழை
அகலிரு விசும்பில் துவலை கற்ப,
அங்கண் அகல்வயல் ஆர்பெயல் கலித்த
வண்தோட்டு நெல்லின் வருகதிர் வணங்க,
முழுமுதல் கமுகின் மணி உறழ் எருத்தின்
கொடுமடல் அவிழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை
நுண்ணீர் தெவிள வீங்கிப் புடைதிரண்டு
தெண்ணீர்ப் பசுங்காய் சேறுகொள முற்ற
ஒளிகொள் சிமைய விரவுமலர் வியன்கா.''

—நெடுநல்: 13-27

**முல்லைப்பாட்டு :**

கணவன், போர் மேற்கொண்டு வேற்று நாட்டில் இருந்த போது, மனையகத்தே தனித்திருந்து காதல் நோயால் தாக்குண்ட மனைவியின் துயர்க்கொடுமையைப் பாடுகிறது இம்முல்லைப்பாட்டு [முல்லைப்பாட்டின் பாட்டு] டைத் தலைவன், தன் பாசறைக் கண், மற்றவர்களோடு யவனர் களையும், மிலேச்சர்களையும் பணியில் அமர்த்தியிருந்தான் என்றும், அதனால், அப்பாசறைக்கண் பலமொழிகள் பேசப் பட்டன என்றும் கூறுவதல்லது; பாட்டுடைத் தலைவன் யார் என்பது குறித்து, அப்பாட்டின் ஆசிரியர் நம்பூதனார் எவ்விதக் குறிப்பும் தந்திலர். இப்பாட்டிலும், ஆரியக்கருத்துக்கள், இங் கொன்றும் அங்கொன்றுமாக அல்லாமல், நிறையவே இடம் பெற்றுள்ளன. பண்டைத் தமிழ்க் கடவுளாம் மாயோன் விஷ்ணுவாகவே, முழு அளவில் அடையாளம் காட்டப் பட்டுள்ளான். "பரந்து அகன்ற உலகை வளைத்துக் கொண்டு, சக்கரப்படையோடு சங்கையும் கையில் ஏந்தி, திருமகளை மார்பிலே கொண்டு, மாவலி வார்த்த நீர், கையில் வீழ்ந்த அளவே பேருருக்கொண்டு வானளாவ உயர்ந்த திருமால் போல என்ற உவமையினைக் காண்க.

"நனந்தலை உலகம் வளைஇ, நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போல"

—முல்லை : 1 - 3.

மற்றோர் உவமை, "அடையைக், காவியில் தோய்த்து உடுத்திய, தவவேடம் தாங்கிய பார்ப்பனன், தன் தோய்த்த ஆடையின் ஈரம் போகத் தன் முக்கோலின் மீது போர்த்தி யிருப்பதைக் குறிக்கிறது :

"கல் தோய்த்து உடுத்த, படிவப் பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப" - முல்லை : 37 - 38

இப்பாட்டிலிருந்து, பண்டைத் தமிழர் வாழ்க்கையோடு தொடர்புடைய இனிய பல செய்திகளை அறிந்து கொள்கிறோம். எதிர் காலத்தை அறிந்து கொள்ளும் தமிழர் வழக்கம், சிற்றூரின் புறத்தே சென்று, ஆங்குள்ளார் வாயினின்றும் எதிர்பாரா நிலையில் வெளிப்படும் சொற்களைக் கொண்டு வருவதை உணர்ந்து கொள்வதாம். "சிறந்த காவல் அமைந்த பழைய ஊரின் புறத்தே சென்று, யாழ் இசைபோலும் இனிய ஒலி எழுப்பும் வண்டுகள் வந்து மொய்க்குமாறு, நாழியில் கொண்டு சென்ற நெல்லோடு அன்று அலர்ந்த முல்லை மலர்களையும் தூவி, மிக முதிர்ந்த பெண்டிர், நற்சொல் கேட்டு நிற்க. சிறிய கயிற்றால் கட்டப்பட்ட இளங்கன்றின், பால் உண்ணாத் துயரால், தாய் வருகையை எதிர்பார்த்து வருந்தும் வருத்தத்தைப் பார்த்து, இடையர் குடிவந்த ஒருத்தி, குளிரால் நடுங்கும் தோளினை இரு கையாலும் இறுக அணைத்துக்கொண்டும், அக்கன்றை நோக்கி," "கையில் வளைந்த கோலேந்திய கோவலர் பின் இருந்து துரத்திவர, உன்னுடைய தாய் இப்பொழுதே வந்து விடுவள்" எனக் கூறினவருடைய மிக நல்ல சொல்லைக் கேட்டோம். ஆகவே, நல்லோர் கூறிய வாய்ப்புள் (சகுணம்) ஒன்றாகவே உளது ஆகவே, பகைவர் மண்ணைக் கைக்கொண்டு, அப்பகைவர் பணிந்து தரும் திறைப்பொருட்களைக் கொண்டு, சென்ற வினைமுடித்துக்கொண்டு, நின் கணவர், இன்றே வருதல் உறுதி" என்ற பகுதியினைக் காண்க.

"அருங்கடி மூதூர் மருங்கிற்போகி,
யாழ் இசை இனவண்டு ஆர்ப்ப, நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பு அவிழ்அலரி தூஉய்க், கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக்கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி, ஆய்மகள்

நடுங்கு சுவல் அசைத்த கையள், கைய
கொடுங்கோல் கோவலர் பின் நின்று உய்த்தர
இன்னே வருகுவர் தாயர் என்போள்
நன்னர் நன்மொழிகேட்டனம் ; அதனால்,
நல்ல, நல்லோர் வாய்ப்புள் ; தெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர், வினைமுடித்து
வருதல் தலைவர் வாய்வது''.

—முல்லை : 7 - 20.

முல்லைப் பாட்டின் ஆசிரியர், இயற்கை நலத்தை, ஏனைய புலவர்களைப் போலவே நன்கு விளக்கியுள்ளார். ''நுண்மணலிடத்தே முளைத்திருக்கும் இலைகளால் நிறைந்த காயாச்செடி, அஞ்சனவண்ண மலர்களை மலர்ந்து காட்ட; இளந்தளிர்களையும், மலர்க்கொத்துக்களையும் உடைய கொன்றைமரம். நல்ல பொன் ஒத்த மலர்களைச் சொரியவும், வெண்காந்தளின் குவிந்து இருந்த அரும்புகள், விரிந்த கை போல விரிந்து காட்டவும், நெருங்கிய இதழ்களைக் கொண்ட செங்காந்தள், உதிரம் போலும் நிறம் வாய்ந்த மலர்களை ஈனவும், காட்டு வளத்தால் செழித்த முல்லை நிலத்துப் பெருவழிகளில், மழை பொய்யாது பெய்தமையால் நன்கு வளர்ந்து, முற்றித் தலைசாய்ந்து கிடக்கும் வரகுக்கொல்லைகளில், முறுக்குண்ட கொம்புகளைக் கொண்ட கலைமான்களோடு, மடப்பம் வாய்ந்த பெண்மான்களும் துள்ளி விளையாட, இனிமேல் பெய்வதற்காக விரைந்து செல்லும் வெண்முகில் மழைபெய்தற்குரிய கார்காலம்.''

''அயிர
செறிஇலைக் காயா அஞ்சனம் மலர,
முறிஇணர்க் கொன்றை நன்பொன் காலக்,
கோடல் குவிமுகை அங்கை அவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கானம் நந்திய செந்நிலப் பெருவழி

வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்
திரிமருப்பு இரலையொடு மடமான் உகள
எதிர் செல் வெண்மழை பொழியும் திங்கள்.''
—முல்லை: 92-101.

மன்னர்கள் பாடி கொண்டிருக்கும் இடங்களில் ஒரு நாளின் ஒவ்வொரு நாழிகையும், பேரொளி வீசும் பெரிய மணிகள், அவற்றின் நாக்கால் அடிபட எழுப்பு ஒலியால் அறிவிக்கப்படும்: நாழிகை குறுநீர்க்கன்னல் என்ற காலம் காட்டும் கருவியால் கணக்கிடப்படும் என்பதையும் இப் பாட்டிலிருந்து அறிகிறோம்.

''நெடு நா ஒண்மணி நிழற்றிய நடுநாள்.''

''குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப''
—முல்லை: 50; 58.

பாசறைக்கண் அரசன் உறங்கும் இடத்தில், மெய்க் காவலர்களாக, மிலேச்ச ஊமைகளே அமர்த்தப் பட்டனர் என்று அறிவிக்கிறது முல்லைப்பாட்டு.

''உடம்பின் உரைக்கும் உரையா நாவின்
படம்புகு மிலேச்சர் உழையர் ஆக.''
—முல்லை: 65-66.

குறிஞ்சிப்பாட்டு;

உரையாசிரியர் நச்சினார்க்கினியர், குறிஞ்சிப்பாட்டு, ஆரிய அரசன் பிரகத்தனுக்குத், தமிழ் அறிவுறுத்தற் பொருட்டுக் கபிலரால் பாடப்பட்டது என்று கூறியுள்ளார். இக்குறிஞ்சிப் பாட்டு, ஒரு கடவுளையோ அல்லது ஓர் அரசனையோ அல்லது தமிழ் வளரத்துணை நின்ற ஒருவனையோ பாராட்டப் பாடப் பெறாமல், குறிஞ்சித் திணைபற்றிய, தொல்காப்பிய இலக்கணத்துப் பெரும்பாலான விதிமுறைகளுக்கு விளக்கம் தரவே பாடப்பெற்றுளது. ஆகவே அவ்வுரையாசிரியர் கூற்று

உண்மையாதலும் கூடும். இதுகாறும் நாம் ஆராய்ந்த பாடல்களெல்லாம், அவை, பாட்டினத்தின் எந்த இனத்தைச் சேர்ந்தன வாயினும், தம் தலையாய பணியாக யாரேனும் ஒருவரைப் பாராட்டிப் பாடவே வந்துள்ளன. பாட்டிலக்கணம் பற்றி, எங்கோ சில இடங்களில் மட்டுமே குறிப்பிட்டுச் செல்கின்றன. இலக்கணத்தைப் பொருள் விளக்க அறிவியலாகக் கொள்ளாமல், விதிமுறை கட்டுப்பாட்டிற்குரிய அறிவியலாகக் கொண்டு, இலக்கண ஆசிரியர் விதிக்கும் விதி முறைகளுக்கு அடங்கி பாடப்பெற்ற முதல் பாடலும், மிக நீண்ட பாடலும் இதுவே. இக்காலத்திற்குப் பிறகும் எண்ணற்ற பாடல்கள் பாடப்பெற்றன. ஆனால் அவை யெல்லாம், புலவர்களின் ஒள்ளொளி காட்டிய வழிப், பாடப் பெறாமல், அகத்தியம் அல்லது தொல்காப்பியத்தைப் பாட்டிற்கு வகுத்த வழிகாட்டியாகக் கொண்டே பாடப் பெற்றுள்ளன.

இப்பாட்டு, பெரும்பாலும், ஆறாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தைச் சேர்ந்ததாகும். ஆரியக் குறிப்பீடுகள் இதை உறுதி செய்வதற்குப் போதுமான அளவு மிகுதியாகவே உள்ளன. ''ஐயம் அறக்கற்ற அறிவுடையராகிய ஐயர்க்கும் [அதாவது ரிஷி, அல்லது துறவி; பிற்காலத்தே, எல்லா பிராமணர்களையும் குறிப்பதாயிற்று], அவர்கள், தங்கள் சான்றாண்மை, பெருமை, ஒழுக்கங்களை, ஒரு முறை இழந்து விடுவராயின், பின்னர், அதனால் உண்டாகிவிட்ட அழுக்கைப் போக்கிவிட்டு, உலகெங்கும் விளங்கும் புகழ் உடையராம் அப்பழைய நிலையை அடைதல், அரிதே அல்லது எளிதன்று எனக் கூறுவர், பழைய ஒழுக்க நெறிகளை உணர்ந்த உயர்ந்தோர் எனக்கூறுகிறது ஒருபகுதி :

''சால்பும், வியப்பும், இயல்பும் குன்றின்
மாசறக் கழீஇ வயங்கு புகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொன் மருங்கு அறிஞர்''.

—குறிஞ்சி : 15 - 18.

இது, இப்பாட்டு பாடப் பெற்ற காலத்தில், ஆரிய நாற்சாதி முறைகளும், ஆரிய தர்ம சாஸ்திரங்களும், தமிழரின் வாழ்க்கை முறைகளை நடத்திச் செல்லும் வழிகாட்டிகளாகி விட்டன என்பதை உணர்த்துகிறது. "ஒரு தலைவி, அடுத்த உலகத்தில் அதாவது அடுத்த பிறவியில், காதலனை அடைவேன்" "ஏனை உலகத்தும் இயைவதால் நமக்கு" (வரி : 24) எனக்கூறும் இடத்தில், ஆரியரின் மற்றொரு கோட்பாடு குறிப்பிடப்பட்டுளது. குறிப்பிடப்பட்டுள்ள பிறிதொரு ஆரியக் கோட்பாடு, பார்ப்பனரின் அந்தி வழிபாடு. "அந்தி அந்தணர் அயர" (வரி : 235) "நீரால் நிறைந்த பெரிய கடலும் குறைந்து போகுமாறு அதன் நீரை முகந்து கொண்டு, அகன்ற பெரிய வானில், வீசுகின்ற காற்று தன்னோடு கூடியதனால், போர் முரசு முழங்கினாற் போலும், இனிய குரலை உடைய இடியேற்றோடு, நிரல் நிரலாக எழுந்து இயங்கும் கார்முகில்" எனப்புலவர் கூறும் போது, வலிந்து பாடப் பெற்ற பிற்காலச் சமஸ்கிருதப் பாடல்களின் ஆதிக்கத்தின் கீழ்த் தமிழ்ப் பாக்களைப் பற்றிக் கொண்ட உயர்வு நவிற்சி அணியின் நிழலாட்டம் நன்கு காணப்படுகிறது:

"நிறை இரும் பௌவம் குறைபட, முகந்து கொண்டு
அகல் இரு வானத்து வீசுவளி கலாவலின்
முரசு அதிர்ந்தன்ன இன்குரல் ஏற்றொடு
நிரைசெலல் நிவப்பின் கொண்மூ."

—குறிஞ்சி : 47 - 49.

பாட்டிலக்கண விதிகளுக்கு விளக்கம் அளிக்கும் ஒரு பாட்டு இது என்ற காரணத்தால், பாடலாசிரியர், முழுக்க முழுக்க, ஒரு மலர்ப் பண்ணையாளர் வைத்திருக்கும் மலர்களின் பெயர்ப் பட்டியல் போல, முழுக்க முழுக்க, செய்யுள் நடைசாராத, குறிஞ்சி நிலத்துக்கு உரிய, ஒரு நூறு மலர்களின் பெயர்ப் பட்டியலைக் கொடுத்துள்ளார். புலவர், உண்மையான், இயற்கையோடு ஒட்டிய கவிபாடும் உள்ளொளியில் குறையுடையார் அல்லர் ; மாலைக் காலம்

குறித்த அவர் விளக்க உரையினைக் காண்க : "பகற்பொழுது கழியுமாறு பலகதிர்களைக் கொண்ட ஞாயிறு, ஏழு குதிரை பூண்ட தேரை செலுத்தி, மேற்குமலையை அடைந்து மறைய, மான்கூட்டம் மரத்தடிகளில் வந்து கூட, பசுக்கூட்டம் தம் கன்றுகளை அழைத்தவாறே மன்றுகள் நிறையுமாறு சென்று நுழைய, கொம்பின் இசைபோல ஒலி எழுப்புவனவாகிய வளைந்த வாயையுடைய அன்றில் பறவை, உயர்ந்த பனை மரத்தில் இருந்தவாறே தம் பெடையை அழைக்க, பாம்பு இரை மேய்தற்கு வேண்டும் ஒளிதரும் பொருட்டு, தன்பால் உள்ள மணியை உமிழ, இடையர்கள், ஆம்பல் என்னும் இசை எழுப்பவல்ல தம் குழலில் தெளிந்த இசையைத் தொடர்ந்து எழுப்ப, ஆம்பல் அழகிய இதழ் விரித்து மலர, செல்வம் கொழிக்கும் மனைகளில் அழகிய தொடி அணிந்த மகளிர் விளக்கேற்றி வைத்து மாலையை வழிபட, அந்தணர், தம் அந்திக்கடனை ஆற்ற, காட்டில் வாழ்பவர், வானத்தை அளாவும் பரண்களில் தீக்கடைக் கோலால் தீப்பந்தங்களைக் கொளுத்த, கார் முகில்கள் பெரிய மலைமுகடுகளைச் சூழ்ந்து கிடந்து கறுக்கவும், காடு, விலங்குகள் எழுப்பும் கல் என்னும் ஒலியால் நிறைய, பறவைகள் ஆரவாரம் செய்ய"

'எல்லை செல்ல, ஏழ் ஊர்பு இறைஞ்சிப்
பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய,
மான்கணம் மரம்முதல் தெவிட்ட, ஆன்கணம்
கன்று பயிர்குரல மன்றுநிறை புகுதர,
ஏங்கு வயிர் இசைய கொடுவாய் அன்றில்
ஓங்கிரும் பெண்ணை அகமடல் அகவப்,
பாம்பு மணி உமிழப், பல்வயின் கோவலர்
ஆம்பலந் தீங்குழல் தெள்விளி பயிற்ற,
ஆம்பல் ஆய்இதழ் கூம்புவிட, வளமனைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக்கொளுவி
அந்தி அந்தணர் அயரக், கானவர்
விண்தோய் பணவைமிசை ஞெகிழி பொத்த,

வானம் மாமலை வாய்சூழ்பு கறுப்பக், கானம்
கல் என்று இரட்டப், புள்ளினம் ஒலிப்ப''
—குறிஞ்சி: 215-228.

புலவரின் புலமை நலத்தைக் காட்ட அழகிய இரு செய்யுள் ஓவியங்கள் ஈண்டு எடுத்துக் காட்டப்பெறும். ''பொன்னில் அழுத்திய நீலமணிபோல, சிறிய முதுகிடத்தே தாழ்ந்து கிடந்த, பின்னிவிடப்பட்ட கருங்கூந்தல்''—''பொன் எறி மணியின் சிறுபுறம் தாழ்ந்த எம் பின் இருங்கூந்தல்'' (வரி: 59-60). ''பகைவரின் போர்க்களத்தைப் பாழ்செய்யும், பகைவரால் அணுகுதற்கு இயலாப் பேராற்றல் வாய்ந்து, பகைவர்களைப் புறமுதுகு காட்டப் பண்ணும், பலவேற் படைகளையுடைய போர் மறவர்களைப் போல, மிக்க சினத்தால் செருக்குற்று, தம்மை நெருங்குந்தோறும் சினக்கும் இயல்புடைய, மூங்கில் முளை போலும் பற்களை உடைய, கூரிய பெரிய நகங்களைக் கொண்ட நாய்கள், கண் இமைக்காது எம்மை வளைத்துக் கொண்டு நெருக்கிவர''.

''முனைபாழ் படுக்கும் துன்னருந் துப்பின்
பகைபுறம் கண்ட பல்வெல் இளைஞரின்
உரவுச்சினம் செருக்கித், துனனுதொறும் வெகுளும்
முளைவாள் எயிற்ற வள்உகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர.''
—குறிஞ்சி: 128-132.

## மலைபடுகடாம்:

பத்துப் பாடல்களிலும் இனிய நயம் வாய்ந்தது மலைபடுகடாம். அதாவது, யானையின் மத்தகத்திலிருந்து கசிந்து வரும் மதநீர் போல் யானை போல் காட்சி தரும் மலையிலிருந்து எழுந்து வரும் பல்வேறு ஒலிகள். மலைக் காட்சி பற்றிய அதன் விளக்கம், பிறர் எவராலும் மிஞ்ச முடியாதது. பெருங்கௌசிகனார், நன்னன் புகழ் பாட, அதை இயற்றியுள்ளார்; ஆனால், நன்னனுக்கு உரிய

மலைவளக் காட்சியின் விளக்கம், அப்பாடலுக்கு அவர் செலவிட்ட வரிகளினும் நீண்டது. தொடக்க வரிகள், அம் மலை நாட்டு, ஒரு இசைக் கருவிகளின் தொகுப்பையே விளக்கிக் காட்டுகின்றன; "வளத்தைப் பெருக்கும் மழையைப் பெய்த இருண்ட வானத்தில், மேகம் இடித்து முழங்கும் ஓசை போன்று பல்வேறு பண்களும் தன்னிடையே எழுவதற்கு ஏற்ப வாரால் இறுக வலிக்கப்பட்ட மத்தளத் தோடு, சிறு பறையும், நன்குகரைய உருக்கித் தகடாகத் தட்டின கஞ்சதாளமும், ஒளிவிடும் கரிய மயிர்ப்பீலி கட்டிய கொம்பும், யானை நெட்டுயிர்த்தாற்போல பேரொலி எழுப்புதற்கேற்ப, கண்களின் இடையே துளை செய்யப்பட்ட நெடுவங்கியமும், இளி என்னும் இசையை எழுப்பும் குறுவடிவான சிறந்த தூம்பும், பாடும் பாட்டைச் சுருதி கெடாமல் சர்த்து இசைக்கும் இனிய குழலும், கண்களுக்கு நடுவே நின்று ஒலிக்கும் அரித்து எழுகின்ற ஓசையையுடைய கரடிகையும் தாளம் கெடாமல் ஒலிக்கும் வலிய வாயையுடைய சல்லியும், மாத்திரையை எண்ணி ஒலிக்கும் ஒருகண் மாக்கிணையும், எடுத்துக் கூறப்படாத வேறு இசைக்கருவி களும் இட்டுக் கட்டப்பட்டு, கார்காலத்து மழையால் பழுத்த பலாவின் காய் பல நெருங்க இருக்கும் கொத்தே போல், தொங்கவிடப்பட்டமை."

"திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்
விண்அதிர் இமிழ் இசை கடுப்பப் பண் அமைத்துத்
திண்வார் விசித்த முழவொடு, ஆகுளி,
நுண் உருக்குற்ற விளங்கு அடர்ப் பாண்டில்,
மின் இரும்பீலி அணித்தழைக் கோட்டொடு,
கண்ணிடை விடுத்த களிற்று உயிர்த் தூம்பின்,
இளிப்பயிர் இமிரும் குறும்பரந் தூம்பொடு,
விளிப்பது கவரும் தீங்குழல், துதைஇ
நடுவு நின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை,
கடி கவர்பு ஒலிக்கும் வல்வாய் எல்லரி,

நொடிதரு பாணிய பதலையும், பிறவும்
கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பை''.

- மலைபடு : 1-13

ஒரு பெண்ணின் மார்பு, ஓவியம் தீட்டி அழகு செய்யப் பெற்றது. ''வனைபுனை எழில் முலை'' (57) எனக் கூறப் படுவதால், இப்பாட்டிலிருந்து அக்காலத்தில் வண்ண ஓவியம் பொது மக்களிடையே பயில இருந்தது என்பது தெரிகிறது. அரசர்கள் நாள்தோறும் அரசவையில் அமர்ந்திருந்து தன்னைப் பாடிப் புகழும் புலவர் பாணர், கூத்தர் போல்வார்க்குத், தாம் வெற்றி கொண்ட பகையரசர்களின் அரசு முழுவதையும் கொடுத்தும் மனநிறைவு கொள்ளாமல், பெருமழை பெய்து ஓய்ந்த, பருவம் பொய்யாது பெய்யும் மேகம், மேலும் பெய்வது போல, மேலும் மேலும் பரிசில் பொருள்களை வாரி வாரி வழங்குவர். நல்லவர்களே கூடி யிருக்கும் அவ்வரசவையில் தாம் கற்றவற்றை விளங்கக் கூறி, பரிசில் பெறுவான் வந்தவர், தாம் கற்றவற்றை முழுமையாக மற்றவர்க்கும் விளங்கும் வகையில், சொல்லமாட்டாத நிலை ஏற்படுமாயின், அரசனைச் சுற்றியிருக்கும் சான்றோர்கள், அச்சான்றோரின் மாட்டாமையைப் பிறர் உணர்ந்து கொள்ளாவாறு காத்து, அவர் கூறக் கருதியனவற்றைச் சோர்வு ஏற்படாவாறு சொல்லிக் காட்டி, அவர்களைப் பெருமையுற நடத்தி விடை கொடுப்பர்.'' ஈண்டுக் குறிப்பிடப்பட்டிருக்கும் சான்றோர் பெரும்பாலும் சமஸ்கிருதப் பண்டிதர்கள் ஆவர்.

'புகழுநர்க்கு
அரசு முழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு
தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்கும் அவன் நாண் மகிழ் இருக்கையும்,
நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
வல்லாராயினும் புறம் மறைத்துச் சென்றோரைச்

சொல்லிக்காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கம்.''
—மலைபடு : 73-80.

மலைநாட்டு மரம் செடி, கொடிகள் பற்றிய புலவரின் விளக்கம் ஒரு சிறந்த இயற்கைப் பாடலுக்கான் பெருமைமிகு எடுத்துக்காட்டாம். ''அகன்ற பெரிய வானில் காட்சி அளிக்கும் கார்த்திகை மீன்போல் வெண்ணிற மலர்களை மலர்த்திக் காட்டும் மெல்லிய கொடியினை உடைய முசுண்டை, பெருமழை பெய்வதால் நீர் நிறைந்து கிடக்கும் பெருமட்கலங்கள்போல், நீரால் நிறைந்த சுனைகள் பலவற்றைக் கொண்ட குறுங்காட்டில் தோடுகள், நீல நிறம் உடையவாய்ச் செழித்து வளர்க எனவேண்டி விதைத்த நிலத்தில், மகுளி எனும் நோய் தாக்காமையால், இளங்காயாம் தன்மை இழந்து முற்றிய கரிய காய்கள், ஒரு பிடியில் ஏழு காய்களே அடங்குமளவு பெருத்தும், தன்னகத்தே நெய் நிறைந்திருக்கவும், வளர்ந்திருக்கும் பலவாகக் கிளைத்த எட்செடிகள்; விளையாட்டின் பொருட்டுத் தமக்குள்ளே பொய்யாகப் போர்புரியும் யானைக் கன்றுகளின், ஒன்றோ டொன்று பிணைந்து கிடக்கும் கைகளைப் போலத், தம்முள்ளே பிணைந்து கிடக்கும் அறுக்கும் பதமாக முற்றிக் கிடக்கும் பருத்த கதிர்களைக் கொண்ட தினை; தினையரி தாள்களில், தயிரைத் தெளித்தாற்போல வெண்பூக்களை உதிர்த்துவிட்டு, அரிவாள் போலும் வடிவினவாய்க் காய்களைக் காய்த்துக் கிடக்கும் அவரை; எருமைகள் படுத்துக் கிடப்பது போல் பெருங்கற்கள் செறிந்த காட்டு வழியை அடுத்து, பட்டி மன்றங்களில் தருக்கம் கூறுகின்றவன் கையில், இணைந்த விரல்கள் போல, இணைஇணையாக வெளிப்பட்டிருக்கும் கதிர்கள் முற்றி வளைந்து, அரிவாளால் அரிதல் உறும், பெரியபுனத்து வரகு; காற்று நன்கு ஊடறுத்துப் பாய்தலால், நன்கு பால் பிடித்து முற்றி ஒன்று பலவாய்க் கிளைத்து விளைந்த ஐவன நெல்லும் வெண்ணெல்லும்; காற்று ஆரவாரித்துப் பெருக வீசிய

நிலையிலும், வேல் ஏந்திய வீரர் பெரும்படை அழிந்து வீழ்ந்து போனது போல் ஒடிந்து போவதோ, அற்றுச் சாய்ந்து போவதோ ஆகாமல், வெட்டப்பட்டு ஆலைக்குச் சென்று பயன்படுமாறு நிற்கும் இனிய கரும்பு, மழையால் மாசு போக்கப்பட்ட பூக்கள் மலிந்த காட்டில், அவலிடிக்கும் பக்குவம் உடையவாய், அழகிய குலையிடத்தவாய மூங்கில் நெல்; உழாமலே விதைக்கப்பட்டாலும், களைக்கோட்டால் நன்கு கொத்தி விடப்பட்டமையால் பெருக விளைந்த வெண்சிறு கடுகு; வெண்ணெல் அரிந்து விடப்பட்ட வயல் களில், வயல் கருநிறம் கொண்டதாமோ, எனக் கருதுமாறு நீண்ட, நறுமணம் கொண்ட நெய்தல் மலர்ந்திருந்தன; செய்யாத பாவை போலும் வடிவினவாய் அழகுற முற்றி உறைப்பைக் கொண்டிருந்தது இஞ்சி. பிடி யானையின் முழந்தாள் போலும் குழிகள் தோறும் மாவாம் தன்மையைத் தன்னிடத்தே கொண்டிருந்தது, கவலை எனும் கிழங்குக் கொடி. கைத்தடியிலே கோத்தவேல், களிற்றின் முகத்தைக் குத்தி நின்றதுபோல், மடல் உதிர்ந்த பூவோடு கூடிய காய்க்குலை, மலைமுகடுகளைத் தீண்டி நிற்க, வளர்ந்திருந்த வாழைகளைக் கொண்ட சோலை, பெரும் பெரும் குலை களாகக் காய்த்துத் தாமே உதிர்ந்து போகுமளவு முற்றிப் பயன்படும் தன்மை உடையவாயின. பெருமூங்கில் நெல் பரந்த பாறை நிலங்களில் உள்ள பயன்தருமரங்கள், பருவம் இல்லாப் பருவத்துப் பழுத்துப் பயன் தரும் தன்மைய வாதலின், காற்றடித்து உதிர்ந்து கிடந்தன நாவற்கனிகள்; உண்டார்வாயில் நீர் ஊறப்பண்ணும் உயவைக் கொடி, நீர் வேட்கை போக்கும் தண்ணீருக்கு மாறாகப் படர்ந்திருந்தன சாறு மிக முற்றிக் கிடந்தன கூவைக்கிழங்கு; தம்மை உண்பார்க்கு வேறு ஒன்றின்பால் செல்லும் வேட்கையைத் தடுக்கவல்ல இனிய சாறுடையவாய்க் கனிந்திருந்தது மா. புறத்தோல் புண்போல் வெடித்து, அகத்துள்ள கொட்டைகள் சிந்திப் போகுமாறு பழுத்துக்கிடந்தது பருத்த அடியை யுடைய ஆசினிப்பலா. விரல் தீண்ட ஒலி எழும் சிறுபறை ஒலித்தது போல, பேராந்தைப் பேடும் சேவலும் மாறி மாறிக்

குரல் எழுப்பும் அம்மலையில், மழைவளத்தைக் குறைவறப் பெற்று, வழிப்போகும் கூத்தருடைய மத்தளங்கள், அவர் தோளிலிருந்து தொங்குவது போல, பழுத்துத் தொங்கும் கனிகளைக் கொண்டிருந்தது பலா.

> "அகல் இரு விசும்பின் ஆஅல் போல
> வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை;
> நீலத்தன்ன விதைப்புனம் மருங்கின்
> மகுளிபாயாது மலிதுளி தழாலின்
> அகளத்தன்ன நிறை சுனைப் புறவில்
> கௌவை போகிய கருங்காய் பிடிஏழ்
> நெய்கொள ஒழுகின பல்கவர் ஈர்எள்;
> பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக்
> கொய்பதம் முற்றின குவவுக்குரல் ஏனல்;
> விளைதயிர்ப் பிதிர்வின் வீஉக்கு இருவிதொறும்
> குளிர்புரை கொடுங்காய் கொண்டன அவரை;
> மேதியன்ன கல்பிறங்கு இயவில்
> வாதி கையன்ன கவைக்கதிர் இறைஞ்சி
> இரும்பு கவர்வுற்றன பெரும்புன வரகே;
> பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு
> வாலிதின் விளைந்தன ஐவனம் வெண்ணெல்;
> வேல் ஈண்டு தொழுதி இரிவுற்றென்னக்
> காலுறு துவைப்பின் கவிழ்க்கனைத்து இறைஞ்சிக்
> குறையறை வாரா நிவப்பின் அறையுற்று
> ஆலைக்கு அலமரும் தீங்கழைக் கரும்பே;
> புயல்புனிறு போகிய பூமலி புறவின்
> அவல்பதம் கொண்டன அம்பொதித் தோரை;
> தொய்யாது வித்திய துளர்படு துடவை
> ஐயவி அமன்ற; வெண்கால் செறுவின்

மை என விரிந்தன நீள்நறு நெய்தல்;
செய்யாப் பாவை வளர்ந்து கவின்முற்றிக்
காயம் கொண்டன இஞ்சி; மா விருந்து
வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும்
விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை;
காழ்மண்டு எஃகம் களிற்றுமுகம் பாய்ந்தென
ஊழ்மலர் ஒழிமுகை உயர்முகம் தோயத்
துறுகல் சுற்றிய சோலை வாழை;
இறுகு குலை முறுகப் பழுத்த பயம்புக்கு
ஊழுற்று அலமரும் முந்தூழ்; அகலறைக்
காலம் அன்றியும் மரம்பயன் கொடுத்தலின்
காலின் உதிர்ந்தன கருங்கனி நாவல்;
மாறுகொள ஒழுகின ஊறுநீர் உயவை;
நூறொடு குழீயின கூவை; சேறுசிறந்து
உண்ணுநர்த் தடுத்தன தேமா; புண்அரிந்து
அரலை உக்கன நெடுந்தாள் ஆசினி;
விரல்ஊன்று படுகண் ஆகுளி கடுப்பக்
குடிஞை இரட்டும் நெடுமலை அடுக்கத்துக்
கீழும் மேலும் கார்வாய்த்து எதிரிச்
சுரஞ்செல் கோடியர் முழவின் தூங்கி
முரஞ்சு கொண்டு இறைஞ்சின விலங்குசினைபலவே"
—மலைபடு; 100 - 144.

இயற்கைப் பொருட்களின் இயல்பை உள்ளவாறே விளக்கிக் கூறும், அழகிய தனி வரிகளை, இப்பாடல் கொண்டுளது! ஆனால் அத்தகைய வரிகள், எடுத்துக் காட்டலாகாவாறு மல்கி உள்ளன. நிமிர்ந்து நிற்கும் நெடியமலையின், தெய்வமும் விரும்பும் பக்கமலையின்கண், தேர்ச்சக்கரம் போல் தொங்கும் தேன்கூடுகள்: "நேர்கொள் நெடுவரை, நேமியில் தொடுத்த சூர்புகல் அடுக்கத்துப்பிரசம்"

(238 - 239) ''பச்சைப் பசேல் என்ற அகன்ற காட்டில், மிக்க வலியும் கடுஞ்சினமும் வாய்ந்த களிறுகளின் வலியை விழுங்கிக் கெடுக்கவல்ல, பெருமரக்கிளை போலும் மலைப்பாம்பு'' ''அகன்பை அங்கண், மைந்துமலி சினத்த களிறு மதன் அழிக்கும் துஞ்சு மரம் கடுக்கும் மாசுணம்'' (256-62) ''கிளைகள் பலகிளைத்து முற்றிய பரந்த ஆலமரத்தில், இசைக்கருவிகள் பலவும் ஒன்று கூடி இசை எழுப்பினாற்போல் குரல் எழுப்பும் பறவைக் கூட்டம்.''—கோடுபல முரஞ்சிய கோளி ஆலத்துக் கூடுஇயத்தன்ன குரல் புணர்புள்'' (268-692) ''வழக்கமாக நீராடும் நிலைத்துறையை விடுத்து ஆழத்தில் சிக்கி நீருள்ளே மூழ்குவாரைக் காக்க, நீருள் விரைந்து பாய் வாரைப் போல''—''நிலைத்துறை வழீஇய மதன் அழி மாக்கள், புனல் படுபூசலின் விரைந்து வல்எய்தி.'' (280-281) புலி பாய்ந்தமையால் தம் கணவர் மார்பில் உண்டான புண்ணை ஆற்றும் காவல் என்று கருதி, அறல் போலும் கூந்தலையுடைய கொடிச்சியர் பாடும் பாடல்''—''கொடுவரிப் பாய்ந்தெனக் கொழுநர் மார்பின் நெடுவசி விழுப்புண் தணிமார் காப்பென, அறல்வாழ் கூந்தல் கொடிச்சியர் பாடல்.'' (302-304) மலையேற வல்லதான முசுக்கலையும் ஏறமாட்டாது கைவிடப்பட்ட, காட்சிக்கு இனிய நெடிய மலை உச்சியில், நிலையாகச் சார்த்திய கண்ணேணி வழியே ஏறிச் சென்று, பெரும்பயன் பெறத் தேனீக்கள் திரட்டிவைத் திருக்கும் தேனை அழித்துக் கொண்ட கொள்ளை.''—''கலை கையற்ற காண்புஇன் நெடுவரை நிலைபெய்து இட்ட மால்பு நெறியாகப் பெரும் பயன் தொகுத்த தேம்கொள் கொள்ளை''. (315 - 317) ''கரிய நிறம் வாய்ந்த பெரிய மலை உச்சியில் பஞ்சு போல் படர்ந்து''—''மைபடு மாமலைப் பனுவலின் பொங்கி'' (361) நன்னன், சேயாறு பாயும் பள்ளத்தாக்கு நாட்டை ஆண்டான்.

**சிறுபாணாற்றுப்படை :**

மலைபடுகடாம், வறுமையுற்ற புலவர்களைப் பரிசில்பெற நன்னன்பால் போகுமாறு கூறுவது போல், சிறுபாணாற்றுப்

படை, அவர்களை, நல்லியர் கோடன் அவைக்குப் போகுமாறு வழிகாட்டுகிறது. இப்பாடல்கள், குறுநிலத்திலைவர்கள் புகழ்பாடவே பாடப் பெற்றுள்ள நிகழ்ச்சி ஒன்றே. சேர, சோழ, பாண்டியப் பேரரசர்கள் சிறப்பு இழந்து விட்டனர் என்பதற்கான அறிகுறியாகும். இந்த முடிவு, இப்பாடலாசிரியர்,— கொடைவளத்தில், நல்லியக்கோடன் மூவேந்தர்களிலும், ஏழு கொடை வள்ளல்களிலும் சிறந்தவன் எனப்புகழ்வதாலும், போகிறபோக்கில், அம்மூவேந்தர்கள், மற்றும் ஏழு சிற்றரசர்களின் சிறப்புப் பற்றிய குறிப்புகளைக் கூறியிருப்பதாலும் உறுதி ஆகிறது. "கொழுத்த மீனெல்லாம் துண்டுற்றுப் போகுமாறு நடந்துசென்று, வளமான இதழ்களைக்கொண்ட செங்கழுநீர்ப்பூவை மேய்ந்த பெரியவாயை உடைய எருமை, மிளகுக்கொடி படர்ந்த பலாமரத்தின் நிழலில், மஞ்சளின் மெல்லிய இலைகள் மேனியைத் தடவா நிற்க, முற்றாஇளந்தேன் மணக்குமாறு அசைபோட்டவாறே, காட்டுமல்லிகையாகியபடுக்கையில் படுத்து உறங்கும் மேற்கு திசைக் கண்ணதாகிய நாடு". அதாவது சேரர்க்கு உரிய நாடு.

> "கொழுமீன் குறைய ஒதுங்கி, வள்ளிதழ்க்
> கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை
> பைங்கறி நிவந்த பலவின் நீழல்
> மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறம் தைவர
> விளையா இளங்கள் நாற, மெல்குபு பெயராக்
> குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்
> குடபுலம்."
>
> —சிறுபாண் : 41 - 47.

மலர்கள் தேன் கொட்டும் நுணாமரத்தின் வெட்டிக் கொண்ட மரக்கட்டையைக் கூரிய உளியால் குடைந்து, கைத் திறத்தால் கடைந்து செய்த மாலையினை உடையதும், நெட்டியால் செய்த தலைமாலையைக் காதின் கீழே சூட்டப் பட்டதும், வலிய எருதுகளைக்கொண்ட உப்புவணிகரின் வண்டிகளோடு வந்ததும், அவர்கள் வளர்ப்பதால், அவர்களின்

பிள்ளைகளே போன்றதும் ஆகியமந்தி, மகளிருடைய பற்கள் போலும், முத்துக்களை வாளின், வாய்போலும் வாயைஉடைய கிளிஞ்சிலின் வயிற்றகத்தே இட்டு, மெலிந்த இடையினையும், தோளையும் முதுகையும் மறைக்குமளவு நீண்டு, ஐந்து பகுதியவாகப் பின்னிவிடப்பட்ட கூந்தலையும் உடைய உப்பு வணிகரின் மனைவியர் பெற்ற, நல்ல அணிகளை அணிந்த பிள்ளைகளோடு கிலுகிலுப்பை ஆடும், ஓயாது அலையும் கடலை எல்லையாகக் கொண்ட கொற்கை மன்னனுக்குஉரிய தென்னாடு.'' அதாவது பாண்டியர்க்குஉரிய நாடு.

''நறவுவாய் உறைக்கும் நாகுமுதிர் நுணவத்து
அறைவாய்க் குறுந்துணி அயில்உளி பொருத
கைபுனை செப்பம் கடைந்த மார்பின்
செய்பூங்கண்ணி செவிமுதல் திருத்தி
நோன்பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த
மகாஅர் அன்னமந்தி, மடவோர்
நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்
வாள்வாய் எருந்தின் வயிற்றகத்துஅடக்கி,
தோள்புறம் மறைக்கும் நல்கூர் நுசுப்பின்
உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற
கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்
தத்துநீர் வரைப்பின் கொற்கைக் கோமான்
தென்புலம்.''

—சிறுபாண் : 51 - 63.

நல்ல நீர் நிறைந்த பொய்கையின் கரையில் வளர்ந்து நிற்கும் கடம்பமரத்தின், மாலைதொடுத்தாற்போல் மலர்ந் திருக்கும் மலர்கள், ஓவியத்தில் தீட்டினாற்போலும் அழகு வாய்ந்த நீர் உண்ணும் துறைக்குப் பக்கத்தில் இந்திரகோபம் போலும் சிவந்த மகரந்தத்தை உதிர்ப்பதால், இளமுலை போலும் வடிவுடைய பெரிய அரும்பு, மகளிர் முகம் மலர்ந் தாற்போல மலர்ந்த அழகிய தாமரையின், இயல்பாகவே

சிவந்திருக்கும் அழகிய கையில் சாதிலிங்கத்தைத் தேய்த்தாற் போல, இயல்பாகவே சிவந்திருக்கும் தம் மீது, கடப்பமலரின் செந்தாதும் படியவே, மேலும் சிவப்புற்ற இதழ்களால் சூழப் பெற்ற, செம்பொன்னால் செய்தது போலும் அத்தாமரைக் கொட்டையின் மீது, தன் உயிர்க்குக் காவலாகிய இனிய பெடையைத் தழுவியவாறே, சிறகுகளை அசைத்து அழகிய தும்பி சீகாமரம் என்னும் பண்ணின் இசை போல ஒலி எழுப்பும், மருதவளம், சூழ்ந்த, தாம் பிறந்த மண்ணை விட்டுப் பிரிந்தறியாக் குடிமக்களைக் கொண்ட குணபுலம்.'' அதாவது சேரநாடு.

''நறுநீர்ப் பொய்கை அடைகரை நிவந்த
துறுநீர்க் கடம்பின் துணையார் கோதை
ஓவந் தன்ன உண்டுறை மருங்கிற்
கோவத்தன்ன கொங்கு சேர்பு உறைத்தலின்,
வருமுலை அன்ன வண்முகை உடைந்து
திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை
ஆசில் அங்கை அரக்குத் தோய்ந் தன்ன
சேயிதழ் பொதிந்த செம்பொன் கொட்டை
ஏம இன்துணை தழீஇ இறகு உளர்ந்து
காமர் தும்பி காமரம் செப்பும்
தண்பணை தழீஇய தளரா இருக்கைக்
குணபுலம்;'' —சிறுபாண்: 68 - 79.

ஏனைய வருணனைகள், ஈண்டு எடுத்துக்காட்ட வேண்டா அளவு நுண்ணியவாம். இக்குறு நிலத்தலைவனுக்கு உரிய நகரங்களில், வேலூரும் ஒன்றும் ஆதலின், அவன் ஆட்சி புரிந்த நிலப்பரப்பு, இன்றைய வடார்க்காடு மாவட்ட அளவினதாதல் கூடும்.

**திருமுருகாற்றுப்படை :**

இத்தொகை நூலில், புலவர்களுக்கான மூன்று ஆற்றுப் படைகள் போல, திருமுருகாற்றுப் படை, முருகன் கோயில்

கொண்டிருக்கும் இடங்களுக்கான வழி காட்டியாம். இப்பாட்டில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், மலைகள், சோலைகள் ஆகிய இடங்களில், முருகன் வழிபாட்டு முறையினை விளக்கியுள்ளார் நக்கீரர். தமிழ்முருகன், ஆறுமுகம் கொண்ட ஆரியக் கார்த்திக்கேயனாகவும், விண்மீன்களாம் கார்த்திகைப் பெண்கள் அறுவரின் வளர்ப்பு மகனாகவும் மாறியகாலமாம், ஆரியக்கருத்துக்கள், தமிழர்களால் முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட்ட காலத்தின் இறுதிக் கட்டத்தைச் சேர்ந்தது. இப்பாட்டு முருகனுக்கான தனித்தமிழ் வழிபாட்டு முறைகள் மறைந்து போய் சண்முகனுக்கான ஆரிய வழிபாட்டு முறைகளோடு ஒன்றிவிடுவதை இதில் கண்டு கொள்ளலாம். ''எண்ணெய் காணாது காய்ந்த மயிரினையும், வரிசை இழந்து பிறழ்ந்த பல்லையும், பெரிய வாயினையும், சினத்தால் சுழலும் பார்வையினையுடைய கண்ணையும், கொடிய பார்வையினையும், விழி பிதுங்கிய கூகையோடு, கொடிய விஷம் உள்ள பாம்பும் கிடந்து உறங்குவதால், முலையளவும் தொங்கிய காதினையும், பெரிய வயிற்றையும், கண்டார் அஞ்சத்தக்க நடையினையும் உடைய, கண்டாரை நடுங்கப் பண்ணும் பேய்மகள், குருதிபடிந்த கூரிய நகத்தினைக் கொண்ட விரலால் கண்கள் தோண்டி உண்ணப்பட்டு விட்டமையால் முடைநாற்றம் நாறும் தலையைத், தொடிவிளங்கும் கைகளில் ஏந்தியவாறே பகைவராம் அவுணர்க்கு அச்சத்தைத் தரவல்ல போர்க்களத்தைப்பாடி, தோளை அசைத்து நிணம்தின்னும் வாயுடையளாய்த் துணங்கை கூத்தாடா நிற்பள்.''

> 'உலறிய கதுப்பின், பிறழ்பல், பேழ்வாய்ச்,
> சுழல்விழிப் பசுங்கண், சூர்த்த நோக்கின்
> கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
> பெருமுலை அலைக்கும் காதின், பிணர்மோட்டு;
> உருகெழு செலவின், அஞ்சுவரு பேய்மகள்,
> குருதி ஆடிய கூர் உகிர்க் கொடுவிரல்

கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி, வெருவர
வென்றுஅடு விறற்களம் பாடித், தோள்பெயரா
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க.''

—முருகு : 47 - 56

பாம்புகள் இறந்து போகுமாறு அடிக்கும் பலவரிகளைக் கொண்ட வளைந்த சிறகையுடைய கருடனைக் கொண்ட கொடியோனாகிய திருமால், வெண்ணிற ஆனேற்றை வலந்தரு வெற்றிக் கொடியாக உயர்த்திய, பலராலும் புகழப்படும் திண்ணிய தோள்களையுடைய, உமையம்மை விரும்பி இடங்கொண்டிருக்கும் இமையாக்கண்கள் மூன்று உடைய, முப்புரத்தை எரித்து அழித்த ஆற்றல் மிகு செல்வனாம் சிவன், ஆயிரம் கண்களையும் நூறு எனச் சொல்லப்படுவது போலும் பல வேள்விகளைச் செய்தமையால் பெற்ற வீறுடைய பகைவர்களைக் கொன்று அழிக்கும் வெற்றியையும் உடையவனாய், நான்கு கொம்புகளையும், அழகிய நடையினையும், நிலம் அளவும் நீண்டு வளையும் கையினையும், நூலோரால் உயர்த்திக் கூறத்தக்க நல்ல இலக்கணத்தையும் உடைய யானைமீது அமர்ந்துவரும் திருவுடையோனாகிய இந்திரன், பிரமன், திருமால், உருத்திரன், ஆகிய இத்தெய்வங்கள், வணங்கத் தக்கவனாகவும் முருகன் விளங்கினான்.'' அவர்கள், அவனைத் திருவாவினன் குடியில் வந்து வழிபட்டனர். இறுதியில் விளக்கிக் கூறப்பட்ட கடவுள், உரையாசிரியரால், முதலில் கூறப்பட்ட கடவுளாகவே விளக்கப்பட்டுளது. இறுதி வரியில் கூறப்பட்டிருக்கும் நான்கு கடவுள்கள், இந்திரன், யமன், வருணன் மற்றும் சோமனாகக் கூறப்பட்டுளது. இவ்விளக்கம் வலிந்து கொள்ளப்பட்ட ஒன்று; இது தவிர்த்து, வேறு கூற விரும்பவில்லை.

''பாம்பு படப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்,
புள் அணி நீள்கொடிச் செல்வனும், வெள்ஏறு

வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்.
நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து, நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண்டு ஏந்திய மருப்பின், எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்
நாற்பெரும் தெய்வத்து.'' — முருகு : 150-159.

திருச்சீரலைவாய் குறித்த பாடற்பகுதி, கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னர்த் தமிழ் இலக்கியங்களுக்குத் தெரியாத வகையினதான, முருகனின் ஆறுதிருமுகம், பன்னிரண்டு கைகள் ஆற்றும் பணிகள் குறித்த பெரிய விளக்கத்தைத் தருகிறது. திருவேரகத்து உறை முருகன் புகழ் பாடும் நான்காம் பகுதி, பிராமணர் வழிபாட்டு முறைகளை விளக்குகிறது.

''கற்றல் கற்பித்தல், வேள்வி செய்தல், வேள்வி செய்வித்தல், ஈதல், ஏற்றல் ஆகிய இந்த ஆறு இயல்புகளில் வழுவாமல், தாய் தந்தை ஆகிய இருவர் குலங்களையும் நன்று நன்று என உலகத்தவர் பாராட்டுதற்குக் காரணமாய பழைய குடியில் பிறந்த, இளமை இன்பம் துய்க்க வேண்டிய நல்ல ஆண்டுகள் நாற்பத்தெட்டையும், மெய்ந்நூல் காட்டும் வழி முறையில் நின்று காத்த, எப்போதும் அறமே கூறும் கோட்பாட்டினையும், ஆசுவனீயம், தக்கிணாக்கினி, காருக பத்தியம் என்ற முத்தீயினை நம்பி அதனால் பெறலாகும் பேற்றினையும் உடைய, முந்நூல் அணிவதற்கு முன்பு ஒரு பிறப்பும், பின்னர் ஒரு பிறப்பும் என்ற இரு பிறப்பாளனும் அந்தணர், வழிபடுங் காலமறிந்து வாழ்த்துக் கூற, ஒன்பது நூல்களைக் கொண்ட, ஒருபுரி மூன்று ஆக வரும் நுண்ணிய பூணூலை அணிந்த, நீராடுங்கால், தோய்க்கப்பட்ட ஆடை உடுத்திய அளவிலேயே புலர்ந்து போமாறு புலராதே உடுத்து,

தலைமேல் கூப்பிய கையினராய்த் துதித்து, ஆறு எழுத்துக்களால் ஆன, கேட்டற்கு அரிய அருமறையாம் திருமந்திரத்தை, நாவசைக்கும் அளவானே ஓதி, மணம்மிக்க மலர்களைத் தூவி வழிபட, அவர் செயலுக்குப் பெரிதும் மகிழ்ந்து திருவேரகம் என்னும் ஊரில் எழுந்தருளி இருக்கவும் செய்வன்''

''இரு மூன்று எய்திய இயல்பினின் வழாஅது,
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான்கு இரட்டி இளமை நல்லியாண்டு
ஆறினில் கழிப்பிய, அறம் நவில் கொள்கை,
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து,
இருபிறப் பாளர் பொழுது அறிந்து நுவல,
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலரஉடீஇ,
உச்சிக் கூப்பிய கையினர், தற்புகழ்ந்து
ஆறு எழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி,
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிது உவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்''

—முருகு : 177-189.

இவ்விடத்தில் முருகன் வழிபாடு, முழுக்க முழுக்க ஆரிய முறைப்படியே நடைபெற்றுளது. ஆனால், மலைநாடுகளில், குன்றுதோறாடல் எனும் பகுதியில் கூறியிருப்பது போல், முழுக்க முழுக்க தமிழ் முறைப்படியே நடைபெற்றுளது. ''வேலன், பச்சிலைக் கொடியால், நல்ல மணம் மிக்க மிக்க சாதிக்காயை இடையில் இட்டு, அழகிய தக்கோலக் காயையும் கலந்து, காட்டு மல்லிகையோடு வெண்டாளியையும் கலந்து கட்டிய தலைமாலை உடையனாய், நறுமணம் மிக்க சந்தனம் அணிந்த அழகிய மார்பினை உடைய, கொல்லும் தொழிலில் வல்ல, வில்லால் காட்டு உயிர்களைக் கொல்லும்

குறவர், நீண்ட மூங்கிலில் இட்டுப் புளிப்பேறப் பண்ணிய கள் தெளிவை, மலையிடத்துச் சிற்றூரில் உள்ள தம் சுற்றத்தினரை எல்லாம் அழைத்து அவரோடு இருந்து உண்டு மகிழ்ந்து, தொண்டகம் எனும் சிறுபறையின் ஒலிக்கு ஏற்பக் குரவைக் கூத்து ஆடாநிற்க, மலரும் பருவத்துப் பேரரும்பைப் பறித்து விரலால் அலைத்து மலர்த்தினமையால், தனக்கு உரியதல்லாத வேறுபட்ட மணம் நாறும், ஆழ்ந்த சுனையில் பூத்த மலர்களால் ஆன, வண்டுகள் வந்து மொய்க்குமளவு தேன் நிறைந்த தலைமாலையினையும், தொடுக்கப்பட்ட மாலையினையும், பின்னி விடப்பட்ட கூந்தலையும் உடையராய் இலையோடு கூடிய கஞ்சங்குல்லை, நறுமலர்க் கொத்துக்களையும், சிவந்த அடியினைக் கொண்ட மராமரத்து வெண்மலர்க் கொத்துக்களையும் இடைஇடையே இட்டு, வண்டுகள் வந்து தேன் உண்ணும்படி தொடுத்த, குளிர்ந்த, அழகிய தழை ஆடையை இடையில் உடுத்து, மயில் போலும் சாயல் உடைய இளைய மகளிரோடு, சிவந்த திருமேனியும், ஆடையும், உடையனாய், அடிசிவந்த அசோக மரத்தின் இளம் தளிர் அணிந்த காதும், அரையில் கச்சும், காலில் வீரக்கழலும், தலையில் வெட்சியாலான மாலையும் உடையனாய், குழல், கொம்பு, வேறுபல சிறிய இசைக்கருவிகளை இயக்கவல்லனாய் ஆட்டுக்கிடாய், மயில்களை ஊர்தியாகவும், கோழியைக் கொடியாகவும் கொண்டவனாய், நெடிதுயர்ந்த திருமேனி உடையவனாய், தொடி அணிந்த தோளினனாய், நரம்பிசைக் கருவிகள் பல ஒன்று கூடி இசைத்தால்போல், இன்னிசை எழுப்பவல்ள மகளிரோடும், இடையில் உடுத்து, நிலத்தளவும் தொங்கும் ஆடையுடையனாய், முழவு போல் பருத்த தன் கைகளால், மெல்லிய தோளையுடைய மான்பிணைபோலும் மகளிரைத் தாங்கித் தழுவிக் கொண்டு, அவர்களின் ஆட்டத்திற்கு ஏற்ப இருகை கொடுத்து மலைகள்தோறும் சென்று விளையாடுதல் அவனின் தலையாய பண்பு''

> பைங்கொடி நறைக்காய் இடையிடுபு, வேலன்
> அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு

வெண்கூதாளம் தொடுத்த கண்ணியன் ;
நறுஞ்சாந்தணிந்த கேழ்கிளர் மார்பின்
கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர,
விரல் உலர்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கான்
குண்டு சுனைபூத்த வண்டுபடு கண்ணி,
இணைத்த கோதை, அணைத்த கூந்தல்
முடித்தகுல்லை, இலையுடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வால்இணர் இடைஇடுபு,
சுருப்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன், சிவந்த ஆடையன், செவ்வரைச்
செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்,
கச்சினன், கழலினன், செச்சைக் கண்ணியன்,
குழலன், கோட்டன், குறும்பல் இயத்தன்,
தகரன், மஞ்ஞையன், புகரில் சேவல் அம்
கொடியன், நெடியன், தொடிஅணி தோளன்,
நரம்பார்த்தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண்சாயல்,
மருங்கில்கட்டிய நிலன்ஏர்பு துகிலினன்,
முழவுஉறழ் தடக்கையின் இயலஏந்தி
மென்தோள் பல்பிணை தழீஇத், தலைத்தந்து
குன்று தோறாடலும் நின்றதன் பண்பே,''

—முருகு : 190 - 217.

பழமுதிர்சோலை எனப்படும் இறுதிப்பகுதி, தமிழர் வழிபாட்டு நெறியும், ஆரியவழிபாட்டு நெறியும் இரண்டறக் கலந்து போவதை நாம் காணக்கூடிய நிலையில், முருகனின், பழைய வழிபாட்டுமுறை, அவனைப் பற்றிப் புதிதாகக் கூறப்படும் புராணக் கதையோடு கலந்து விடுவதை உணர்த்துகிறது. ''சிறிய தினை அரிசியை மலர்களோடு கலந்து வைத்து,

ஆட்டை அறுத்து கோழிக் கொடியை, அவன் அக்கொடியில் இருப்பதாகக் கருதி நட்டுவைத்து, ஊர் தோறும் எடுத்தவிழா''

'சிறுதினை மலரொடு விரைஇ, மறிஅறுத்து,
வாரணக்கொடியொடு வயிற்படநிறீஇ
ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவு.''

—முருகு: 218 - 220

நெய்யோடு வெண்சிறுகடுகையும் அப்பி, வழிபட மொழியும் மந்திரத்தைப் பிறர் கேளாவாறு மெல்ல உரைத்து, வழிபட்டு, அழகிய பெரிய மலர்களைத் தூவி, நிறத்தாலும், அளவாலும் வேறுபடும் இரண்டு ஆடைகளை உடுத்து, சிவந்த நூலைக், கையில் காப்பாகக் கட்டி, வெள்ளிய பொரியைச் சிதறி, மிக்க வலிபொருந்திய பெரிய கால்களையுடைய கொழுத்த ஆட்டுக் கிடாயின் குருதி கலந்து பிசைந்த வெள்ளை அரிசியைச், சிறுசிறு பலியாகப் பலபிரப்பங் கூடைகளில் வரிசையாக வைத்து, சிறிய பசிய மஞ்சளோடு, சந்தனம் முதலாம் பல நறுமணப் பொருட்களைத் தெளித்து, பெரியகுளிர்ந்த செவ்வலரி மாலையினையும், வேறுபல மாலைகளையும், ஒரே அளவாக வெட்டித் தொங்கவிட்டு, அடர்ந்த மலைப்பக்கத்தில் உள்ள ஊரெல்லாம், பசியும், பிணியும், பகையும் நீங்கி வாழ்க என வாழ்த்தி, நல்ல மணம் நாறும் புகைகளை எழுப்பி, குறிஞ்சிப் பண்பாடி இமிழ் எனும் ஓசைஎழ உருண்டோடிவரும் அருவிகளோடு, இனிய இசை பலவும் ஒலிக்க, செந்நிறம் வாய்ந்த பல்வேறு மலர்களைத் தூவிக் காண்பவர்க்கு அச்சம்வரக் குருதியொடு கலந்த அரிசியைப் பரப்பி வைத்து''

'நெய்யொடு ஐயவி அப்பி, ஐது உரைத்துக்,
குடந்தம்பட்டுக், கொழுமலர் சிதறி,
முரண்கொள் உருவின் இரண்டு உடன் உடீஇச்
செந்நூல் யாத்து, வெண்பொரி சிதறி,

மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து, பல்பிரப்பு இரீஇச்,
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீரம் நறுந்தண் மாலை
துணையுற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி,
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழ்இசை அருவியொடு இன்னியம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்திணை பரப்பி.''

—முருகு : 228 - 242.

இதைத் தொடர்ந்து, ஆரியப் புராணக்கதைகளிலிருந்து மேற்கொண்ட குமரன் பிறப்புப் பற்றிய நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. இறுதியாக, ''பழங்களால் நிறைந்த சோலைகள் மலிந்த மலைநாட்டு இறைவா'', ''பழம்முதிர் சோலை மலைகிழவோனே'' (முருகு : 317) எனும், தொடரோடு முடிகிறது.

இதிலிருந்து முன்னூறு ஆண்டு காலம் வரை, தமிழ் இலக்கியத்திலிருந்து, முருகன் அறவே கைவிடப்பட்டுள்ளான்; சிவனும், விஷ்ணுவும், மக்களின் பிரித்து அறியமாட்டாக் கவனத்திற்கு உரியராகித் தமிழ்ப் புலவர்களின் குறிப்பிட்ட வழிபாட்டுக்கு உரியராகி விட்டனர்.

## அதிகாரம் : XXVIII

# கலித்தொகை நூற்றிஐம்பது

**கலித்தொகை :**

இத்தொகை நூல், பழைய தமிழ் இலக்கிய மரபில் வந்த கடைசிகாலப் பாடல்களைக் கொண்டதாம். இத்தொகை நூலில் தொகுக்கப் பெற்றிருக்கும் பாடல்கள் அனைத்தும், தமிழ் நாட்டுக்கோயில்களில், ஏதேனும் ஒன்றில் கோயில் கொண்டிருக்கும் சிவன் அல்லது விஷ்ணுவின்பால் கொண்ட பக்தியால், அகத்தூண்டுதல் பெற்றுப் பாடப்பெற்ற அக்காரணத்தால், சமஸ்கிருதத்திலிருந்து பெற்ற கடனால் முழுக்க ஆழ்ந்து போன சொற்களால் ஆன, புதுவகைப் பாடல்களால், பழைய அகத்துறைப் பாடல்கள் துரத்தப் பட்டு, வழக்கற்றுப் போன கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாம். பிற்பட்டகாலத்தில் பாடப்பெற்ற, கோவை என அழைக்கப்படும் ஒரு சில அகத்துறைப் பாடல்கள், அகத்துறைப் பாடல்கள் என்ற தகுதிஅளவில், தமிழ் இலக்கியமரபினையும், தொல்காப்பியம் மற்றும் பிற்கால இலக்கண நூல்களின் இலக்கண மரபுகளையும் பெயரளவில் பின்பற்றுகின்றன என்றாலும், தம்பாடற்பொருளாக, ஒருவனுக்கும் ஒருத்திக்கும் இடையிலாம் மக்கள் காதலைக் கொள்ளாமல், ஒரு பக்தன் காதலியாக, அப்பக்தன் அன்பு செலுத்தும் இறைவன் காதலனாக வரும் தெய்வக்காதலையே கொண்டுளது. ஒருவன் ஒருத்திக்கும் இடையிலான மக்கள் காதலைப்பாடும் அகத்துறைப் பாடல்கள், அறவே அழிந்து போய்விடவில்லை என்றாலும், அவை, பண்டைய இயற்கை யோடு இயைந்த உண்மைப் பாடல்களோடு முற்றிலும் மாறு பட்டு, வலிந்து பாடப்பெற்ற காதல் பாடல்களாக நிலை தாழ்ந்து போய்விட்டன.

**பண்டை இலக்கிய நயம் எப்போதோ அழிந்து விட்டது!**

இத்தொகை நூலில் தொகுக்கப்பெற்றிருக்கும் 150 பாடல்களும் பாடப்பெற்றிருக்கும் கலி, ஒருவகைப் பாவினத்தைச் சேர்ந்தது. ஐங்குறு நூற்றில் உள்ளது போல், ஒவ்வொரு திணையும் வேறு வேறு ஆசிரியரால் பாடப்பெற்றுளது. இப்பாடல்களும், தொல்காப்பியம் கூறும் இலக்கண விதிகளை விளக்கவே பாடப்பெற்றுள்ளன. ஆகவே, இவற்றிற்குக் கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முந்திய ஒரு காலத்தைத் தருவது இயலாது. இப்பாடல்கள் பாடப் பெறுவதற்கு முன்பே, ஆரியர் கடவுள்கள், தமிழ்நாட்டில் நன்கு இடங்கொண்டு விட்டன என்ற உண்மையாலும், இது, நன்கு உறுதி செய்யப்படும். ஆனால், கி. பி. ஆறாம் நூற்றாண்டு வரையும் இறந்து போகாமல் வழக்கில் இருந்து வந்த, நளிமிகப் பழைய தமிழ்ப் பழக்க வழக்கங்களின், எதிரொலிகளும், இப்பாக்களில், இடம் பெற்றுள்ளன. மேலும் பழந்தமிழ்ப் பாடல்கள், ஈரேழ் வரிகளைக்கொண்ட இனிய சிறுபாடலாம், ஆங்கிலமொழி 'சானெட்' (Sonnet) எனப்படும் பாடல்கள் போல், கூறவரும் ஒரு மெய்ப்பாட்டுப் பொருளைச் சுருங்கிய வாய்பாட்டில் விளக்கினவாக, கலித் தொகையில், ஒரு நிகழ்ச்சி, வேண்டுமென்றே பல பகுதி களாகப் பிரிக்கப்பட்டு ஒரு நீண்ட பாட்டாக அடித்து நீட்டிக்கப்பட்டுளது. அவ்வகையில் காதலன், பொருள் தேடச் சேணாடு செல்வதற்கான முயற்சி மேற்கொள்வது அறிந்து காதலி கொள்ளும் கடுந்துயர், அவனைப் போகா வாறு தடுக்கும் அவள் முயற்சி ஆகியவற்றைப் பாலைக்கலி கூறுகிறது. பிரிவு தரும் அக்கடுந்துயர், கலியில், பல நூறுக்கும் மேலான வரிகளில் விளக்கப்பட்டுளது. ஏனைய கலிகளும்கூட, ஒவ்வொரு திணைக்கான அகத்துறைப் பாடல் களுக்குத், தொல்காப்பியர் விதித்திருக்கும் இலக்கணத்தை ஒட்டிக், கூடலும் ஊடலும் கலந்த காதல் வாழ்வின் ஏற்ற இழிவுகளின் ஊடே, முறையாக நடைபோடுகின்றன. ஆகவே, ஒவ்வொரு கலியும், பெரும்பாலும், குறிப்பிட்ட ஒரு திணை யின் பெருங்காப்பியமாம் என அழைக்கப்படுமளவு, ஒவ்வொரு

கலியிலும், ஒரு கதையின் தொடர்ச்சியைக் காணலாம். தலைவி, அவள் தோழி, பரத்தையர் உறவு கொண்டுவாழும் தலைவன், அவன் விரும்பும் பரத்தை, தலைவனுக்கு, அப்பரத்தையைக் கொண்டுவந்து தருவானும், பின்னர்த் தலைவனுக்காகத் தலைவிபால்தூது சென்று இருவரையும் ஒன்று படுத்துவானுமாகிய பாணன் ஆகியோரின் கூற்று இடம் பெறும், பரத்தமை ஒழுக்கத்தின் காவியமாம் மருதக்கலி, ஈண்டு ஓர் எடுத்துக்காட்டாகவே காட்டப்பெறல் தகும். திணைவிளக்கத்திற்கு மேற்கொள்ளப்படும் இம்முறையின் விளைவு, அதிகாரம் 12ல் எடுத்துக் காட்டப்பெற்ற ஐந்திணைப் பாடல்களின், கூற்று மற்றும் கருத்துக்களின் சலிப்பூட்டுமளவான கூறியது கூறலாய் முடிகிறது. பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடிய கலியில், ஞாயிற்றின் கடும். வெப்பம், பேய்த்தேர் என அழைக்கப்படும் கானல்நீர், வழியின் கொடுமை, பொருள்தரும் இன்பத்தினும், காதல் தரும் இன்பத்தின் சிறப்பு, பிரிவுதரும் துயரால் தலைவியின் மேனி நலம் கெடல் மற்றும், பாலைக்குரிய பிற நிகழ்ச்சிகளெல்லாம் முடிவு காணமாட்டாவாறு நிறைந்துள்ளன. இந்த ஒரு கருத்தை விளக்க, ஒரு கலிப்பாவின் முழுப்பாட்டு அல்லது அதன் பெரும் பகுதியை எடுத்துக்காட்டல் இயலாது. ஒரே பொருள் அடுத்தடுத்து வரும் மூன்று பாடற்பகுதிகளில் கூறப்படுவதாம் கூறியது கூறலைவிளக்க, ஒன்று அல்லது இரண்டு எடுத்துக்காட்டுக்கள் காட்டப்படும், காதலனுடன் போய்விட்ட மகளைத்தேடிச்செல்லும் தாய்க்கு, இடை வழியில் அந்தணத்துறவி ஒருவர் கூறிய அமைதியுரை வருமாறு: நறுமணப்பொருள் பலவும் கலக்கப்பெற்ற நல்ல சந்தனம், தன்னை, மேனியில் பூசிக்கொள்பவர்க்குப் பயன் படுவதல்லது, மலையிலேயே பிறந்ததாயினும் அம்மலைக்கு அது என்ன பயனைக்கொடுக்கிறது: அது போலத்தான், ஆராய்ந்து நோக்கின், உன்மகளும் உனக்குப் பயன்படாள். அவளை மணப்பானுக்குகே பயன்படுவாள். சிறந்த வெண் முத்துக்கள் தம்மை அணிந்து கொள்வார்க்கு அழகு தந்து பயன் படுவதல்லது, கடலிலே பிறந்தாலும், அக்கடலுக்கு

அது என்ன பயனைக் கொடுக்கிறது? அது போலத்தான் ஆராய்ந்து நோக்கின் உன் மகளும், அவளை மணந்தானுக்குப் பயன்படுவதல்லது உனக்குப் பயன்படாள். நரம்பு ஏழினின்றும் எழும் இனிய ஏழிசை, அதைப்பாடுவார்க்கும், கேட்பார்க்கும் பயன்படுவதல்லது, யாழில் பிறந்ததாயினும் அந்த யாழுக்கு அதனால் பயன் உண்டோ? அதுபோலத் தான் ஆராய்ந்து நோக்கின், உன்மகள், அவளை மணப் பானுக்குப் பயன்படுவதல்லது உனக்குப் பயன்படாள்.

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கு அவைதான் என்
செய்யும்?
நினையுங்கால், நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே;
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதாம் என்செய்யும்?
தேருங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே;
ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கு அவைதாம் என் செய்யும்?
சூழுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே."

பாலைக்கலி: 8 : 12 - 20.

மற்றும் ஓர் எடுத்துக் காட்டு இதோ: கணவன் மாரால், தோளின் நலம் நுகரப்பட்டுப் பின்னர்க் கைவிடப் பட்ட மகளிர், நீர் வேட்கை உற்ற போது கோலித் தண்ணீர் குடிக்கப் பட்டபின்னர் வீசி எறியப்பட்ட எச்சில் பட்ட குடையோலைக்கு ஒப்பாவர். முதலில் மணம் விருப்பிக் கணவன் மாரால், நலம் நுகரப்பட்டுப் பின்னர் அவரால் கைவிடப்பட்ட மகளிர், வாழ்வோர் போய்விட்ட பாழூருக்கு ஒப்பாவர். மனம் விரும்பிக் கூடின கணவரால், குணநல மெல்லாம் நுகரப்பட்டுப், பின்னர் அவரால் கைவிடப்பட்ட மகளிர், கூந்தலில் சூடிக்கழிந்த வாடிய மலர்க்கு ஒப்பாவர்,

தோள்நலம் உண்டு துறக்கப்பட்டோர்
வேணீர் உண்ட குடையோர் அன்னர்;
நல்குநர் புரிந்து நலன் உணப்பட்டோர்
அல்குநர் போகிய ஊரோர் அன்னர்;
கூடினர் புரிந்து குணன் உணப்பட்டோர்
சூடினர் இட்ட பூவோர் அன்னர்."

—பாலைக்கலி ; 22 : 7-13.

மேலே எடுத்துக் காட்டினவற்றுள்ளாவது வேறுவேறுபட்ட கருத்துக் கருவூலங்களாவது உள்ளன: ஆனால், களிறு புலிகளுக்கிடையிலான சண்டை, தினைப்புனங்களிலிருந்து கிளிகளை ஓட்டுதல், கடற்கரை மணலில் நண்டுகள் ஊர்தல், மீனவர் மீன்பிடித்துக் கொண்டிருக்கும் கட்டுமரங்களை முன்னும் பின்னுமாகத் தள்ளிவிடும் அலைகள் ஆகிய நிகழ்ச்சிகளை வெறுப்பூட்டுமளவு மீண்டும் மீண்டும் கூறுவதில் நயம் இல்லை. ஆனால், கலித்தொகையின் பெரும்பகுதியை அவை தான் கொண்டுள்ளன.

கருத்துக்களை உருவகப்படுத்தல்

ஒரே கருத்தை, இவ்வாறு வெறுப்பூட்டுமளவு திரும்பத் திரும்பக் கூறலுக்குக், கூற விரும்பும் கருத்தை வெளிப்படக் கூறாது, மறைத்து மொழிக்கிளவியால் கூறும் ஒரு முறை வளர்ந்து விட்டதும். இயற்கைப் பொருள் ஒவ்வொன்றும், காதல் ஒழுக்கத்தோடு தொடர்புடைய யாதேனும் ஒரு நிகழ்ச்சியோடோ, அல்லது நிகழ்ச்சிகளோடோ தொடர்புடையதாக ஆக்கப்பட்டுதுவே ஒரு காரணமாகும். குறிக்கோளை நேரிடையாகக் கூறாது, குறியீடுகள் மூலம் கூறும் முறையினை மிகப் பெருமளவில் மேற்கொள்ளும் வழக்கம், செய்யுள் நடைக்கே ஒரு நோயாகி விட்டது: பாக்களும் புதிர் போடும் விடுகதையாம் நிலைக்குத் தாழ்ந்துவிட்டன. உள்ளுறை உவமம் எனப்படும், இது

போலும் குறியீட்டுச் சொற்களை ஆளுதல், பழைய இலக்கியத்தில், இங்கொன்றும் அங்கொன்றுமாக ஆளப் பட்டது: அது, ஒரு சொல் அல்லது அடைமொழியளவோடே நின்றது. ஆனால், இக்கலிப்பாக்களில் அது, மிகநீண்ட உருவகத் தொடராகி விட்டது: பின்வருவது ஓர் எடுத்துக் காட்டு: "பலரும் விரும்பும் விடியற்காலத்து ஞாயிற்றின் ஒளியை மறைக்குமளவு, மூங்கில் அடர்ந்து விளைந்திருக்கும் மாணிக்கப் பாறையில், மணம் வீசும் நல்ல சுனையில், அழகு பெற வளர்ந்திருக்கும் காந்தளின் அழகிய குலையினை, பெறுதற்கரிய மாணிக்கமணியினையும் அச்சம் ஊட்டும் பொறியினையும் உடைய பாம்பு, தண்ணீர் குடிப்பதாகக் கருதிப், பெரிய மலைகளையும் கீழ் மேலாக்குமாறு போல வீசும் காற்றோடு கூடி மழையின் இடியேறு இடித்தலால் எழுந்த பேரொலி, பெருமளவில் மலர்ந்து மணம் வீசும் மலர்களையுடைய மலைச்சாரல் எங்கும் சென்று ஒலிக்கவே, சிறுகுடிவாழ் கானவர் விரைந்து உறக்கம் ஒழிந்து எழுந்து கொண்டனர்.

> "விடியல் வெம்கதிர் காயும் வேய்அமல் அகலறைக்
> கடிசுனைக் கவின்பெற்ற காந்தளம் குலையினை
> அடுமணி, அவிர் உத்தி அரவு நீர் உணல்செத்துப்
> பெருமலை மிளிர்ப்பு அன்ன காற்றுடைக் கனைபெயல்
> உருமுக்கண் உறுதலின், உயர் குரல் ஒலி ஓடி
> நறுவீய நனஞ்சாரல் சிலம்பலின், கதுமெனச்
> சிறுகுடி துயில் எழும்." —குறிஞ்சிக்கலி : 9 : 1-7.

அழகிய இவ்வரிகளில் கூறப்பட்டிருக்கும் உள்ளுறை உவமப் பொருள் உரையாசிரியர் கூற்றுப்படி வருமாறு: மாணிக்கப் பாறை தலைவி வாழும் மனை; சுனையில் உள்ள காந்தள், சுற்றத்தார் பேணி வளர்க்க அழகு பெற்ற தலைவி; மணம் தந்து மகிழ்விக்கும் காந்தள், அச்சந்தரும் பாம்பு போல் தோன்றியது, பின்னர் இல்லறமாம் இனிமைதரும்

களவொழுக்கம், பிறர்க்குத் தீங்கு போல் தோன்றியது; உருமேறு இடித்தலால் எழுந்த ஓசை, குறவர் குடியிருக்கும் மலைச் சாரலெங்கும் சென்று ஒலித்தது. தீதாகக் கருதிய அயலவர் கூறிய அவர் உரைகேட்டதாய் கடிந்து கூறிய சொல் எங்கும் பரவியது. சிறுகுடியில் உள்ளார் துயில் எழுந்தது, காவல் மிகுதியால், தலைவி களவொழுக்கம் வாய்க்கப் பெறாது வருந்தி உறக்கம் இன்றி இருந்தது; நற்றிணைப் பாடல்களில், காலத்தால் பிற்பட்ட சில பாக்களிடையேயும், இத்தகைய உள்ளுறை உவமைகள் இடம் பெற்றுள்ளன. சமஸ்கிருத இலக்கியத்தால் ஈர்க்கப்படுவதற்கு முந்திய காலத்துப் பழந்தமிழ்ப் பாடல்களில், இவை போலும் உள்ளுறை உவமம் இடம் பெறுவது அரிதினும் அரிதாம் ஆதலின் இது காலத்தால் பிற்பட்ட சமஸ்கிருத மொழிக் காதற் பாக்களின் எதிர் ஒலியே ஆம் என நான் கருதுகின்றேன்.

## ஆரிய உவமைகள்

இப்பாக்களில், ஆரியப் புராணக் கதைகளிலிருந்து பல உவமைகள் எடுக்கப்பட்டுள்ளன. தலைவியைப் பிரிந்து தலைவன் செல்ல இருக்கும் வழியின் இயல்பினைத் தோழி பின் வருமாறு விளக்கியுள்ளாள். "உலகம் தோன்றிய காலத்தில், அவ்வுலகைப் படைக்கத் தோன்றியவனாகிய முதியவனாம் நான்முகன் முதலான தேவர்கள் வந்து வேண்ட, எவர்க்கும் அடங்காதவராகிய அவுணர்களின் ஆற்றலை அழிப்பதற்கு, யமனைப் போல் சினங்கொண்டு, வஞ்சனை செய்யும் அவுணர்களை, வஞ்சிக்காது எதிர் நின்று அழிக்கும் பேராற்றலோடு, முக்கண் இறைவனாம் சிவன், அவுணர்க்குரிய மூன்று கோட்டைகளையும் பார்த்துச் சினங்கொள்ள, அப்போது அவன் முகம் சினத்தீயைக் கக்கியது போல, ஞாயிறு கடுமையாகக் காய்வதால், மலைகள் எல்லாம் பிளவுண்டு பிறரால் சினந்து கொள்வதற்கு இயலாத அரிய மழுவாயுதம் ஏந்திய அவ்விறைவன் சினத்தால், அம்முப்புரங்களும் அழிந்து உதிர்ந்தனபோல், போவார்க்கு வழி இல்லை

யாகும்படி, அவ்வழியெங்கும் உதிர்ந்து கிடந்து, நெரும்பைக் கக்குவது போலும் கடிய வெப்பம் மிக்க வழியில், உன்னை மறந்து வாழமாட்டாப் பெருவேட்கை உடையளாகிய இவள், ஈங்கிருந்து இறந்து போக விடுத்துப் பிரியத் துணிந்தீர்."

"தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக
அடங்காதார் மிடல்சாய, அமரர் வந்து இரத்தலின்,
மடங்கல் போல் சினைஇ, மாயம் செய் அவுணரைக்
கடந்து அடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலும்
உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலின்,
சீறும் கணிச்சியோன் சினவலின், அவ் வெயில்
ஏறு பெற்று உதிர்வன போல், வரைபிளந்து, இயங்குநர்
ஆறுகெட விலங்கிய அழல் அவிர் ஆரிடை
மறப்பரும் காதல் இவள் ஈண்டு ஒழிய
இறப்பத் துணிந்தனிர்." —பாலைக்கலி : 1 : 1-10.

ஆரிய வழிபாட்டு நெறியை அடிப்படையாகக் கொண்ட ஓர் உவமையும் வந்துளது. "என் நெஞ்சு, கற்று கேட்டறிந்த அந்தணர்கள் விரும்பி மேற்கொள்ளும் வேள்வியிடை எழும் புகைபோல் நெட்டுயிர்ப்புக் கொள்ளா நிற்கும்" "கேள்வி அந்தணர் கடவும் வேள்வி ஆவியின் உயிர்க்கும் என் நெஞ்சு." (பாலைக்கலி : 35 : 25-26).

இவ்வகைப் பிறிதொரு உவமை வருமாறு: "இமய மலையில் பிறந்த மூங்கிலாகிய வில்லை வளைத்த, கங்கை யுடைமையால் ஈரம் பொருந்திய சடையினை உடைய இறைவன், இறைவியோடு உயர்ந்த கயிலை மலையில் இருந்த போது, பத்துத் தலைகளையுடைய அரக்கர் தலைவனாகிய இராவணன், அம்மலையை எடுப்பதற்காகக் கைகளைக் கீழே கொடுத்துத், தொடி அணிந்த கைகளால் அதை எடுக்க மாட்டாது வருந்துவது போல" —

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக,
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து அம்மலை
எடுக்கல் செல்லாது உழப்பவன் போல."

—குறிஞ்சிக்கலி : 2 : 1-5.

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் உவமை, இயற்கையி லிருந்தோ, புராணக்கதையிலிருந்தோ எடுக்கப்படாமல், தர்ம சாஸ்திரத்திலிருந்து எடுக்கப்பட்டு, இதுபோலும் அறவுரைகள் பல்கியிருக்கும் பிற்காலச் சமஸ்கிருத இலக்கியத்திலிருந்து நேரே வந்துளது. "வந்து இரப்பார்க்கு வாரி வழங்குவதில் குறை காட்டாமல் வழங்கியும், இல்லறம் நிகழ்த்தும் முறை யறிந்து அதன்படி வாழ்ந்த, தீவினை இல்லாதவனுடைய செல்வம், மேலும் மேலும் பெருகுவது போல், ஆற்றங்கரை மரம் தழைத்து வளர"

"ஈதலில் குறைகாட்டாது அறன்அறிந்து ஒழுகிய
தீதுஇலான் செல்வம் போல் தீங்கரை மரம்நந்த"

—பாலைக்கலி : 26 : 1-2.

அக்காலத்தில் தமிழ், சமஸ்கிருத செய்யுட் கற்பனைகளுக் கிடையே எத்தனை நெருக்கமான கூட்டணி நிலவியது என்பதையும் இது எடுத்துக்காட்டுகிறது. இவையெல்லாம் இக்கலிப்பாக்கள் அனைத்தும், ஆரியக்கலாச்சாரம் தமிழகத்தில் முக்கியமான இடத்தை அடைந்து விட்ட கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்குப் பின்னரே வந்தனவாம் என்பதற்கான சான்றுகளும் ஆம்.

**பழந்தமிழ்ச் செய்யுளுணர்வு அழியாது இடங்கொண்டு இருத்தல்.**

ஆரியக் கருத்துக்களின் நுழைவு எண்ணிக்கையால் மிகுவது, பழைய தமிழ்ச் செய்யுளுணர்வு அறவே மறைந்து விட்டது எனப் பொருளாகி விடாது. வேனிற் பருவ வரவைக்

கடுங்கோ, பின்வருமாறு விளக்கியுள்ளார்: "பிற ஒன்றிற்கு இல்லாத பெருமையைத் தனக்கே உரித்தாக்கிக்கொண்ட இவ்வுலகத்தின் பேரழகைத், தான் காண வேண்டி, ஆறு கண்களை விழித்துப் பார்ப்பதுபோல், பக்கத்தில் உள்ள குளங்கள், நிறைந்த நீர்ப்பூக்களால் அழகு பெறவும், பளிங்கு மண் போலும் கண்ணாடிக்குள், பவழம் அழுந்தப்பட்டுத் தோன்றினாற்போல், முருக்க மலரின் இதழ்கள், அழகிய குளங்களில், காம்பற்று விழவும், அழகிய குளங்களின் நிழல் நோக்கிச் சென்று, வண்டுகள் ஆரவாரிக்கவும், மரங்கள் எல்லாம் அரும்புகள் மலர்ந்து, மணிகளைச் சூடினாற்போல மலர்களால் நிறையவும், காதல் இருவரின், ஒருவரை யொருவர் தழுவிக் கிடந்த கைகள் நெகிழா இருக்க, மலர்த் தாதுக்களைத் தூவும் இளவேனிற் பருவம் வந்துவிட்டது."

"வீறுசால் ஞாலத்து வியல்அணி காணிய,
ஆறுகண் விழித்ததுபோல் கயம் நந்நிக்கவின் பெற,
மணிபுரை வயங்கலுள் துப்பெறிந்தவை போலப்
பிணிவிடு முருக்கிதழ் அணிகயத்து உதிர்ந்து உகத்,
துணிகயம் நிழல் நோக்கித் துதையுடன் வண்டு ஆர்ப்ப,
மணிபோல அரும்பு ஊழ்த்து மரமெல்லாம் அவர் வேய
காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது
தாதுஅவிழ் வேனிலோ வந்தன்று."

— பாலைக்கலி: 32 : 1-8.

இளமகள் ஒருத்தியைப், புலவர் கபிலர், இவ்வாறு வர்ணித்துள்ளார்: "ஒளிவீசும் மின்னலின் நுண்ணிய பிளவுகளுக்கிடையே நுழைந்தோடும் கார் மேகம் போல, பொன்னைக் கூறுபடுத்திப் பண்ணிய அழகிய கம்பிகளை, ஐந்து பகுதியாகப் புனையப்பட்ட கூந்தல் இடை இடையே விட்டு, தாழம்பூவினைத் துண்டுத் துண்டாக வகிர்ந்து, இடையிடையே இட்டுத் தொடுத்த, மணம் நாறும் மாலையினையும், இனிய புன்னகையினையும், ஒளிவிடும் வெண் பற்களினையும், இனிய மொழியினையும், இயல்பாகவே,

பவளம் போல் சிவந்த வாயினையும், அழகிய நெற்றியினையும் உடையவள்.''

''மின் ஒளிர் அவிர் அறல் இடைபோழும் பெயலேபோல்
பொன்நகை தகைவகிர், வகைநெறி வயங்கிட்டுப்
போழிடை இட்ட கமழ் நறும் பூங்கோதை,
இன்நகை, இலங்கு எயிற்றுத், தேமொழித் துவர்ச்
நன்னுதால்!'' [செவ்வாய்
—குறிஞ்சிக்கலி : 19 : 1-5.

ஒரு தலைவன், தான் விரும்பும் தலைவியை விடுகதை வடிவில் எவ்வாறு புகழ்கின்றான் என்பதற்கான எடுத்துக் காட்டு இதோ : ''நெற்றி, காண்பவர் வியக்குமளவு தேய்ந்து சிறுத்துளது; ஆயினும் அது பிறைத்திங்கள் அன்று; முகம் மறுவற்று ஒளிவீசுகின்றது; ஆயினும் அது முழுமதி அன்று; தோள், மூங்கிலின் தன்மை பெற்றுளது; ஆயினும் அது மூங்கில் வளரும் மலை அன்று; கண் நீலமலரின் தன்மை பெற்றுளது; ஆனால், அது அம்மலர் விளையும் இடம் அன்று: சாயல் மெத்தென நடை பயிலுகின்றது; ஆயினும், அது மயில் அன்று; சொல் கூறியதே கூறித் தளர்கிறது: ஆயினும் கிளி அன்று.''

''ஐ தேய்ந் தன்று, பிறையும் அன்று ;
மை தீர்ந்தன்று, மதியும் அன்று ;
வேய் அமன்றன்று, மலையும் அன்று ;
பூ அமன்றன்று, சுனையும் அன்று ;
மெல்ல இயலும், மயிலும் அன்று ;
சொல்லத்தளரும், கிளியும் அன்று,''
— குறிஞ்சிக்கலி : 19 : 9 - 14.

புதிர் போல் அல்லாத மேறு ஒரு வருணனை இது : ''அழகிய முகம் முழுமதியை ஒத்திருக்க, மணிகளால் ஒப்பனை செய்யப்பட்ட நின் கருங்கூந்தல், உன் முகத்துக்கு ஒப்பாகும்

அம்முழுமதிக்கு அணித்தாக இருக்கும் கார்முகிலை ஒத்திருக்க, அக்கூந்தலில் அணியப்பட்ட, நூலால் கட்டப்பெற்ற, தேன் மிகுதியால் ஈரம்பட்டிருக்கும் மலர்கள், உன் பின்னலுக்கு ஒப்பாகும் சரும்பாம்பிடத்தே கிடக்கும், கார்த்திகை எனப்படும் விண்மீன் கூட்டங்களுக்கு ஒப்பு ஆக.''

''அணிமுகம் மதியேய்ப்ப, அம்மதியை நனியேய்க்கும்
மணிமுக மாமழை நின்பின் ஒப்பம், பின்னின்கண்
வரிநுண்ணூல் சுற்றய ஈரிதழ்அலரி
அரவுக்கண் அணிஉறழ் ஆரல்மீன் தகைஒப்ப;''
—குறிஞ்சிக்கலி : 28 : 1 - 4]

மொம்மை யானைகள் பிணிக்கப்பட்ட பொம்மைத் தேர்களைச் சிறு பிள்ளைகள் ஈர்க்கும் சிறுதேர் உருட்டல், பழம் பாடல்கள் அனைத்திலும் இடம் பெற்றுள்ளது. ஆனால், மருதக்கலி பாடிய மருதன் இளநாகனார், அதைப், பாத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டு திரிவான் ஒருவனின் மனைவி வாய் வழியாக நன்கு பயன் கொண்டுள்ளார்: '' உன்னிடத்தில் அன்பைக் கைவிடுவார் கைவிட்டொழிக ; உன்பால் கொண்ட, என்கண் நிறைந்த அன்பு மாறாத, உன்னைப்பெற்ற யான், உன் வருகையைக் காணுமாறு அருள்செய்யும், மெல்லிய தலையிடத்தே, ஒளி விடும் மூன்று முத்து படங்களை அணிந்து கொண்டிருக்கும் பாகனாகிய என் மகனே ! விளிம்பில், ஒளி வீசும் முத்துக்களை அரும்பு போல் அழுத்திப் பவழத்தால் செய்யப் பெற்ற வட்டப் பலகையைச் சுமந்து நிற்கும் உணவு உட்கொள்ளுதல் அறியாத, கையால் அழகுறப்பண்ணப் பட்ட யானையை, உன் காலில் கட்டிய கெச்சையின் உள்ளிடு மணிகள், ஒலித்து ஆரவாரம் செய்ய, முப்புரியாக முறுக்கிய கயிற்றால் மெல்ல மெல்ல ஈர்த்துக் கொண்டு என்பால் வருவாயாக; ஒளிவீசும் மணிகள் ஒலிக்க ஒலிக்க, அசைந்து அசைந்து தளர் நடையிட்டு நீ நடப்பதைக் காண்பது எனக்குக் களிப்பூட்டுகிறது : ஆனால், உன் தந்தைபால், எங்கள் உள்ள மெல்லாம் உன் மேலதே என்றுகூறி அன்பு கொண்டு,- பின் உன் தந்தையால் கைவிடப்பட்டு, கைவளை நெகிழுமாறு

மெலிந்து வருந்தும் மகளிரைக் காண்பது எனக்குக் கலக்கம் தருகிறது.''

''நயந்தலை மாறுவார் மாறுக ; மாறாக்
கயந்தலை மின்னும் கதிர்விடு முக்காழ்ப்
பயந்த எம்கண்ணார யாம்காண நல்கித்
திகழ்ஒளி முத்தம் கரும்பாகத் தைஇப்
பவழம் புனைந்த பருதி சுமப்பக்
கவழம் அறியா நின் கைபுனை வேழம்
புரிபுனை பூங்கயிற்றில் பைபய வாங்கி,
அரிபுனை புட்டிலின் ஆங்கண் ஈர்த்து ஈங்கே
வருக ! எம் பாக மகன் :
கிளர்மணி ஆர்ப்ப ஆர்ப்பச் சாஅய்ச் சாஅய்ச் செல்லும்
தளர் நடை காண்டல் இனிது ; மற்று இன்னாதே,
உளம் என்னா நுந்தைமாட்டு எவ்வம் உழப்பார்
வளைநெகிழ்பு யாம் காணுங்கால்''

—மருதக்கலி : 15 : 1-13;

அடுத்து கூறப்படும் மாலைப் போதின் வருணனை, நெய்தற்கலி பாடியவரும், கலித்தொகையைத் தொகுத்தவரும் ஆகிய நல்லந்துவனார் பாடியது : ''தன்மீது பகை கொண்டு வந்த மல்லர்களின் மறத்தைக் கெடுத்து அழித்த, மலர்ந்த குளிர்ந்த மாலை அணிந்த மார்பையுடைய மாயவன், பகைவரெல்லாம் ஒன்று திரண்டு வந்து உருத்துத் தன்மீது பாய்ந்தமையால், அவர்மீது சினம் கொண்டு, அவர்கள் தோற்று ஓடுமாறு, அவர்கள் ஊர்ந்து வந்த யானைப்படையின் மீது பாய்ச்சிய சக்கரப் படைபோல, ஞாயிறு, தான் பிரித்த கதிர்களை மீண்டும் தன்னகத்தே ஒடுக்கிக் கொண்டு மேற்கு மலையை அடைந்து மறைந்து போக, பரந்தகடலில் ஓதக்காற்று மிகவே, எழுகின்ற அலைநீரெல்லாம் கரையை அடைய, கழியிடத்து, மலர்களை விடுத்து வண்டுகள் போய் விடவே, பொலிவிழந்துபோன துறைகளிடத்துக் கயத்து

மலர்கள் எல்லாம், துயில் கொண்டு விட்டன போல், குவிந்து போக, உலகனைத்தும், ஒருசேர நடுக்கம் உற்று, அச்சங் கொள்ள, உலக ஒடுக்கம் உண்டாகிவிட்டதோ என்பது போலும் இராக்காலம் தோன்றுவதற்கு முன்பாகவரும் பிரிந்துறைவார்க்குப், பெருந்துயர் தரும் மாலைக்காலம்.''

''மல்லரை மறம்சாய்த்த மலர்தண்தார் அகலத்தோன்
ஒல்லாதார் உடன்றுஓட உருத்து உடன்று எறித்தலின்
கொல்யானை அணிநுதல் அழுத்திய ஆழிபோல்
கல்சேர்பு ஞாயிறு கதிர்வாங்கி மறைதலின்,
இருங்கடல் ஒலித்து ஆங்கே இரவுக் காண்பது போலப்
பெருங்கடல் ஓதநீர் வீங்குபு கரைசேரப்,
போஒய வண்டினால் புல்என்ற துறையவாய்ப்
பாயல் கொள்பவைபோலக், கயமலர் வாய்கூம்ப,
ஒருநிலயே நடுக்குற்று இவ்வுலகெலாம் அச்சுற
இருநிலம் பெயர்ப்பு அன்ன எவ்வம் கூர் மருண்மாலை.''
—நெய்தற்கலி: 17 : 1 - 10.

**உலக்கைப் பாட்டு :**

கபிலர் பாடிய குறிஞ்சிக் கலியில், வள்ளைப் பாட்டிற்கான சிறந்த ஓர் எடுத்துக்காட்டு இடம் பெறுகிறது. வள்ளைப் பாட்டாவது, நெல், தினைபோன்றவற்றை, மர உரலில் இட்டுத் தம் கைஉலக்கையால் மாறி மாறிக்குற்றும் மகளிர் இருவர், தொடர்ந்து மேற்கொள்ளும் அப்பணி தரும் தளர்ச்சியைத் தணித்துக் கொள்வான் வேண்டிப், பாட்டும், எதிர்ப்பாட்டுமாக மாறி மாறிப் பாடும் பாட்டு, குறமகளிர், உரலாகப் பயன்படும் பாறை மீதான குழியில் தினையை இட்டு, மலைமீது வளர்ந்த மரத்தின் முற்றிய வயிரமாம் உள்ளிடு மரத்தில் செய்த உலக்கை கொண்டு குற்றுவர். கற்காலம் தொட்டு வரும் இவ்வழக்கம் இலக்கியமாக்கப்பட்டு, குறிஞ்சிப் பாட்டின் ஒரு நிகழச்சியாகத் தலைவியும் அவன் தோழியரும், தலைவனின் புகழைப் பாடவும், அது அழித்துப்

பழிக்கவும் வாய்ப்பாக மேற்கொள்ளப்பட்டுளது: தோழி, தலைவியைத், தோழி! என விளித்து, "நம் கருத்திற்கு இசைந்தவாறெல்லாம் அகவல் பாட்டைப் பாடுவோம் வருக" என அழைக்க, அதற்கு இசைந்த தலைவி, "அழகிய தினைப் புனத்தில், முகத்திற்குப் பொருத்தமான கண்ணையும், மகிழ்வூட்டும் மொழியையும் உடைய மகளிர் நல்லார், நாணி நிற்பது போல, முற்றித் தலைதாழ்ந்து கிடக்கும் தினைக் கதிரை உருவி, சந்தன மரத்தால் செய்த உரலில் இட்டு, முத்துப்படுமளவு, முற்றிய யானைக் கொம்பால் ஆன உலக்கைகளை இருவரும் மாறி மாறி ஓச்சிக்குற்றியவாறே, மருந்து அறியாக் காதல் நோயை நமக்குத் தந்த தலைவனுக்கு உரிய பயன்மிகு மலையை வாழ்த்தி நாம் விரும்பிய வாறெல்லாம் பாடுவோமாக" என இசைந்தாள், தலைவின் இசைவு கிடைக்கவே, தோழி, 'அழகிய நெற்றியினையும், அழகை மிகுவிக்கும் கூந்தலினையும், மூங்கில் போலும் மென்மையும் பெருமையும் வாய்ந்த தோளினையும், மணம் நாறும் கதுப்பினையும் உடையவளே! மூங்கில் ஒலிக்கும் அவன் மலையைப் புகழ்ந்து நீயும் ஒன்றுபாடு' பின்னர், யானும் ஒன்று பாடுகின்றேன்" என்றாள்.

அகவினம் பாடுவாம்; தோழி! அமர்க்கண்,
நகைமொழி, நல்லவர் நாணும் நிலைபோல்
தகைகொண்ட ஏனலுள் தாழ்குரல் உரீஇ
முகைவளர் சாந்துஉரல், முத்தார் மருப்பின்
வகைசால் உலக்கை வயின்வயின் ஓச்சிப்
பகையில் நோய் செய்தான் பயமலை ஏத்தி
அகவினம் பாடுவாம் நாம்.
ஆய்நுதல் அணிகூந்தல் அம்பணைத் தடமென்தோள்
தேனாறு கதுப்பினாய்! யானும் ஒன்று ஏத்துகு;
வேய்நரல் விடரகம் நீ ஒன்று பாடித்தை."

குறிஞ்சிக்கலி: 10 : 1 - 10

மலையைப் பாடிய பின்னர்த் தலைவியும், தோழியும், தலைவனை, மாறி மாறிப் புகழ்ந்தும், பழித்தும் வள்ளைப் பாட்டு உருவில் பாடுவர்:

"தோழி! நீ வாழ்க; நம்மீது அன்பு கொண்டும், அருள் காட்டாதிருக்கும் தன் செயலுக்கு நாணாதவனுக்கு உரிய நாட்டில் உள்ள மலையாய் இருந்தும், பக்க மலைகளில் தாழ்ந்து ஒடும், ஒளிதரும் வெண்ணிற நீர்த் திவலைகள் சிதறும் அருவிகளைக் கொண்டிருக்கிறதன் காரணத்தை ஆராய்ந்து காண்போம் வருக!" எனப்பாடி, தோழி, தலைவனைப் பழித்தாள்:

ஒரு பக்கம் சாய்ந்து விடாது, நடுவிடத்தே நிற்கும் நாவினையுடைய துலாக்கோல் போல், வேண்டுவார், வேண்டாதார் என எண்ணி, ஒருவர் பால்சாய்ந்து விடாது நடுநிலையில் நின்று ஆராய்ந்து அறமே செய்யும் நல்ல உள்ளம் உடைய நம்தலைவன், தன்னால் அன்பு செய்யப் பட்டவருடைய நெஞ்சம் அழிந்து போக விடமாட்டான்" எனத் தலைவி புகழ்ந்து பாடினாள்:

நம்மீது அன்பு கொண்டிருந்தும், மணந்து இல்லறம் மேற்கொண்டு இல்லறப் பயனை நுகர எண்ணாமல், பய னிலவே எண்ணியிருப்பான் மலையாயிருந்தும், பொன்னாரம் பல அணிந்த யானைகள் போல, குளிர்ந்த நல்லமணம் தரும் கோங்கு, மலர்களால் நிறைந்து காட்சி அளிக்கின்றதே! என்ன காரணம் எனத் தோழி, தலைவனைப் பழித்துப் பாடினாள்:

தான்வழங்கும் கொடைப்பொருளை விரும்பி வருவார்க்கெல் லாம் தேர்களையே வழங்கும் வளமான கைகளைக் கொண்ட நம் தலைவன், தன் மலையருவி நீரினும் மென்மையுடையவன் ஆவன்: அத்தகையான், வரைந்து கொள்ளாது இருந்து பிரிவுநோய் நம்மை வருத்தவிடுவனோ? வருத்த விடான் உறுதியாக" எனத் தலைவி, தலைவனைப்புகழ்ந்து பாடினாள்.

நாம் அணிந்த அணிகலனெல்லாம், தாமே கழன்று விழுமாறு நம் உடல் மெலிய நம்மைப் பிரிந்து சென்று வருத்துவான் மலையாயிருந்தும்; அதன் பக்கமலைகளில், மழை மேகத்திடையே நுழையும் முழுமதிபோல், தேனடைக் கட்டிகள் காட்சி தருகின்றனவே! என்ன காரணம் எனத் தோழி, தலைவனைப் பழித்துப் பாடினாள்.

தோழி இவ்வாறு பழிக்கவே சினங்கொண்ட தலைவி, "ஏடி! தலைவனை இவ்வாறு, ஓயாது பழிக்காதே; என் உள்ளத்தைத் தன் அன்பால் கவர்ந்து கொண்டவன் அவன்; மற்றவரெல்லாம் செய்ய அஞ்சும் கொடுந்தொழிலுக்கு அஞ்சாத அறநெறி இழந்தவன் அல்லன் நம் தலைவன்" என்த் தலைவனைப் புகழ்ந்து பாடினாள்.

"காணிய வா, வாழி! தோழி! வரைத்தாழ்பு,
வான்நிறம் கொண்ட அருவித்தே, நம் அருளா
நான்இவி நாட்டுமலை;
ஆர்வுற்றார் நெஞ்சம் அழிய விடுவானோ
ஓர்வுற்று ஒருதிறம் ஒல்காத நேர்கோல்
அறம்புரி நெஞ்சத்தவன்?
தண்நறுங் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்
பொன்அணி யானைபோல் தோன்றுமே, நம்அருளாக்
கொன்னாளன் நாட்டுமலை.
கூறுநோய் ஏய்ப்ப விடுவானோ, தன்மலை
நீரினும் சாயல் உடையன், நயந்தோர்க்குத்
தேர் ஈயும் வண்கையவன்?
வரைமிசை மேல்தொடுத்த நெய்க்கண் இறுஅல்
மழைநுழை திங்கள்போல் தோன்றும், இழைநெகிழ
எவ்வம் உறீஇ யினான்குன்று;
எஞ்சாது எல்லா! கொடுமை நுவலாதி,

அஞ்சுவது அஞ்சா அறனிலி அல்லன், என்
நெஞ்சம் பிணி கொண்டவன்."

-குறிஞ்சிக்கலி: 6 : 10 - 27.

## ஏறுதழுவல்

சோழன் நல்லுருத்திரன் பாடிய முல்லைக் கலியுள், மேய்புலமாம் முல்லைநிலத்துப் பழம் பெரும் வழக்கமாம் ஏறுதழுவலும், அவ்வீர விளையாட்டில் வெற்றி பெறுவோரையே தம் கணவராகத் தேர்ந்தெடுக்கும் பழக்கமும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. அதை விளக்கும் பல பாடல்களுள் இதோ ஓர் எடுத்துக் காட்டு: "ஆனிரை பல உடையராகிய ஆயர்குலத்து அடலேறுகள், மெல்லிய கொத்துக்களைக் கொண்ட கொன்றை, மெல்லிய காயாம்பூ, சின்னம் சிறு இலைகளைக் கொண்ட வெட்சி, பிடவம், முல்லை, கஞ்சங்குல்லை, குருந்தம், கோடல், பாங்கர் முதலாம் மலர்களால் ஆன தலைமாலை அணிந்து, விரைந்து வந்து ஏறுதழுவுதலைக் காணவேண்டி, முல்லை அரும்பும் மயிற்பீலியின் அடியும் போலும் பல்லும், பெரிய, குளிர்ந்த கண்ணும், மடப்பம் தொனிக்கும் சொல்லும், ஒளிவீசும் பொன்னால் பண்ணப்பட்ட மகரக்குழை அணிந்த காதும் உடைய ஆயர்மகளிர் வந்து பரணில் இடங்கொண்டனர். அவ்வாறு அவர்கள் இடங்கொண்டதும், மணிகள் நிறைந்த மலையிலிருந்து உருண்டோடி வீழும் வெள்ளருவிகள் போல, அழகின் எல்லையைக் கடந்த, வெள்ளிய கால்களைக் கொண்ட கருநிறக் காரியாகிய ஏற்றினையும், விண்மீன்கள் ஒளிகாட்டும் அந்திக் காலத்துச் செவ்வானம் போல, அழகொளி வீசும் வெண்புள்ளிகள் நிறைந்த சிவந்த ஏற்றினையும், அழிக்கும் தொழிலோனாம் சிவன் அணிந்த இளம்பிறை போல் வளைந்த கொம்புகளைக் கொண்ட சிவந்த ஏற்றினையும், போரிடும் வெறியும் அதற்கேற்ற வலியும் உடைய பிற ஏறுகள் பலவற்றையும், ஆயர், தொழுவினுள் விடவே, ஏறுகள் எழுப்பிய புழுதிப்படலம் படர்ந்த அத்தொழு, சிங்கமும்,

குதிரையும், களிறும், முதலைவகையில் ஓர் இனமாம் கராமும் திரண்டிருக்கும், மழைபெய்யும் மலையிடத்தை ஒத்திருந்தது, தொழுவினுள், ஏறுகளைத் தழுவுதற்கு விரும்பிக் குதித்த ஆயர்குல இளைஞர்களை ஏறுகள் தேடித்தேடிச் சென்று குத்தின. அதனால், தம் பகையான ஏறுகளைத் துரத்தும் இயல்புடையவான அவ்வேறுகளின் வளைந்த கோடுகளில், சுற்றிலும் எரிகாலும் கணிச்சிப் படையுடையோனாகிய சிவன் சூடிய பிறைத்திங்கள் மீது செம்மாலை கிடப்பது போல், குருதிசொட்டும் குடர்கள் சுற்றிக்கிடந்தன, அவ்வாறு குடர் சுற்றிக் கிடக்கும் கொம்புகளைக் கொண்ட ஏற்றின்முன் நின்று, அக்குடரை இரண்டு கைகளாலும் வாங்கித் தன் வயிற்றகத்தே அடைப்பவன், சிவந்த நூல் சுற்றிய கழியை ஒருவன் இரண்டு கைகளிலும் கோத்துப் பிடித்திருக்க; அந்நூலை மூன்று நூலாக்க ஈர்ப்பவன் போன்றுள்ளான், தோழி, அவன் ஆற்றலைக் காண் எனத் தலைவிக்குக் காட்டினாள்.

போர் வெறிகொண்ட ஏற்றின் கழுத்தில் பாய்ந்து, அதற்குச் சூட்டிய மாலைபோல் தழுவி நிற்கும் இவ் விளையோன் எருமை நிரை கொண்ட ஆயர் மகன் அல்லவோ? இவன், அவ்வேற்றின் வலியை அழித்தல்லது அதைவிடான். இளையோய்! இவன் ஆண்மையைக் காண்பாயாக என்று மற்றோர் ஆயர் இளைஞனைக் காட்டினாள் தோழி. மறுக்கொண்ட ஏற்றை ஆட்டி அலைக்கழித்துவிட்டு, அதன் மீது நீர்ப்பரப்பில் தெப்பத்தின் மீது கிடந்து, அதனை எளிதே தள்ளிச் செல்பவன் போல், அமைதியாக அமர்ந்து செல்பவன், ஆனிரைச் செல்வனாம் ஆயர் மகன் அல்லவோ? ஏற்றினை அவ்வாறு அடக்கிச் செலுத்துவதை விடாது செய்யும் அவன் ஆற்றல் சிறப்பினைக் காண்; எனப் பிறிதொரு ஆயர்குல இளஞ்சனைக் காட்டினாள் தோழி. எருமைக்கடா ஊர்ந்து வரும் கூற்றுவனின் நெஞ்சைக் காலாலே பிளந்து, அவன் அரிய உயிரை வாங்கிய, அன்றைய இறைவன், இவன் போலத்தான் இருப்பான்கொலோ, எனக் காண்பர் ஐயுற்று. காற்றென விரைந்து வந்த கரிய ஏற்றை, அதன் வலி அடங்கத்

தழுவி வருந்தி, அதன் மேல் தோன்றி வரும் இப் பொதுவன் அழகைக் காண், அக்காட்சி என் நெஞ்சையே நடுங்கப் பண்ணுகிறது என்றாள் தோழி. சிவப்பும், கறுப்புமான புள்ளிகள் செறிந்த, வலிமை மிக்க வெள்ளேற்றின் மீது பாய்ந்து, வெண்திங்களில் படிந்திருக்கும் மாசுபோல தழுவிக் கிடக்கும் ஆட்டினத்து ஆயர்குல இளைஞன் ஆற்றலைக் காணாய், என மற்றொருவனைக் காட்டினாள் தோழி. கஞ்சன் முதலிய பகைவரால் அனுப்பப்பட்ட, பிடரியை யுடைய குதிரையைக் கையால் அடித்து வாயைப் பிளந்து போட்ட அன்றைய கண்ணனும், இவன் போன்றவன் தான் போலும் எனப் பலரும் கூறுமாறு, கொடிய கோபத்தோடு கருத்து ஓடி வந்து, தன் மேலே பாய்ந்த சிவந்த காளையின் இரு கொம்புகளையும் பற்றிக்கொண்டு அதன் வலியை அழித்த, காயாம்பூ மலரால் ஆன தலைமாலை அணிந் திருக்கும் இவ்விளையோன் அழகையும் ஆற்றலையும் காண். அவன் ஆற்றல் கண்டு என் நெஞ்சு நடுநடுங்கிப் போய் விட்டது என்றாள் தோழி."

"மெல் இணர்க் கொன்றையும், மென்மலர்க் காயாவும்,
புல் இலை வெட்சியும், பிடவும், தளவும்,
குல்லையும், குருந்தும், கோடலும், பாங்கரும்
கல்லவும் கடத்தவும் கமழ்கண்ணி மலைந்தனர்
பல்லான் பொதுவர் கதழ்விடை கோட்காண்பார்
முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன
பல்லர், பெருமழைக்கண்ணர், மடம் சேர்ந்த
சொல்லர், சுடரும் கனங்குழைக் காதினர்,
நல்லவர் கொண்டார் மிசை.

அவர் மிடை கொள,

மணிவரை மருங்கின் அருவிபோல
அணிவரம் பறுத்த வெண்கால் காரியும்,
மீன்பூத்து அவிர்வரும் அந்திவான் விசும்பு போல்

வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும்,
கொலைவன் சூடிய குழவித் திங்கள்போல்
வளையுபு மலிந்த கோடுஅணி சேயும்,
பொருமுரண் முன்பின் புகலேறு பலசெய்து
அரிமாவும், பரிமாவும் களிறும் கராமும்
பெருமலை விடரகத்து ஒருங்குடன் குழீஇப்
படுமழை ஆடும் வரையகம் போலும்
கொடி நறை சூழ்ந்த தொழூஉ.

தொழுவினுள், புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின ஏறு.

ஏற்றின் அரிபரி பறுப்பன சுற்றி
எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண்
உருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர் வலந்தன;

கோட்டொடு சுற்றிக் குடர் வலந்த ஏற்றின்முன்
ஆடிநின்று அக்குடர் வாங்குவான் பீடுகாண்;
செந்நூல் கழி ஒருவன் கைப்பற்ற அந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம்.

இகுளை! இஃதொன்று கண்டை; இஃதொத்தன்
கோட்டினத்து ஆயர் மகன் அன்றே! ஓவான்
மறைஏற்றின் மேலிருந்து ஆடித், துறை அம்பி
ஊர்வான்போல் தோன்றுமவின்.

தொழீஇ, காற்றுப்போல் வந்த கதழ்விடைக் காரியை
ஊற்றுக் களத்தே அடங்கக் கொண்டு அட்டு அதன்
மேல் தோன்றி நின்ற பொதுவன் தகை கண்டை;
ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்திட்டுச்

சீற்றமோடு ஆருயிர் கொண்ட ஞான்று இன்னன் கொல்
கூற்று என உட்கிற்று என் நெஞ்சு.

இகுளை! இஃதொன்று கண்டை; இஃதொத்தன்
புல்லினத்து ஆயர் மகன் அன்றே? புள்ளி
வெறுத்த வய வெள்ளேற்று அம்புடைத், திங்கள்
மறுப்போல் பொருந்தியவன்.

ஓவா வேகமோடு உருத்துத் தன்மேல் சென்ற
சேஎச் செவிமுதல் கொண்டு பெயர்த்து ஒற்றும்
காயாம்பூக் கண்ணிப் பொதுவன் தகைகண்டை,!
மேவார் விடுத்தந்த கூந்தல் குதிரையை
வாய்பகுத்திட்டுப் புடைத்த ஞான்று இன்னன் கொல்
மாயோன் என்று உட்கிற்று என் நெஞ்சு.''

—முல்லைக்கலி : 3 : 1-55.

பாட்டின் காலம் :

கலித்தொகைப் பாக்கள் மூன்றில், கொற்கையும், மதுரையும், பெயர் குறிப்பிடப் பெறாத பாண்டியனும், பொருளோ, தொடர்போ இன்றிக் குறிப்பிடப்பட்டுள்ளனர். இதுவும், கலித்தொகையில் ஆரியக் கருத்துக்களின் நுழைவு மிகப் பலவாம் நிலைமையும், கலித்தொகைப் பாடல்கள் அனைத்தும் கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்பதை உணர்த்துகின்றன. அந்த நூற்றாண்டில், ஆரிய நாகரீகம் செல்வாக்கான ஓர் இடத்தைப் பிடித்துக்கொள்ள, பழந்தமிழ் வாழ்க்கை முறை மறையத் தொடங்கிவிட்டது; அல்லது மக்கள் வாழ்வில் இரண்டாம் இடத்திற்குச் சென்று விட்டது; ஆரியக் கதைகள், தமிழ்க் கடவுள்களைச் சுற்றிக் கூறப்படலாயின; சமயங்களுக்கு இடையில்ஆன சமரச

உணர்வு உச்ச நிலையை அடைந்தது. ஆரியப் பழக்க வழக்கங்களும்கூட, தமிழ்ப் பழக்க வழக்கங்களோடு கலந்து விட்டன: அது போலவே மூடநம்பிக்கைகளும். மதுரை நாடு, ஒரு வகை அரசியல் அமைதி இன்மைக்கு ஆளாகி இருந்தது; களப்பிரர்களும், பாண்டியர்களும், ஆட்சி உரிமை காணப் போராடிக் கொண்டிருந்தனர். ஆகவேதான், புலவர்களைப் பேணும் புரவலர்களாம் அரசர்களின் பெயர் கூறிப் பாராட்டும் பழம் பாக்கள் போல் அல்லாமல், கலித்தொகை, பாண்டிய அரசர்களைப் பெயர் சுட்டாமல் தெளிவின்றிக் குறிப்பிட்டுள்ளது.

## அதிகாரம்: XXIX

# கி பி. 600க்கு முந்திய எஞ்சிய இலக்கியங்கள்

### ஐங்குறு நூறு

இத்தொகை நூல், ஒவ்வொரு பிரிவிலும் ஒவ்வொரு திணை குறித்த நூறு பாக்களைக் கொண்ட ஐந்து பிரிவுகளைக் கொண்டுளது. ஒவ்வொரு நூறும் ஒவ்வொரு புலவரால் பாடப் பெற்று, ஏறத்தாழ, தொல்காப்பியர் கூறிய விதிமுறைப்படி, அத்திணையின் ஒருதுறை குறித்த பத்துப் பாடல்களைக் கொண்டது ஒரு பிரிவாகப் பத்துப் பிரிவு களாகப் பிரிக்கப்பட்டுளது. ஒவ்வொரு புலவரும், இலக்கண ஆசிரியரின் விதி முறைகளுக்கான எடுத்துக்காட்டுக்களையே வகுத்துள்ளனராதலின், இத்தொகை நூல், உடனடி உள்ளத் தூண்டலால் அவ்வப்போது பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பு ஆகாது. இவை, புலவர்கள் தவறாது பின்பற்றப் படவேண்டிய தலையாய வழிகாட்டும் ஆவணமாகத் தொல்காப்பியம் ஆகிவிட்ட பின்னரே பாடப்பெற்றன வாதலின், இப்பாடல்கள், அகத்தூண்டுதலால் தன்னை மறந்து வெளிப்படும் இயல்பை இழந்துள்ளன. நம் ஆய்வுக்குப் பயன்படா. ஆகவேதான், இதன் எந்த ஒருபாடலும் மொழி பெயர்த்துக் காட்டப்படவில்லை: எந்த ஒரு பாட்டும், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்னரீப் பாடப்பெற் றிருக்காது.

### பரிபாடல் எழுபது

இத்தொகையைச் சேர்ந்த எழுவது பாடல்களில் இருபத்திரண்டு முழுப்பாடல்களும், ஒரு சில குறைபாக்களுமே கிடைக்கின்றன. இவற்றுள் ஆறு, விஷ்ணுவைப் பற்றியன: எட்டு முருகனைப் பற்றியன: எட்டு வையை ஆற்றைப் பற்றியன. கடவுள்களைப் பற்றிய பாடல்களில், திருப்பரங்

குன்றம், திருமாலிருஞ்சோலைக் கோயில்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. இது வரை அறிந்த புலவர்களின் பெயர்கள், அவை ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்பதை உணர்த்துகின்றன. இது, இப்பாடல்களில் உள்ள கணக்கிலா ஆரியக் குறிப்புக்களாலும், சமஸ்கிருதச் சொற்களாலும் உறுதி செய்யப்படுகிறது. இவற்றிற்கான பண்ணும் இசையும் பிற்காலத்தவரால் வகுக்கப்பட்டுள்ளன.

திங்களாம் வான் கோளின் ஒளிமறைப்பின்போதைய வான் பற்றிய வருணனை, இதன் பதினொன்றாவது பாடலில் வருவது, வான நூல் கணக்குப்படி, இப்பாடல் பாடப்பெற்ற காலத்தை அறியும் முயற்சியில் பயன்படுத்தப் பட்டது; ஆனால், உண்மைக்கு மாறான, தேவை இல்லாத தற்புனைவுகள் இல்லாமல், காலத்தைக் கண்டு அறிவதற்கு, மூலத்தில் காணப்படும் செய்தி போதுமானதன்று; ஆகவே, அம்முயற்சி தோல்வி கண்டுவிட்டது. உரையாசிரியர் தரும் விளக்கம், உள்ள குழப்பத்தைப் பெருங்குழப்பமாக்கிவிட்டது.

பரிபாடல் புலவர்கள் மதுரை மாவட்டத்தவராவர். இது அவர்தம் பாடற்பொருள்களிலிருந்து பெறப்படும். அவர்கள் தம் பாடற் பொருளாம் கடவுள்களின் அருள் ஒன்றினாலேயே அமைதி கண்டனர்.

பதினெண் கீழ்க்கணக்கு :

பதினெட்டு நூல்களைக் கொண்ட கீழ்க்கணக்கு, எட்டுத் தொகைப் பத்துப்பத்துப் பாட்டின் தொகையாம் மேல் கணக்கோடு மாறுபட்டுளது. இப்பதினெட்டு நூல்களும், கி. பி. 6 முதல் 8 வரையான காலத்தில் பாடப் பெற்றனவாம்; பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகக் கருதப்படும் நாலடியாரின் இரு பாடல்களில், எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த முத்தரையர் குலத்தலைவன் ஒருவன் குறிப் பிடப்பட்டுள்ளான : இந்நூல்கள் மூவகைப்படும்; 1) செங்கணான் என அழைக்கப்படும் ஒரு சோழ அரசன் போர்க்களத்தில் பெற்ற வெற்றியைப் பாடுகிறது ஒரு நூல்.

அதில், கொலைக்களக்காட்சியையும், களத்தில் பாய்ந்து பெருகும் குருதி வெள்ளத்தையும் கண்முன் கொணர்ந்து காட்டியுள்ளார் புலவர். 2) ஐந்து நூல்கள், ஐங்குறு நூறு போல, அகத்திணைகள் குறித்துப் பாடியுள்ளன. இவ்விருவகை நூல்களும், பழைய தமிழ்க் காதல் வீரப்பாடல்களின் மரபு வழிப் பெருமையின் அழிவை எதிரொலிக்கும் பிரதிநிதிகள் ஆகின்றன. 3) ஏனைய பன்னிரண்டும், விடுவித்துக்கொள்ள இயலாவாறு ஒன்றோடொன்று பிணைந்து இருப்பனவாகிய ஒழுக்கம் பழக்க வழக்கங்களை எடுத்துக்கூறும் அறிவுரை நூல்களாம். இந்நூல்கள், அக்காலை, இந்தியா முழுவதும் பெருமளவில் செல்வாக்குப் பெற்றுவிட்ட, சமஸ்கிருத நீதி சாஸ்திரப் பாடல்களைப் பின்பற்றி எழுந்த போலிகளாம். ஆகவே, இந்நூல்கள், ஆரிய நாகரீகம், தென் இந்தியாவில், நன்கு காலூன்றிக்கொண்ட காலத்தைச் சேர்ந்தனவாம். இவற்றில் பெரும்பாலான நூல்கள், செய்யுள் வடிவில் இருப்பதினாலேயே பாடல்கள் என அழைக்கப் பெறும் பழந்தமிழ்ப் பாக்களின் செய்யுள் ஒளியுணர்வை அறவே இழந்திருந்தும், உலகப் பேரறிஞர்களுள் எவர் ஒருவரின் அறிவுரைகளாலும் வெற்றி கொள்ளமாட்டா நனிமிக உயர்ந்த நிலையிலான ஒழுக்க நெறிகளை வழங்குகின்றன; எளிதில் மனத்திற்கொண்டு, இளைஞர்கள் உள்ளத்தில் ஒழுக்க நிலை அறிவுரைகளைப் பதியவைக்க விரும்பும் போதெல்லாம், எடுத்துக் கூறவல்ல பாவடிவில் அமைந்துள்ளனவாதலின், அவை விலைமதிக்க வொண்ணாதனவாகக் கொள்ளப் படுகின்றன. செய்யுளாகக் கவர்ச்சியற்ற நிலையிலும் கற்பனை செய்து பார்க்கவும் இயலாதவை.

திருக்குறள் :

ஐரோப்பிய இலக்கியப் பேராசிரியர்களின் இலத்தின், ஆங்கில மொழி பெயர்ப்புக்களால், திருக்குறள், உலக மக்களுக்கு நன்கு தெரிந்த நூலாகி விட்டது. இப்பேராசிரி யர்கள், கிறித்துவசமய விரிவுரையாளர்களாதலின், சில சொல்லில் பலபொருளை விளங்கக்கூறும், தனக்கே உரிய

குறுந்தொடர் மூலம் இதில் கூறப்பட்டிருக்கும் உயர்ந்த அறநெறிகளால் ஈர்க்கப்பட்டுவிட்டனர். ஐரோப்பியத் தமிழ்ப் பேராசிரியர்களில் தலைசிறந்தவராகிய பெச்சிப் பாதிரியார், 'திருவள்ளுவர் ஒருபுறச்சமயி என்ற காரணத்தால் நரகிற்குச் சென்றிருப்பினும், முதுமொழியாம் மணிக் குறள்களைப் பாடிய அவர் நரகிற்குச் சென்றிருக்க இயலாது எனக்குறிப்பிட்டதாகக் கூறப்படுகிறது. பல்வேறு மொழிகளிலான அதன்மொழி பெயர்ப்புக்கள், அது குறித்துக் கேள்விப்பட்டவர் அனைவர்க்கும், அதை நன்கு அறிந்த ஒன்றாக ஆக்கிவிட்டதனால், உலக மக்கள் அனைவரின் பாராட்டையும் ஒருமிக்க பெற்றிருப்பதால், அதன் பாக்கள் கொண்டிருக்கும் கருத்துக்கள் பற்றிய திறனாய்வு ஈண்டுத் தேவையில்லை.

இந்நூலின் குறட்பா வடிவம், போலி விஞ்ஞானப் பொருள் பற்றிய சமஸ்கிருத எழுத்தாளர்களின் சூத்ர மாதிரியினை வெற்றிகரமாகப் பின்பற்றியுளது. சமஸ்கிருத சூத்திரங்கள் உரைநடையில் அமைந்திருக்க, குறள் வெண்பாக்கள், இலக்கிய நடையில் இருப்பதால், அவற்றிலும் சிறந்தனவாம். செய்யுள்நடை, இறுக்கமான கட்டுக்கோப்பில் அமைந்துளது. ஒழுக்க நெறிகளை அடுக்கடுக்காக எடுத்துதுக் கூறும் நிலையில் ஏற்படும் கவர்ச்சியிலா வரட்சியினைப் போக்க, இங்குமங்குமாக, இலக்கிய நயங்களையும் புகுத்தியுள்ளார் ஆசிரியர், கலைவாணர்கள், செய்யுள்களுக்கே உரிய ஆட்சி எல்லைக்குள், அறிவுரை வழங்கும் பாக்கள் நுழைவை எப்போதும் எதிர்த்தே நிற்பர். ஆனால், நனிமிகு சிறப்பு வாய்ந்த செய்யுள் நடை அமைப்பும், நல்லொழுக்க அறிவுரைகள். உண்மையான செய்யுள் உணர்வுகளால், அவ்வப்போது ஒளியூட்டப் பெறுவதும், நீதி போதனைப் பாக்களையும், செய்யுட்களாம் என ஏற்றுக்கொள்ளப் படுவதை நியாயப்படுத்துமாயின். திருக்குறளும் ஒரு சிறந்த செய்யுளே. இங்கொன்றும் அங்கொன்றுமாக எடுக்கப்பட்ட சில எடுத்துக் காட்டுக்களே, இதை உறுதி செய்யும் :

"அறிவு என்னும் அங்குசத்தால், ஐம்பொறிகளாகிய ஐந்து யானைகளையும், ஐம்புலன்கள் மீது ஓட விடாமல் காக்க வல்லவன். எல்லா நிலங்களிலும் தலையாயது எனப்படும் வீட்டுலகில் தான் சென்று முளைக்கும் விதை ஆவன்."

"உரன் என்னும் தோட்டியான், ஓர் ஐந்தும் காப்பான்
வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து"

—குறள் : 24.

"ஆகூழ் இன்மையால் பொருள் இழந்து வறுமையுற்றவர் ஒருவர், பின் ஒரு காலத்தில் ஆகூழ் வாய்க்க செல்வத்தால் செழிக்கவும் செய்வர்; ஆனால், ஒரு முறை அருளை இழந்தவர், அதை இழந்தவரே; மீண்டும் அருள் உடையவ ராதல் அறவே இயலாது."

"பொருள் அற்றார் பூப்பர் ஒருகால் : அருள் அற்றார்,
அற்றார்; மற்று, ஆதல் அரிது" —குறள் : 248.

"புடத்தில் இட்ட பொன், அப்புடத்தீ சுடச் சுடத் தன் கண் மாசு நீங்கி ஒளி விடுவது போல, தம் கடமையைத் தவறாது ஆற்றுவதாம் தவம் செய்வார்க்கு, அக்கடமை யாற்றுவதால் வரும் துன்பம் அவரை வருத்த வருத்த, அவர் புகழ் ஒளிவிட்டு விளங்கும்."

"சுடச் சுடரும் பொன்போல், ஒளிவிடும், துன்பம்
சுடச் சுட நோற்கிற் பவர்க்கு" —குறள் : 267

"உடம்பிற்கும் உயிர்க்கும் இடையில் உள்ள உறவு: முட்டையானது தனித்து விடப்பட்டுகிடக்க, அதன் உள் இருந்த பறவை, அதை விடுத்துப் பறந்து போகும் இயல் புடையதாகும்."

"குடம்பை தனித்து ஒழியப், புள் பறந்தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு" —குறள் : 338.

"கேடு வருவதன் முன்னர், அது வராதவாறு தடுத்துத் தன்னைக் காத்துக் கொள்ளாதவன் வாழ்க்கை, அக்கேடு வந்துற்றதும், தீயின் முன்னே கிடக்கும் வைக்கோற்போர் கண நேரத்தில் எரிந்து இல்லாதல் போல் அறவே அழிந்து போகும்."

"வரும் முன்னர்க் காவாதான் வாழ்க்கை, எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்" —குறள். 435.

உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும், வானிலிருந்து பெய்யும் மழையை எதிர்பார்த்தே வாழும்: ஆனால், ஒரு நாட்டின் குடிமக்கள், அந்நாட்டு அரசனின் செங்கோல் ஆட்சியை எதிர்பார்த்தே வாழ்ந்திருப்பர்."

"வான்நோக்கி வாழும் உலகு எல்லாம்; மன்னவன்
கோல் நோக்கி வாழும் குடி." —குறள் : 542.

கற்றுப் பெற்ற நூல் அறிவைப், பிறர் நன்கு உணர்ந்து கொள்ளும் வண்ணம் விரித்து உரைக்க இயலாதவர், கொத்துக் கொத்தாக மலர்ந்திருந்தும் மணம் வீசாத மலர்களுக்கு ஒப்பாவர்."

இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர்; கற்றது
உணர விரித்து உரையாதார்" —குறள் : 650.

காமமானது, காதலர் இருவர் ஒன்று கூடிய வழி பிறக்கும் பேரின்பம் கடல்போல் பெரிதாம்; காதலர் இருவர் பிரிந்து கிடக்கும் போது, அக்காமம் தரும் துன்பம், அக் கடலினும் பெரிதாம்."

"இன்பம் கடல் மற்று; காமம்; அது அடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது." —குறள் : 1166.

திருக்குறள், பெருமளவில், முப்பால், (த்ரிவர்கம்) வாழ்க்கையின் மூன்று குறிக்கோள் என்றே அழைக்கப் பெறுகிறது. சமஸ்கிருத தர்ம, அர்த்த, காம என்பனவற்றின்

தமிழ்மொழிபெயர்ப்பாகிய அறம், பொருள், இன்பம் என்ற வரிசையில், அது மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுளது; தமிழ் இலக்கியங்களில், திருவள்ளுவர் காலத்துக்கு முன்னர், ஒழுக்க நெறி கற்பிக்கும் பாக்கள் இடம் பெறவில்லையாதலின் முதல் இரு பால்களை எழுதும் நிலையில், ஆசிரியர் சமஸ்கிருத சாஸ்திரங்களிலிருந்து பெருவாரியாகக் கடன் வாங்கியுள்ளார். நல்லொழுக்கம் ஆகிய அறம், தன் காதலன் பால் ஓர் இளம் பெண் கொண்டிருக்கும் மாறா அன்பு போல், மறைமுகமாகவே விளக்கப்பட்டுளது: அரசியல் அறிவு நெறியாம் பொருள். வளர்க்கப்படவேயில்லை. காதல் பற்றியதான மூன்றாம் பகுதியாம் காமத்துப் பாலில், திருமணத்திற்கு முந்திய காதல் வாழ்வும், பிந்திய காதல் வாழ்வுமாம் களவு கற்பு நெறிகளுக்கு இடையிலான பழந்தமிழ் வேறுபாட்டினை விடாது பின்பற்றியிருப்பது மட்டுமல்லாமல், தொல்காப்பியர் விரித்துரைக்கும் காதல் வாழ்க்கையின் பழந்தமிழ்ச் செய்யுள் மரபினையும் பின்பற்றியுள்ளார். தமக்கு வேண்டும் பாடற்பொருளை, அவர் சமஸ்கிருதத்திலிருந்து கடன் வாங்கினாரா அல்லது பழந்தமிழ் மரபுகளைப் பின்பற்றினாரோ, பொருள் விளக்க முறையில் தமக்கே உரிய தற்படைப்புத்திறனையும், நூலுக்குப் பெரும்புகழ் சேர்ப்பனவும், தமக்கே உரிமையுடையனவுமான இடையறவு படாது எழும் கருத்துக் செல்வப் படைப்பினையும் வெளிப்படுத்தியுள்ளார்.

ஆரியக் கருத்துக்களின் அளவுக்கு மிஞ்சிய செல்வாக்கும், சமஸ்கிருதச் சொற்களின் கட்டுக்கடங்கா ஆட்சியும், நோக்கின், கி. பி. ஆறுக்கு முந்திய எந்த நூற்றாண்டையும் திருவள்ளுவர்க்குத் தருவது இயலாது. காதுவழிச் செய்திப்படி, பல்லவர் ஆட்சிக்குட்பட்ட நாட்டின் கடற்கரைப் பட்டினமாம் மயிலையில் (மதராஸ்) பிறந்தவர்: திருவள்ளுவர் உள்ளம் ஆரிய நாகரீகத்தில் அந்த அளவு ஊறித் தோய்ந்து போதல், தமிழ் நாட்டின் எஞ்சிய பகுதிகள், ஆரிய நாகரீகப் பிடியின் கீழ், அவர் காலத்திற்குச் சற்று முன்னரே வந்திருக்க, அவர் காலத்திற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே

முழுமையாக ஆரியமயமாகிவிட்ட காஞ்சி மாவட்டத்தில்தான் இயலும்; ஆதலின், மேலே கூறிய கூற்று முழுக்க முழுக்க உண்மையாதல் கூடும். ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், வைஷ்ணவ, சைவ பௌத்த, சமணங்களாகிய ஆரியச் சமயங்கள், பழந்தமிழ்ச் சமயங்களை விரைந்து இடமிழக்கச் செய்துவிட்டன: அல்லது அவற்றின் இடையே நுழைந்து இடங்கொண்டுவிட்டன. தொடக்க காலத்தில், எந்தச் சமய நெறியும் அரசாதரவு பெறவில்லையாகவே, ஒன்றோ டொன்று பெருமளவில் பகைத்துக் கொள்ளவில்லை. ஆகவே தான், திருவள்ளுவர், மற்றும் பதினெண்கீழ்க் கணக்கைச் சேர்ந்த ஒழுக்க நெறிகூறும் ஆசிரியப் பெருமக்களால், ஆரியச் சமயக்கொள்கைகள், ஆரியச் சமயத்தத்துவக் கொள்கை களைக் கலவாமல், தனி ஒழுக்க நெறிகளையே உணர்த்த முடிந்தது. ஆகவேதான், எந்த ஒரு சமயச்சாயலைத் திருவள்ளுவர் ஆதரிக்கிறார் என்பதைத், தன்னைப் படிப் பவர்க்கு வெளிப்படுத்திக்கொள்ளாமலே, ஒழுக்க நெறி கற்பிக்கும் உலகப் பேராசிரியர்களில், தலைசிறந்தவராகத் திருவள்ளுவர் ஒளிவீசுகிறார். பிராமணன் முதல் பறையன் ஈறாக உள்ள ஒவ்வொரு சாதியும், வைதீக அல்லது அவைதீக நெறிக்கு நேர் எதிரான ஒவ்வொரு சமய நெறியும், இவ் வொழுக்க நெறிப் பெரும்புலவனைத் தம்முடைய வலையுள் கொண்டுவிடும் பெருமைக்கு உரிமை கொண்டாடுகின்றன. ஆனால் திருவள்ளுவரோ, அவ்வாறு அடையாளம் காட்டப் படுவதை இக்காலமெல்லாம் பெருமிதத்தோடு மறுத்தே வந்துள்ளார்.

திருவள்ளுவர் பிறப்புக் குறித்தும், அவர் நூல் வெளியீடு குறித்தும், அறிவுக்குப் பொருந்தாக் கற்பனைக் கதைகள் கட்டிவிடப்பட்டுள்ளன. அவர் நூல், மூன்றாவது சங்கத்தின் முன் வைக்கப்பட்டபோது அச்சங்கப் புலவர்கள், அதை ஏற்க மறுத்தனர் எனக் கூறுகிறது இரண்டாவது கற்பனைக் கதை: ஒரு குளத்தில் மிதந்து கொண்டிருந்த ஒரு பலகை மீது அப்புலவர்கள் அமர்ந்திருந்தனர். திருக்குறள் அப் பலகை மீது வைக்கப்பட்டதும் அப் பலகை திருக்குறளுக்கு

மட்டுமே போதுமான இடம் உடையதாகச் சுருங்கிவிட்டது; அப்புலவர்கள் குளத்தில் வீழ்ந்து மூழ்கிவிட்டனர். எழுந்து கரை ஏறியதும், குறளின் புகழ்கூறும் ஒவ்வொரு பாடலை, ஒவ்வொருவரும் பாடினர். அப்பாக்கள் அனைத்தும் ஒரு தொகை நூலாகத், 'திருவள்ளுவ மாலை' என்ற பெயரில் தொகுக்கப்பெற்று வழக்கமாகத் திருக்குறளைத் தொடர்ந்து அச்சிடவும் பெறுகிறது. அக்கட்டுக்கதையின் பொருத்தமிலாக் கூற்றில் ஒன்று. குறுகிய நோக்குடையவர்களாகிய அச்சங்கப் புலவர் களுள் சிவனையும் சேர்த்திருப்பது திருவள்ளுவ மாலை பாடிய புலவர்களுள் பல்வேறு நூற்றாண்டுகளைச் சேர்ந்த புலவரெல்லாம் உள்ளனர். உ-ம். மாங்குடி மருதனார், உருத்திரங் கண்ணனார், பாரதம் பாடிய பெருந்தேவனார், கவிசாகர பெருந்தேவனார், நரிவெரூஉத்தலையார், குலபதி நாயனார் மற்றும் சமஸ்கிருதப் பெயர் தாங்கியவர்களும், தமிழ்ப் பெயர் தாங்கியவர்களுமாக ஐம்பத்தி மூவர். ஆரிய மயமாகிவிட்ட பல்லவ நாடாம் தொலை நாட்டிலிருந்து வந்த புலவர் மீதும், ஆரிய நாகரீகத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ் இலக்கிய உலகில் ஒரு புது மரபினை நுழைக்கும் ஒரு நூலின் மீதும் பழந்தமிழ் மரபு காக்கும் புலவர்கள் கொண்ட பொறாமை ஒன்றே. இக்கட்டுக் கதை களின் கருப்பொருளாம்.

**சமஸ்கிருத இலக்கியத்திற்குக் குறள்பட்டிருக்கும் கடன்:**

[இப்பத்தி, சென்னை பல்கலைக் கழக வரலாற்றுத் துறை விரிவுரையாளரும், திருவள்ளுவரின் சமஸ்கிருத மூலங்கள் அனைத்தையும் குறிப்பிடும் ஒரு சிறு வெளியீட்டினை வெளியிட எண்ணியிருப்பவுருமாகிய திரு. பி. ஆர். ஆர். தீக்ஷிதர் அவர்கள் தந்தது.]

குறளாசிரியர் சமஸ்கிருத மொழிப் பேரறிஞராவர்; நீதி, அர்த்த சாஸ்திரங்களைச் சிறப்பாக ஆராய்ந்தவராவர் என்பது தெளிவு. குறட்பாக்களை, அப்பொருளே குறிக்கும் சமஸ்கிருத எழுத்தாளர்களால், ஆரியத் தெய்வீக நூல்களாம் புருஷார்த்தங்களால் திருவள்ளுவர் எந்த அளவு இயக்கப்

பட்டுள்ளார் என்பதைக் காட்டுகிறது. திருவள்ளுவர், தம்முடைய நூலைத், த்ரிவர்கத்தில் மட்டுமே கருத்துடையவர் என்பது போல, முப்பகுதிகளாகப் பிரித்துள்ளார். ஆனால், அறம் அல்லது தர்மம் குறித்துக் கூறும் பகுதியில், நான்காவது புருஷார்த்தமாகிய மோக்ஷம், அதாவது வீடு பேறு குறித்தும் சில அதிகாரங்களை ஒதுக்கியுள்ளார். முறையாகப் பின்பற்றப்பட்டால் த்ரிவர்கம் [அறம், பொருள் இன்பம்] தானே. மோக்ஷத்தை அடைவதற்கு வழி செய்து விடும் எனத் திருவள்ளுவர் தெளிவாக எண்ணியிருக்க வேண்டும். இது எதுவாயினும், குறள் மனித வாழ்வின் மூன்று குறிக்கோள்களின் விளக்கமே ஆம். [See Diksitar, Hindu Administrative Institutions. Page : 35] தம்முடைய அறத்துப்பாலில், பலராலும் அறியப்பட்டிருந்த மனுவின் தர்ம சாஸ்திரத்தையும் பொருட்பாலில், நன்கு தெரிந்திருந்த கௌடல்யரின் அர்த்த சாஸ்திரத்தையும், திருவள்ளுவர் பின்பற்றினார் எனக் கருதுவது முறையே ஆகும். இந் நூல்களே, செய்திகளின் தலையாய மூலங்கள் என்றாலும், பஞ்ச தந்திரம், இதோபதேசம், பர்த்ரிஹரியின் சாதக ஸ்லோகங்கள், இராமாயணம், மஹாபாரதம், கமந்தரியின் நீதிசாரம், மற்றும் இவற்றிற்கு இனமான இலக்கியங்களையும் புலவர் நன்கு அறிந்திருந்தார் என்பது முடிந்த முடிவாக உறுதி செய்யப்படும். இந்நூல்களில் பலவும், கி. மு. ஆறாம் நூற்றாண்டு முதல் கி. பி. நான்காம் நூற்றாண்டு வரையான காலத்தைச் சேர்ந்தவை, கி. பி. 650ஐச் சேர்ந்த பர்த்ரிஹரியின் நூல்கள், காளிதாஸனின் சாகுந்தலம், விசாகதத்தனின் முத்ராக்ஷஸம், மற்றும் நன்கு தெரிந்த இலக்கியங்களிலிருந்து ஆன வரிகளைக் கொண்டுள்ளன. பஞ்ச தந்திரத்திலும், இதோபதேசத்திலும் இடம் பெற்றிருக்கும் பலபாக்களின் உண்மை நிலையும் அதுவே. இவை, தமக்கென ஒருமூலத்தை உரிமை கொண்டாட வில்லை. நாட்டில் வழங்கி வந்த அறவுரைத் தொடர்கள். அவற்றை மக்களிடையே பரப்பும் எண்ணத்தில், இந்நூல்களில் நுழைக்கப்பட்டிருக்கக் கூடும். ஆகவே, சமஸ்கிருத இலக்கியங்

களுக்கு வள்ளுவர் பட்டிருக்கும் கடமைமீதான திறனாய்விலிருந்து அவர் காலத்தைக் குறிப்பிடுவது இயலாது.

எண்ண இயலாது கிடக்கும் எடுத்துக்காட்டுக்களிலிருந்து கீழே காட்டப்படும் சில, அக்கடமைப்பாட்டினை உறுதி செய்யும்.

"இல்லறத்தோடு கூடி வாழ்பவன் என்று சொல்லப் படுவோன் எவன் என்றால், அற இயல்பினை உடைய ஏனைய மூவர்க்கும் அவர்கள் செல்லும் நல்லொழுக்க வழிகளில், தளராது நிற்கும் துணையாவான் எவனோ, அவன்" என்கிறது குறள்.

"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை." —குறள் : 41.

"நல்லொழுக்க நெறியாலும், உணவு வழங்கலாலும் ஏனைய நெறிகளில் நிற்கும் மூவரையும் நாள்தோறும் காத்து வருபவன் இல்லறத்தானே ஆதலின், அவன் வாழ்க்கையே தலையாய சிறப்புடையது" என்கிறது. "மானவ தர்ம சாஸ்திரம்."

"யஸ்மாத்ரயோ ப்யாசரமினோ ஞானே நாந் நேந சான்வஹம்
க்ரஹஸ்தெ நைவ தார்யந்தே தஸ்மாஜ்யெ ஷ்டாஸ்ரமொக்ரஹி"
—மனு ; 3 : 78.

"ஒருவன் ஒரு பிறப்பில், ஐம்பொறிகளையும், ஆமை போல அடக்கவல்லனாயின், அவ்வடக்கும் ஆற்றல் அவனுக்கு ஏழு பிறப்பிலும் காவலாக இருக்கும்" என்கிறது குறள்.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்து அடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து." —குறள் : 126.

"ஆமை தன் ஐந்து உறுப்புக்களையும், தன் ஓட்டுக்குள்ளே அடக்கிக் கொள்வது போல், தன் ஐம்புலன்களை, அவற்றின் ஆசைகளிலிருந்து அடக்கிக் கொள்பவன் எவனோ, அவனுக்குப் பேரின்பம் வந்து வாய்க்கும்" என்கிறது பகவத் கீதை:

"யதா சம்ஹரதெ சாயம் கூர்மொங்கா நீவ ஸர்வஸஹ
இந்திரியா ஹீந்திரியார் தேப்ய தஸ்ய ப்ரஞா
ப்ரதிஷ்டிதா."
பகவத்கீதை : 2 : 58.

"தன் உடம்பை வளர்த்துக்கொள்ளுதல்பொருட்டு தான் மற்றொரு விலங்கின் உடம்பைத் தின்பவன், அருளை எவ்வாறு காப்பான்" எனக் கேட்கிறது குறள்.

"தன்னூன் பெருக்கற்குத், தான் பிறிது ஊன் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்?" —குறள் : 251.

"பிற உயிர்களின் ஊனைத் தென்புலத்தார்க்கும் தெய்வங்களுக்கும் பலிப்பொருளாகத் தருவது தவிர்த்துத் தன் உடல் ஊனை வளர்ப்பதற்கு விரும்புபவன் ஒழுக்க நலம் இல்லாதவனாவன்" என்கிறது மனு.

"ஸ்வமாம்ஸம் பரமாம்ஸேன வர்த்ஹயி துமிச்சதி
அனப்யர்ச்ய பித்றன் தெவாஸ்த தொன்யொ நாஸ்த்ய
புண்யக்றத்
—மனு : 5 ; 52.

"ஒருவனிடமிருந்து காமம், வெகுளி, மயக்கம் என்ற இக்குற்றங்கள் மூன்றின் பெயருங்கூட அறியாதவாறு கெட்டொழியுமாயின், அவற்றால் அவனுக்கு வர இருக்கும் நோய்கள் இல்லாமல் போகும்" என்கிறது குறள்.

"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றின்
நாமக் கெடக்கெடும் நோய்" —குறள் : 360.

"அனைத்து ஆசைகளையும் விட்டு, காமம், கோபம், மயக்கம் ஆகியவற்றின் நீங்கிய வாழ்வு நடத்துகின்றவன் பேரின்பப் பெருவாழ்வு அடைவான்" என்கிறது கீதை.

"விஹாய காமான்யஹ் சர்வான் புமான்சரதி நித்ய ஸ ஹ்
நீர்மமொ நிரஹன்காரஹ் ஸ சாந்திமதி கச்சதி."
—கீதை; 2; 71.

"ஓர் அரசனுக்குத் தேவைப்படுவனவாகிய படை, குடிமக்கள், உணவு, அமைச்சு, நட்பு, அரண் என்ற ஆறு அங்கங்களையும் குறைவறக் கொண்டிருக்கும் அரசன், அரசர்களுளெல்லாம் ஆண்சிங்கம் போன்றவன் ஆவன்" என்கிறது குறள்:

"படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு." —குறள்: 381.

அர்த்த சாஸ்திரம், ஒரு நாட்டின் இன்றியமையா உறுப்புக்களாக, அரசன் உள்ளிட்டு ஆறு குறிப்பிடுகிறது. அரசன் நீங்கிய அந்த ஆறு: அமைச்சு, நாடு, அரண், படை, நட்பு, உணவு இவையாம்.

"ஸ்வாம்ய மாத்ய ஜனபத துர்க கொஸதண்ட மித்ராணி"
—அர்த்தசாஸ்திரம் : நூல்; 6; பகுதி : 1.

எடுத்த வினையை முடித்தற்பொருட்டுத் தம் நிலைமையோடு பொருந்தாதனவற்றைச் செய்வராயின், உலகத்தவர், அவற்றை ஏற்றுக்கொள்ளாது பழிப்பர்: ஆகவே உலகம் பழிக்காதனவற்றை ஆராய்ந்து செய்தல் வேண்டும்" என்கிறது குறள்.

"எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும்: தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு" —குறள்: 470.

"ஒரு பணியைத் தொடங்கும் முன்னர், அப்பணியின் திட்டம், அதைச் செயலாற்றும் செயல்முறை ஆகியவற்றை

அரசன், அமைச்சர்களோடு கலந்து ஆராய வேண்டும்'' என்கிறது பராசரன் விதிமுறை.

''யதஸ்ய கார்யம பிப்ரேதம் தத்ப்ரதி ருபகம்
மந்திரிணாஹ ப்றெச்ஹெத்.
கார்யமித மெவமாசீதெவம் வா யதி குர்யாத்''
—அர்த்தசாஸ்திரம் : நூல் ; 7 அதிகாரம் : 15.

''தான் செய்ய மேற்கொண்ட ஒரு வினையின் ஆற்றல், அதைச் செய்து முடிக்க இருக்கும் தன் ஆற்றல், அதைச் செய்யவிடாது தடுத்து நிறுத்த முயலும் பகைவர் ஆற்றல், இருவர்க்கும் துணையாக வருவோர்களின் ஆற்றல் ஆகியவற்றைச் சீர்தூக்கிப் பார்த்துத், தன் ஆற்றல் மிக்க வழியே அவ்வினையைச் செய்க'' என்கிறது குறள்.

''வினைவலியும், தன்வலியும், மாற்றான் வலியும்,
துணைவலியும் தூக்கிச் செயல்.'' —குறள் : 471.

''என்னுடைய படை ஒன்றினால், அல்லது துணைப் படைகளின் துணையால், பகைவரை அழிக்கப் போதிய ஆற்றல் என்னிடம் உளது: பகைவன் நிலை இதற்கு நேர் மாறானது என்பதை உணர்ந்து கொண்ட பின்னரே, ஒருவன் பகைநாட்டின் மீது படை எடுத்துச் செல்வன்'' என்கிறார் கௌடல்யர்.

''யதி வா பஸ்யெத்...'' ஸ்வதண்டயிர் மித்ராட வீ தண்டாயிர் வா ஸமம் ஜ்யாயம்ஸம் வா கர்ஸயிதுமுத்ஸஹெ ''...ஸம்பன்னா மெ வர்த்தா விபன்னா பரஸ்ய''
—அர்த்த சாஸ்திரம் : புத்தகம் 7 : 4.

''அறம், பொருள், இன்பம், உயிர் அச்சம் ஆகிய இந் நான்கு உபாயங்களுக்கும் தேறி நிற்கும் ஒருவனே அரசியல் பணிக்குத் தேர்ந்து எடுக்கப்படுதல் வேண்டும்'' என்கிறது திருக்குறள்.

"அறம் பொருள், இன்பம், உயிரச்சம் நான்கின்
திறம்தெரிந்து தேறப் படும்." —குறள்: 501.

அரசியல் பணிக்கு ஒருவன் நியமிக்கப்படுமுன் இது போலும் தேர்வினைக் குறிப்பிடுகிறது அர்த்த சாஸ்திரம். அவையாவன தர்ம, அர்த்த, காம, பய.

"தர்மொபதா அர்தொபதா காமொபதா பயொபதா" (விளக்கத்திற்கு அர்த்த சாஸ்திரம் புத்தகம் 1. அதிகாரம் 10 காண்க).

த்ரிவர்க பயசம்சுதானமா யான்ஸ்வெசு கர்மசு
அதிகுர்யாத்ய தாஸௌச மித்யா சார்யா
வ்யவஸ்தி தாஹ்"

"அரசியல் பணியாளன் நன்னெறியிலிருந்தது மாறுபடா திருப்பின், உலகமும் மாறுபடாது: ஆகவே, அரசன், அப் பணியாளன் செயலை நாள்தோறும் ஆராய்ந்து பார்ப்பானாக" என்கிறது குறள்.

"நாள்தொறும் நாடுக மன்னன்: வினை செய்வான்
கோடாமை கோடாது உலகு" —குறள்: 520.

பல்வேறு தேர்வுகளை வைத்து ஒருவனைத் தேர்ந்து எடுத்துப் பணியில் வைத்து விட்ட பின்னர் அப்பணியாளன் நடவடிக்கைகளை, ஒற்றர்கள் மூலம் கண்காணிக்க வேண்டியது அரசன் கடமையாகும்" என்கிறது அர்த்த சாஸ்திரம்.

"தஸ்மாத் பாஹ்ய மதிஷ்டானம் க்ரித்வா கார்யெ
சதுர்வித்வெ
ஸௌசாஸௌசம் மாத்யாநாம் ராஜ மார்கெத கத்ரிப்
ஹிப்"

—அர்த்த சாஸ்திரம்: நூல்: 1: 10

"தன்பால் முறை நாடி வருவார் கூறும் வழக்கினை நாடி, எவரிடத்தும் முகங்கொடுத்து விடாது, நடுவு நிலைமையில் இருந்து, குற்றம், குற்றத்திற்காம் தண்டம் ஆகியவற்றை அத்துறை வல்லாரோடு ஆராய்ந்து அதற்கேற்ப நடந்து கொள்வதே நீதி ஆகும்" என்கிறது குறள்.

"ஓர்ந்து, கண்ணோடாது, இறைபுரிந்து யார் மாட்டும்
தேர்ந்து செய்வஃதே முறை" —குறள் : 541.

"இவ்வுலகையும் மறு உலகையும் தண்டம் தான் காக்கிறது. நீதி வழங்குவதில், தன் மக்களையும், பகைவர்களையும், அரசன் ஒரு சேர மதிக்கவேண்டும். தர்மத்தையும் நடுநிலைமையையும் மதித்து, எவன் ஒருவன் தண்டம் வழங்குகிறானோ அவன் ஒருவனே உலகம் அனைத்தையும் வெற்றி கொள்வன்" என்கிறது அர்த்த சாஸ்திரம்.

தண்டொஹி கெவலொ லொகம் பரம் செமம் ரக்ஷதி
ராஜ்ஞாபுத்ரெ சஸ்த்ரௌ ச யத் ஹாதொஸம் சமம் த்ற்த்ஹ
அனுஸா சத்தி தர்மெண வ்யவஹாரெண, சம்ஸ்தயா
ந்யாயென ச சதுர்த்ஹென சதுரன்தாம் மஹீம் ஜயெத்.
—அர்த்தசாஸ்திரம். நூல் : 3 : அதிகாரம் 1.

"நாட்டை அறநெறியில் காக்கவேண்டிய அரசன், அவ்வாறு காக்காது போயின், அறம் கெட்ட அவன் நாட்டில், ஆக்கள், தம் பாற்பயன் தருவது குறைந்து விடும்; அந்தணர் தம் அற நூல்களை மறந்து விடுவர்" என்கிறது குறள்.

"ஆபயன் குன்றும்; அறுதொழிலோர் நூல்மறப்பர்;
காவலன் காவான் எனின்." — குறள் : 560.

தண்டமும் நீதியும் நன்கு செயல்படுத்தப்படாது விடப்படுமாயின், மூன்று வேதங்களும் அவற்றின் அனைத்து நற்செயல்களோடு மறைந்து போகும். நாடாளும் அரசனின்

க்ஷத்திரிய தர்மம் அழிந்து போகும்போது, ஆஸ்ரமவாசிகளின் கடமையும் மறைந்து போகும்'' என்கிறது மகாபாரதம்.

''மஞ்ஜெத்ரயீ தண்டநீதௌ ஹதாயாம்
ஸர்வெ தர்மாஹ் ப்ரக்ஸயெயுஹ் விருத்ஹாஹ்
ஸர்வெ தர்மாஸ்சாச்ரமாணாம் ஹதாஸ்யுஹ்
க்ஷ்ரத்ரெ நஷ்டெ ராஜதர்மெ புராணெ''

—மகாபாரதம் சாந்திபர்வம் : 112 : 28.

''எக்காலத்தும் குறையாத விளையுளையும், ஆன்று அமைந்து அடங்கிய சான்றோர்களையும், என்றும் கெட்டு அறியாச் செல்வத்தையும் ஒருங்கே கொண்டதே நாடு எனப்படும். அளவிறந்த செல்வத்தைக் கொண்டிருப்பதால், பிற நாட்டவராலும் விரும்பத் தக்கதாய், அழிவும் இல்லாமல், தனிமிக வளம்கொழிப்பதே நாடு'' என்கிறது குறள்.

''தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு.''

''பெரும் பொருளால் பெட்டக்கது ஆகி, அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.''

—குறள் : 731, 732.

''எரிபொருள், குடிநீர், உணவு, தருப்பைப்புல், மாலைகள், பரந்தகன்ற திறந்தவெளி ஆகிய இவை எந்தக் கிராமத்தில் பெருமளவில் கிடைக்குமோ, எங்கு, செல்வந்தர் குவிந்து கிடக்கின்றனரோ, மகிழ்ச்சி தரும் இனிய பண்புகளால் நிறைந்த தக்கார் பலர் எங்கு உள்ளனரோ, எது, கள்ளர்களிடமிருந்து பாதுகாப்பினைத் தருகிறதோ, அந்தக் கிராமமே நல்லவர்கள் வாழிடமாகத் தேர்ந்தெடுக்கப் படவேண்டும் எனக்கூறுகிறது, பௌதாயன தர்மசூத்திரம். [பகுதி : 2 : அத்யாயம் : 3 : சூத்திரம் : 51].

சிலப்பதிகாரம் :

தமிழில் எழுதப்பெற்ற முதல் பெருங்காப்பியம் சிலப்பதிகாரம். காப்பியவடிவம், சமஸ்கிருதத்திலிருந்து கடன் வாங்கப் பெற்றது; ஆனால் கருப்பொருளைப் பொருத்த மட்டில், முழுக்க முழுக்க முதல் நூலாம். நாம் இப்போது பெற்றிருக்கும் இந்நூல், நூலாசிரியர் கைகளால் அல்லாமல், பிற்காலத்தவர் கைகளால் எழுதப்பெற்ற, எண்ணற்ற, பாயிரம் போலும் முகப்புரைகளாலும், முடிப்புரைகளாலும், இடையிடையே நிரப்பப் பெற்றுளது. மூன்றாம் காண்டத்தில் கூறப்பட்டிருக்கும் செய்தியோடு, உரைபெறு கட்டுரைக் கூற்று மாறுபடுகிறது என்பது முன்பே எடுத்துக் காட்டப்பட்டுளது. [அதிகாரம் : 20] நூலின் மூலம் தானும், எந்தப் பாண்டியனுடை அறிவிலாச் செயல், அந்நூலின் உச்ச உணர்ச்சி நிலைக் கட்டமாம் மதுரை அழிவினைக்கொண்டுவந்ததோ, அந்தப் பாண்டியன் பெயரைக் கூறவில்லை. ஆனால், இரண்டாம் காண்டத்தின் இறுதியில் கூறப்பட்டிருக்கும் கட்டுரைதான், அவனை, ஆரியப் படையினை வென்றவனும், புறநானூறு 183-ஆம் செய்யுளைப் பாடியவனும் ஆகிய நெடுஞ்செழியனாக அடையாளம் காட்டுகிறது. "வடஆரியப் படைகளை வென்று, தென் தமிழ்நாடு முழுவதும் ஒரு குடைக் கீழ் வரக் கண்டு, குற்றம் தீர்ந்த கற்பினளாகிய அரசமாதேவியோடு, அரியணையில் இறந்து போன பாண்டியன் நெடுஞ்செழியன்" எனக் கூறுகிறது.

"வடஆரியர் படை கடந்து
தென்தமிழ் நாடு ஒருங்கு காணப்
புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
-- கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
செழியன்".

—சிலம்பு : காண்டம் : 2 : கட்டுரை : 14 - 18.

"ஆரியப் படை கடந்த" என்ற தொடர், கும்பகோணத்துக்கு அண்மையில் உள்ள பழைய போர்க்களமாம் ஆரியப் படை என்ற ஊரைக்கடந்து என்றும் பொருள் தரும் எனினும், அக்கட்டுரை ஆசிரியர், வடக்கே உள்ள ஆரியர்களின் படைகளை வென்று எனும் பொருளே தரும்வகையில், "வட ஆரியர் படைகடந்து" எனக் கொண்டுள்ளார்.

முதலாவது, இரண்டாவது காண்டங்கள்.

சிலப்பதிகாரம், புகார், மதுரை, வஞ்சி ஆகிய இம்மூன்று நகரங்களிலும் முறையே நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறும் மூன்று காண்டங்களாகப் பிரிக்கப் பட்டுளது. ஆனால், முதல் இரண்டு காண்டங்கள் மட்டுமே, முடிந்த நூலினை உருவாக்கி உள்ளன. சிலப்பதிகாரம் என்ற சொல்லின் பொருள், சிலம்பு குறித்த நூல் என்பதாம். வாணிபத்துக்காம் முதலீட்டுக்காக, மனைவியின் கால்சிலம்பை விற்க முடிவு செய்து, ஆனால், மதுரை மன்னனால் திருட்டுக்குற்றம் சாட்டப் பெற்றுக் கொலைசெய்யப்பட்ட முற்போக்கு ஊதாரியாம் கோவலன், அதனால் கடுஞ்சினம் கொண்டு மன்னனையும் சபித்து, தன்முலையில் ஒன்றைத் திருகி எறிந்து, மதுரை மாநகரை எரித்து அழித்த மனைவி கண்ணகி ஆகியோர் கதையினைக் கூறுகிறது சிலப்பதிகாரம். அதன் பின்னர், கணவனும் மனைவியும் வானுலகு அடைகின்றனர். இக்கதை முதல் இரு காண்டங்களில் கூறப்பட்டுளது; ஆகவே, அவ்விரு காண்டங்களே முற்றுப் பெற்றமுழு நூலாக ஆகிவிடுகின்றன. இரண்டாம் காண்ட இறுதியில், கணவனும், மனைவியும் மண்ணுலகை விட்டே போய் விடுகின்றனர்; சிலம்பின் கதையும் முடிந்து விடுகிறது; அதன் பின்னர், அவ்வணி குறித்து எதையும் கேட்டிலம். ஆகவே, சிலப்பதிகாரம் என்ற பெயர், முதல் இரு காண்டங்களுக்கு, மட்டுமே பொருந்தும்; அவ்விரு காண்டங்களும், உலகப் பெருங்காப்பியங்களுள், தனி சிறந்த தலையாய காப்பியம் ஒன்றை உருவாக்கி விடுத்துள்ளன. கதை, அளவுக்கு மீறிய நயத்தோடு கூறப்பட்டுளது. இயற்கைக் காட்சிகள், மக்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை விளக்கும் முறை,

வியப்பூட்டும் வகையில் தனி சிறப்பானது. ஆங்காங்கு வரும் உரையாடல்கள் உணர்ச்சிகரமானவை. நூலாசிரியர் காலத்தில் வழக்கில் இருந்த அரசர்கள் குறித்த கட்டுக் கதைகள், நூலிலிருந்து விலக்கப் படவில்லை என்றாலும், சமஸ்கிருத வடிவமைப்புக்களால் புதையுண்டு போகாத் தமிழ்ச் செய்யும் மரபுகளின் ஆற்றல் துணையால், காவியத்தின் நல்ல கட்டத்தில், கடவுளர் குறுக்கீட்டால், நெருக்கடி தீரவைக்குள் முறை, அறவே காணப்படவில்லை; நம்புதற்கியலாத் திகைப்பூட்டும் நிகழ்ச்சிகளை, மனம் போன போக்கில் நுழைக்க முனையும் காவிய ஆசிரியர்களின் இயல்பும் நன்கு கட்டுப்பட்டுளது. காவியத் தலைவர்கள் அனைவரும் எளிய பொது மக்கள்; அந்நூலின் பொது மக்கள் நலம், இயற்கை நிலைகடந்த நிகழ்ச்சிகளின் இடை நுழைவால், ஒளிகுன்றச் செய்யப்படவில்லை. ஆகவே, இக்காவியம், சில நிலைகளில், இராமாயணம், இழந்த சொர்க்கம் போலும் காவியங்களினும் தனிசிறப்பு வாய்ந்தது.

மூன்றாம் காண்டம் :

மூன்றாம் காண்டமாகிய வஞ்சிக் காண்டம், சேரன் செங்குட்டுவன் என்ற அரசனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, அவன் பெருமை, அவனுடைய வட நாட்டுப் படையெடுப்பு ஆகியன பற்றிக் கூறுகிறது. வட நாட்டுப் படையெடுப்பின் நோக்கம், கண்ணகி சிலைக்கான கல்லை இமயத்திலிருந்து கொண்டு வருவதாக ஆக்கப்படுவதன் மூலமும், ஆரிய தமிழ் மரபு வழிபாடுகள் தொடர, கண்ணகிக்குப் பெருமை செய்ய, அச்சிலை நிறுவப்பட்ட நிகழ்ச்சியைத், தொல்காப்பியப் பொருளதிகாரம் வகுக்கும் விதி முறைகளையொட்டி விளக்கிக் கூறுவதன் மூலமும், முதல் இரு காண்டங்களுடனான தொடர்பு மேற்கொள்ளப் பட்டுளது.

'காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல்
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்.''
—தொல் : பொருள் : 60 : 19-20.

இவ்விழாவின் பல்வேறு நிகழ்ச்சிகளாவன: கல் எடுத்தல், அக்கல் மீது உருவம் வரைதல், கல்லை நீராட்டல், நிலத்தில் நடுதல், வழிபாடு செய்தல், இறுதியாக வாழ்த்தல். இதற்கேற்ப, இப்பொருள் பற்றிக்கூறும் மூன்றாம் காண்டத்தின் அதிகாரங்கள், முறையே, காட்சிக்காதை, கால்கோள்காதை, நீர்ப்படைகாதை, வழிபாடாம் சிறப்பிற்பெரும் படையினை உள்ளடக்கிய நடுகற்காதை, மற்றும் வாழ்த்துக் காதையாம்; இவ்வகையால், இம்மூன்றாம் காண்டம், தொல்காப்பியம், இலக்கியம் கண்டதற்கு இலக்கணமாம் நிலையிலிருந்து, இலக்கியங்களுக்கு இலக்கணம் வகுக்கும் நிலைக்கு மாறிவிட்ட காலத்தைச் சேர்ந்தது ஆகிறது.]

ஆகவே, மூன்றுவது காண்டம், எந்தவிதத் தகுதியாம் உரிமையோடும், சிலப்பதிகாரம்—சிலம்புபற்றிய நூல் - என அழைக்கப்படுதல் இயலாது. முதல் இரு காண்டங்களாம் ஒரு முழு நூலை இயற்றிய ஆசிரியர், காற்சிலம்பைத் தம் கருத்துக்கு அப்பாலும் துரத்திவிட்ட பின்னர், தம்முடைய பாட்டுடைத் தலைவன் தலைவியரை வானுலகிற்கு வழி அனுப்பி வைத்துவிட்ட பின்னர், ஒரு செங்குட்டுவன் புகழ் பாடுவதே தன்னுடைய தலையாய குறிக்கோளாகக் கொண்ட மூன்றாம் காண்டத்தை இணைப்பதன் மூலம், தம் காவியக் கட்டுக் கோப்பினை, வேண்டுமென்றே சிதைத்து விடுவாரா என்ற கேள்வி, ஆய்வுக்கு உரியதாகும். அத்துணைப் பெரும் புலவர், தம்முடைய நூலை, அவ்வாறு கெடுத்து விடுவார் என நான் எண்ணவில்லை. மேலும், முதல் இரு காண்டங்களில் ஒளிமறைவு காய்மறைவாகப் பின்னணியில் இருந்த இயற்கை கடந்த இறைமை நிகழ்ச்சிகள் இம்மூன்றாம் காண்டத்தில், நனிமிக முக்கியத்துவம் பெற்றுள்ளன. மேலும், முதல் இரு காண்டங்களில், கோவலனும், கண்ணகியும், புகாரிலிருந்து, சீரங்கம் வழியாக, மதுரை சென்ற நாடு, பற்பல காதைகளில், மிகமிக நுண்ணிதாக, நனிமிக அழகாக விளக்கப்பட்டுளது. ஆனால், மூன்றாம் காண்டத்தில், நீலகிரியை விட்டு நீங்குகின்றான் செங்குட்டுவன்: அடுத்தகணமே, கங்கைக் கரையில், காணப்படுகின்றான்: திரும்பும் போதும் அதுவே நிலை,

அவ்வகையில், செங்குட்டுவன் கடந்து சென்றிருக்கவேண்டிய, தக்கணம், விந்தியமலைச்சாரல், கங்கைப் பெருவெளிகளின் இயற்கைக் காட்சிகளை விளக்கிக் கூறும், ஒரு பொன்னான வாய்ப்பினை ஆசிரியர், கை நழுவ விட்டுள்ளார். மேலும், பௌத்தர்களால் பெரிதும் விளம்பரப் படுத்தப்பட்ட-போன, பிறப்பின் உயிர் வாழ்க்கை பற்றிய கதைகள் இதில் மிகுந்து உள்ளன. ஆகவே, இந்நூலின் யாப்பிலக்கண அமைதியின் திறனாய்வு மூலமும், சொல் நடை, உவம உருவக அணிகளின் ஆட்சிமுறையை ஆராய்வதன் மூலமும், இம்மூன்றாம் காண்டமும், முதல் இரு காண்டங்களின் ஆசிரியராலேயே இயற்றப்பட்டதுதானா என்பதைத், தகுதி வாய்ந்த தமிழ்ப் பேராசிரியர்கள் திறனாய்வுசெய்து காணவேண்டும் எனக் கருத்தறிவிக்கின்றேன்.

## செங்குட்டுவன்

செங்குட்டுவன், மூன்றாம் காண்டத்துப் பாட்டுடைத் தலைவன். நூலாசிரியர், இவனைப் பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்து ஆசிரியர் பரணரின் பாட்டுடைத் தலைவனான கடல் பிறக்கு ஓட்டிய வேல்கெழுகுட்டுவனாகக் கொண்டு, அப் பத்தில் அக்குட்டுவனுக்குக் கூறப்பட்டிருக்கும் பெருஞ் செயல்களை இவனுக்கும் உரியனவாக ஏற்றிக்கூறியுள்ளார். ஆனால், செங்குட்டுவன் என்ற பெயரோ, அவனுடைய வட இந்தியப் படையெடுப்போ பத்துப்பாட்டில் குறிப்பிடப்பட வில்லை. குட்டுவன், சேரல் போல்வன, கிள்ளி, வளவன் போல்வன சோழ அரசர்களின் பட்டப்பெயர்கள் ஆதல் போல, செம்பியன் வழுதி போல்வன. பாண்டிய அரசர்களின் பட்டப்பெயர்கள் ஆதல்போல, குட்டுவன், சேரல் போல்வன, சேர அரசர் அனைவர்க்கும் வழங்கும் பொதுவான பட்டப் பெயர்களாம். யாரேனும் ஒரு அரசனுக்கு ஒரு குறிப்பிட்ட பெயர் கொடுக்கப்பட வேண்டுமாயின் [சிறப்பிலா வெறும் காரணங்களுக்கு, வெறும் குலப்பெயர் மட்டுமே போதும் ஆதலாலும், பொதுவாக அரசர்களின் இயற்பெயர்களை ஆள்வதற்கு எதிர்ப்பான ஒரு பொது உணர்வு நிலவுவதாலும்

அது நிகழ்வதில்லை) குடிப்பெயர்க்கு முன்னர் ஒரு சிறப்பு அடைமொழி அளிக்கப்படும்: உ-ம்: பெருஞ்சேரல்; கடல் பிறக்கோட்டிய வேல்கெழுகுட்டுவன்; பெருநற்கிள்ளி, கரிகால்வளவன்; நெடுஞ்செழியன்; உக்கிரப்பெருவழுதி; ஆரிய நாகரீகம் பரவி, அரசர்கள் சமஸ்கிருத பட்டங்களையும் கடவுள்களின் சமஸ்கிருதப் பெயர்களையும் ஏற்றுக்கொண்ட காலம் வரை, தமிழ் அரசர்களால் மேற்கொள்ளப்பட்ட இயற்பெயர்கள் இவ்வகையைச் சேர்ந்தனவே. ஆகவே, கடல்பிறக்கோட்டிய வேல்கெழுகுட்டுவன், செங்குட்டுவன் ஆகிய இரண்டுமே இயற்பெயர்களாக, இவ்விருவரும் ஒருவனே ஆயின், இது ஒருவனே இரண்டு பெயர்களைக் கொண்டமைக்கான ஒரு வழக்காம். ஆனால், பழங்காலத்தில் அது வழக்காறு அன்று. பரணர் பாடிய பதிற்றுப்பத்தின் பாட்டுடைத் தலைவனின் வெற்றிச் செயல்கள் எத்துணை நம்புதற்கு உரியவோ, அத்துணை நம்புதற்கு ஏலாதன. சிலப்பதிகாரம் மூன்றாம் காண்டத்தில் விளக்கப்பட்டிருக்கும் செங்குட்டுவனின் வெற்றிச் செயல்கள். அவன் நீலகிரியிலிருந்து, கங்கைக் கரைக்கு, எவ்வித இடையூறும் இன்றிப் படையெடுத்துச் சென்று விடுகிறான். சேரநாட்டின் வட எல்லைக்கண் உள்ள நீலகிரியிலிருந்து கங்கை வெளிவரையும் ஆட்சி செலுத்திய நூற்றுவர் கன்னர், செங்குட்டுவனுக்கு அவன் குறித்த இடத்தை அடையப் பணிந்து துணை புரிந்ததாக நூல் கூறுகிறது. நூற்றுவர் கன்னர் என்ற தொடர், சாதகணி என்பதன், பிழைபடுமொழிபெயர்ப்பாதல் அல்லது வேறு ஆகாது. சாதகணியின் ஆட்சி கி. பி. 77க்கு முன்னர்த்தான், கங்கைவரையும் பரவியிருந்தது. அதன் பின்னர்ச் சாக பல்லவரின் பெருகிவரும் ஆற்றலுக்கு முன்பாக மெல்ல மெல்லச் சுருங்கத் தொடங்கிவிட்டது. பின்னர், அம்மூன்றாம் அதிகாரம், ஆங்கு இருந்தற்கான இலக்கியம் அல்லது கல்வெட்டுச்சான்று, வேறு எதுவும் இல்லாத, கங்கைக்கு அப்பால் உள்ள எண்ணற்ற அரசர்களைச் செங்குட்டுவன் வெற்றி கொண்டதாகவும், அவ்வரசர்களில் இருவர், மறைந்துபோன கண்ணகிசிலைக்காம் கல்லைத் தம்

தலையில் சுமந்து வந்ததாகவும் கூறுகிறது; கங்கைக் கரை மன்னர்களோடு போரிடுவதற்குத் தேவைப்படும் அத்துணைப் பெரிய படையை வழிநடத்திச் செல்வது என்பது, இந்திய நாட்டின் நிலஇயல் கூறுபாடுகள் பற்றி ஏதும் அறியா ஒரு தமிழ்ப் புலவரால் மட்டுமே கற்பனை செய்து பார்க்கக்கூடிய ஒரு நிகழ்ச்சியாம் ஆதலின், இவை அனைத்தும் வெறும் பாட்டிக்கதைகளே ஆதல் வேண்டும். தமிழ்ப்படை ஒன்று, கங்கைவரை படையெடுத்துச் சென்றமைக்கு, இந்திய வரலாறு ஒரேயொரு நிகழ்ச்சிக்கு மட்டுமே இடம் அளித்துளது; அது, எவனுடைய ஆட்சி மகாநதி வரையும், படையெடுப்பிற்கு முன்பாகவே பரவி இருந்ததோ, அந்த ராஜேந்திர சோழ தேவரின் நாற்படை. அம்மகாநதியின் கரையிலிருந்து கங்கை, ஒரு சிறு தொலைவே, டெல்லியி லிருந்து இராமேஸ்வரம் வரை நடைபெற்ற ஒரே படை அணி வகுப்பிற்கான் பிறிதொரு நிகழ்ச்சி, மாலிக்காபூரின் படையெடுப்பு. ஆனால் தெலுங்கானத்தின் மையப்பகுதி வரை, அதாவது பாதிக்கும் மேலான பகுதி டெல்லி சுல்தான் ஆட்சியின் ஒரு பகுதியாம்: இக்காரணங்களால், செங்குட்டு வனின் வடநாட்டுப் படையெடுப்பு, இந்திய நிலநூல் இயல்பு அறியா அப்பாவிப் புலவரால் கண்டு பிடிக்கப்பட்ட ஒன்று என்ற முடிவுக்குத் தூரத்தப்படுகிறோம்; இது, இந்திய வரலாறு பற்றி ஏதும் அறியாதவர்க்கு மட்டுமே ஏற்புடைய தாகத் தோன்றும். மூன்றாம் காண்டம், முழுநூலுக்கான ஓர் பின்னிணைப்பு அன்று; அதுவும், முழுநூலின் உண்மையான ஒரு பகுதியே என்பது மறுப்பின்றி ஒப்புக் கொள்ளப்படுமாயினும், அதைத் தென்னிந்தியாவின் பண்டை வரலாற்றுக்கான நம்பத்தகு வரலாற்று மூலமாக ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பதற்கு, இது, பிறிதொரு காரணமாகும்.

## கண்ணகி வழிபாடு

செங்குட்டுவனால் நிறுவப்பட்டு மாளுவ, உறையூர், இலங்கை அரசர்களாலும் மேற்கொள்ளப்பட்டதாகக் கூறப்

படும் கண்ணகி வழிபாடு குறித்தே, மூன்றாம் காண்டம் பெரிதும் சிறப்பாகக் கருத்தில் கொண்டுளது: இவ்வழிபாடு குறித்த அறிகுறி ஏதும், இந்தியாவில் எங்கும் காணப்பட வில்லை: இலங்கையில் அது இன்னமும் ஓரளவு நடை முறையில் உளது: அந்நாட்டு பௌத்த சமயம், அதற்கு ஓரளவு இடம் கொடுத்துளது: தென்னிந்தியாவில், இதற்கு மாறாக, இங்கு அங்கு என எண்ணாதபடி எங்கும் பரவியிருக்கும் ஒரே பத்தினி வழிபாடு, கண்ணகி வழிபாடு அன்று: காளியின் ஒரு கூறாக மதிக்கப்பெற்று, ஐவர்க்கும் மனைவியாயினும் சிறந்த பத்தினியாக மதிக்கப்படும் திரௌபதியாக ஒன்றுபடுத்திக் கொள்ளப்பட்ட, சிற்றூர்க் காவல் தெய்வத்தின் பழைய வழிபாட்டு முறையின் திருந்திய முறையே ஆம். ஆகவே, சிலப்பதிகாரத்து மூன்றாம் காண்டம், திரௌபதி வழிபாட்டு நெறிக்குப் போட்டியாகக், கண்ணகி வழிபாட்டு நெறியை நுழைக்கும் நிறைவேறா முயற்சியினைக் காட்டுகிறது என்பது நம்பக் கூடியதே.

## மேலும் ஆராய்ச்சி தேவை

ஈண்டுக்கூறிய அனைத்தும், சிலர்க்கு அதிலும் குறிப்பாக, உண்மையில் நனிமிக அண்மைக் காலத்தனவாய பாயிரம், கட்டுரை, உரைபெறு கட்டுரை உரைகள் ஆகியவற்றில் கூறப்பட்டிருப்பனவற்றோடு, சிலப்பதிகார மூலத்தில் கூறப் பட்டிருக்கும் ஒவ்வொரு கூற்றையும் வேதவாக்காகவே மதிக்கும் ஒரு சிலர்க்குக் குறைகாணும் நோக்கோடு மேற்கொண்ட திறனாய்வு முடிவுகளாகத் தோன்றக் கூடும்: ஆனால், நான் கூறியிருக்கும் தற்காலிகமாகக் கொள்ளத்தகும் இக்கருத்துக்கள் அந்நூலை, இக்காலத்திறனாய்வு நெறிப்படி ஆய்வு செய்தற்கு வழிவகுக்கும் என நம்புகிறேன்: சிலப்பதிகார மூலத்தில் கூறப்பட்டிருப்பனவற்றையும், பாயிரத்தில் கூறப்பட்டிருப்பனவற்றையும் மணிமேகலையில் கூறப்பட்டிருப்பனவற்றோடு ஒன்று கலப்பதன் மூலம் மணிமேகலையைப் பாடியவராகக் கருதப்படுபவரும், சிலப்பதிகாரத்து இறுதிப் பேரழிவு நிகழ்வுற்றபோது

மதுரையில் இருந்தவராகக் கருதப்படுபவருமாகிய சாத்தனார் கொடுத்து உதவிய செய்திகளின் அடிப்படையில், சிலப்பதிகாரம், சமணத்துறவியும், செங்குட்டுவன் உடன் பிறந்தவருமாகிய இளங்கோவடிகளால் பாடப்பெற்றது என்ற கருத்து புனைந்து விடப்பட்டது. இரட்டைக் காப்பியங்கள் பற்றிய ஒரு திறனாய்வு, தமிழர் கருத்துக்களும் பழக்க வழக்கங்களும், தமிழ் மக்கள் வாழ்வில் ஒன்றைப் போலவே பிறிதொன்றும் இன்றியமையாதனவாதலின், அவை இரண்டும் இரண்டறக் கலந்து நிற்கும் ஒரு கால நிலையைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது என்பதையும், ஆரிய (பௌத்த) சமயநெறி, பழந்தமிழ்ச் சமய நெறியை இடம் இழக்கச் செய்து விட்ட காலத்திய, மணிமேகலையில் வரும் கதாபாத்திரங்கள் அனைவரும் சமஸ்கிருதப் பெயர்களையே கொள்ளுமளவு, ஆரிய நாகரீகம், தமிழ் நாட்டை ஆட்சி செய்யும் காலத்திய தமிழ் நாட்டு வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் மணிமேகலை, அத்தகையதன்று என்பதையும் உணர்த்துகிறது. ஆகவே, புனைந்து விடப் பட்ட அக்கருத்து ஏற்றுக் கொள்ளக்கூடியதன்று. இந் நூலில் இடம் பெற்றிருக்கும் தருக்கம், உயிர் உண்மை இன்மை குறித்த வறட்டுக் கோட்பாடு ஆகியன பற்றிய ஆய்வுகள், அதன் காலம், ஏழாம் நூற்றாண்டாம் எனவும், அக்காலத்திற்கு முன்னர், அது இயற்றப்பட்டிருக்க இயலாது எனவும் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றன. [இப்பொருள் பற்றிய, திரு. எஸ். குப்புசாமி சாஸ்திரியாரின் விரிவான ஆராய்ச்சியினைக் காண்க: Journal of Oriental Research Madras. Vol. I. Page 192-201] சிலப்பதிகாரம், அதற்கு மாறாக ஆரிய நாகரீகமும், ஆரியச் சமய வழிபாட்டு நெறிகளும் அப்பொழுதுதான் மெல்ல இடம் பெறத் தொடங்கிய, பழந்தமிழ் நாகரீகமும், பழந்தமிழ்ச் சமய வழிபாட்டு நெறிகளும், சமுதாயத்தின் அடிநிலைக்கு இன்னமும் தள்ளப்படாத, அதன் காரணத்தால் புலவர்களின் கருத்தெல்லையிலிருந்து அகற்றப்படாத, கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். மணிமேகலை, சமணப்

பெருங்காப்பியமாம் சீவகசிந்தாமணிக்குப் போட்டியாக எழுந்த பௌத்தப் பெருங்காப்பியமே; மணிமேகலை; பரத்தை மாதவியின் மகளாம் என்ற உறவு ஒரு புறம் இருக்கவும், அது சிலப்பதிகாரத்திற்குத் துணையாம் பெருங் காப்பியம் அன்று. மணிமேகலையில் இடம் பெற்றிருக்கும், மறுபிறவி குறித்த கட்டுக் கதைகளும், தருக்க வாதங்களும், ஆரிய தமிழ்க் கடவுள்கள் ஒன்றுபடுத்தப் பெறுவதாம் தொடர்ந்து நிகழ்ந்து வருவதான உண்மை நிகழ்ச்சியினைப் படிப்பவர் எவரும் காணக்கூடியதான, சிலப்பதிகாரம் இரண்டாம் காண்டத்து வேட்டுவ வரியின், கொற்றவை வழிபடும் காலினியின் கண்ணகி பாராட்டு, அதைத் தொடர்ந்த கொற்றவை வழிபாடு, ஆய்ச்சியர் குரவையின், வரஇருக்கும் கேட்டினைத் தவிர்ப்பான் வேண்டி, ஆயர் மகளிர் மேற்கொள்ளும் குரவைக் கூத்துக்களோடு நுண்ணிய வேறுபாடுடையவாய் அமைந்துள்ளன: அகநானூற்றில், வேங்கடம், ஒரு பகுதி திரையர்க்கும் ஒரு பகுதி கள்ளர்க்கும் உரியதாகக் கூறப்பட்டுளது: மேலும், அம்மலைமீது இடம் பெற்றிருக்கும் புகழ் வாய்ந்த கோயில் குறிப்பிடப்படவே இல்லை; ஆனால், சிலப்பதிகாரம் அது எழுதப் பெற்றபோது இருந்ததாக இரண்டு விஷ்ணுக் கோயில்களை விளக்கியுள்ளது: ஆகவே, சிலப்பதிகாரம் பழைய தொகைநூல்களில் தொகுக்கப்பெற்றிருக்கும் பாடல்களிலும், காலத்தால் பிற்பட்டதே ஆம். சிலப்பதிகாரம் கூறும் விஷ்ணு விளக்கம் வருமாறு: "கடல் நீர் உண்டு கறுத்த நீலமேகம், உயர்ந்த பொன்மலை மேலே, பக்கங்களில் விரிந்து மிகாமல் ஒருசேரப் படிந்து கிடப்பதுபோல, படம் விரித்து எழுந்த ஆயிரம் தலைகளையுடைய, யாராலும் அணுகுதற்கு அரிய ஆற்றல் வாய்ந்த பாம்பணைப் பள்ளி மீது, தேவர்கள் பலரும் தொழுதேத்த, அலைவீசும் காவிரியாற்றின் இடைக்குறையில், திருமகளை மார்பில் கொண்ட திருமால் படுத்திருக்கும் திருக்கோலமும்:"

"நீலமேகம், நெடும் பொன் குன்றத்துப்
பால் விரிந்து அகலாது படிந்தது போல

ஆயிரம் விரித்து எழு தலையுடை அருந்திறல்
பாயல் பள்ளிப் பலர் தொழுது ஏத்த
விரிதிரை காவிரி வியன் பெரும் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்''

—சிலம்பு : 11 : 35–40.

''புகழ்மிக்க அருவி நீரை உடைய வேங்கடம் என அழைக்கப்படும் மலையுச்சியில், ஞாயிறும் திங்களும் இரு பக்கங்களிலும் ஒளி விட்டுக்கிடக்க, இடைப்பட்ட பகுதியில், நல்ல நீலநிறம் வாய்ந்த மேகம் மின்னலாகிய ஆடையுடுத்து வில்லாகிய அணி பூண்டு நின்றதுபோல, பகை அழிக்கும் சக்கரத்தையும் சங்கையும், அழகிய தாமரைக் கைகளில் வலனும் இடனுமாக ஏந்தி, அழகிய ஆரத்தை மார்பில் பூண்டு, பொன்னாலாம் பூவாடை உடுத்து செங்கண்மாலாம் நெடியோனின் நின்ற திருக்கோலம்.''

''வீங்கு நீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்கு உயர் மலையத்து உச்சிமீமிசை,
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத்தானத்து
மின்னுக் கோடி உடுத்து விளங்குவில் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்,
பகைஅணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்
தகை பெறு தாமரைக் கையின் ஏந்தி
நலம் கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணம்''

—சிலம்பு : 11 : 41-51.

சிலப்பதிகாரத்தில் உள்ள சீரங்கத்திலும், வேங்கடத்திலும் உள்ள தெய்வத்திருமேனிகளின் இவ்வருணனை அச்சிலப்பதிகாரம், தொகைநூல்களில் மிகப்பழமை

வாய்ந்தனவான நான்கு தொகை நூல்களில் உள்ள பழம் பாடல்களோடு, சமகாலத்தது என்ற கூற்றினை அறவே மறுத்து விடுகிறது. கடல் பிறக்கோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பரணர் பாடியுள்ளார்; மூன்றாம் காண்டத்தைப் பாடியவராகக் கருதப்படும் இளங்கோ வடிகளார், அக்காவியத்துக்குரிய ஏனையரோடு, அக்கடல் பிறக்கோட்டிய வேல்கெழுகுட்டுவனாகவே கருதப்படும் செங்குட்டுவனையும் பாடியுள்ளார் என்ற இச்செய்திகளின் அடிப்படையில்தான் சமகாலத்தது என்ற அக்கூற்று நிற்கிறது. ஆனால், வேங்கட மலையை, அதன்மீது உள்ள திருக்கோயில் பெரும் புகழ் பெற்று விட்ட பின்னர்ப் பாடுவார் எவரும், அக்கோயிலைக் குறிப்பிடாமல் பாடுவது இயலாது என்பது உண்மையாகவும், பரணரோ, அல்லது, உண்மையில் அவரோடு சமகாலத்தவர்களாய பிற புலவர்களோ, வேங்கடத்தைத், தன் உச்சியில் அத்தகு புகழ் பெற்ற கோயிலைக் கொண்டிருப்பதாகப் பாடவில்லை. ஆகவே, சிலப்பதிகார ஆசிரியர், அவர் யாராக இருப்பினும், பரணரைக் காட்டிலும் காலத்தால் மிகவும் பிற்பட்டவராதல் வேண்டும். ஆரிய விஷ்ணுவை வழிபடும் திருக்கோயில்கள், தமிழ்நாட்டில் எழுந்து விட்டது மட்டுமல்லாமல், மிகப்பெரிய புண்ணிய இடங்களாக, அவை பெரும்புகழ் பெற்று விட்ட காலத்தில் வாழ்ந்தவராதலும் வேண்டும்.

பரணர் போல்வார் பாடவில்லை என்பது போலும், இல்லாமையை அடிப்படையாகக் கொண்டு செய்யும் வாதம் வலுவற்ற ஒன்றுதான். என்றாலும், அதைப் பிற சான்று களோடு கொண்டு நோக்கும்போது, அதற்கும் சிறிது வலு ஏற்றப்படுகிறது.

தமிழ்நாட்டின் வடஎல்லையைக் குறிப்பிடும்போது, சிலப்பதிகார ஆசிரியர், விஷ்ணுவுக்குரிய மலை எனும் பொருளில் "நெடியோன் குன்றம்" (சிலம்பு: 8 : 1.) எனக் குறிப்பிடும் அளவு, சிலப்பதிகாரக் காலத்தில், வேங்கடத் திருக்கோயில் புகழ் பெற்றுத் திகழ்ந்தது. நெடியோன்

குன்றம் என்ற அத் தொடர், அக் கோயில், சிலப்பதிகாரக் காலத்தில் பெற்றிருந்த அத்துணைப் பெரும்புகழை, அகநானூற்றுப் புலவர்கள் காலத்திலும் பெற்றிருந்திருந்தால் அதுபோலும் ஒரு வருணனை அப்புலவர்களின் உள்ளத்தி லிருந்து தப்பியிருக்கும் என்பதை நம்புவது அரிதாகுமளவு, அத்துணை இயல்பாக எழுந்துளது.

சிலப்பதிகாரச் சொல் நடை, பழைய தொகை நூல் களின் செய்யுள் நடையினும் நவீனமானது; பழம்பெருஞ் சொற்களைக் குறைவாகவே கொண்டுளது என்பதை உணர்த்துகிறது என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாம். இக்கால மக்கள், பண்டைத் தொகை நூல் பாக்களினும், இக் காவியத்தைப், பெரும் இடர்ப்பாடு இல்லாமலே புரிந்து கொள்வது இயலும் என்பதும் உண்மை. மணிமேகலை, மேலும் அண்மைக் காலத்ததாகவும், சொல்லளவில், இக் காலத்தவர்க்குச் சிலப்பதிகாரத்தைக் காட்டினும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடியதாகவும் காணப்படுகிறது.

இப் பகுதியை முடிக்கும் முன்னர், தற்காலிகக் கருத்தாம் என, நான் தொடக்கத்தில் கூறிய சிலப்பதிகாரம் முதல் இரு காண்டங்கள், தனிமிகச் சிறந்த ஒரு வீரகாவிய நூலாக மூன்றாவது காண்டம், தானே கற்பித்துக் கொண்ட ஒரு வீரனின் வெற்றிப் பெருஞ்செயல்கள் பற்றிய கற்பனைக்கதை நூலாக, இரு வேறு ஆசிரியர்களால் இயற்றப் பெற்ற இருதனி நூல்களைக் கொண்டதாம் என்ற என் முடிவினைத், திரும்பவும் வற்புறுத்திக் கூற விரும்புகின்றேன். அதை வரலாற்று மூலமாகக் கொள்வது, பொசிமியா நாட்டு நில இயல் நூலுக்கு சேக்ஷ்பியரின் நாடகங்களை ஆதாரமாகவும், மிட்-சம்மர் நைட்ஸ் ட்ரீம் என்ற நூலை, வரலாற்றுக்கு

ஆதார நூலாகவும் கொள்வது போலாம்; இன்றைய இலக்கியத் திறனாய்வு, வரலாற்றுத் திறனாய்வு விதிமுறைகளை நன்கு உணர்ந்த தமிழ்ப் பேராசிரியர்களை, இதுபற்றி மேலும் ஆய்வு செய்து, ஒன்று, இதை உறுதி செய்யுங்கள்; அல்லது ஏலாது என மறுத்து ஒதுக்குங்கள் என வேண்டிக் கொள்கிறேன். பாயிரங்களும், முடிவுரை போல வரும் கட்டுரைகளும், உரைபெறு கட்டுரைகளும், பிற்கால எழுத்தாளர் ஒருவரால் எழுதப்பட்டனவாதலின், இவ்வினா குறித்த ஐயப்பாட்டினைத் தீர்ப்பதில், சிறிதளவே துணைபுரிய இயலும்.

## 29ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு 1

**கோவலனைக் கொன்ற பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்பது சிலப்பதிகாரத்துள் கூறப்படவில்லை.**

மதுரைக் காண்டத்து முடிவில் இடம் பெற்றிருக்கும் கட்டுரை, வடவாரியர்க்குரிய படையை வென்று, தமிழ்நாடு முழுவதையும் ஒரு குடைக்கீழ் வைத்து ஆண்டு, கற்புடைய மனைவியோடு அரியணையில் உயிர்விட்ட பாண்டியன், நெடுஞ்செழியன் எனக்கூறுகிறது:

""வடவாரியர் படை கடந்து
தென் தமிழ் நாடு ஒருங்குகாணப்
புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
நெடுஞ்செழியன்"".

ஆராய்ந்து பாராதே, கோவலனைக் கள்வன் எனக் கொண்டு, கொன்று, மதுரை அழிவிற்குக் காரணமாகிய பாண்டியன் பெயர், நெடுஞ்செழியன் என்பதை, இக்கட்டுரை தான் தெரிவிக்கிறதே ஒழிய, மூலநூலில் அவன் பெயர் குறிப்பிடப்படவில்லை என்கிறார். திருவாளர். பி.டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள்: [பக்கம்: 596]

திரு. பி. டி. எஸ். அவர்களின் இக்கூற்று உண்மைக்கு மாறானது.

சோழ நாட்டில் நிகழ்ந்த சிலப்பதிகாரச் செய்திகளைக் கூறும் புகார்க் காண்டத்தில், அச்சிலப்பதிகார நிகழ்ச்சிக் காலத்தில் புகார் நகராண்ட சோழ மன்னனைக் குறிப்பிடும் இடங்களில் எல்லாம், சோழ அரசர் அனைவர்க்கும் பொதுப் பெயர்களாம்; சென்னி, செம்பியன், காவிரிநாடன், உறைப்

புலிக்கொடித்தேர் உரவோன் என்பனபோலும் பெயர்களால் குறிப்பிடுவதல்லது. அவன் இயற்பெயரை ஓரிடத்திலும் குறிப்பிடாத இளங்கோவடிகளார், பாண்டி நாட்டில் நிகழ்ந்த சிலப்பதிகார நிகழ்ச்சிகளைக் கூறும், மதுரைக் காண்டத்தில், அக்காலை, பாண்டி நாடாண்ட மன்னவனைக் குறிப்பிடுங்கால், பல இடங்களில் கொற்கை வேந்தன், கௌரியர், தென்னவன், பஞ்சவன், பாண்டியன், பொதியில் பொருப்பன், வேம்பன் என்பன போலும், பாண்டியர் குலத்தவர் அனைவரையும் குறிக்கும் பொதுப் பெயர்களால் குறிப்பிட்டிருந்தாலும், சிலப்பதிகார நிகழ்ச்சியோடு தொடர்புடைய பாண்டிய மன்னனைச், செழியன் என்ற அவன் இயற்பெயரால், மதுரைக் காண்டத்தில் மூன்று இடங்களிலும், வஞ்சிக் காண்டத்தில் ஓரிடத்திலும் ஆக நான்கு இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

கோவலனும், கண்ணகியும், மாதவத் தாட்டியோடு, வைகையை மரப்புணையில் கடந்து, மதுரை மூதூரைச் சார்ந்த புறஞ்சேரியில் தங்கி இரவைக்கழித்து, மதுரைமாநகர் விழித்துக் கொண்டதை விளக்கும் நிலையில், இளங்கோ வடிகளார், மதுரையைக் குறிப்பிடும் போது, பகையரசர் தலை ஒடுங்க வாளேந்தும் "செழியன்கூடல்" எனக் குறிப்பிட்டுள்ளார்.

"வேந்துதலைபணிப்ப ஏந்துவாள் செழியன்
ஓங்குயர் கூடல்."

—14. ஊர் காண்காதை : 5-6.

நீதிகேட்டு வழக்காலை, கையில் சிலம்பேந்திக் காவலன் கோயில் முன் நின்று. "சிலம் பேந்திய கையளாய்க் கணவனை இழந்தாள் ஒருத்தி கடைவாயிலில் காத்திருக்கிறாள்" என்பதைக் காவலன் பால் கடிதின் அறிவிப்பாயாக எனக் கண்ணகியால் ஏவப்பட்ட வாயிற்காவலன், பாண்டியன் முன்சென்று, கூறவேண்டியதைக் கூறுவதன் முன்னர், மன்னனை வாழ்த்தும் மரபினையொட்டி வாழ்த்துங்கால்,

''கொற்கை வேந்தே வாழி! தென்னப் பொருப்பின் தலைவ வாழி! தென்னவ வாழி! பஞ்சவ வாழி!'' எனப் பாண்டியரைப் பொதுவகையால் குறிக்கும் பெயர்களைக்கூறி வாழ்த்தியதற்கிடையே, ''செழிய வாழி!'' என அவன் இயற்பெயர் கூறி வாழ்த்த வைத்து, அக்காலை அரசாண்டவன் பெயர் செழியன் என்பதை வாயிற்காவலன் வாயில் வைத்தும் விளக்கியுள்ளார்.

''செழிய வாழி! தென்னவ வாழி!''
—20. வழக்குரை காதை : 32.

''பார்ப்பார் அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர்

மூத்தோர், குழவி எனும் இவரைக் கைவிட்டுத் தீத்திறத்தார் பக்கமே சேர்க'' எனக் கண்ணகியால் ஏவப்பட்ட, அக்கினியின் எரிநாக்கு எவ்விடத்தையும் பற்றி அழிக்கவும், மதுரைமாநகரைக் காத்துநிற்கும் காவல் தெய்வம், தம் கடமையை மறக்கவும். [மதுரை மன்னன், கண்ணகிக்குச் செய்த கொடுமையால் வளையாத செங்கோல் வளைந்துவிட்டது பொறாது, அரசமாதேவியோடு அரசு கட்டிலில் இறந்தது அறியாத காரணத்தால்] ஆசான் முதலாம் ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும் செயல் இழந்து நின்றது கூறும்பகுதியில், பாண்டியன் மன்னனுக்குச் செழியன் என்றே பெயர் சூட்டியுள்ளார் இளங்கோவடிகளார்.

''ஏவல் தெய்வத்து எரிமுகம் திறந்தது,
காவல் தெய்வம் கடைமுகம் அடைத்தன,
அரைசர் பெருமான் அடுபோர்ச் செழியன்
வளைகோல் இழுக்கத்து உயிராணி கொடுத்து ஆங்கு,
இரு நில மடந்தைக்குச் செங்கோல் காட்டப்
புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
அரைசு கட்டிலில் துஞ்சியது அறியாது
ஆசான், பெருங்கணி, அறக்களத்து அந்தணர்,
காவிதி, மந்திரக்கணக்கர் தம்மொடு

கோயில் மாக்களும் குறுந்தொடி மகளிரும்
ஓவியச் சுற்றத்து உரைஅவிந் திருப்ப.''
—22. அழல்படுகாதை: 1-11

கண்ணகி சிலைக்காக, இமயத்தே தேர்ந்தெடுத்த கல்லைக் கனகவிசயர் தலைமேல் ஏற்றிக்கொண்டு மீளும் செங்குட்டுவன், கங்கையின் தென்கரையில் சிறிதே, பாடி கொண்டிருந்த போது, குமரித்துறை படிந்து, கங்கை ஆடப் போந்த மாடலமறையோன், செங்குட்டுவனுக்கு, மதுரையில் நிகழ்ந்தன அனைத்தையும் நிரலே எடுத்துச்கூறுங்கால், மதுரை மன்னன் பெயரைச் செழியன் என்றே குறிப்பிட்டுள்ளான்.

''பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்''
—27. நீர்ப்படை காதை: 84

இவ்வாறு, சிலப்பதிகாரத்து மதுரை மன்னனாம் செழியன் பெயர், சிலப்பதிகார மூலத்தில் நான்கு இடங்களில் குறிப்பிடப்பெற்றிருப்பது மட்டுமல்லாமல், மதுரைக் காண்டத்துக் கட்டுரையில் கூறப்பட்டிருக்கும் நெடுஞ்செழியனுக்குச் சிறப்பளிக்கும் செய்தியாக அதில் கூறப்பட்டிருக்கும், குற்றமிலாக் கோவலனைக் கொன்ற தான் அரசன் அல்லன்; தானே கள்வன் என்பதை உலகறியச் செய்ய, அரசுகட்டிலில் வீழ்ந்து உயிர்துறக்க, அது கண்ணுற்று, கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதுஇல் எனக் கூறியவாறே அரச மாதேவியும் ஆண்டே உயிரிழந்த நிகழ்ச்சி, அழற்படுகாதைப் பகுதியிலும் கூறப்பட்டுளது. செய்திமட்டுமல்லாமல், ''தென் தமிழ்நாடு ஒருங்கு காணப்புரைதீர் கற்பின் தேவி தன்னுடன், அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன்'' எனக்கட்டுரைத் தொடரில் வந்துள்ள சொற்றொடர், ''இருநில மடந்தைக்குச் செங்கோல் காட்டப் புரைதீர்

கற்பின் தேவி தன்னுடன் அரைசு கட்டிலில் துஞ்சியது'' என எழுத்துக்குறை ஏதும் இன்றி, அப்படியே அழற்படு காதையிலும் இடம் பெற்றுளது.

உண்மை நிலை இதுவாகவும், சிலப்பதிகாரத்து மதுரை மன்னன் செழியன் என்பதைக் கட்டுரைதான் கூறுகிறதே அல்லது, மூலத்தில், இளங்கோ வடிகளார் ஓரிடத்திலும் கூறவில்லை என்ற திரு. பி. டி. எஸ். அவர்களின் கூற்றில் உண்மை இல்லை என்பது தெளிவாம்.

---

## 29ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு 2

**பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய குட்டுவன் வேறு: சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டத்துப் பாட்டுடைத் தலைவனாகிய செங்குட்டுவன் வேறு: என்பது சரியா ?**

*சிலப்பதிகாரம் மூன்றாம் காண்டத்துப் பாட்டுடைத் தலைவன் செங்குட்டுவன்: நூலாசிரியர், இச் செங்குட்டுவனைப், பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்து பாடிய பரணரின் பாட்டுடைத் தலைவனாகிய, கடல் பிறக் கோட்டிய குட்டுவனாகக் கொண்டு, அவன் பெருஞ் செயல்கள் அனைத்தையும், செங்குட்டுவனுக்கும் உரிமையாக்கியுள்ளார்; ஆனால், அவ்வைந்தாம் பத்துப் பாடல்களில், செங்குட்டுவன் என்ற பெயரோ, அவன் வடநாட்டுப் படையெடுப்போ குறிப்பிடப்படவில்லை !....... "குட்டுவன்", "சேரல்" என்பன, சேரர் குலத்து அரசர் அனைவர்க்கும் வழங்கப் பெறும் பொதுவான பட்டப் பெயர்களாம், அவ்வரசர்களில் யாருக்கேனும் சிறப்புப் பெயர் இட்டு அழைக்க வேண்டின், "சேரல்", "குட்டுவன்" என்பனவற்றின் முன்னர், "பெரும்", "கடல்பிறக்கு ஓட்டிய" என்ற சிறப்பு அடைமொழிகளை, முறையே கொடுத்துப், "பெருஞ்சேரல்", "கடல்பிறக் கோட்டிய குட்டுவன்" என் அழைக்கப்படும்; ஆக, அவ்வகையில் கடல்பிறக் கோட்டிய குட்டுவன், செங்குட்டுவன் என்பன இரண்டுமே, தனித்தனிச் சிறப்புப் பெயர்களாம்; அவை இரண்டும் ஒருவனையே குறிக்கும்; என்பதாயின், ஒருவனே இரண்டு பெயர்களை மேற்கொண்டதாக ஆகும்; அது, பண்டைக் காலத்தில் இல்லாத வழக்கமாம்" எனக் கூறிப், பதிற்றுப் பத்து ஐந்தாம் பத்தின் பாட்டுடைத் தலைவன் வேறு: வஞ்சிக் காண்டத்துப்*

பாட்டுடைத் தலைவன் வேறு என்ற கருத்தினை நிலைநாட்ட முனைந்துள்ளார். திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள்:

"Senguttuvan is the hero of the third canto. The other indentifies him with Kadal Pirakkottiya Velkelu Kuttuvan, the hero of Paranar's poem, the fifth ode, in the Padirruppattu, and attributes the latters exploits, mentioned in that ode to Senguttuvan. But neither the name Senguttuvannar his expedition to North India, is mentioned in the ode. Kuttuvan, seral ect were the general titles of all Sera Kings ..... When a specific name had to be given to any one of these kings... an epithet was prefixed to the family name. e. g. Perunjeral, kadal pirakkottiya kuttuvan. ......Hence, as Kadal Pirak-kottiya Kuttuvan and Senguttuvan were both personal names, if they were the same person, it would be a case of, one man having two names, which was not usual in old times". [History of the Tamil; Page: 599-600.]

சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டத்தில், பாட்டுடைத் தலைவன் பெயர் எல்லா இடங்களிலும் செங்குட்டுவன் என்றே வரவில்லை. பல இடங்களில் அவ்வாறு வந்திருந் தாலும், ஒரு சில இடங்களில் வேறு வடிவிலும் வந்துளது. சிறப்பு அடை ஏதும் இன்றிக் குட்டுவன் என்றும் வந்துளது. (கால்கோட் காதை: 61, 247; நடுகற்காதை: 37 வரிகளைக் காண்க.) அது மட்டுமன்று; சிறப்பு அடை பெற்றுச் செங்குட்டுவன் என்றோ, அது பெறாமல் குட்டுவன் என்றோ வராமல், "வானவர் தோன்றல்" (காட்சிக் காதை: 3, 11; கால் கோட் காதை: 98) என்றும், "குடவர்கோ" (நீர்ப்

படை காதை : 64) என்றும், "குடவர் கோமான்" (நீர்ப் படை காதை: 227) என்றும் வந்துளது.

ஆக, சிலப்பதிகாரத்து வஞ்சிக் காண்டம், தன்பாட்டுடைத் தலைவன் பெயரை, எல்லா இடங்களிலும் செங்குட்டுவன் என்றே அழைத்துளது என்பதில் உண்மை இல்லை; அது, அவனைக் குட்டுவன் என்றும் அழைத்துளது. பதிற்றுப்பத்து, ஐந்தாம்பத்து, 2, 3, 6, 7, 9 பாடல்களில், பரணர் அவனை, அப் பெயரிட்டு அழைத்துள்ளார்; அகநானூற்றுப் பாடல் ஒன்றிலும், அவனை அவன் முந்நீர் ஓட்டிய நிகழ்ச்சியோடு தொடர்புபடுத்திக், குட்டுவன் எனும் அப் பெயரிட்டு அழைத்துள்ளார்.

ஆகவே, பரணரின் பாட்டுடைத் தலைவனும், வஞ்சிக் காண்டத்துச் செங்குட்டுவனே ஆவன். ஆகவே, பதிற்றுப் பத்தில் அவனைச் செங்குட்டுவன் என அழைக்கப்படாமையால், அவன் சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டத்துப் பாட்டுடைத் தலைவனின் வேறாகிவிட மாட்டான்.

செங்குட்டுவன் பெருஞ் செயல்களாகப், பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்துப் பதிகம், 1) ஆரிய அண்ணலை வீட்டிக் கடவுள் பத்தினிக்குக் கல் கொண்டது, 2) கன்றோடு பல்லான் கொண்டு இடும்பின் புறத்து இறுத்தது, 3) வயவர் வீழ வியலூர் நூறியது, 4) கொடுகூர் எறிந்தது, 5) பழையன் வேம்பு துமியப் பண்ணி, பெண்டிர் கூந்தல் முரற்சியால் குஞ்சர ஒழுகை பூட்டி ஈர்த்தது, 6) சோழர்குடிக்கு உரியோர் ஒன்பதின்மரை நேரி வாயிற்புறத்தில் வீழ்த்தியது, 7) கடல் பிறக்கு ஓட்டியது ஆகிய ஏழு நிகழ்ச்சிகளைக் கூறுகிறது.

அவன் பெருஞ்செயல்களாக, வஞ்சிக் காண்டம், 1) செங்குட்டுவன் தாயைக் கங்கை ஆட்டச் சென்றபோது கொங்கணர் முதலாம் ஆரிய மன்னர் ஆயிரவரைத் தனி ஒருவனாக நின்று வென்று அழித்தது. (காட்சிக் காதை; 156:164; நடுகல் காதை: 120-121,) 2) கண்ணகி சிலைக்குக்

கல் கொணரச் சென்றபோது, கங்கை வடகரை மன்னர், உத்திரன் முதலானோரை வென்று, கனக விஜயர் மீது கல் லேற்றிக் கொணர்ந்தது, (கால்கோள் காதை : 182-191), 3) மைத்துனன் கிள்ளி வளவனுக்காக, ஒன்பது மன்னரை நேரிவாயிலில் அழித்தது (நீர்ப்படை காதை : 118-123: நடுகல் காதை : 116-117), 4) பழையன் வேம்பு தடிந்தது, (நீர்ப்படை காதை : 124-125), 5) வியலூர் அழித்தது (நடுகல் காதை : 114-115), 6) இடும்பிற் புறத்தில் கொடும் போர் வென்றது (நடுகல் காதை : 118-119), 7) நெடுங்கடல் ஓட்டியது (நடுகல் காதை : 119) ஆக ஏழு நிகழ்ச்சிகளைக் கூறுகிறது.

பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்துப் பாடிய பரணர், செங் குட்டுவன் கடலோட்டிய நிகழ்ச்சியை, ஐந்தாம்பத்து 1, 5, 6, 8 பாடல்களிலும், அகநானூற்றிலும் (212), பழையன் வேம்பு தடிந்த நிகழ்ச்சியை, ஐந்தாம்பத்து 4, 9 பாடல் களிலும் குறிப்பிட்டுள்ளார்.

ஆக, பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்துப் பதிகம், அதன் பாக்கள், வஞ்சிக் காண்டம் ஆகிய இவை அனைத்தாலும் அறியப்படும் செங்குட்டுவன் செயல்களில், 1) கடல் பிறக்கு ஓட்டியது, 2) பழையன் வேம்பு தடிந்தது ஆகிய இரு நிகழ்ச்சிகளைப், பதிகமும் கூறுகிறது; பரணரும் கூறியுள்ளார்; வஞ்சிக் காண்டமும் கூறியுளது. 1) கண்ணகி சிலைக்கான கல் கொண்டது, 2) இடும்பிற் புறத்து இறுத்தது, 3) வியலூர் எறிந்தது, 4) நேரி வாயிலில் ஒன்பது மன்னரை அழித்தது ஆகிய நான்கு நிகழ்ச்சிகளைப் பதிகமும் கூறுகிறது; வஞ்சிக் காண்டமும் கூறுகிறது, பரணர் கூறவில்லை; கொடுகூர் எறிந்ததைப் பதிகம் மட்டுமே கூறுகிறது; வஞ்சிக் காண்டத் தில் அது, இடம் பெறவில்லை; அதேபோல், தாயைக் கங்கையில் நீராட்டிய நிகழ்ச்சியை வஞ்சிக் காண்டம் மட்டுமே கூறுகிறது அது, பதிகத்தில் இடம் பெறவில்லை.

ஆகவே, பதிகத்தில் கூறப்பட்டிருக்கும், செங்குட்டுவன் வீரச் செயல்கள் அனைத்தையும், வஞ்சிக் காண்டத்தில்,

செங்குட்டுவனுக்கு ஏற்றிக் கூறியுள்ளார் எனத் திரு. அய்யங்கார் கூறுவதில் உண்மையில்லை. பதிகத்தில் கூறப் பட்டிருக்கும் கொடுகூர் எறிதல், வஞ்சிக் காண்டத்தில் இடம் பெறவில்லை; பதிகத்தில் இடம் பெறாத, தாயைக், கங்கை யில் நீராட்டியது வஞ்சிக் காண்டத்தில் மட்டுமே கூறப் பட்டுளது.

பரணர், செங்குட்டுவன் தந்தையாம், இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனையும் பாடியவர். ஆரிய அரசரை வென்று, இமயத்தே வில் பொறித்த நிகழ்ச்சியை அகத்திலும், "ஆரியர் அலறத் தாக்கிப், பேரிசை தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பிணித் தோன் வஞ்சி" — (395); அவன் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியோடு போரிட்டு, அவனோடு ஒரு சேரத் தானும் இறந்து கிடந்த காட்சியைக் கண்ணீர் மல்கப் புறத்திலும், "வேந்தரும் பொருதுகளத்து ஒழிந்தனர்; இனியே, என்னாவது கொல்......அவர் அகன்றலை நாடே." (63) பாடியுள்ளார். ஆகவே. பரணர், செங்குட்டுவன் தந்தையினும் மூத்தவரோ, அல்லது சம வயதுடையவரோ ஆதல் வேண்டும்.

கண்ணகி சிலைக்காம் கல் கொணர்ந்தபோது செங் குட்டுவன் ஐம்பது ஆண்டு நிரம்பப்பெற்று, நரை முதிர் யாக்கையனாகி இருந்தவன். "வையங்காவல் பூண்ட நின்நல் யாண்டு ஐயைந்து இரட்டி சென்றது" (நடுகல் காதை: 129-30) என மாடல மறையோன் கூறுவது காண்க. அரியணை ஏறி ஐம்பது ஆண்டுகள் கழிந்ததாகவும் கொள்ளலாம். அது வரையும், பரணர் வாழ்ந்திருந்து, அவன் தாயைக் கங்கை யில் நீராட்டியது, கண்ணகி சிலைக்காம் கல் கொணர்ந்தது ஆகிய நிகழ்ச்சிகளை அறிந்திருப்பார் என எதிர்பார்ப்பது அறியாமை. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மறைவுக்குப் பின்னர்ச் சில காலமே அவர் வாழ்ந்திருக்கக் கூடும். அந்தச் சில ஆண்டு அளவில், செங்குட்டுவன் செயல்களாக, கடல்

ஓட்டியது, பழையன் வேம்பு தடிந்தது ஆகிய நிகழ்ச்சிகள் மட்டுமே நிகழ்ந்திருக்கக் கூடும்.

அதிலும், கடல் ஓட்டிய நிகழ்ச்சி, சேரர்க்குத் தொல்லை கொடுத்து வந்த கடம்பரின் காவல் மரமாம் கடம்பை அழித்து, அக்கடம்பரை அடக்குவதற்கு முன்னர், அக்கடம்பருக்கு அரணாய் அமைந்திருந்த கடலைக் கடந்த நிகழ்ச்சியையே குறிப்பதாகும். இதுவும், செங்குட்டுவன் அரியணை ஏறிய பின்னர்த், தனித்து நின்று ஆற்றிய செயலாக இருக்காது. அக்கடம்பரை அழித்த அவன் தந்தையோடு, இளவரசராக இருந்த போது, கூடிச் செய்த செயலாதலே வேண்டும். நெடுஞ்சேரலாதன் கடம்பறுத்த நிகழ்ச்சி, "வலம்படு முரசின் சேரலாதன் முந்நீர் ஓட்டிக் கடம்பறுத்து," "சால்பெருந்தானைச் சேரலாதன் மால் கடல் ஓட்டிக் கடம்பறுத்து" என அகத்திலும் (127, 347), "நனி இரும்பரப்பின் மாக்கடல் முன்னி...பலர் மொசிந்து ஓங்கிய அலர் பூங்கடம்பின், கடியுடை முழு முதல் துமிய", "மாக் கடல் நீக்கிக் கடம்பறுத்து" எனப்பதிற்றுப்பத்திலும் (11,17) பாராட்டப் பெற்றிருப்பது காண்க. அதிலும் கடம்பறுத்த அச்செயல், "முந்நீர் ஓட்டி", "மால்கடல் ஓட்டி", "மாக் கடல் முன்னி", "மாக்கடல் நீக்கி" என கடல் கடந்த நிகழ்ச்சியோடு தொடர்பு படுத்தியே பாராட்டப் பெற்றுளது காண்க. அது போலவே, தந்தைக்குத் துணையாய் நின்று, கடல் கடந்து கடம்பறுத்த குட்டுவன், தந்தை மறைவிற்குப் பின்னர், மேற்கொண்ட பெருஞ்செயல், பழையனைவென்று, அவன் வேம்பை வீழ்த்தியதாதல் வேண்டும். அது நிகழும் வரையே வாழ்ந்து, அவன் பெருமையுணர்ந்து கொண்ட பரணர், அவனைப் பாராட்டிப் பாடிய பதிற்றுப் பத்துப் பாக்களிலும், அகநானூற்றுப் பாவிலும், அவ்விரு நிகழ்ச்சிகளை மட்டுமே கூறிப்பாராட்டியுள்ளார்.

செங்குட்டுவனின், ஏனைய பெருஞ்செயல்கள் எல்லாம், பரணர் மறைவிற்குப் பின்னர் நிகழ்ந்தன வாதல் வேண்டும்; ஆகவே, அவற்றைப், பரணர் பாடுவது இயலாது. ஆகவே

தான், செங்குட்டுவன் வடநாட்டுப் படையெடுப்பு பரணர் பாக்களில் இடம்பெறவில்லை. அங்ஙனமாயின், பரணர்பாடிய ஐந்தாம்பத்திற்கு முன்வரும் பதிகம், அந்நிகழ்ச்சியையே முதற்கண் வைத்து வரிசைப்படுத்தியுளது எவ்வாறு பொருந்தும் எனக்கேட்டல் கூடும். ஐந்தாம்பத்தில் உள்ள, பாக்கள் பத்துமட்டுமே பரணர் பாடியன; அதன் பதிகம் அவர் பாடியதன்று: அவருக்குப்பின் வந்த, அவர்பாக்களைத் தொகுத்த யாரோ ஒருவர் பாடியது, அது. ஆகவே, செங்குட்டுவன் வட நாட்டுப் படையெடுப்பு உண்மை நிகழ்ச்சியாயின், பரணர், அதைப் பாடியிருப்பார்; அவர் அது பாடவில்லை: ஆகவே, அது உண்மை நிகழ்ச்சி அன்று; வெறும் கட்டுக்கதை என வாதிடுவது முறையான வாதம் ஆகாது. இது, "இருக்கு வேதத்தில் ஆலமரம் குறிப்பிடப் படவில்லை என்பதால். அவ்வேதம் எழுதப்பட்ட காலத்தில், ஆலமரம் என்பதே இந்தியாவில் இல்லை என்ற வாதம் சரியான வாதம் ஆகாது எனத் திரு. அய்யங்கார் காட்டும், திரு. பர்கிதர் அவர்களின் கூற்று போல் சரியான வாதம் ஆகாது.

"Speaking of the argument from silance Pargiter remarks, 'One might argue with more force that, bacause the banyan, the most characteristic tree of India, is not mentioned in the Rg. veda, there were none in India, when the hymns were composed'". (History of the Tamils : 124 : Foot Note].

ஒருவனுக்கு இருபெயர் இட்டு அழைப்பது பண்டைய வழக்கம் அன்று என்பதும் சரியாகாது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப், பதிற்றுப் பத்து நான்காம்பத்தின் பதிகமும், இரண்டாம் பத்தின் ஆசிரியர் குமட்டூர்க் கண்ணனாரும் (பதிற்றுப்பத்து : 1, 5, 8, 10) மாமூலனாரும் (அகம் : 127, 347) சிறப்பு அடை எதுவும் கொடாமல், சேரலாதன் என்றே அழைத்தாலும், பதிற்றுப் பத்தின்

2, 5, 6 ஆம் பதிகங்கள், சிறப்படை கொடுத்து நெடுஞ் சேரலாதன் என அழைக்கின்றன.

கரிகாலன் பிறந்தகுடி உணர்த்தும் சிறப்பு அடை எதுவும் தராமல், "கரிகால்" என்றே பரணர் அழைக்க (அகம் ; 125, 246, 376), குடி உணர்த்தும் "வளவன்" என்ற சிறப்பு அடை பின்தொடாரக், "கரிகால் வளவன்" என வெண்ணிக்குயத்தி யாரும் (புறம் : 66), முடத்தாமக்கண்ணியாரும் (பொரு நராற்றுப்படை : 148), மாமூலனாரும், (அகம் : 55) அழைத் துள்ளனர். கரிகால் என்ற அவன் இயற்பெயரை விடுத்து. அவன் குடிப்பெயர் ஒன்றே தோன்ற, "வளவ" எனக் கருங்குழல் ஆதனாரும் (புறம் ; 7) அக்குடிப் பெயர்க்கு முன்னர்த், "திரு" "மா" என்ற இரு சிறப்பு அடைகளைக் கொடுத்துத் "திருமாவளவன்" எனக் கடியலூர் உருத்திரன் கண்ணனாரும் (பட்டினப்பாலை : 299) அழைத்துள்ளனர்; இளங்கோவடிகளார், இந்திரவிழவூர் எடுத்த காதையில் "திருமாவளவன்" (90) என்றும், வஞ்சின மாலையில் "கரிகால் வளவன்" (11) என்றும் இருபெயர் இட்டு அழைத்துள்ளார்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யனுக்குப், "பசும் பூண்செழியன்" "வெல்போர்ச் செழியன்" என்ற இரு சிறப்பு அடைகளை, இடைக்குன்றூர்க்கிழாரும் (புறம் : 76, 79), "மறப்போர்ச் செழியன்", "பசும்பூண் பாண்டியன்" என்ற இரு சிறப்பு அடைகளைப் பரணரும் (அகம் ; 116, 162, குறுந் : 353) "கொடித்தேர்ச்செழியன்" (அகம் ; 36, 57), "பசும் பூண்பாண்டியன்" (அகம் : 253) என்ற இரு சிறப்புப் பெயர்களை நக்கீரரும் சூட்டி அழைத்து உள்ளனர்,

ஆக, இது காறும் எடுத்துக் கூறிய விளக்கங்களால், பரணர், செங்குட்டுவன் பெயரைக் குறிப்பிடவில்லை ; அவன் வடநாட்டுப் படையெடுப்பையும் கூறவில்லை ; ஒருவனே இரண்டு சிறப்புப் பெயர்களை மேற்கொள்ளும் வழக்கம்

பண்டு இல்லை: ஆகவே, கடல்பிறக்கு, ஓட்டிய குட்டுவனும், செங்குட்டுவனும் ஒருவராகார்; ஆகவே, செங்குட்டுவன் வடநாட்டுப் படையெடுப்பு, உண்மை நிகழ்ச்சியன்று: அது வெறும் கட்டுக்கதை என்ற அய்யங்காரின் முடிவுகள் சரியானவை ஆகா என்பது தெளிவாக்கப்பட்டது. பதிற்றுப் பத்து ஐந்தாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய குட்டுவனும், வஞ்சிக் காண்டத்துப் பாட்டுடைத் தலைவனாகிய செங்குட்டுவனும், இருவேறு பட்டவர் அல்லர்; ஒருவரே என்பதும் உறுதி செய்யப்பட்டது.

---

# 29ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு-3

## I. வஞ்சிக் காண்டம் இளங்கோவடிகள் பாடியதன்று ?

திருவாளர், பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் தம்முடைய தமிழர் வரலாறு என்ற ஆங்கில நூலில், (History of the Tamils) "சிலப்பதிகாரம் என்ற இந்நூல், மூன்று காண்டங்களாகப் பிரிக்கப் பட்டுளது. ஆனால், முதல் இரு காண்டங்கள் மட்டுமே, முற்றுப்பெற்ற முழுநூலையும் உருவாக்கி விடுகின்றன. சிலம்பின் நூல் எனப் பொருள் படுவதான சிலப்பதிகாரம் என்ற அந்நூல், ஊதாரித்தனமாகப் பொருளழிக்கும் கோவலன், வாணிகம், தொடங்க, மனைவியின் காற்சிலம்பை விற்க முனைய, ஆனால், மதுரை மன்னனால் திருட்டுக்குற்றம் சாட்டப்பட்டுக் கொலையுண்டு போக, சினங்கொண்ட அவன் மனைவி கண்ணகி, கடுஞ்சினம் கொண்டு, மன்னனையும அழித்துத், தன் முலையைத் திருகி மாநகர் மீது வீச, அதிலிருந்து எழுந்த தீ, அம்மாநகரை எரித்து அழிக்க, இறுதியில் கணவனும் மனைவியும் வானாடு அடைந்த கதையைக் கூறுகிறது. இக்கதை முதல் இரு காண்டங்களில் கூறப்பட்டுளது. ஆகவே, அவ்விருகாண்டங்கள் மட்டுமே முழுநூலாக முற்றுப் பெறுகின்றன. இரண்டாம் காண்டத்து இறுதியில், பாட்டுடைத் தலைவனும், தலைவியும், நில உலகிலிருந்தே பிரிந்து விடுகின்றனர்; சிலம்பின் கதையும் முடிந்து விடுகிறது: அதன் பின்னர், அவ்வணி பற்றி ஏதும் கேட்டிலம்."

"மூன்றாம் காண்டம், சேரஅரசன் செங்குட்டுவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, அவன் புகழ், அவனுடைய வடநாட்டு வெற்றிப் படையெடுப்பு பற்றிக் கூறுகிறது. ஆகவே, அது, எக்காரணம் கொண்டும், சிலப்பதிகாரம் என அழைக்கப்படுதற்கு உரிமையுடையதன்று. முதல் இரு காண்டங்களாம் முழுநூலைப் பாடிமுடித்துவிட்ட

ஆசிரியர், சிலம்பைத் தம் பார்வைக்கு அப்பால் போகவும் விடுத்துப், பாட்டுடைத் தலைவன், தலைவி ஆகிய இருவரையும் வானுலகிற்கு அனுப்புவதும் செய்து விட்ட பின்னர், செங்குட்டுவன் புகழ்பாடுவதையே தலையாய குறிக்கோளாகக் கொண்ட மூன்றாம் காண்டத்தை இணைத்து, காவிய நயத்தைக் கெடுத்து விடுவாரா என்பது ஆய்வுக்கு உரிய ஒன்று: அத்துணைப் பெரும் புலவராய அவர், தம் நூலை, அவ்வாறுகெடுத்துக் கொள்வார் என, நான் நினைக்கவில்லை."

"சிலப்பதிகாரம், இரண்டு நூல்களைக் கொண்டது: ஒவ்வொரு நூலும் தனித்தனி ஆசிரியர்களால் இயற்றப் பெற்றவை: முதல் இரு காண்டங்கள், மிகச் சிறந்த ஒரு வீரகாவியம்: மூன்றவது காண்டம், கற்பனைத் தலைவனின் புகழ்பாடும் ஒரு கற்பனைக் கதை," என்றெல்லாம் எழுதி உள்ளார்.

"The poem is divided into three cantos, the scenes being laid respectively, at Pugar, Madurai and Vanji But cantos 1 and 2 Constitute a finished poem. Silappadigaram, means, "'The Book on the Anklet", and relates the story of a reformed prodigal, Kovalan, who proposed to sell his wife's anklet, for settingup business, but was executed, on a false charge of theft, by the orders of the king of Madurai, where upon, the infuriated wife, Kannagi, cursed the king and screwedout one of her breasts and threw it at the town, and a fire sprigíng from it burutdown the city. The husband and wife there on ascended to heaven, This story is narrated in the first two cantos, which there the constitute a comblete poem: At the end of the II canto, the hero and heroine depart from the earth and the story of the anklet ends and we

hearno more of the Jewel. So the name Silappadigaram can apply only to the first two cantos.

"The third canto has a sera king, Senguttuvan as its hero and it deals with the greatness of this monarch, and his victorious expedition to Northern India. ......Hence the third canto cannot with any appropriatenessbe ca lled Silappadigaram the Book of the Anklet. It is a question worth investigation, whether the author, of the complete poem ie.. the first and second cantos, after dismissing the anklet from his purview and despatching his hero and heroine to heaven, deliberately ruined the unrity of his Epic, by adding a third canto, whose chief object was to glorify Senguttuvan. I do not think, such a great artist would have thus spoilt his own poem.

"The Silappadigaram is a double poem, each peom' by a different auther, Cantos I and II being a splinded romantic poem, and Canto III, being a legend about a mythical hero's exploits."

—History of the Tamils. Pages : 597, 598, 606:

மதுரைக் காண்ட முடிவில், சிலம்பும் நம் கண்ணை விட்டுப் போய் விடுகிறது ; கண்ணகி கோவலனும் வானுலகு அடைந்து விடுகின்றனர் ; ஆகவே, கதை, அத்துடன் முடிந்து விடுகிறது.

புகார்க் காண்டம், மதுரைக் காண்டம் இரண்டோடு சிலப்பதிகாரக் கதை முடிந்து விடுகிறது. ஆகவே அவை இரண்டும் ஒரு நூலாகி விடுகிறது : வஞ்சிக் காண்டத்தை அவற்றோடு இணைப்பது முறையற்றது என்பதற்கு அவர் காட்டும் காரணங்களுள் தலையாயது இது. அவர் காட்டும் வேறு காரணங்களாவன :

1) முதல் இரு காண்டங்களில், அங்கொன்றும் இங்கொன்றுமாக, இலைமறைவு காய்மறைவாகப் பின்னணியில் இடம்பெற்றிருந்த, இயற்கையொடு பொருந்தாச் செய்திகள், மூன்றாம் காண்டத்தில், பெருவாரியாகச் சிறப்பிடம் பெற்றுள்ளன.

"Moreover the supernatural, so much in the background in the first two Cantos, is very prominent in the third" (page : 599.)

2) முதல் இரு காண்டங்களில், கண்ணகியும் கோவலனும், புகாரிலிருந்து, சீரங்கம் வழியாக மதுரைக்குச் செல்வழிக் கடந்து சென்ற நாட்டின் இயற்கை வளம், பல காதைகளில், மிகமிக நுண்ணிதாகவும், நனி மிக அழகாகவும் விளக்கப் பட்டுளது. ஆனால், மூன்றாம் காண்டத்தில், செங்குட்டுவன், நீலகிரியை விட்டுப் புறப்படுகிறான்: உடனே கங்கைக் கரையில் காட்சி அளிக்கின்றான். திரும்பும் போதும் அதே நிலை; செங்குட்டுவன் கடந்து சென்றிருக்கவேண்டிய தக்காணம், விந்தியம், கங்கை வெளிகளின் இயற்கைக் காட்சிகளை விளக்கிக் கூறும் பொன்னான வாய்ப்பினை ஆசிரியர் புறக்கணித்துள்ளார்:

"In the first two Cantos, the country through which Kovalan and kannagi travelled, from Pugar to Madurai, Via Srirangam, is minutely and beautifully described in several chapters, whereas in canto III, Senguttuvan leaves the, Nilagini and then immediately appears on the banks of the Gangas and vice versa on the return journy; Thus the author avoids the splendid oppertunities of describing the scevery of the Deccan, the Vindhyas, and the gangetic vally, through which Senguttuvan ought to have passed."—page : 599.

3) பௌத்தர்களால் பரப்பி விடப்பட்ட, போன பிறவி பற்றிய கட்டுக்கதைகள், இக்காண்டத்தில், எண்ணிலாதன;

"Tales of part lifes populararized by the Buddhas abound In this Canto"—Page : 599.

வாணிகம் செய்யும் கருத்தோடு, சிலம்பு விற்கக் கோவலன் மதுரை சென்று கொலையுண்டு போவது, அதனால் சினங்கொண்டு, கண்ணகி, மன்னனையும் சபித்து, மதுரையையும் எரியூட்டி அழிப்பது, இறுதியில் இருவரும் வானாடு அடைவது, ஆகிய இவை மட்டுமேதான் சிலப்பதிகாரம் என்றால், அதற்கு, முதல் இரு காண்டங்களில் உள்ள 23 காதைகளும் தேவையில்லை. புகார்க்காண்டத்து ஒன்பதாவது காதையாம் கனாத்திறம் உரைத்த காதையில், "சிலம்பு முதலாச் சென்ற கனவனொடு உலந்த பொருள் ஈட்டுதல் உற்றேன்" என்ற 74 வது வரி தொடங்கி, மதுரைக் காண்டத்துக் கட்டுரைக் காதையில், "கோவலன் தன்னொடு வானவூர்தி ஏறினள் மாதோ கானமர் புரிகுழல் கண்ணகி தான் என்" என முடியும் ஈற்றுவரிவரை கொண்டால் அதுவே போதும்.

வஞ்சிக் காண்டத்தில், செங்குட்டுவன் புகழ், அவன் வடநாட்டுப் படையெடுப்பு மட்டுமே கூறப்பட்டுள்ளன; அதற்கும் சிலம்பிற்கும் தொடர்பில்லை என்பதாயின், புகார்க் காண்டத்திலும் அதில் உள்ள பத்துக் காதைகளில், கனாத்திறம் உரைத்த காதையின் ஈற்றுச் சிலவரிகள், நாடு காண் காதை ஆகிய பகுதிகள் நீங்க, எஞ்சி நிற்கும் முற்பகுதிக் காதைகள், சிலம்பு பற்றி ஏதும் கூறவில்லை. கோவலனின் பரத்தமை ஒழுக்கம் பற்றியே கூறுகின்றன: ஆகவே, அவையும் சிலப்பதிகாரத்தின் அங்கமாதல் இயலாது எனக்கொள்ள வேண்டிநேரும்; அது பொருந்தாது: புகார்க்காண்டத்து, மேலே கூறிய எஞ்சிய பகுதிகள், கோவலன் பரத்தமை ஒழுக்கம் கூறுவனவே எனினும், அதன் மூலம், கணவன் பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்டவன் எனினும், அவன் மீது கொண்ட அன்பு மாறாக் கண்ணகியின் கற்பு நலம், சிலம்பு விற்க நேர்ந்தமைக்குக் காரணமான கோவலன் செயல் என்ற, சிலம்போடு தொடர்புடையனவே கூறுவதால், சிலப்பதிகாரத்தின் இன்றியமையா அங்கம் ஆகின்றன.

அதுபோலவே, வஞ்சிக்காண்டம், செங்குட்டுவனின் பெருமை பேராற்றல்களைக் கூறுவனவேயாயினும், அவை, கண்ணகியின் காற்சிலம்போடு தொடர்பிலாக் கடம்பெறிதல், பழையன் வேப்பின் வெட்டி அழித்தல், நேரிவாயிலில் சோழர் ஒன்பதின்மரை வீழ்த்தல் போலும், செங்குட்டுவனின் பிற பெருஞ்செயல்கள் போல் அல்லாமல், அக்கண்ணகிநல்லாளுக்குக் கோயில் கட்டி வழிபடுவதாம், சிலம்புக்கு உரியவளோடு தொடர்புடைய பெருஞ்செயல்களாம்; ஆதலின், அவையும் சிலப்பதிகாரத்தின் அங்கமே ஆம்.

மேலும், வஞ்சிக் காண்டத்து ஏழு காதைகளுமே, செங்குட்டுவன் புகழ் பாடுவன அல்ல. முதல் காதையாம் குன்றக்குரவை, செங்குட்டுடன் புகழ் பாடவில்லை. மாறாக, கண்ணகி; கணவனோடு கடவுளாகி விட்ட காட்சியைக் கண்ணாரக் கண்ணுற்ற குரவர், அவள்பால் கொண்டுவிட்ட தெய்வ அன்பு காரணத்தால் மகிழ்ந்து பாடி ஆடியதைக் கூறுவது. ஆகவே, அதைச், சிலப்பதிகாரத்தின் அங்கம் ஆகாது என ஒதுக்கி விடுவது இயலாது: அது போலவே, வாழ்த்துக் காதை, வரந்தருகாதைகளும் செங்குட்டுவன் புகழ்பாடுவன அல்ல; கண்ணகியின் விழாவின் காட்சி நலம், அது காண வந்தவர் பெற்ற பேறு நலங்களைக் கூறுவன. ஆகவே, அவற்றையும், சிலப்பதிகாரத்து அங்கம் ஆகா, என ஒதுக்கி விடுவது ஒரு போதும் இயலாது. இவற்றிற்கு இடையில் வரும், காட்சிக்காதை, கால்கோள் காதை, நீர்ப் படை காதை, நடுகல் காதைகளும், செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பைப் பாடுகின்றன என்றாலும், அவ்வடநாட்டுப் படையெடுப்பு, கண்ணகி சிலைக்காம் கல் கொணர்வதற்காகவே மேற்கொண்ட படையெடுப்பு: ஆகவே, அவையும், சிலம்போடு தொடர்புடையவே.

ஆகவே, வஞ்சிக் காண்டம், சிலம்போடு தொடர்பிலாச், செங்குட்டுவன் புகழ் பாடுகிறது: ஆகவே, அது, சிலப் பதிகாரத்தின் பகுதியாகாது என்பது எவ்வகையிலும் பொருந்தாது.

நடக்க இயலாத, நம்புதற்கு இயலாத, இயற்கையொடு பொருந்தாச் செய்திகள், புகார், மதுரைக் காண்டங்களிலும், வஞ்சிக் காண்டத்தில் அதிகம் என்பது அவர் கூறும் இரண்டாம் காரணம்; அவ்வாறு கூறியவர் அவை எவை எவை என எண்ணிக் கூறினாரல்லர். ஆனால், உண்மை நிலை அது அன்று; மாறாக, நேர்மாறானது: அவை வஞ்சிக் காண்டத்தில் ஒன்றோ இரண்டோதான்: ஆனால் புகார், மதுரைக் காண்டங்களில் தான் அதிகம்.

வானவர் வந்து மலர்மாரிபொழிந்து, கண்ணகியைக் கோவலனோடு வானொடு கொண்டு சென்றது ஒன்று "வானவரும் நெடுமாரி மலர் பொழிந்து, குன்றவரும் கண்டு நிற்பக் கொழுநனொடு கொண்டு போயினார்." (குன்றக் குரவை : 8-9.); "கானவேங்கைக் கீழோர் காரிகை தான்முலை இழந்து, தனித்துயர் எய்தி, வானவர் போற்ற மன்னொடும்கூடி, வானவர் போற்ற, வானகம் பெற்றனள்". (காட்சிக் காதை : 57-60).

கணவனோடு வானொடு அடைந்து விட்ட கண்ணகி, மின்னுக்கொடிபோல் மீவிசும்பில் தோன்றிச், செங்குட்டுவனுக் காட்சி அளித்துத், தென்னவன் தீதிலன் : நான் அவன் மகள்" எனக் கூறியது இரண்டாவது (வாழ்த்துக் காதை).

மாலதி என்பாள் மாற்றாள் குழவிக்குப் பால்சுரந்து ஊட்டுங்கால் பால்விக்கி அக்குழவி இறக்க, அதற்காகத் தன்பால் பாடுகிடந்த அம்மாலதியின் அன்புக்கு இரங்கி, அக்குழவியாய் வந்து, வளர்ந்து, பெற்றோர் கடன் தீர்த்து பார்ப்பனி தேவந்தியை மணங்கொண்டு சில நாள் கழித்து நீராடப் போவதாகக் கூறி மனைவியைப் பிரிந்து மறைந்து போன மாசண்டன் கதை மூன்றாவது.

மாலதி என்பாள் மாற்றாள் குழவியைப்
பால்சுரந்து ஊட்டப் பழவினை உருத்துக்
கூற்று உயிர் கொள்ளக் குழவிக்கு இரங்கி,
ஆற்றாத் தன்மையள் ஆரஞர் எய்திப்

பாசண்டன்பால் பாடு கிடந்தாட்கு
ஆசில்குழவி அதன் வடிவாகி
வந்தனன் ; அன்னை ! 'நீ வான்துயர் ஒழுகு' எனச்,
செந்திறம் புரிந்தோன் செல்லல் நீக்கிப்
பார்ப்பனி தன்னொடு பண்டைத் தாய்பால்
காப்பியத் தொல்குடிக் கவின்பெற வளர்ந்து
தேவந்திகையைத் தீவலம் செய்து
நாலீராண்டு நடந்ததன் பின்னர்
மூவா இளநலம் காட்டி என் கோட்டத்து
நீவா என்றே நீங்கிய சாத்தன்.''

—வரந்தருகாதை : 74-87.

இம்மூன்று தவிர்த்து, இயற்கையொடு பெருந்தா நிகழ்ச்சியாக, வேறு எதுவும் இடம் பெற்றிலது. இவற்றில் முதலாவதும், மூன்றாவதும், வஞ்சிக்காண்டத்தில் மட்டுமே கூறப்பட்டவை அன்று : இவை, முறையே மதுரைக் காண்டம், கட்டுரைக் காதையிலும், புகார்க்காண்டம் கனாத்திறம் உரைத்த காதையிலும் கூறப்பட்டுள்ளன.

''அமரர்க்கு அரசன் தமர் வந்து ஏத்தக்
கோநகர் பிழைத்த கோவலன் தன்னொடு
வானவூர்தி ஏறினள் மாதோ
கானமர் புரிகுழல் கண்ணகி தான்என்''

—கட்டுரைக் காதை : 197 - 200.

மாலதி மாற்றாள் மகவுக்குப் பால்அளிக்கப்
பால்விக்கிப் பாலகன் தான்சோர மாலதியும்

.......................................................................

மஞ்ஞை போல் ஏங்கி அழுதாளுக்கு அச்சாத்தன்
அஞ்ஞை ! நீ ஏங்கி அழல் என்றுமுன்னை
உயிர்க்குழவி காணாய் என்று அக்குழவியாய் ஓர்

குயில்பொதும்பர் நீழல்குறுக, அயிர்ப்பின்றி
மாயக்குழவி எடுத்து, மடித்திரைத்துத்
தாய்கைக் கொடுத்தாள், அத்தையாளாள்: தூய
மறையோன் பின் மாணியாய், வான் பொருட் கேள்வித்
துறை போய், அவர் முடிந்த பின்னர், மறையோனும்,
தாயத்தாரோடும் வழக்குரைத்துத் தத்தைக்கும்
தாயர்க்கும் வேண்டும் கடன் கழித்து மேயநாள்
தேவந்தி என்பாள் மனைவி அவளுக்குப்
பூ வந்த உண்கண்! பொறுக்கு என்று மேவித் தன்
மூவா இளநலம் காட்டி என் கோட்டத்து
நீ வா என உரைத்து நீங்குதலும்.''

—கனாத்திறம் உரைத்த காதை: 5-36.

என்ற வரிகளைக் காண்க.

ஆக, முதல் இரு காண்டங்களில் இடம் பெறாமல், மூன்றாவது காண்டத்தில் மட்டுமே இடம் பெற்றிருக்கும்; இயற்கையொடு பொருந்தா நிகழ்ச்சி, கண்ணகி, செங்குட்டுவனுக்குக் காட்சி அளித்து, ''தென்னவன் தீதிலன்'' எனக் கூறியதாகக் கூறப்பட்டிருக்கும் ஒன்று மட்டுமே.

இதற்கு மாறாக, இயற்கையொடு பொருந்தா நிகழ்ச்சிகள் ஒரு சிலவே இடம் பெற்றிருப்பதாகத் திரு. அய்யங்கார் மதிக்கும் முதல் இரு காண்டங்களில், அவை, ஒன்றோ, இரண்டோ அன்று: பலப்பல, இதோ, அவற்றின் நீண்ட பட்டியல்:

1. முசுகுந்தன் என்னும் மன்னனுக்கு வரும் இடையூற்றைப் போக்கி, அவனைக் காப்பாய் என இந்திரன் ஏவ, அப்பணியேற்று வந்துக்காத்து நிற்கும் காவல்பூதம். ''வெற்றிவேல் மன்னற்கு உற்றதை ஒழிக்கு எனத் தேவர் கோமான் ஏவலிற் போந்த காவல் பூதம்'' (இந்திர விழவூர் எடுத்த காதை: 65-67.)

2. கூனர், குறளர், ஊமையர், செவிடர், தொழு நோயாளர், தன்னிடைமூழ்கி எழுவராயின், அவர் தம் நோய் போக்கி, அவர்களை அழகுடையவராக்கும் குளம். ''கூனும், குறளும், ஊமும், செவிடும், அழுகு மெய்யாளரும் முழு நீராடிப் பழுதில் காட்சி நன்னிறம் பெற்று, வலஞ்செயாக் கழியும் இலஞ்சி.'' (மேற்படி : 118-121).

3. நஞ்சுண்டு ஒடுங்குவார், அரவு கடித்து நஞ்சேறப் பெற்றவர், பேயால் பிடிக்கப் பட்டுப் பெருந்துயர் உறுவோர், ஒருமுறை வலம் வந்து தொழ, அத்துயர் தீர்க்கும் ஒளியைக் காலும் கல்கட்டம். ''நஞ்சம் உண்டு நடுங்குதுயர் உற்றோர், அழல்வாய் நாகத்து ஆரெயிறு அழுந்தினர், சுழல்கண் கூளிக் கடுநவை மட்டோர், சுழல வந்து தொழத் துயர் தீர்க்கும் நிழல்கால் நெடுங்கல்'' —ஷை : 123-127.

4) தவவேடம் மேற்கொண்டு, அதற்குப் பொருந்தா அவமே மேற்கொண்டு ஒழுகும் பொய்வேடதாரி, கணவர் நம்புமாறு நடித்து பொய்யொழுக்கம் மேற்கொள்ளும் பெண்டிர், தம்மிடம் நம்பிக்கை வைத்துள்ள அரசர்க்கு அவர் அறியாது, அவர் அழிவுக்கு வழிதேடும் அறைபோகு அமைச்சர், பிறர்மனை நயப்போர், பொய்ச்சான்று கூறுவோர், புறங்கூறுவோர் ஆகியோரைக் கைக்கொள் பாசத்தால் கொண்டு, காதம் நான்கும் கேட்கக் கடுங்குரல் எழுப்பிப் புடைத்து உண்ணும் பூதம்.

> 'தவம் மறைந்து ஒழுகும் தன்மை இலாளர்
> அவம் மறைந்து ஒழுகும் அலவல் பெண்டிர்
> அறைபோகு அமைச்சர், பிறர்மனை நயப்போர்,
> பொய்க்கரியாளர், புறங்கூற்றாளர் என்
> கைக்கொள் பாசத்துக் கைப்படுவோர் எனக்
> காதம் நான்கும் கடுங்குரல் எழுப்பிப்
> பூதம் புடைத்து உணும்.'' —மேற்படி : 128-134.

5) அரசன் செங்கோல் கெடக், கொடுங்கோலன் ஆயினும், அறங்கூர் அவைகளில், வழங்கும் தீர்ப்பு, நடுவு நிலைமையினின்று தவறினாலும், அவற்றை வாயால் உரையாது கண்ணீர் சொரிந்து காட்டும் பாவை." "அரைசு கோல் கோடினும், அறங்கூர் அவையத்து உரைநூல் கோடி ஒருதிறம்பற்றினும், நாவொடு நவிலாது நவைநீர் உகுத்துப் பாவை நின்று அழூஉம்." —மேற்படி : 135-138;

6) தம்முள் மூழ்கி நீராடி எழுவாரைக் கணவரொடு சேர்க்கும் சோமகுண்டம், சூரிய குண்டங்களாம் குளங்கள்; தன்னை வலம் வந்து தொழுவாரைக் கணவரொடு சேர்க்கும் காமவேள் கோட்டம். "சோமகுண்டம் சூரியகுண்டம் துறைமூழ்கிக், காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு தாமின்புறுவர் உலகத்துத் தையலார்" (கனாத்திறம் உரைத்த காதை : 59-61;)

7) தன்னில் நீராடுவார்க்கு, இந்திரனால் இயற்றப் பட்ட ஐந்திர வியாகரணம் என்னும் இலக்கண நூல் அறிவினைத் தரும் புண்ணிய சரவணப் பொய்கை; "புண்ணிய சரவணம் பொருந்துவீராயின், விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவிர்." (காடுகாண் காதை : 98-99);

8) தன்னில் நீராடுவார்க்கு, அவர் பழம்பிறப்பை உணர்த்தவல்ல பவகாரணிப் பொய்கை; "பவகாரணி படிந்து ஆடுவீராயின் பவகாரணத்தின் பழம்பிறப்பு எய்துவீர்" (காடுகாண் காதை : 100-101);

9) தன்னில் நீராடுவார்க்கு அவர் நினைத்தன எல்லாம் தரவல்ல இட்டசித்திப் பொய்கை "இட்டசித்தி எய்துவீராயின் இட்டசித்தி எய்துவீர்" (காடுகாண் காதை : 102-103);

10) வசந்தமாலை வடிவில் வந்து, கோவலனை வழிமடக்க, அவன் பாய்கலைப்பாவை மந்திரம் சொல்ல தன் உண்மை வடிவம் காட்டி ஓடிப் போகும் வனசாரணி என்னும்,

காட்டுவழிப் போவாரை மடக்கித் துன்புறுத்தும் தெய்வம்: "வயந்தமாலை வடிவில் தோன்றி...பாத்தரும் பண்பு! நின்பணிமொழியாதெனக்... கோவலன் நாவிற்கூறிய மந்திரம் பாய்கலைப் பாவை மந்திரம் ஆதலின், வனசாரணியான், மயக்கம் செய்தேன்: புனமயில் சாயற்கும் புண்ணிய முதல் விக்கும் என்திறம் உரையாது ஏகு என்று ஏக" [காடுகாண் காதை : 173-200].

11) புண்தாழ் குருதி புறம் சோர, வெட்டுண்டு, இறந்து வீழ்ந்து கிடந்த நிலையில், வந்து அழுது ஏங்கி நிற்க, பழுது ஒழிந்து எழுந்திருந்து எழுது எழில் மலர்உண் கண்ணாய்! நீ, ஈண்டே இருப்பாயாக என ஆறுதல் உரைக்கும் கோவலன்.

"அழுதேங்கி நிலத்தின் வீழ்ந்து ஆயிழையாள் தன் கணவன்
தொழுதகைய திருந்தடியைத் துணை வளைக்கையால் பற்ற
பழுதுஒழிந்து எழுந்திருந்தான் பல்அமரர் குழாத்துளன்
எழுதெழில் மலர்உண்கண்! இருந்தைக்க எனப்போனான்"
—ஊர்சூழ்வரி : 64-67;

12) கள்வனோ என் கணவன்! என்ற கண்ணகி வினாவிற்குக், கள்வன் அல்லன் என விடைகூறும் காய்கதிர்ச் செல்வன்.

"காய்கதிர்ச் செல்வனே கள்வனோ என் கணவன்?
கள்வனோ அல்லன், கருங்கயற்கண் மாதராய்
ஒள்ளெரி உண்ணும் இவ்வூர்" —துன்பமாலை : 51-53;

13) கண்ணகி முன் தோன்றி, இவ்வூரை எரியால் அழிக்கும் பணி, எனக்குப் பண்டே உண்டு. ஆயினும் ஈங்கு யார் யாரை எரிக்காது காக்கவேண்டும் எனக் கேட்டு, கண்ணகி, பார்ப்பார், அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர், மூத்தோர், குழவி ஆகியோரைக் கைவிட்டுத் தீயோரை

மட்டுமே அழிப்பாயாக என ஆணையிட அவ்வாறே அழித்து ஏவல் கேட்கும் எரிக்கடவுள்.

''மாலைஎரி அங்கி வானவன் தான்தோன்றி,
மாபெரும் பத்தினி! நின்னை மாணப் பிழைத்தநாள்
பாய்எரி இந்தப் பதியூட்டப் பண்டே ஓர்
ஏவல் உடையேனால்; யார் பிழைப்பார்? ஈங்கு என
பார்ப்பார் அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர்
மூத்தோர், குழவி எனும் இவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்கு என்று காய்த்திய
பொற்றொடி ஏவப் புகை அழல் மண்டிற்றே
நற்றேரான் கூடல் நகர். — வஞ்சிமாலை : 49-57.

14) கண்ணகியின் முன் வருதற்கு அஞ்சி, அவனைப் பின்தொடர்ந்தவாறே சென்று, மறை ஓதும் அந்தணர் தம் நாவோசையல்லது, வலியரால் மெலிவெய்தி முறைகேட்க வருவார் எழுப்பும் மணிஓசை கேட்டு அறியார்; தம் அடிபணிய மறுக்கும் பகைவர் பழிதூற்றக் கேட்பதல்லது, தன்குடிமக்கள் பழிதூற்றக் கேட்டறியார் எனப் பாண்டியர் பெருமையினையும், முற்பிறவியில் செய்த தீவினையால், வந்துற்ற கேடுஇது எனக் கண்ணகியின் பழம் பிறப்பினையும் உணர்த்தும் மதுராபுரித் தெய்வம். ''முன்நிலை ஈயாள், பின்நிலைத் தோன்றி...மாபெரும் கூடல் மதுராபதி எனபேன்....மறைநா ஓசை அல்லது, யாவதும் மணிநா ஓசை கேட்டதும் இலனே; அடிதொழுது இறைஞ்சா மன்னர் அல்லது, குடிபழி தூற்றும் கோலனும் அல்லன்....விழுவோள் இட்ட வழுவில் சாமம் பட்டனிர்'' (கட்டுரை காதை : 16-170.)

முதல் இரு காண்டங்களில், இயற்கையொடு பொருந்தாச் செய்திகள், இவை போல்வன, இன்னும் பலப்பல.

ஆக, நடக்க இயலாத, நம்புதற்கு இயலாத இயற்கையொடு பொருந்தாச் செய்திகள், புகார் மதுரைக் காண்டங்களிலும், வஞ்சிக்காண்டத்தில் அதிகம். ஆகவே, வஞ்சிக் காண்டம், சிலப்பதிகாரத்தின் அங்கமாதல் இயலாது எனத் திரு. அய்யங்கார் காட்டும் காரணம் பொருந்தாது என்பது மேலே கூறிய எடுத்துக் காட்டுக்களால் விளங்கும்.

கோவலனும் கண்ணகியும், புகார் நீங்கி மதுரைக்குச் சென்றபோது கடந்து சென்ற நாடுகளின் இயற்கை நலங்களை விரிவாக உரைக்கும் இளங்கோவடிகளே, வஞ்சிக் காண்டத்தையும் பாடியிருந்தால், செங்குட்டுவன் கடந்து சென்ற வளநாட்டு இயற்கை நலங்களையும் பாடியிருப்பார். ஆனால் அது பாடப்பெறவில்லை; ஆகவே வஞ்சிக்காண்டம், அவர் பாடியதாகாது என்பது ஐயங்கார் காட்டும் மற்றொரு காரணம்...

புகார்க்கும் மதுரைக்கும் இடையில் உள்ள நாடுகள் வழியாகக், கோவலனும் கண்ணகியும், முதன் முறையாகச் செல்லுகின்றனர். ஆகவே, அவர்களுக்கு அவ்வழி இயல்பு களைக் காட்டிச் செல்ல வேண்டியது தேவைப்பட்டது. அதனால் இளங்கோவடிகளார், அந்நாட்டு இயல்புகளை யெல்லாம் விளங்கக் கூறிச் சென்றார்.

ஆனால், நீலகிரிக்கும், கங்கைவெளிக்கும் இடைப்பட்ட நாடுகள் வழியாகச், செங்குட்டுவன் ஒரு முறையே சென்றவன் அல்லன்; கண்ணகி சிலைக்காகச் செல்வதற்கு முன்பும், அவ்வழியில், அவன் ஒருமுறை சென்றுள்ளான். தன் தாயைக் கங்கையில் நீராட்டக் கொண்டு சென்று, அப்போது தன்னை எதிர்த்த ஆரிய அரசர் ஆயிரவரை வென்று, கருதியது முடித்து வந்துள்ளான்: "கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம் எங்கோமகளை ஆட்டிய அந்நாள், ஆரிய மன்னர் ஈரைஞ்ஞூற்றுவர்க்கு ஒருநீ ஆகிய செருவெங்கோலம் கண் விழித்துக் கண்டது கடுங்கண் கூற்றம்" என்ற, செங்குட்டுவன் படைத் தலைவன் கூற்றினைக் காண்க.

(காட்சிக் காதை : 160-164) ஆகவே அவ்வழி, செங்குட்டுவன் பண்டே அறிந்தவழி. ஆகவே கண்ணகி சிலைக்காக, அவன் அவ்வழியில் மீண்டும் செல்லும்போது, அவனுக்கு வழிகாட்டத் தேவையில்லை. ஆகவேதான் இளங்கோவடிகளார், அவ்வழி களைப் பாடவில்லை!

மேலும், இன்னார் பாடியிருந்தால், இதையெல்லாம் பாடியிருப்பார் : அவையெல்லாம் பாடப்பெறவில்லை : ஆகவே அவர் பாடியிருக்க இயலாது என்ற வாதமும் முறையான வாதம் ஆகாது.

ஆக, வஞ்சிக் காண்டம், இளங்கோவடிகளார் பாடிய தன்று என்பதற்கு, அய்யங்கார் கூறும் இக்காரணமும் பொருத்தமான காரணம் ஆகாது.

இனி, பௌத்தர்களால் பரப்பி விடப்பட்ட போன பிறவிபற்றிய கட்டுக் கதைகள், வஞ்சிக் காண்டத்தில் எண்ணிலாதன. ஆகவே, வஞ்சிக் காண்டம், இளங்கோவடிகள் பாடியதன்று என்பது திரு. அய்யங்கார் கூறும் பிறிதொரு காரணம்.

இதிலும் உண்மையில்லை : போனபிறவி பற்றிய கட்டுக் கதைகள், அவர் கூறுவது போல், வஞ்சிக் காண்டத்தில் எண்ணிலாதன, இடம் பெற்றிருக்கவில்லை : மாறாக, ஒரேயொரு நிகழ்ச்சி மட்டுமே இடம் பெற்றுளது.

கண்ணகி விழாக் காணவந்திருந்த இளமகளிர் மூவர் மீதும் கரகநீர் தெளிக்க, அவர்க்குப் போனபிறவி நினைவுக்கு வரவே, அவர்களுள், அரட்டன் செட்டிமகளிர் இருவரில் ஒருத்தி, "புதுமண வாழ்க்கையில் புகழ்ந்த காதலன், பின்னர்ப் போற்றா ஒழுக்கம் கொண்டது அறிந்து வருந்திய என்னையும் பாராது, வேற்று நாட்டில், வேறு துணை இன்றிக் காதலனோடு கடுந்துயர்க்கு உள்ளான என் மகளே! வருக."- "புகழ்ந்த காதலன் போற்றா ஒழுக்கின் இகழ்ந்ததற்கு இரங்கும் என்னையும் நோக்காய் ஏதில் நன்னாட்டில் யாருமில்

ஒரு தனிக் காதலன் தன்னொடு கடுந்துயர் உழந்தாய : யான் பெருமகனே!'' (வரந்தரு காதை : 98 - 102) என்னும், மற்றொருத்தி, "நம் மனையில் என்னோடிருந்த கண்ணகியாம் நங்கை நல்லாளை இடையிருள் யாமத்து உடன் கொண்டு சென்றதற்கு வருந்துகிறது என் நெஞ்சம்; அது யான் பொறேன். மகனே! வருக!''—''என்னோடிருந்த இலங்கிழை நங்கை தன்னோடு இடையிருள் தனித்துயர் உழந்து, போனதற்கு இரங்கிப் புலம்புறும் நெஞ்சம் : யான் அது பொறேன் : என் மகன்! வாராய்!'' (வரந்தரு காதை : 104 - 107). என்றும் வாய்விட்டுப்புலம்பி, தாம், போன பிறவியில், முறையே, கண்ணகி தாயாம், கோவலன் தாயாம் என்பதை உணர்த்தினர் : அது போலவே சேடக்குடுமியின் சிறுமகள், ''வையை ஆற்றிலிருந்து, ஊர்க்குறு மாக்கள் கூறுவன் கேட்டு வந்த யான், மனையில் உன்னைக் காணேன்: என் தாயே எங்கு ஒளித்தனையோ?''.

'வருபுனல் வையை வான்துறைப் பெயர்ந்தேன்,
உருகெழு மூதூர் ஊர்க்குறு மாக்களின்
வந்தேன் கேட்டேன் ; மனையில் காணேன் :
எந்தாய்! இளையாய்! எங்கொளித்தாயோ?''
—(வரந்தரு காதை : 108 - 111);

எனப்புலம்பித், தான், போன பிறவியில் ஆயர்முது மகள் மாதரியாம் என்பதை உணர்த்தினாள்.

போன பிறவி கூறும் நிகழ்ச்சி, வஞ்சிக் காண்டத்தில், இது ஒன்று தவிர்த்து வேறு இல்லை. திரு. அய்யங்கார் அவர்கள் கூறுவது போல, எண்ணிலாதன இடம் பெற்றிருக்க வில்லை : போன பிறவி அறிந்து கூறும் நிகழ்ச்சி, வஞ்சிக் காண்டத்தில் மட்டுமே இடம் பெற்றுளது எனக்கூறுவதற்கும் இடம் இல்லை. மதுரைக் காண்டத்திலும் இடம் பெற்றுளது: வஞ்சிக்காண்டத்தில் உள்ளது போல் ஒன்று அன்று : இரண்டு இடம் பெற்றுள்ளன :

தவமுதல்வன் ஒருவன், எட்டிசாயலன் மனைவி படைத்த உணவை உண்ணும்போது வந்து, உண்டு ஒழித்ததை உண்ட குரங்கை, உன் மக்களில் ஒன்றுக் கொள்க எனத்தவ முதல்வன் பணிக்க, அவன் அது ஏற்று, அக்குரங்கின் தீவினை அறுக எனச்செய்த தானத்தின் பயனாய், மத்திம தேசத்து அரசனுக்கு மகனாய்ப்பிறந்து சிறந்துற்ற நிலையிலும், தனக்கு இப்பிறவி வாய்க்க, முற்பிறவியில், சாயலன் மனைவி செய்த அறமே காரணமாதலை மறவாதிருத்தற் பொருட்டு, ஒரு கையை குரங்குக் கையாகவே கொண்ட குரங்கின் மறுபிறவி, அடைக்கலக் காதையில் இடம் பெற்றுளது; (151 - 189.)

போன பிறவியில், உன் கணவனாம், கோத்தொழில் புரியும் பரதன் என்பான், சிங்கபுரத்து வாணிகன் சங்கமனை, ஒற்றன் எனக்கூறிக் காவலன் முன் கொண்டு நிறுத்தக் கொலை செய்யப் பெற்ற அச்சங்கமனின் மனைவிநீலி என்பாள், அத்துயர் பொறுக்கமாட்டாது ஏழுநாள் அலைந்து இறுதியில், இது செய்தார், வரும் பிறவியில் இதுவே பெறுக என இட்ட சாபத்தால், பெற்றீர் இப்பெருங்கேடு என, கண்ணகி கோவலன் முற்பிறவிக் கதையை, மதுரா புரித்தெய்வம் கூறுவது கட்டுரைக் காதையில் இடம் பெற்றுளது. (149-170)

ஆக, வஞ்சிக்காண்டம், சிலப்பதிகாரத்தின் ஒரு பகுதியாகாது என்பதற்கு, அவ்வஞ்சிக் காண்டத்தில் முற்பிறவி அறிந்து கூறும் நிகழ்ச்சி எண்ணற்றன இடம் பெற்றுள்ளதாகத் திரு. அய்யங்கார் கூறும் காரணமும் பொருந்தாது என்பது இதனால் தெளிவாகும்.

ஆக, வஞ்சிக் காண்டம், இளங்கோவடிகளால் பாடப் பெற்றதன்று; வேறு யாரோ ஒருவரால் பாடப்பெற்ற, செங்குட்டுவன் புகழ்பாடும் தனிநூல் என்பதற்குத் திரு. சீனிவாச அய்யங்கார் கூறும். 1) கோவலனையும் கண்ணகியையும் வானாட்டிற்கு அனுப்பி வைப்பதோடு கதை முடிந்து விடுகிறது! அது முதல் இரு காண்டங்களுக்கு

உள்ளாகவே அடங்கிவிடுகிறது என்ற காரணமோ, 2) இயற்கையொடு பொருந்தா நிகழ்ச்சிகள், புகார் மதுரைக் காண்டங்களிலும், வஞ்சிக் காண்டத்தில் அதிகம் என்ற காரணமோ, 3) கோவலனும் கண்ணகியும் சென்ற, புகார்க்கும் மதுரைக்குமிடையிலான நாடுகளின் இயற்கை நலம் விளங்க உரைக்கப் பட்டது போல், செங்குட்டுவன் படையெடுத்துச் சென்ற, நீலகிரிக்கும் கங்கைக் கரைக்கும் இடையிலான நாடுகளின் இயற்கை நலம் உரைக்கப் படவில்லை என்ற காரணமோ, 4) போன பிறவி பற்றிய கட்டுக்கதைகள், வஞ்சிக் காண்டத்தில் அதிகம் என்ற காரணமோ ஏற்புடையன ஆகா, என்பது, மேலே கூறுயவாறு விளக்கப்படவே, வஞ்சிக்காண்டம், சிலப்பதிகாரம் என அழைக்கப்படுதற்கு உரிமை இல்லாத, இளங்கோவடிகளால் பாடப்பெறாத தனிநூல் என்ற அவர் கூற்று ஏற்கக் கூடியது அன்று என்பது உறுதி செய்யப்பட்டது; அது உறுதி செய்யப் படவே, புகார், மதுரைக் காண்டங்களோடு வஞ்சிக் காண்டமும் சேர்ந்ததே சிலப்பதிகாரம் என்ற முழு நூலாம், அம்மூன்று காண்டங்களையும், இளங்கோவடிகள் ஒருவரே தாம் பாடியுள்ளார் என்பது முடிந்த முடிபாகிறது.

செங்குட்டுவன் வெற்றிப் புகழ்பாடும் வீரகாவியமே வஞ்சிக்காண்டம்; சிலம்பின் கதை கூறுவது அதன் குறிக்கோள் அன்று என்ற திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்காரின் கூற்று உண்மையோடு பட்டதாயின், அது, கண்ணகி சிலைக்காம் கல்கொணர வடநாடு சென்று பெற்ற வெற்றியை விளங்கக் கூறுவதோடு நின்றிருக்காது; அவன் வீர வரலாறுகள் அனைத்தையும் ஒன்றுவிடாது கூறியிருக்கும்;

செங்குட்டுவன் ஆண்மைக்குச் சான்று பகர்வது, கல் கொணர்ந்த இச்செயல் ஒன்று மட்டுமன்று; எண்ணற்றன வேறு பலவும் உள.

மறைந்த தன் தாய் நற்சோணையின் படிமத்தைக் கங்கையில் நீராட்டச் சென்றபோது, ஒன்று திரண்டு வந்து

எதிர்த்த ஆரிய அரசர் பலரையும், தான் ஒருவனாகவே நின்று வெற்றி கொண்டது.

தன்நாட்டு எல்லைக்கண் வாழ்ந்து, தன் நாட்டு அமைதியைக் குலைத்து வந்த கொங்கரையும், அவர்க்குத் துணைவந்த சோழ பாண்டியரையும் கொங்கர் செங்களத்தில் ஒருசேர அழித்து, அக்கொங்கர் தலைநகராம் கொடுகூரை அழித்தது.

சேரநாட்டுக் கடற்கரைக்கு அணித்தாக உள்ள தீவினை இடமாகக் கொண்டு, சேரநாடு வந்து செல்லும் வணிகக் கலங்களைக் கொள்ளையிட்டு வந்தார் செயலால் சினங் கொண்டு, கடற்படை கொண்டு அவர்தம் கடல் அரணை அழித்து, அவரையும் வென்று அடக்கியது.

மோகூர்ப் பழையன் மாறன் எனும் பெருவீரன்பால் பெற்ற தோல்விக்கு நாணி, எங்கோ சென்று தலைமறைவாகி விட்ட, தன் ஆருயிர் நண்பன் அறுகைக்கு நேர்ந்த பழியினைத் துடைப்பான் வேண்டி, அம்மோகூர்ப் பழையன் மீது படை யெடுத்துச் சென்று, ஆங்குச் சோழனும், பாண்டியனும் ஆகிய பேரரசர்களும், குறுநில மன்னர்களாம் வேளிர் பலரும் அப்பழையனுக்குத் துணைநிற்கும் நிலையிலும், அப்பழையனை வென்று, அவன் காவல் மரமாம் வேம்பினை வெட்டி வீழ்த்தியது.

கடற்கரை நகராம் வியலூரில், புலிநிகர் வீரர் பலரை அழித்து வெற்றி கொண்டது.

சோழ நாட்டில், தன் மைத்துனன் ஆட்சியில் அமர்ந்தது பொறாத அவன் தாயத்தார் ஒன்பதின்மர், அவனுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து, நாட்டின் அமைதி கெடுத்து அழி தொழில் புரியத் தலைப்பட்டனராக அஃதறிந்து, அவர்கள் ஒன்பதின்மரையும் நேரிவாயில் எனும் இடத்தே எதிர்த்து அழித்து, சோழநாட்டின் அமைதி காத்தது.

அதே சோழநாட்டில், இடும்பாவனத்தில் மிகப்பெரிய போரில் கடுமையாகப் போரிட்டு பெரும் வெற்றி பெற்றது.

செங்குட்டுவன் பெற்ற வெற்றிகளாக அறியப்படும் இவ்வேழனுள்ளும், கடல் பிறக்கோட்டிய நிகழ்ச்சி, பெரும் புலவர் பரணர், அவனைப் பாராட்டிப் பாடிய ஐந்தாம்பத்தின் பலபாடல்களில் எடுத்துக் கூறியது போதாது என உணர்ந்து அகநானூற்றுப் பாடல் ஒன்றிலும், எடுத்துக் கூறிப் பாராட்டு மளவு புகழ்வாய்ந்த பெருஞ்செயலாம். செங்குட்டுவன் புகழ் பாடுவதற்காகவே பாடப்பட்டது வஞ்சிக்காண்டமாயின், அதில் இச்செயல் எடுத்துக்கூறிப் பாராட்டப் பெற்றிருக்க வேண்டும். ஆனால், அதில் இடம்பெறவில்லை.

அஃது ஒழிந்த ஏனைய ஆறும், வஞ்சிக் காண்டத்தில் கூறப்பட்டுள்ளன ஆயினும் அவை, ஆங்காங்கே சிறுசிறு குறிப்பாம் அளவில்தான் கூறப்பட்டுள்ளனவே ஒழிய, கல் கொணர்ந்த நிகழ்ச்சிபோல் விரிவாகக் கூறப்படவில்லை.

மேலும், செங்குட்டுவனின் வடநாட்டுப் படை யெடுப்பைப் பாடுவதே வஞ்சிக் காண்டத்தின் குறிக்கோளாயின், கண்ணகிக்குக் கல்கொணரச் செல்வதற்கு முன்னர்த் தன் தாயின் படிமத்தைக் கங்கையில் நீராட்டச் சென்று, கங்கைக் கரையில் வந்து எதிர்த்த ஆரிய அரசர் புலரை ஒருசேர வென்ற செங்குட்டுவனின் முதல் வட நாட்டுச் செலவையே, அது விரிவாகக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் அது, அவ்வாறு கூறப்படாமல், எங்கோ ஓரிடத்தில் செங்குட்டுவனின் பல்வேறு பெருஞ்செயல்களுள் ஒன்றாகவே அறிவிக்கப்பட்டுளது.

ஆக, எந்தக் கோணத்திலிருந்து நோக்கினும், வஞ்சிக் காண்டம், செங்குட்டுவன் வெற்றிபாடும் வீரகாவியமல்லது வேறு நோக்குடையது அன்று என்ற, அய்யங்கார் அவர்களின் கூற்றில் வலுவில்லை என்பதே உறுதியாகிறது.

## 29ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு-4

## திருவள்ளுவர் காலம்

திருவள்ளுவர்க்குக், கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட நூற்றாண்டை உரிமை ஆக்க இயலாது. [Thiruvalluvar cannot be assigned to any century earlier than the VI.] History of the Tamils: Page : 588.)

இது திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் முடிவு. இதற்கு அவர்காட்டும் முதல் காரணம் இது: திருவள்ளுவர் காலத்துக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களில், ஒழுக்க நெறி கூறும் பாக்கள் இடம்பெறவில்லை; ஆகவே, அவர் சமஸ்கிருத மொழி சாஸ்திரங்களிலிருந்து பெருவாரியாகக் கடன் வாங்கியுள்ளார், [The author (Thiruvalluvar) borrowes freely from Sanskrit Sastras, for, in the Tamil literature, before Thiruvalluvar's time, didactic poetry did not exist'' (Page : 587.)]

மலைக்காடுகளில், எதிர்கால எண்ணமே இல்லாமல், கிடைத்தன உண்டு. கண்ட இடத்தில் உறங்கி வாழ்ந்த மக்களினம், இன்றைய நாகரிக நிலையை அடைய எத்தனையோ படிக்கட்டுக்களை ஏறி வந்துளது. அப்படி முன்னேறிய ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளில், தங்கள் வாழ்க்கை செம்மையுற அமைதற்பொருட்டு, அவ்வப்போது, தனக்குள்ளாகவே, சிலபல கட்டுப்பாடுகளை வகுத்துக்கொண்டு வந்துளது. இவ்வாறு அவ்வப்போது வகுத்துக்கொண்ட கட்டுப்பாடுகளின் தொகுப்பே, மக்களின் வாழ்க்கைச் சட்டங்களாயின. அத்தகைய வாழ்க்கைச் சட்டங்கள், எல்லாம், பல்வேறு தலைப்புகளில் முழுவடிவைப் பெறுவதற்கு முன்னர், அம்மக்கள் வாழ்க்கையிடையே நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகளில், அந்நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டவர்களின்

உரையாடல்களில் அங்கு ஒன்றும் இங்கு ஒன்றும் ஆக, இலைமறைகாயாக இடம் பெற்று வந்தன. இவ்வாறு பலநூறு ஆண்டு காலம் பல்வேறு நிலைகளில் இடம் பெற்று வந்த பல்வேறு வாழ்க்கைச் சட்டங்களையெல்லாம், பல்வேறு அறிஞர் பெருமக்களால், தொகுக்கப்பெற்று அறநூல்களாகவும், பொருள் நூல்களாகவும் வடிவம் பெற்றன. இது எல்லா மக்களுக்கும் எல்லா நாட்டவர்க்கும் எல்லா மொழியாளர்க்கும் பொதுவிலக்கணமாம். இதைத், திருவாளர் பி. டி. எஸ். அவர்களும் ஒப்புக் கொண்டுள்ளார்.

"அர்த்த சாஸ்திரங்கள், தர்ம சாஸ்திரங்கள், மோக்ஷ சாஸ்திரங்கள்; இப்பொருள் குறித்த பழைய கொள்கை ஆய்வுகள் இவை. மறைந்து போகும் அபாயத்திலிருந்து, பாரதவீரகாவியத்தில், பற்றற இணைக்கப்பட்டு, அதன் நாடக பாத்திரங்களின் உரையாடல்கள் என்ற வகையில், அக்கதையில் பின்னப்பட்டுப் புதிய வாழ்வுரிமை பெற்றவை; ஆய்வு செய்து முழுவடிவம் பெற்ற பிற்காலக் கொள்கை விளக்கம் போல் அல்லாமல், இச்சாஸ்திர முடிவுகளெல்லாம், ஏறத்தாழ உருவம் அற்றவை."
[Artha Sastras Dharma Sastras, and Moksa Sastras. These were ancient treatises on these subjects, which were in danger of extinction and acquired a new lease of life by being welded into the Epic and woven in to its story as dialogues of its acters. The treatises were more or less amorphous and not like the finished products of later times." Page : 88]
என அவர் கூறுவது காண்க.

தமிழ் மொழிக்கும் இது பொருந்தும் எனல் கூறாதே கொள்ளப்படும். தமிழில் திருக்குறள் எழுவதற்கு முன்னர், வடமொழி இராமாயண பாரதம் பெருங்கதைகள் போலும், ஒருசிலரின் வாழ்க்கையினைக் கூறும் பெருநூல்கள் இல்லை எனினும், மக்களின் அகப்புற வாழ்க்கையின் பல்வேறு கூறுகளை விளங்கக் கூறும் பாக்கள் எழாமல் போய்விடவில்லை. அத்தகைய பாடல்கள் என்னில் அடங்காதன

பாடப்பெற்றிருந்தன. அவற்றுள், காலவெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டன போக, எஞ்சி நின்றனவே பத்துப் பாட்டு, எட்டுத்தொகைப் பாக்கள். அப்பாக்களில் கூற்று நிகழ்த்தும் தலைவன், தலைவி, தாய், தோழி போன்றோரின் கூற்றுக்களில் கிடந்து வழியும் அறநூல், பொருள் நூல் கருத்துக்களுக்கு அளவே இல்லை; அவற்றுள் தொகை நூற்கள் வரிசையுள் தலையாய தொகை நூற்கள் சிலவற்றி லிருந்து எடுத்துக் காட்டுக்கு ஒரு சில இதோ!

''அழிவில முயலும் ஆர்வமாக்கள்
வழிபடு தெய்வம் கண் கண்டாங்கு'' —நற்றிணை: 9.

இதற்கு இணையான குறள்:

''குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும்'' —1023.

''பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார் தம் ஒட்டியோர் திறத்தே.'' —நற்: 32.

இணையான குறள்கள்;

''நாடாது நட்டலின் கேடில்லை: நட்டபின்
வீடு இல்லை நட் பாள்பவர்க்கு'' 791.

''தேரான் தெளிவும், தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.'' — 510.

''அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து
பொருள்வயின் பிரிவோர் உரவோர்'' —குறுந்: 20.

இணையான குறள்:

''அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்
புல்லார் புரள விடல்' —755.

"இடிக்கும் கேளிர் நுங்குறை யாக
நிறுக்கல் ஆற்றினோ நன்றுமன்." —குறுந் : 58.

இணையான குறள்கள் :

"இடிக்கும் துணையாரை ஆள்வாரை, யாரே
கெடுக்கும் தகைமை யவர்?" —447.

"நகுதற் பொருட்டன்று நட்டல்: மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு" —786.

"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்று எய்துப
செருநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்" — அகம் : 66.

இணையான குறள் :

"எழுபிறப்பும் தீயவை தீண்டா : பழி பிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்" —62.

"நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்
பயன் இன்மையின் பற்றுவிட்டு ஒருஉம்
நயனின் மாக்கள்." —அகம் : 71.

இணையான குறள் :

"உறின் நட்டு அறின் ஒருஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்?" —812.

"குடிபுரவு இரக்கும் கூரில் ஆண்மைச்
சிறியோன்" —புறம் : 75.

இணையான குறள் :

"வேலொடு நின்றான் இடு என்றது போலும்
கோலொடு நின்றான் இரவு." —552.

"உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம் :
நல்லறிவுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெரும" —புறம் : 197.

இணையான குறட்பாக்கள் :

"நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு." —408.

"அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும், செவ்வியான்
கேடும் நினைக்கப்படும்" —169.

"யானைவேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே."
—புறம் : 214.

இணையான குறள் :

"கான முயல் எய்த அம்பினில், யானை
பிழைத்த வேல் ஏந்தல் இனிது." —772.

"உண்டால் அம்ம இவ்வுலகம்...
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே."
—புறம் : 182.

இணையான குறட்பாக்கள் :

"பண்புடையார் பட்டுண்டு உலகம்; அது இன்றேல்
மண்புக்கு மாய்வது மன்." —996.

"சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை." —990.

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே; —புறம்:183.

இணையான குறள் :

'உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்;
கடையரே கல்லா தவர்.'' —395.

மேலும், ''பாஅல் புளிப்பினும்'' என்பது போலும் அறிவுரைகளை அரசர்க்கு உணர்த்தி, அதன் காரணத்தால், ''செவியறிவுறூஉ'' எனும் துறையினவாகக் கருதப்படும், 2, 3, 5, 6, 35, 40, 65 எண்ணிட்ட புறநானூற்றுப் பாடல்களும், அது போலவே, ''உண்டாலம்ம இவ்வுலகம்'' என்பது போலும் அறிவுரைகளை அரசர்க்கு உணர்த்தி அதன் காரணத்தால் பொருண்மொழிக்காஞ்சி அல்லது வாயுறை வாழ்த்து எனும் துறையினவாகக் கருதப்படும்; 182 முதல் 193, மற்றும் 195, 214 எண்ணிட்ட புறநானூற்றுப் பாடல்களும் ஒழுக்க நெறி உணர்த்தும் பாடல்களே.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் என்பதே மரபு. தொல்காப்பியர், கைக்கிளை என்ற அகத்திணையின் புறத்திணையாகிய பாடாண்திணைக்கு உரிய பல்வேறு துறைகளுள், வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்ற இவ்விரண்டையும் கொண்டு, (தொல் : பொருள் புறத்திணை: 87) வேம்பும், கடுவும் போலும் கசப்பும், காரமும் கலந்த சொற்களால் அல்லாமல், இதுசெய்தால், இது கிடைக்கும் என, எதிர்கால நலனை நினைவூட்டிக் காக்கும், இனிய நயமான சொற்களால் அறிவூட்டுவது வாயுறை வாழ்த்து என்றும்,

''வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்பும் கடுவும்போல, வெஞ்சொல்
தாங்குதல் இன்றி, வழிநனி பயக்கும் என்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தன்றே''
—(தொல். பொருள். செய்யுள் : 417)

நடுவுநிலை பிறழாமல் நிற்பதும், எந்நிலையிலும், யார் மாட்டும் வெகுளாமல், நம்மைக்காத்தே நிற்பதும் பெரியவ

ராயினாரின் கடன் என அவர் தம் காதுகளுக்கு அறிவுறுத்துதல் செவியறிவுறூஉ என்றும், அவற்றிற்கு இலக்கணமும் வகுத்துள்ளார்:

''செவியுறை தானே
பொய்முதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடன் எனச் செவியுறுத்தன்றே''
—தொல்: பொருள்: செய்யுள்: 419.

இவ்வாறு இலக்கணம் வகுத்தார் தொல்காப்பியர் என்றால், அதற்குத் துணைபுரிய, அவர் காலத்திற்கு முன்னர், அத்தகைய பாடல்கள் எண்ணற்றன வழக்காற்றில் இருந்திருக்கவேண்டும். இதுவே, இலக்கிய இலக்கண மரபாகும். இதைத் திருவாளர். பி. டி. எஸ். அவர்களும் ஏற்றுக் கொண்டுள்ளார்: ''அகஸ்தியர்க்கு முன்னர் எண்ணற்ற புலவர்கள் வாழ்ந்து பாக்கள் புனைந்திருக்க வேண்டுமில்லையேல், அகஸ்தியர், பாக்கள் பற்றிய இலக்கணத்தை இயற்றி இருக்க முடியாது''—"There must have been numerous poets before the time of Agastya, for he could not other wise have composed grammar of poetry" (Page: 219). எனக் கூறியிருப்பது காண்க.

ஆக, கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர் அல்லாத முற்பட்ட காலத்தைச் சேர்ந்ததாகத் திரு. பி. டி. எஸ். அவர்களால் கூறப்படும், (தமிழர் வரலாறு: பக்கம்: 70.) தொல்காப்பியத்தில், ஒழுக்க நெறி உணர்த்தும் பாடல்களுக்கு இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது என்றால், அதற்கு இலக்கியமாய் அமைந்த பாடல்கள், அக்காலத்துக்குச் சில நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலிருந்தாவது வழக்காற்றில் இருந்திருக்க வேண்டும். ஆகவே, தமிழ் இலக்கிய உலகில் ஒழுக்க நெறி உணர்த்தும் பாக்கள், கி. மு. இரண்டு அல்லது முதல் நூற்றாண்டு கேதிலமையதிரா இருந்திருக்க வேண்டும்;

ஆகவே, ஒழுக்க நெறி உணர்த்தும் பாடல்கள், தமிழ் மொழியில், திருவள்ளுவர் காலத்துக்கு முன்னர்ப் பாடப் படவில்லை! ஆகவே, அவர், தம் நூலுக்கு ஆன கருப் பொருட்களை, மனுதர்ம சாஸ்திரம், அர்த்த சாஸ்திரம் போலும் வடமொழி நூல்களில் தேடிப் பெறவேண்டிய தாயிற்று என்ற முடிவிக்கு வந்து, அது காரணம் கொண்டு, அவர் காலத்தைக் கி. பி. ஆறாவது நூற்றாண்டில் கொண்டு வந்து நிறுத்தும், திரு. பி. டி. எஸ். அவர்களின் முடிவு ஏற்புடையதாகாது.

''திருவள்ளுவர், அறத்துப் பாலில், மனுவின் தர்ம சாஸ்திரத்தையும், பொருட்பாலில், கௌடல்யரின் அர்த்த சாஸ்திரத்தையும் பின்பற்றியுள்ளார்.''— ''Thiruvalluvar follows mainly, in his Arappal, the most popular Dharma Sastra of Manu, and in his Porutpal, the well known Artha Sastra of kautalya'' (Page: 590)

திருவள்ளுவரைக் கி. பி. ஆறாம் நூற்றாண்டில் கொண்டு வந்து நிறுத்துவதற்குத், திரு. பி. டி. எஸ். அவர்கள் காட்டும் இரண்டாவது காரணம் இது. இம்முடிவிற்கு வந்துவிட்ட அவர்கள், அதை உறுதி செய்ய, திருக்குறள் கூறும் கருத்துக் களுக்கும், மனுதர்ம, அர்த்த சாஸ்திரங்கள் கூறும் கருத்து களுக்கும் உள்ள ஒருமைப் பாட்டினை விளக்க, குறட்பாக்கள் சிலவற்றை எடுத்துக் கொண்டு, அவ்வ கூறும், கருத்துக்கு நிகரான கருத்து கூறும், சமஸ்கிருத சுலோகங்கள் சிலவற்றை எடுத்துவைத்து ஒப்புக் காட்டியுள்ளார். (பக்கம்: 592-595).

உலகம் போற்றும் எந்த ஒரு அறிஞனும், ஒரு பொருள் பற்றிய நூலினை எழுதும் போது, அவன் காலத்தில் வழக்கில் இருக்கும், அதே பொருள்கூறும் நூல்கள் அனைத்தையும், அவை, தான் அறிந்த வேற்றுமொழியில் இருப்பினும், அவை அனைத்தையும், பழுதறக் கற்று, அவற்றுள் ஏற்பன ஏற்று, மறுப்பன மறுத்து, இறுதியாகத், தான் உண்மையெனக் கொண்ட பொருட்களை மட்டுமே மையமாகக் கொண்டு தன் நூலை அளிப்பன்.

இந்நெறி நின்று, தம் காலத்து நூல்கள் அனைத்தையும், தமிழ் நாட்டிற்கு அப்பால் உள்ள நாடுகளின் வழக்காற்றில் இருந்த பெருநூல்கள் அனைத்தையும் கற்றவர் திருவள்ளுவர் என்பதில் ஐயம் இல்லை. இஃது உண்மையாதல், பின்வரும் அவர் குறட்பாக்களால் உறுதியாதல் காண்க.

“ஒழுக்கத்து நீத்தார் பெருமை, விழுப்பத்து
வேண்டும், பனுவல் துணிவு” —21.

“யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை, எனைத்
தொன்றும்
வாய்மையின் அல்ல பிற” —300.

“பகுத்துண்டு பல் உயிர் ஓம்புதல், நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.” —322.

“பொச்சாப்பார்க்கு இல்லை, புகழ்மை; அது உலகத்து
எப்பால் நூலோர்க்கும் துணிவு” —533.

“நிறைமொழி மாந்தர் பெருமை, நிலத்து மறைமொழி காட்டிவிடும்” (28), மறப்பினும் கொளலாகும் ஒத்து” (134) என்ற குறள்கள், வள்ளுவர், வேதங்களை உணர்ந்தவர் என்பதையும், “புறம் கூறிப்பொய்த்து உயிர் வாழ்தலின், சாதல், அறம் கூறும் ஆக்கம் தரும்.” (183), “பிறன் பொருளான் பெட்டொழுகும் பேதைமை, ஞாலத்து அறம் பொருள் கண்டார்கண் இல்” (141) என்ற குறட்பாக்கள், அவர் மனுநீதி சாஸ்திரம் போலும் அற நூல்களையும், அர்த்த சாஸ்திரம் போலும் பொருள் நூல்களையும் படித்து அறிந்தவர் என்பதையும் உறுதி செய்கின்றன.

திருவள்ளுவரின் இயல்பு இதுவே என்பதைத் திருக்குறளுக்கு வழக்காற்றில் உள்ள அனைத்து உரைகளிலும், தலைசிறந்த உரையினை அளித்துள்ள பரிமேலழகர்,

''எல்லா நூல்களிலும் நல்லன எடுத்து, எல்லோர்க்கும்
பொதுப்படக் கூறுதல் இவர்க்கு இயல்பு'' (323 உரை.)

எனக் கூறுவதன் மூலம் உறுதி செய்திருப்பதும் காண்க.

ஒருவர், தம் காலத்தில் வழக்கில் இருக்கும் நூல்களைக் கற்றறிவது வேறு: தாம் எழுதும் ஒரு நூலுக்கு அந்நூல்களை முதல் நூலாகக் கொள்வது வேறு. திருவள்ளுவர், தம்காலத்தில் இருந்த நூல்களையெல்லாம் கற்றுத் தெளிந்தவர் என்பது உண்மை; ஆனால், அந்நூல்களே, அவர் நூலுக்கு முதல் நூல்கள் ஆயின என்பது உண்மையன்று.

திருக்குறள், ஒரு முதல் நூலே அன்றி, வழிநூல் அன்று. முதல் நூலாவது யாது? வழிநூலாவது யாது என்பதற்கு இலக்கணம் வகுத்துள்ளார் தொல்காப்பியர். நல்வினை தீவினைகளைக் கடந்து உயர்ந்தவனும், ஐயம் திரிபு அற்றுத் தெளிந்த பேரறிவாளனுமாகிய முழு முதல் தலைவன் இயற்றியது முதல்நூல்.

''வினையின் நீங்கி, விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்.''

—தொல்: பொருள்: மரபு: 96.

அந்நூலை முதல் நூலாகக் கொண்டு இயற்றப்படும் நூல்களெல்லாம் வழிநூல்களாம்; அவை நான்கு வகைப்படும்: விரிவாகக் கூறியிருக்கும் முதல்நூல் பொருள்களைச் சுருக்கிக் கூறுவது; சுருக்கமாகக் கூறியிருக்கும் முதல் நூல் பொருள்களைப், பின்வருவோர் எளிதில் விளங்கிக்கொள்வான் வேண்டி, விரித்துக் கூறுவது: முதல் நூலில் தொகுத்துக் கூறவேண்டியனவற்றைத் தொகுத்தும், விரிக்க வேண்டியன வற்றை விரித்தும், ஆக இரண்டையும் ஒருங்கே கொண்டு இருப்பது; ஒருமொழியில் இருப்பதை வேறு ஒரு மொழியில் தருவது ஆக வழி நூல்கள் நான்கு வகைப்படும்.

''வழிஎனப் படுவது அதன்வழித் தாகும்.''

''வழியின் நெறியே நால்வகைத் தாகும்.''

''தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனைமர பினவே.''

—தொ. பொருள். மரபு: 97, 98, 99.

ஆக, வழிநூல் என்பது, முதல் நூல் பொருளை அடியொட்டித் தழுவிச் செல்வதே அன்றி, அதுகூறும் எப்பொருளையும் மறுத்துக் கூறுவது அன்று. திருவள்ளுவர், தம்காலத்தில் வழக்கில் இருந்த தாம் கற்ற நூல்களில் கூறப்பட்டிருக்குக்கும் ஏற்புடைய கருத்துக்கள் பலவற்றைத் தம் திருக்குறளில் பல இடங்களில் எடுத்தாண்டுள்ளார் என்பது உண்மை.

''எவன், மற்றொன்றின் மாமிசத்தினாலே, தன் மாமிசத்தை விர்த்தி செய்ய நினைக்கிறானோ, அவனினும் பாவி, இந்த உலகத்தில் ஒருவனும் இல்லை.'' மனுதர்ம சாஸ்திரம், அதிகாரம் ஐந்தில், கூறப்பட்டிருக்கும் கருத்து, தமக்கு ஏற்புடையதாகவே, அக்கருத்தைத், தம்முடைய, தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான் எங்ஙனம் ஆளும் அருள்'' (251) எனும் குறளில் கொண்டார்.

''எவன் ஐந்துக்களைக் கட்டாமலும், கொல்லாமலும் வருத்தப்படுத்தாமலும் இருக்கிறானோ, அவன் சர்வஜன மித்ரனாகச், சகல சுகத்தையும் அனுபவிக்கிறான்'' என்ற மனுதர்மசாஸ்திரக் கருத்தை (அதிகாரம் : 5) தம்முடைய ''கொல்லான், புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா உயிரும் தொழும் (260) என்ற குறளில் கொண்டார்.

''அரசன் அடையப்படாத பொருளைச் சம்பாதிக்க விரும்பவேண்டும்; சம்பாதித்த பொருளை முயற்சியோடு காப்பாற்றவேண்டும்; காப்பாற்றிய பொருளை விருத்தி செய்ய வேண்டும்; விருத்தி செய்த பொருளைச் சற்பாத்திரத்தில் செலவு செய்ய வேண்டும்'' என்ற மனுதர்மசாஸ்திரப் பொருளைத் (அதிகாரம் : 7) தம்முடைய ''இயற்றலும்

சுட்டலும், காத்தலும், காத்த வகுத்தலும் வல்லது அரசு"
(385) என்ற குறளில் கொண்டார்.

"பயிரிடுகின்றவன் பயிருடன் உண்டாகிய புல் முதலிய வற்றைப் பிடுங்கிவிட்டுப் பயிர்களைக் காப்பாற்றுவதுபோல, அரசன், தன் தேசத்தில் உண்டான துஷ்டர்களைத் துரத்தி விட்டு நல்லோர்களைக் காப்பாற்றல் வேண்டும்." என்ற மனுதர்மசாஸ்திரம் (அதிகாரம் : 7) ஏற்புடையதாகவே, தம்முடைய," கொலையின் கொடியாரை வேந்து ஒறுத்தல், பைங்கூழ் களைகட்டதனோடு நேர், (550) என்ற குறட்பாவில் கொண்டார்.

வடமொழி சாஸ்திரங்களில் ஏற்புடையனவற்றை ஏற்கும் திருவள்ளுவர், அவற்றுள் ஏலாதனவற்றைத் தம் குறட்பாக்களில் வன்மையாக மறுத்தும் உள்ளார்.

"யக்கியத்திற்காகவே பசுக்கள் பிரமனால் சிருஷ்டிக்கப் படுகின்றன. ஆகையால், யக்யத்தில் செய்யும் பசுஹிம்சை ஹிம்சை அன்று" எனக்கூறும் மனுதாம சாஸ்திரக் கொள்கையை (அத்தியாயம் : 5) "அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின், ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று" (259) என்ற குறளில் கண்டித்துள்ளார்.

"பசியால் துன்புறுகின்ற அன்னை, பிதா, குரு, வேலைக்காரன் என்னும் இவர்களைக் காப்பாற்றுகிறவனாயும், தேவர், அதிதி என்னும் இவர்களைப் பூசிக்கின்றவனாயுமிருப்பவன், யாரிடத்தும் தானம் வாங்கலாம்" என்ற மனுவின் (அத்தியாயம் : 4) கொள்கையை "ஈன்றாள் பசி காண்பானாயினும் செய்யற்க, சான்றோர் பழிக்கும் வினை" என்ற குறட்பாவில் (656) வன்மையாகக் கண்டித்துள்ளார். உரையாசிரியர் பரிமேலழகர்", இறந்த மூப்பினராய இரு முது குரவரும், கற்புடைய மனைவியும், குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண் தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக என்னும் அறநூற் பொதுவிதி எய்தாமை பற்றி

இவ்வாறு கூறினார்'' என விளக்கம் அளித்து, திருக்குறளின் முழுமுதற்தன்மையை நிலைநாட்டியுள்ளார்.

மனுதர்ம சாஸ்திரம், அத்தியாயம் 10ல் 81 முதல் 130 வரையான சுலோகங்களில், "இறப்ப வரும்வழி இளிவந்தன செய்தாயினும் உய்க'' என்கிறது; இதைத் திருவள்ளுவர் ''இன்றி யமையாச் சிறப்பின ஆயினும், குன்ற வருப விடல்'' (961) என்ற குறட்பாவில் மறுத்துள்ளார், 'இறப்பவரும் வழி இளிவந்தன செய்தாயினும் உய்க என்னும் வடநூல் முறைமையை மறுத்து, உடம்பினது நிலை இன்மையையும், மானத்தினது நிலையுடைமையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம்'' எனப் பரிமேலழகர் அளிக்கும் விளக்கம், திருவள்ளுவர், ஒரு முழுமுதல் ஆசிரியனே என்பதை உறுதி செய்வது காண்க.

## 29 ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு-5

## மூவேந்தர் இமயப் படையெடுப்பு.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் தமிழ்ப்புலவர்கள். தமிழரசர்கள், இந்தியப் பெரு நிலப்பரப்பு அனைத்தையும். வெற்றி கொண்டதாகவும், அவ்வாறு வெற்றி கொண்ட அரசர் ஒவ்வொருவரும், தத்தம் கொடிகளை நாட்டுவதினும். வெற்றியின் நிலையான நினைவுச் சின்னமாம் தம் அரச இலச்சினைகளை இமயத்தின் மீது பொறித்ததாகவும் கற்பனைக் கதைகளைக் கண்டு பிடித்துவிட்டனர். இவ் வெற்றிச் செயல் முதன் முதலில் கரிகாலனுக்கு உரிமையாக்கப் பட்டது. பின்னர்ப் பிறர்க்கும் விரிவாகக்கப்பட்டது. தமிழர் ஆட்சியைத், தமிழ் நாட்டு எல்லைக்கு அப்பாலும் விரிவாக்கிய முதல் தமிழ் அரசன் கரிகாலன். தமிழ்ப் புலவர்களின் நில இயல்பற்றிய கொள்கை தெளிவற்ற ஒன்றாதலின், தமிழ்நாட்டு எல்லைக்கு அப்பாற்பட்ட எதுவாயினும், அவர்களுக்கு, அது, கங்கை வெளியையும், இமயச்சாரலையும் சார்ந்ததாகிவிடும். ஆகவே, ஒரு தமிழ் அரசன், உண்மையாக அல்லது கற்பனை யாகத் தமிழ்நாட்டு எல்லைக்கு அப்பால், ஆட்சியாதிக்கம் பெற்றிருந்தால், அவன் இமயத்தில் அரச இலச்சினையைப் பொறித்து விடுகிறான்! அவ்வகையில் கரிகாலன் தன் புலியைப் பொறித்தான்: நெடுஞ்சேரலாதன் வில்லைப் பொறித்தான் பெயர் அறியாப் பாண்டியன் ஒருவன் மீனைப்பொறித்தான்:

"[Tamil poets invented legends about Tamil kings conquering the whole of India and each of them carving his emblem on the Himalayas a more permanent sign of conquest than planting a flag. This feat was attributed first to karikal and then extended to others. As the geographical notion of the Tamil bards were of a nebulous kind, to them, whatever is not 'home", is "abroad". So, when a Tamil king possessed

real or mythical sway outside the Tamil Nadu, he carved his emblem on the top of the Himalayas! thus karikal incised there his tiger, Nedunjeral, his bow, and an unnamad Pandian his carp!" (Page: 505.) என எள்ளி நகையாடி விட்டுப் பின்வரும் சிலப்பதிகார வரிகளை எடுத்தாண்டுள்ளார்:

''கயல் எழுதிய இமய நெற்றியின்
அயல் எழுதிய புலியும் வில்லும்
நாவலந் தண்பொழில் மன்னர்
ஏவல் கேட்பப் பார்அர சாண்ட
மாலை வெண்குடைப் பாண்டியன்''

—சிலம்பு: காதை: 17: 1-5.

மூவேந்தர்களின் இமயப் படையெடுப்பு குறித்து, இவ்வாறு எள்ளி நகையாடும் திருவாளர் பி. டி. எஸ். அவர்கள் அம்மூவேந்தர் ஒவ்வொருவர் குறித்தும் கூறுவனபற்றி இனிக் காண்பாம்.

**கரிகாலன், இமயம் வெற்றி கொண்டது:**

முதற்கண், கரிகாலனின் இமயவெற்றி குறித்த ஆய்வினை மேற்கொண்ட திருவாளர் அய்யங்கார் அவர்கள், சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடுத்த காதையில், ''பரந்த இப்பேருலகில், தன்னோடு எதிர்த்துப் போரிடும் அரசர் எவரும், இலராகவே, போர் ஆர்வம் மிக்க திருமாவளவன், வாள், குடை, மயிர் நீக்காத் தோல் போர்த்த முரசுகளோடு நல்லநாளில், தலைநகர் நீங்கி, வடதிசைக் கண், எதிர்க்கவல்ல பகைவரைப் பெறலாம் என்ற வேட்கையால், வடநாடு நோக்கிச் சென்ற போது, இமையவர் இருக்கும் இமயப் பெருமலை, அவன் ஆசை அழியுமாறு இடை நின்று தடுத்து, அவன் ஊக்கத்தை உருக்குலைத்து விடவே, அம்மலைமீது சினம் கொண்டு, அதன் பிடரியில், தன் புலிச்சின்னத்தைப் பொறித்துவிட்டு, எண்ணிச் சென்றது ஈடேறாதாக, மனம் சலித்து மீள்பவனுக்குக் கடல் அரண் கொண்ட வச்சிரநாட்டு

அரசன் திறையாகக் கொடுத்த முத்துப்பந்தர், வாட்போர் வல்ல மகதத்து மன்னன், போரில் தோற்றுக் கொடுத்த பட்டி மண்டபம்; அவந்தி வேந்தன் உவந்து அளித்த, தொழில் நலம் மிக்க, வாயில் தோரணம் என்ற, பொன்னும் மணியும் கொண்டு, தொழில் வல்ல கம்மியனால் பண்ணப்படாத, இவர்களின் குலமுன்னோர், தனக்கு இடர் வந்துற்றபோது, ஒரொருகால் செய்த உதவிகளுக்குக் கைம்மாறாக, மயனால் செய்து கொடுக்கப்பட்ட இம் மூன்றையும் வைத்து, உயர்ந்தோர் ஒன்று கூடி வந்து ஏத்தும் மண்டபம்''; எனப் பொருள் படவரும்....

''இருநில மருங்கில் பொருநரைப் பெறாஅச்
செருவெங் காதலின் திருமா வளவன்,
வாளும், குடையும், மயிர்க்கண் முரசும்,
நாளொடு பெயர்த்து, ''நண்ணார்ப் பெறுக, இம்
மண்ணக மருங்கின் என் வலிகெழு தோள்'' எனப்
புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்,
அசைவில் ஊக்கத்து நசைபிறக்கு ஒழியப்
பகைவிலக் கியதுஇப் பயங்கெழு மலைஎன
இமையவர் உறையும் இமையப் பிடர்த்தலைக்,
கொடுவரி ஏற்றிக் கொள்கையின் பெயர்வோற்கு,
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோன்இறை கொடுத்த கொற்றப் பந்தரும்
மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபின் தோரண வாயிலும்,
பொன்னினும் மணியினும் புனைந்தன வாயினும்
நுண்வினைக் கம்மியர் காணா மரபின
துயர்நீங்கு சிறப்பின் அவர் தொல்லோர் உதவிக்கு

மயன் விதித்துக் கொடுத்த மரபின இவைதாம்
ஒருங்குடன் புணர்ந்துஆங்கு உயர்ந்தோர் ஏத்தும்
அரும்பெறல் மரபின் மண்டபம்.''

—சிலம்பு : 5 : 89 - 112;

சிலப்பதிகார வரிகளை எடுத்துக் காட்டிவிட்டுப் பின்வரும், திறனாய்வினை மேற்கொண்டுள்ளார் :

''கரிகாலன் வரலாறு எழுதிய பண்டைய, இன்றைய வரலாற்று ஆசிரியர் ஒவ்வொருவரும், இப்பகுதி அளிக்கும் சான்றுகளுக்கு, ஆராயாதே மதிப்பளித்து, இந்திய அரசர்கள் அனைவரையும் வெற்றி கொண்ட, தன் படையோடு இமயத்தின் உச்சிக்கே அணிவகுத்துச் சென்ற, தன் அரச சின்னத்தை அம்மலை மீது பொறித்த, மீண்டு வருங்கால் போராட்டத்தின் பின்னரோ, அல்லது வேறு வகையிலோ, வட இந்தியப் பேரரசர்கள் மூவரிடமிருந்து திறைப்பொருள் பெற்ற பெருமைகளை, இம்மன்னனுக்கு ஏற்றியுள்ளனர்: இந்தியாவின் தென் கோடியிலிருந்து, இமாலயத்தின் உச்சி வரையான, ஒரு நெப்போலியப் படையெடுப்பு, இந்திய வரலாற்றின் எந்தக் காலத்திலும் எண்ணிப் பார்க்கவும் இயலாத, ஓர் அருஞ்செயலாகும்...கரிகாலன் புகழ்பாடிய அவன் சமகாலப் புலவராம், உருத்திரங்கண்ணனார், இதைக் குறிப்பிடவில்லை; ரேனாடுக்கு அப்பால், கரிகாலன் கொண்ட வெற்றி எதையும் குறிப்பிடவில்லை; கரிகாலனின் அத்துணை அருஞ்செயல்களையும் முறைப்படுத்திக் கூறும், தெலுங்குக் கல்வெட்டுக்கள், இதை, மறைமுகமாகவும் குறிப்பிடவில்லை. ஆகவே, சிலப்பதிகார ஆசிரியரின் இக்கூற்று கற்பனைக் கண்டு பிடிப்புகளாம் என்றே நான் மதிக்கின்றேன். அம்மூன்று பொருட்களை, அன்பளிப்பாக, யாரோ சிலரிடமிருந்து, கரிகாலன் பெற்றான் என்பது நம்பக் கூடாத ஒன்று அன்று; ஆனால், இமயம்வரை படையெடுத்துச் சென்றான் என்பது தெளிவாக, ஒரு பிற்காலக் கட்டுக்கதையே அல்லது வேறன்று''
Giving its face value to the testimoney of this passage every person, ancient or modern, who has written about Karikal, has

claimed for this King the credit of subjugating all the kings of India, marching with his army straight to the top of the Himalayas stamping his crest thereon and on the return march receiving tributes, after hostilities or other wise, from three great Northern monarches. A Napoleonic march from the extreme south of India to the top of the Himalayas is an inconceivably difficult feat in any period of Indian History. Moreover, the contemporary, eulogist of Karikal Uruttiran Kannanar, does not mention it and does not mention any conquest of Karikal beyond Renadu. The Telugu inscriptions which systematically mention all Karikals achievements, do not allude to it. I there fore hold that the statements of the author of silappadigaram are inventions. It is not impossible that Karikal got the three articles as presents from some body or other, but that he marched up to the Himalayas is clearly a late legend. Page : 369]. இது அவர் திறனாய்வின் முடிவு.

கரிகாலன் இமயவெற்றி உண்மை நிகழ்ச்சி அன்று என்பதற்குத் திரு. அய்யங்கார் கூறும் காரணங்களுள் முதலாவது, "இந்தியாவின் தென்கோடியிலிருந்து, இமாலயத்தின் உச்சி வரையான, ஒரு நெப்போலியப் படையெடுப்பு, இந்திய வரலாற்றின் எந்தக் காலத்திலும் எண்ணிப் பார்க்கவும் இயலாத ஓர் அருஞ்செயலாகும்" என்பதாம். செங்குட்டுவனின் வடநாட்டு வெற்றி குறித்து, திரு. அய்யங்கார் எழுப்பும் வினாவிற்கு அளிக்கும் விடையே இதற்கும் பொருந்தும். அது அங்கே விரிவாகக் கூறப்பட்டுளது; ஆங்குக் கண்டுகொள்க.

இரண்டாவது காரணம் கரிகாலன் சமகாலப் புலவராம் உருத்திரங்கண்ணனார், கரிகாலன் புகழ்பாடும் தம்முடைய பட்டினப்பாலையில் இதைக் குறிப்பிடவில்லை என்பது. கரிகாலன் புகழ் பாடியவர், உருத்திரங்கண்ணனார் ஒருவர் மட்டும் அல்லர். பொருநராற்றுப்படை என்ற பிறிதொரு

நெடிய பாட்டின் மூலம், கடியலூர் முடத்தாமக்கண்ணியாரும் அகம்: 125, 246 மூலம் பரணரும், புறம்: 65 மூலம் கழாத்தலையாரும், புறம்: 66 மூலம் வெண்ணிக் குயத்தியாரும், அகம்: 55 மூலம், மாமூலனாரும் என வேறு ஐம்பெரும் புலவர்களும், அவன் புகழ் பாடியுள்ளனர்; இவர்களும் கூட, கரிகாலனின் இமயப் படையெடுப்பு குறித்துப் பாடினார் அல்லர்.

அவர்கள் பாடவில்லை என்பதினாலேயே, இமயப் படையெடுப்பு நடவாத ஒன்று எனத் தள்ளி விடுதல்கூடாது: கரிகாலன் பெற்ற வெற்றிகளுள், மிகப்பெரியது வெண்ணிப் போர்வெற்றி; இவ்வெற்றியைப் பரணர் பாடியுள்ளார்: அகம்: 246. மாமூலனார் பாராட்டியுள்ளார். அகம்: 55; கழாத்தலையார் பாராட்டியுள்ளார்: புறம்: 65. வெண்ணிக் குயத்தியார் இழித்துப் பாடியுள்ளார்: புறம்: 66. முடத்தாமக்கண்ணியார் பாராட்டியுள்ளார். பொருநராற்றுப் படை: 143-148. ஆனால் கரிகாலன்பால் பதினாறு நூறாயிரம் பொன் பரிசாகப் பெற்ற பெருமைக்குரிய பட்டினப்பாலை ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார், ஐம்பெரும் புலவர்கள் பாராட்டும் அப்போர் குறித்து ஒரு வரிதானும் கூறினாரல்லர். அவர் கூறவில்லை ஆகவே, வெண்ணிப் போர் நடவாத ஒன்று எனத் தள்ளிவிடுதல் வரலாற்று நெறியாகுமா? தள்ளிவிட்டாரா, திருவாளர் அய்யங்கார்? இல்லை; ஏற்றுக் கொண்டுள்ளார்; கரிகாலன் வரலாறு எழுதிய அவர், அவன் செயலாக, வெண்ணிப்போர் வெற்றியையே, முதற்கண் எடுத்து விளக்கியுள்ளார்: [335-337 பக்கங்கள் காண்க.]

கரிகாலன் பெற்ற மற்றுமொரு வெற்றி, வாகைப் பறந்தலையில் நடைபெற்ற போரில், பகையரசர் ஒன்பதின்மரை வெற்றி கொண்டு, அவர்தம் கொற்றக் குடைகள் ஒன்பதையும், நண்பகற் போதிற்குள்ளாகவே கைப்பற்றிக் கொண்டதாம். இவ்வாகைப் போர்வெற்றியைக், ...ாலன் புகழ்பாடுவார் அனைவரும் கூறியுள்ளனரா

என்றால் இல்லை. பரணர் ஒருவர் மட்டுமே குறிப்பிட்டுள்ளார். அகம் : 125.

பரணர் ஒருவர் மட்டுமே கூறியுள்ளார்; ஏனையோர் கூறவில்லை எனப் புறக்கணித்துவிடுவது வரலாற்று நெறியாகுமா? ஆகாது; திரு. அய்யங்கார் அது செய்துள்ளாரா என்றால், இல்லை. ஏற்றுக் கொள்ளவே செய்துள்ளார். வெண்ணி, வாகைப் போர்கள் குறித்துத், திரு. அய்யங்கார் அவர்கள், "போர்க்களத்தில், இரு பெரு வேந்தர்களோடு, குறுநிலத்தலைவர்கள் பதினொருவரும் இருந்தது கரிகாலனின் சமகாலப் புலவர்களால் குறிப்பிடப் படவில்லையாயினும், அது காதுவழிச் செய்தியின், ஒரு சிறு உண்மைக் கூற்று ஆகும். கரிகாலன் தமிழ்நாட்டைத் தன் ஆட்சிக்கீழ்க் கொண்டுவந்த பெருநிகழ்ச்சிகளில், ஒருசிறு நிகழ்ச்சியான, சேரநாட்டைச் சேர்ந்த வாகைப் போர்க் களத்து, ஒரு நாள் போரில், ஒன்பது குறுநிலத் தலைவர்களின் தோல்வி பற்றிய செய்தியும், காதுவழிச் செய்தியின் ஒருசிறு உண்மைக் கூற்றே ஆகும்." [The presence and defeat of eleven petty chiefs, in the battle of venni, besides the two kings, is perhaps a gennine bit of tradition, though not mentioned by the the previous poets, who were the contemporary of Karikal Solan. So too is the account of the defeat of nine petty chiefs in the ceuese of one day in the battle of Vagai, one of the petty incident in the course of Karikals subjugation of the Tamil country. Page : 365, 366] என அவர் கூறுவது காண்க.

ஆக, கரிகாலன் இமயப் படையெடுப்பைப் பரணர்போலும் புலவர்கள் பாராட்டவில்லை என்ற காரணம் காட்டி, நிகழாத நிகழ்ச்சியாகக் கொண்டு தள்ளிவிடும் திரு. அய்யங்கார் முடிவு, வரலாற்று மரபுக்கு ஒவ்வாத முடிவே ஆகும்.

கரிகாலனின் இமய வெற்றியை ஏற்பதற்கில்லை என்பதற்குத் திரு. அய்யங்கார் காட்டும் மூன்றாவது காரணம், "கரிகாலனின் அத்துணை அருஞ் செயல்களையும் முறைப்

படுத்திக்கூறும், தெலுங்குக் கல்வெட்டுக்கள், இதை, மறை முகமாகவும் குறிப்பிடவில்லை," என்பதாம்.

கரிகாலன், காவிரிக்குக் கரை அமைத்தான்; கரை அமைக்க வரமறுத்த திரிலோசனின் கண்களை அழித்தான் எனக்கூறும், பல, தெலுங்குச் சோழக் கல்வெட்டுக்களை எடுத்துக்காட்டியுள்ளார்; அந்நிகழ்ச்சிகளை உண்மையென ஏற்றும் உள்ளார், திருவாளர் அய்யங்கார் என்பது உண்மை. (பக்கம்: 363, 364) ஆனால், அச்செயல்களைப், பரணர் முதலாம் சங்க காலப் புலவர்கள் பாராட்டும் கரிகாலனுக்குப் பெருமை சேர்ப்பதற்கான அகச்சான்றுகளாகக் கொள்ளாமல், அவனைச் சங்க காலத்திற்கு மிகமிகப் பிற்பட்ட காலத்தவனாக கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குக் கொண்டு வந்து நிறுத்து வதற்கான அகச்சான்றுகளாகவே கொண்டுள்ளார். "ஆகவே, கரிகாலன் சிறப்புற்றிருந்த காலம், பெரும்பாலும் நான்காம் நூற்றாண்டின் இறுதியும், ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கமுமாம்; அவன் ஆட்சியின் உச்ச காலம். கி.பி. 400 [Hence the most probable peried, when karikal flourished was the end of the IV and beginning of the V century, the central year of his reign being 400 A. D. (Page: 382) என முடித்திருப்பது காண்க.

மேலும் கரிகாலனின் இமயப் படையெடுப்பைக் கூறவில்லை எனத் திரு. அய்யங்கார் அவர்களால் குறிப்பிடப் படும் அத்தெலுங்குச் சோடக் கல்வெட்டுக்கள், கரிகாலனின் மிக்பெரும் வெற்றிக்ளாம் எனத் திரு. அய்யங்கார் அவர் க்ளால் ஏற்றுக் கொள்ளப்பட்ட, வெண்ணி, வாகைப்போர் வெற்றிக்ளையும் குறிப்படவில்லை; ஆக்வே, அக்க்ல் வெட்டுக்கள் இமய வெற்றியைக் குறிப்பிடாமை, அவ்விமய வெற்றியை நடவாத ஒன்றாகக்கொள்வதற்கான நல்ல சான்றக அமையாது.

ஆக, இதுவரை கூறிய விளக்கங்களால், சிலப்பதிகாரம் அளிக்கும் சான்று கொண்டு, கரிகாலனின் இமய வெற்றியை

உண்மை நிகழ்ச்சியாகக் கொள்வது கூடாது என்பதற்குத் திரு. அய்யங்கார் கூறும் காரணங்கள், பொருந்தும் காரணங்கள் ஆகா என்பது தெளிவாக்கப்பட்டது.

கரிகாலனின் இமயவெற்றி, உண்மை நிகழ்ச்சி என்பதை உறுதிசெய்யும் வலுவான கல்வெட்டுச் சான்று ஒன்றும் கிடைத்துள்ளது. திருவாளர். மு. இராகவ அய்யங்கார் அவர்கள் 1932ஆம் ஆண்டுக் கலைமகள் இதழின் முற்பகுதி 62, 63, பக்கங்களில், அச்சான்றினை அளித்துள்ளார்: அவர் கூறுவது வருமாறு:

"வச்சிர நாடு என்பது, சோணை (Soni) நதி சூழ்ந்த தேசமாகும். அதனை அடுத்துள்ளதே மகதநாடு; இது கங்கையடுத்த பிரதேசம் என்பது தெரிந்ததே. அவ்விரு நாட்டரசரையும் வென்ற பின்பே, அவந்தி வேந்தனிடம் நட்பு முறையில் அவ்வளவன் சென்றவன் என்று, இளங்கோ வடிகளார் குறிப்பிடுகிறார். இவற்றால், வச்சிர, மகத நாடுகளை அடுத்து, அவற்றின் வடபக்கத்தில் உள்ள இமயப் பகுதியே சோழன், தன் அடையாளத்தை நாட்டிய இடமாகும் என்பது நன்கு விளங்கும்.

"இவ்வாறு இமயப் படையெடுப்பு, சோழன் தலைமையின் கீழ்த் தமிழரசரால் ஒரு காலத்து நிகழ்ந்தது என்ற வரலாற்றைப், புதியதாகத் தெரியவரும் அரிய செய்தி ஒன்றும் ஆதரித்து நிற்பதை இனிக்கூறுவேன். மேலே நான் கூறிய வற்றையெல்லாம் ஒரு சேரக்கொண்டு நோக்குமிடத்து, திருமாவளவன் சென்றுவந்த இமயமலை, இப்போது ஸிக்கிம் பூட்டான் என்ற இராஜ்யங்களுக்கு இடையில் உள்ள மலைப் பகுதியே ஆதல் வேண்டும். என்னெனில், இப்பகுதியிற்றான், வங்காளத்துள்ள டார்ஜிலிங்கிலிருந்து திபெத்துக்குச் செல்லும் கணவாய்கள் உள்ளன. இக்கணவாய்களில் சில, முற்காலத்தும் இக்காலத்தும் வியாபாரப் போக்கு வரத்துக்கு உரியனவாய் அமைந்தனவாகும். இவைகளும் பலமாதங்கள் வரை பனி மூடப்பெற்று அடைப்பட்டுக் கிடத்தலால், சில காலங்களே, அப்போக்கு வரத்துக்கு ஏற்றனவாகின்றன......வங்காள

மாகாணத்தில் அடங்கியுள்ள வச்சிர, மகத நாடுகளுக்கு வெகுதூரமில்லாததாய், இமயத்தைக் கடந்து செல்வதற்கு ஏற்ற வழியுடைய பிரதேசங்களுள், ஸிக்கிம், பூட்டான்களுக்கு இடையில் உள்ள கணவாய்களே சிறந்தவை. ஸிக்கிம ராஜ்யத்துக்குக் கிழக்கே, அதற்கும், திபெத்துக்கும் உள்ள எல்லையை வரையறுத்து நிற்கும் மலைத்தொடரானது செங்குத்தாய், ஆகாசத்தை அளாவிக் கொண்டு பெருங் கோட்டை மதில்போல் நீண்டு செல்கின்றது. இம்மலைத் தொடரை அடுத்துச் செல்லும் கணவாய், சமுத்திரமட்டத் திற்குமேல் 14500 அடி உயரமுடையதாய், திபெத் பிரதேச மாகிய சுப்பிப் பள்ளத்தாக்கிற்குக் கொண்டுபோய் விடக் கூடியது. இம்மலைக்கும், இதனை அடுத்த கணவாய்க்கும் வழங்கும் பெயர்கள் கவனிக்கத்தக்கன. சோழமலைத்தொடர் (Chola Range), சோழர் கணவாய் (Chola Pass) எனபன. அவற்றிற்கு இன்றும் வழங்கிவரும் நாமங்களாகும். 1) Imperial gazetteer of India: Sikkim : Vol. 10 Page: 327 Vol. 22: Page: 365. 2) Hand gazetteer of India: Chole Pass. 3) Encyclopaedia Britannica: Sikkim : Vol. 5 P. 667 Vol. 20: P. 640). மேற்கூறியவற்றைக்கொண்டு நோக்கு மிடத்து, இமயப் பகுதி ஒன்றிற்கு வழங்கும் இப்பெயர், சோழன் தொடர்பு பற்றி வந்ததாகக் கூடாதோ, என்பதே என் ஆராய்ச்சி. இம்மலையடியாகவே, இதனை அடுத்துள்ள கணவாயும் அப்பெயர் பெற்றிருக்கவேண்டும். சோல (Chola) என்பதற்கு ஸிக்கிம் திபெத் பாஷைகளில் வேறு பொருள் இருப்பதாகத் தெரியவில்லை. "லா" என்பதற்குத் திபெத் பாஷையில் கணவாய் என்ற பொருள் உண்டு. நது-லா (Nattu-la) ஜெலப்-லா (Jelap-la) எனக்காண்க. ஆனால், "சோல" (Chola) என்பது. அவ்வாறு இரு சொல்லுடைய தன்றி, ஒரு சொல்லாகவே மலைக்கு வழங்கி வருவதும், அச்சொற்கு வேறு பொருள் காணாமையும் நோக்கத்தக்கன. அதனால், திருமாவளவன், அப்பிரதேசத்தைக் கைப்பற்றி ஆங்குள்ள மலைச்சிகரத்தில் தன் புலிப்பொறியை நாட்டி, அங்கே தன்னாணையை நிறுவிய காலமுதலே, அம்மலை,

அவ்வாறு பெயர் பெற்றது போலும் என்று கருத இடம் தருகிறது. இமயத்துக்கப்பாலும் அவ்வளவன் செல்லக் கருதியிருந்ததை, அம்மலை தடுத்துவிட்டதாக இளங்கோ வடிகள் குறிப்பிட்டதற்கு, மேற்குறித்தபடி, அச்சோழன் சென்ற காலத்தில் பனியால் முழுதும் மூடப்பட்டு, அக் கணவாய் அடைபட்டிருந்தது என்பதே கருத்துப் போலும்."

தமிழர் வரலாறு என்ற தம் நூலை எழுதி முடித்து மூன்று ஆண்டுகள் கழிந்த பின்னரே, திருவாளர் மு. ராகவ அய்யங்கார் அவர்களின் இக்கட்டுரை, வெளிவந்தமையால், திரு. பி. டி. எஸ். அவர்களால் திரு. மு. ரா. அவர்களின் இம்முடிவினை அறிய இயலாமல் போய் விட்டது. அதனாலேயே, கரிகாலன் இமயவெற்றி, ஒரு பிற்காலக் கற்பினை எனக்கூறவேண்டியவராயினர்: கல்வெட்டுக்களைத் தேடித் தெலுங்குச்சோழர்கள் வாழ்ந்த கடப்பா, கர்னூல் வரை சென்றவர், கரிகாலனைத் தொடர்ந்து ஸிக்கிம், பூட்டான் வரைசென்று ஆங்குள்ள கல்வெட்டுக்களைக் கண்டிருப்பாராயின். இத்தவறான முடிவிற்கு வந்திருக்க மாட்டார். கரிகாலன் இமய வெற்றி, உண்மையொடுபட்ட, ஒப்பற்ற வெற்றி என ஓங்கிக் கூறியிருப்பர்.

முருக்கமரங்கள் செறிந்த மலையில், உறங்கும் கவரி மான்கள், பகற்பொழுதில் தாம் மேய்ந்த நரந்தம் புல்லையும், பருகிய, பரந்து விளங்கும் அருவி நீரையும், கனவில் கண்டு மகிழும், ஆரியர் நிறைந்து வாழும் பெரும்புகழ் வாய்ந்த இமயம், தென்குமரி ஆகிய இவற்றிற்கு இடைப்பட்ட நாடுகளில் உள்ள, செருக்குற்றுத் தம்புகழை உயர்த்திக்கூறும் அரசர்களின் வீரம் கெட்டழியுமாறு, அவர்களை வென்று, மார்பு மாலை ஓடையளவும் தாழ்ந்து அதனோடு விளங்கும், பகைவர் கோட்டைகளை அழிக்கும் வெற்றிப் புகழ் வாய்ந்த தந்தங்களைக் கொண்ட, குற்றமில்லாத போர் யானையின், பொன்னரிமாலை அணிந்த பிடரிமீது அமர்ந்து உலாவரும், பலரும் புகழும் உன செல்வச் சிறப்பினை இனிது காண்கிறோம்.''

''மார்பு மலி பைந்தார் ஓடையொடு விளங்கும்
வயன்உயர் மருப்பின் பழிதீர் யானைப்
பொலன்அணி எடுத்தம் மேல்கொண்டு பொலிந்தநின்
பலர்புகழ் செல்வம் இனிதுஉண் டிகுமே;
கவிர்ததை சிலப்பில் துஞ்சும் கவரி,
பரந்திலங்கு அருவியொடு நரந்தம் கனவும்
ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங் குமரியொடு ஆயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே''

என்ற பதிற்றுப்பத்துப்பாடலை (11) எடுத்தாண்டுவிட்டு, ''வெறும் வெற்றுப் புகழ் உரைகளாம் வைக்கோற் போரில் இருந்து உண்மைச் செய்தியாம் மணியினைத் தேடிக்காண்பது அத்துணை எளிதன்று; நெடுஞ்சேரலாதன், சேரநாட்டின்

எல்லைக்கு வடக்கில் சில மைல் வரை (கடம்பர் நாட்டிலும் கொண் கானத்திலும்) படையெடுத்துச் சென்று, சில வெற்றிப் பொருட்களைக் கொண்டு வந்திருக்கக் கூடும். புலவர்கள், பரிசில் பெரும் வேட்கை மிகுதியால், அச்செயலை இந்தியப் பெருநாடு முழுவதும், அவன் பேரரசின் விரிவாகக் கொண்டு பாராட்டவும், அதன் காரணத்தால், இமயத்தை எல்லையாகக் கொண்ட பெருநாட்டிற்கு உரியவன் எனும்பொருளுடைய தான "இமயவரம்பன்" என்ற பட்டப்பெயரைச் சூட்டி இருக்கவும் கூடும்." [It is not easy to discover the grain of fact within this straw-heap of flattering verbrage. Possibly Nedunjeral marched a few miles north of the sera country (into the Kadamba territory or konkan and brought back some presents, and poets eager for reward, spoke of it as the expansion of his Empire throwghout the whole of India. And they thence gave him the title 'Imayavaramban', he whose kingdom had the Himalayas as its boundary" (Page: 502-503] எனக்கூறி எள்ளி நகையாடியுள்ளார்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், கடம்பர் என்ற இனத்தவரை வென்று, அவர் காவல் மரமாம் கடப்ப மரத்தை வெட்டி வீழ்த்திய செய்தி, "கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின வேந்தன்" (பதிற்றுப் பத்து: 12, 20), "கடம்பு முதல் தடிந்த காவலன்" (சிலம்பு: வாழ்த்துரை: ஊசல்வரி), "கடந்தடு தார்ச் சேரன் கடம்பு எறிந்த வார்த்தை" (சிலம்பு: வாழ்த் துரை: வள்ளைப்பாட்டு) என்ற வரிகளில் உணர்த்தப்பட்டுளது. என்றாலும், அவ்வரிகள், சேரலாதனால் வெற்றி கொள்ளப் பட்ட அக்கடம்ப இனத்தவர் பற்றிய, அவர் வாழிடம் பற்றிய எவ்வித விளக்கமும் அளிக்கவில்லை என்பது உண்மை.

ஆனால், "முந்நீர் ஓட்டிக் கடம்பு எறிந்து" (அகம்: 172) "முந்நீரினுள்புக்கு மூவாக் கடம்பு எறிந்தான்" (சிலம்பு: ஆய்ச்சியர் குரவை: 3), "கடற்கடம்பு எறிந்த கடும்போர்", (சிலம்பு: காட்சி: 187), "கடற்கடம்பு எறிந்த காவலன்"

(சிலம்பு: கட்டுரை: 81; நடுகல்: 135) ஆகிய வரிகள், அக்கடம்பர், கடலிடைச் சிறு நிலத்தை ஆண்டு வந்தவர் என்பதையும், சேரலாதன் கடற்படை கொண்டே அவர்களை வென்று, அவர்தம் காவல் மரமாம் கடம்பை வெட்டி வீழ்த்தினான் என்பதையும்,

"வரைமருள் புணரி வான்பிசிர் உடைய
வளிபாய்ந்து அட்ட துளங்கிரும் கமஞ்சூல்
ஒளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி......
..................................
பலர் மொசிந்து ஓம்பிய அலர்பூங் கடம்பின்
கடியுடை முழுமுதல் துமிய வேஎய்
வென்றெறி முழங்கு பணை செய்த" (பதிற்றுப்பத்து 11)

"துளங்கு பிசிர் உடைய மாக்கடல் நீக்கிக்
கடம்பறுத்து இயற்றிய வலம்படு வியன்பணை"
—பதிற்றுப்பத்து: 17.

'மால்கடல் ஓட்டிக் கடம்பறுத்து இயற்றிய
பண்ணமை முரசு" —அகம்: 347. மாமூலனார்

ஆகிய வரிகள், சேரலாதனின் கடற்செலவையும், ஆங்குக் கடம்பரை வென்று, வெட்டி வீழ்த்தி, அவர்தம் காவல் மரமாம் கடம்பு கொண்டு வெற்றி முரசு செய்து வீறு கொண்டதையும் கூறி, அக்கடம்பர், கடலிடையே உள்ள ஒரு சிறு நாட்டில் வாழ்ந்தவர்; அவர்களைச் சேரலாதன் வெற்றி கொண்டதைப் பலரும், பல்லாற்றானும் பாராட்டுமளவு பெருவீரராய்த் திகழ்ந்தவர் என்பதைத் தெளிவாக்கி இருக்கின்றன.

இவ்விளக்கம் அளிக்கும் அகச் சான்றுகளை அறிந்திருந்தும் அவற்றுள் சிலவற்றைத் தம்முடைய நூலில் எடுத்தாண்டிருந்தும், "நெடுஞ்சேரலாதன், சேரநாட்டின் எல்லைக்கு வடக்கில் சில மைல் வரை, கடம்பர் நாட்டிலும், கொண்கானத்திலும் படையெடுத்துச் சென்று, சில வெற்றிப்

பொருட்களைக் கொண்டு வந்திருக்கக் கூடும்.''(பக்கம்: 503) எனக்கூறுவது, வரலாற்று உண்மைகளைக் காணமறுத்துக் கண்மூடிக்கொண்டு கருத்தறிவிக்கும் வரலாற்று நெறியறியாதார் கூற்றல்லது, வேறு அன்று.

இனி, இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் இமயத்தே வில்பொறித்த வரலாறு குறித்து அளிக்கும் இலக்கியச் சான்றுகள் வருமாறு :

1) ''வலம்படுமுரசின் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பறுத்து, இமயத்து
முன்னோர் மருள வணங்கு வில் பொறித்து''
—மாமூலனார் : அகம் : 127.

2) ''ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்று முதிர்வடவரை வணங்கு வில்பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்''
—பரணர் : அகம் : 396.

3) ''பேரிசை மரபின் ஆரியர் வணக்கி''
—பதிற்றுப்பத்து : பதிகம்.

4) ''கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி
பரந்திலங்கு அருவியொரு நரந்தம் கனவும்,
ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங்குமரி யொடு ஆயிடை
மன்மீக்கூறுநர் மறந்தபக் கடந்தே'';
—பதிற்றுப்பத்து : 11 குமட்டூர்க்கண்ணனார்.

5) ''கயல் எழுதிய இமய நெற்றியின்
அயல் எழுதிய புலியும் வில்லும்.
—சிலம்பு : ஆய்ச்சியர் குரவை.

6) ''விடர்ச்சிலை பொறித்த வேந்தன்''

—சிலம்பு : கட்டுரை : 82.

7) ''கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்
எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்
ஆரிய மன்னர் ஈரைஞ்ஞூற்றுவர்க்கு
ஒருநீ ஆகிய செருவெங் கோலம்.''

—சிலம்பு ; காட்சி : 160-163.

8) ''விடர்ச்சிலை பொறித்த விறலோன்''

—சிலம்பு : நடுகல் : 136.

9) ''குமரியொடு வடவிமயத்து
ஒருமொழி வைத்து உலகாண்ட சேரலாதன்''

—சிலம்பு ; வாழ்த்து : உரைப்பாட்டு

10) ''முடிமன்னர் மூவரும் காத்து ஓம்பும் தெய்வ
வடபேரிமயம்.''

—சிலம்பு : வாழ்த்து : தேவந்தி சொல்.

11) ''இமயத்து
வானவர் மருள மலைவில் பூட்டிய
வானவர் தோன்றல்.''

—சிலம்பு : காட்சி : 1-3.

12) ''ஓங்கிய
வரை அளந்தறியார் பொன்படு நெடுங் கோட்டு
இமயம் ஒட்டிய ஏம விற்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன் :

—புறம் ; 39.

இமய வரம்பன் இமயப் படையெடுப்பு நடைபெறாத ஒன்று என்பதைத் திட்டவட்டமாக உறுதி செய்ய வல்ல அகச்சான்று எதுவும் இல்லாத நிலையில், அது போலும் ஒன்றைக் காட்ட இயலாத நிலையில், மேலே எடுத்துக் காட்டியிருக்கும் அடுக்கடுக்கான அகச்சான்றுகளை அடிப் படையாகக் கொண்டு அந்நிகச்சியை உண்மை நிகழ்ச்சியாக ஏற்றுக்கொள்வதுதான் நல்ல வரலாற்றுத் திறனாய் வாளர்க்கு மதிப்பும் மாண்பும் ஆகும். அது விடுத்து, "குமட்டூர்க் கண்ணனாரின் வடஅரசர்களை, 'மறந்தமக் கடந்தது', ஒரே தலைமுறையில் வேந்தரைப்பிணித்ததாக வளர்ந்து விட்டது" என்றும், "நெடுஞ்சேரலாதன் தந்தை வானத்தையே நாட்டு எல்லையாகக்கொண்டு 'வானவரம்பன்' ஆகிவிட்டான் : அவன் மகனோ இமயத்தையே நாட்டு எல்லையாகக் கொண்டு, 'இமயவரம்பன்' ஆகிவிட்டான்" என்றும், [Kumattur Kannanar, "quesled the valour" of the Northern kings, hasin one generation, grown into "trussed them up." Neidunjeral's father was "Vana-varamban", one who had the sky as his boundary,' and the son became, "Imayavaramam", one who had the Himalayas as his boundary" Page : 504 Foot Note] என்றெல்லாம் கூறி எள்ளி நகையாடுவதை, வரலாற்றுத் திறனாய்வுக்குத் தகுதி அற்றவர் செய்யலாம். ஆனால் திருவாளர், அய்யங்கார் போலும், முதிர்ந்த வரலாற்றுத் திறனாய்வாளர், அது செய்தல் வியப்பிற்கு உரியதாம்.

மேலே காட்டப் பெற்றிருக்கும் அகச்சான்றுகளில், ஏழுமுதல், பதினொன்று வரையான அகச்சான்றுகள் ஆறும், திருவாளர் பி, டி. எஸ். அவர்கள் கூற்றுப்படி, இளங்கோவடிகளாரால் பாடப்படாத. [The Silappadigarm is a double poem, each poem by a different author. can to I and II being a splendid romantic poem and canto III being a

legend about a mythical hero's exploits: Page: 606] சிலப்பதிகாரத்தின் ஒரு பகுதியாகக் கருதப்படாத, வஞ்சிக் காண்டத்திலிருந்து எடுத்துக் காட்டப்பட்டவை. ஆகவே, வரலாற்றுச் சான்றுகளாக ஏற்றுக் கொள்ளத் தக்கன அல்ல என ஒதுக்கி விடல் கூடும். ஆனால், திருவாளர் அய்யங்கார் அவர்களால், சிலப்பதிகாரத்தின் ஒரு பகுதியாய் இளங்கோ வடிகளாரால் பாடப்பெற்றது என ஏற்றுக் கொள்ளப்பட்ட மதுரைக்காண்டத்துக் காதைகளாகிய ஆய்ச்சியர் குரவை, கட்டுரைக் காதைகளிலிருந்து எடுத்துக் காட்டப்பட்டிருக்கும், ஐந்து, ஆறு அகச்சான்றுகளை அவ்வாறு தள்ளிவிடுதல் இயலாது; கூடாது.

மூன்று என்ற எண்ணிட்ட அகச்சான்று, பதிற்றுப்பத்துப் பாடிய புலவர்களால் பாடப்பட்டது அன்று: அப்பதிற்றுப் பத்துக்களைத் தொகுத்த பிற்பட்ட காலத்தவரால் பாடப் பெற்ற பதிகத்தில் காணப்படுவது, என்ற காரணம் காட்டி, அதை ஏற்க மறுத்துவிடலாம். ஆனால், "The poets of Tenfold Ten were Brahmanas of the V or VI century A. D. Hence the poems team with references to Asyan ideas and Agama practices and therefore must have been composed after the Agama temple worship had spread in the land." Page: 495-496. எனக்கூறிவிட்டு, தம் கூற்றினை உறுதி செய்யப் பதிற்றுப் பத்திலிருந்து அடுக்கடுக்கான அகச் சான்றுகளைத் தம்முடைய நூலின் 496, 497, 498, 499 பக்கங்களில் எடுத்துக் காட்டியிருப்பதன் மூலம், இரண்டாம் பத்தின் ஆசிரியராக ஏற்றுக் கொண்டுவிட்ட குமட்டூர்க் கண்ணனார் கூறிய நான்காம் எண் அகச்சான்றினை ஏற்க மறுப்பது, முன்னுக்குப்பின் முரணான வாதமாகும்.

தொகை நூல்களில் அகநானூறே முதற்கண் தொகுக்கப் பட்டதாம் [Of these anthologies, the Agam four hundred seem to have been the earliest to be collected togather" Page: 156] என்ற நற்சான்றினைத் தந்து விட்ட நிலையில், அவ்வக

நானூறு அளிக்கும், முதல் இரு அகச்சான்றுகளை ஏற்றுக் கொள்வதே, வரலாற்றுத் திறனாய்வு அறமாம்.

ஆக, அகநானூற்றில் மாமூலனாரும் (127) பரணரும் (396): பதிற்றுப்பத்தில் குமட்டூர்க் கண்ணனாரும் (11), சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளாரும். (ஆய்ச்சியர் குரவை கட்டுரைக்காதை) சேரலாதன் இமயத்தே வில் பொறித்த நிகழ்ச்சியை அத்துணைத் தெளிவாக உறுதி செய்திருக்கவும், அவர் சான்றினை ஏற்பது தவிர்த்து, வரலாற்றுப் பேராசிரியர்களுக்கு வேறு வழி இல்லை: நெடுஞ்சேரலாதன் இமயத்தே வில் பொறித்தது, உண்மையொடு பட்ட நிகழ்ச்சியோ அல்லது வெறும் கற்பனையோ, கட்டுக்கதையோ அன்று.

---

## செங்குட்டுவன் வடநாட்டுப் படையெடுப்பு

செங்குட்டுவன் வடநாட்டுப் படையெடுப்பு என்பது வெறும் கட்டுக் கதை என்கிறார் திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள். செங்குட்டுவன் வடநாட்டிற்குக் கொண்டு சென்ற படை, உண்மையில் பெரும்படைதான். அப்படை நூறுதேர், ஐந்நூறு யானை, பத்தாயிரம் குதிரை, அதற்கேற்புடை எண்ணிக்கையராகிய வீரர், அரசியல் பணி புரியும் தூதுவர் போலும் சட்டையிட்ட பிரதானிகள் ஐந்நூற்றுவர், படைவீரர்க்குச் சோர்வு ஏற்படும் போதெல்லாம், ஆடியும், பாடியும், நகைச்சுவை ஊட்டியும் ஊக்கம் ஊட்டும் கலைவாணர் முந்நூற்று அறுபதின்மர், படைக்கலம், உணவு போல்வன ஏற்றிச்செல்லும் வண்டிகள் ஆயிரம் ஆகியவற்றைக் கொண்ட பெரும்படை என்கிறது கால்கோட்காதை.

"நாடக மகளிர் ஈரைம் பத்திருவரும்,
கூடிசைக் குயிலுவர் இருநூற்றெண்மரும்,
தொண்ணூற்றறு வகைப் பாசண்டத்துறை
நண்ணிய நூற்றுவர் நகைவேழம்பரும்,
கொடுஞ்சி நெடுந்தேர் ஐம்பதிற்று இரட்டியும்,
கருங்களி யானை ஓர் ஐஞ்ஞூறும்,
ஐ யீராயிரம் கொய்யுளைப் புரவியும்,
மெய்யா வடவளந்து இருபதினாயிரம்
கண்ணெழுத்துப் படுத்தன கைபுனை சகடமும்,
சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற
கஞ்சுக முதல்வர் ஈரைஞ்ஞூற்று வரும்,
சேயுயர் விற்கொடி செங்கோல் வேந்தே!
வாயிலோர் என வாயில் வந்து இசைப்ப."

—கால்கோள்காதை : 128-140.

செங்குட்டுவன் காலத்தில், அத்துணைப்பெரும் படையைத், தமிழகத்திலிருந்து கங்கைக் கரைக்குக்கொண்டு செல்வது இயலாது: அத்துணைப் பெரும்படை அணிவகுத்துச் சென்றது என்பதை, இந்திய நாட்டு நிலஇயல் பற்றிய அறிவு சிறிதுதானும் இல்லாத ஒரு தமிழ்ப் புலவரால் தான் கற்பனை செய்து காணமுடியும். செங்குட்டுவன் வடநாட்டுப் படையெடுப்பு, இந்திய நிலஇயல்பறியாப் புலவர் ஒருவரின் கற்பனை; அது, இந்திய வரலாறு பற்றி ஏதும் அறியாதவர்க்கு மட்டுமே ஏற்புடையதாகத் தோன்றும் என்கிறார் திரு. சீனிவாச அய்யங்கார்.

"The transport of an army of the size necessary for the purpore of fighting with the Trans-gangetic monorchs, is a thing that can be imagined only by a Tamil poet, ignorant of the geography of India......Senguttuvan's northern expedition was invented by a poet ignorant of Indian geography and could appear crediube only to those, ignorant of Indian History". (History of the Tamils: Page: 601).

திரு. அய்யங்கார் அவர்கள் கூற்றுப்படி, செங்குட்டுவன், கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன். அவன், வடநாட்டிற்குப் படையெடுத்துச் சென்றான் என்றால், அது கூறும் தமிழ்ப் புலவர்கள். இந்திய நாட்டின் நிலஇயல் அறியாதவர்; இந்திய நாட்டு வரலாறு தெரியாதவர் என்றெல்லாம் கூறும் திரு. அய்யங்கார் அவர்கள், அவ்வாறு கூறுவதற்கு முன்னர் அதே நூலில், "கி. மு. மூனறாம் நூற்றாண்டில்; (அதாவது, செங்குட்டுவன் காலத்திற்கு 900 ஆண்டுகளுக்கு முன்னர்) அவர் கூற்றுப்படி வடஇந்தியமொழி, தென்னிந்தியர்களுக்குப்புரிந்திருந்தது. "The chiefvernacular dialect of N. India was understood by the S. Indians in the 3nd century B.C." (Page: 140): அசோகன் கல்வெட்டெழுத்து எனப்படும் எழுத்தே, இந்தியா முழுவதும்

கையாளப்பட்டது. "The same script, now called the Asokan, was ured, through out India in the III century B. C." (Page : 140) என்றும் கூறியுள்ளார். அது மட்டும் அன்று: அதற்கு மேலும் ஒரு நூற்றாண்டிற்கு முன்னர், அதாவது, கி. மு. நான்காம் நூற்றாண்டில், வடஇந்தியாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையிலான வாணிகம் அதற்கு முன் எப்போதும் இருந்திராத அளவு பெருகியிருந்தது "In the IV century B.C. the trade between North and South India, assumed greater proportion than ever (Page: 141), என்றும், குமரி முதல் பாடலிபுத்திரம் வரை, "கிரீச்" எனும் ஒலி, தொடர்ந்து ஒலிக்க, வரிசை வரிசையாகச் செல்லும் நாட்டு வண்டிகளில் நடைபெற்ற பெருமளவிலான வாணிக நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது. "This gives us a picture of a great volume of trade, carried in caravans of creaking carts, passing along roads, good and bad, from Cape-Comorin to Pataliputra" (Page : 141) என்றும், அரண்மனைக் கருவூலத்தில் கொண்டு சேர்க்கப்பட்ட பொருள்களுள், தாம்பிரபரணி, பாண்டியகாவடகங்களில் இருந்து வந்த நவமணிகளைக், கௌடல்யர் குறிப்பிடுகிறார்: "In another place, where kaudilya refers to things that find their way to the Royal treasury, he mentions precious stones from—Thambraparni and Pandiya Kavataka" (Page: 142) என்றும், "பாண்டிய நாட்டுக்கும், பாடலிபுத்திரத்திற்கும் இடையில், கி. மு. நான்காம் நூற்றாண்டில் இருந்து வந்த, இப்பெரிய போக்கு வரவினை, மெகஸ்தனீசும் அறிந்திருந்தான். அப்பாண்டிய நாட்டையும் அறிந்திருந்தான்" "There was intercourse between Pandia Country and Patali puptra in the IV century B. C. and Magesthenes had heard of that country" (Page : 183) என்றும், "கி.மு. நான்காம் நூற்றாண்டின் இறுதியில், சந்திரகுப்தன், துறவறம் பூண்டு, பத்திரபாகுவின் மாணவனாகி, அவரோடும், தன்னொத்த

மாணவர் பனிரண்டாயிரவரோடும், மைசூர் மாநிலத்தில் சரவண பெல்கோலாவுக்கு வந்து சேர்ந்தான்—In the lest quarter of the IV century B. C. Chandraguptha became a jain ascetic and one of 12000 disciples of Bhadrabahu. he trudged on foot along with his master and fellow disciples to Saravanabelgola in Mysore province"—(Page: 141-142) என்றும் கூறியுள்ளார்.

கி. மு. நான்காம் நூற்றாண்டில், இமயச் சாரலில் வழங்கும் மொழியைக் குமரிமுனையில் வாழ்வார் புரிந்துகொள்ளவும், இந்தியா முழுவதும் ஒரே வகை எழுத்தைப் பயன்படுத்தப் பெறவும் கூடிய அளவு, அம்மக்களிடையே நெருக்கமான தொடர்பு இருந்தது: தென்கோடிப் பாண்டிய நாட்டு வாணிகப் பண்டங்கள் ஏற்றப்பட்ட கட்டை வண்டிகள், வடக்கே கங்கைக் கரையில் உள்ள பாடலிக்கு வரிசை வரிசையாகச் சென்று வந்தன! ஆயிரமாயிரம் மக்கள், கங்கைக் கரையிலிருந்து, காவிரிக்கரைக் கர்நாடக நாட்டுச் சரவண பெல்கோலாவுக்குக் கால்நடையாக வந்து சேர்ந்தனர்; இமயம் முதல் குமரி வரை நடைபெற்ற வாணிக வளத்தையும், பாண்டிய நாட்டையும் மெகஸ்தனிசும் அறிந்திருந்தான் என்பனவற்றை ஒப்புக் கொண்டு, அதற்குக் கௌடல்யரின் அர்த்த சாஸ்திரத்தை ஆதாரமாகவும் கொண்டுள்ளார், திருவாளர் அய்யங்கார் அவர்கள்.

கி. மு. நான்காம் நூற்றாண்டில், பாடலிக்கும் பாண்டிய நாட்டுக்கும் இடையில், ஆயிரம் ஆயிரம் கட்டை வண்டிகளில் வாணிகம் நடைபெற்றது எனக்கூறும் வடஇந்தியக் கௌடல்யர், இந்திய நாட்டு நிலஇயல் அறிந்தவராக, இந்திய நாட்டுவரலாறு தெரிந்தவராகப் புலப்படுகிறார் திரு. அய்யங்கார் அவர்களுக்கு!

கி. மு. மூன்றாம் நூற்றாண்டில், 12000 சமணத் துறவிகள் கங்கைக் கரையிலிருந்து காவிரிக் கரைக்கு வந்து சேர்ந்தனர் எனக்கூறுபவர், இந்திய நாட்டு நிலஇயல்

அறிந்தவராக, இந்தியநாட்டு வரலாறு உணர்ந்தவராகப் புலப்படுகிறார் திரு. அய்யங்கார் அவர்களுக்கு!

கி.மு. 400, கி.மு. 300 ஆண்டுகளில், இத்துணைப்பெரிய போக்குவரத்து இருந்திருந்தால், ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர், அதாவது, கி. பி. 600ல், அது பெருகியிருக்கவே செய்யும், மேலும் எளிதாகி இருக்கவும் கூடும். உண்மை நிலை அதுவாக இருக்க வேண்டியிருக்கவும், கி. பி. 600ல், செங்குட்டுவன், சேரநாட்டிலிருந்து கங்கைக் கரைக்குச் சென்றான் என்றால், அது கூறும் தமிழ்ப் புலவர்கள், இந்திய நாட்டு நிலஇயல் அறியாதவர்; இந்திய நாட்டு வரலாறு உணராதவர்! என்ன கணிப்போ இது?

கி. மு. 400, கி. மு. 300ல், தமிழ் நாட்டிற்கும் வட நாட்டிற்கும் இடையில், அரசியல், வாணிகத் தொடர்புகள் இருந்தன எனக்கூறுபவர் கூற்று, வேதவரக்கு! ஆனால் ஆயிரம் ஆண்டு கழித்து, கி. பி. 600ல், அவை இருந்தன எனக்கூறுவார் கூற்று வெறும் கட்டுக்கதை! திரு. அய்யங்கார் அவர்களின் இம்முடிவு, அவர் கூற்றுப்படி, பழிவாங்கும் உணர்வோடு கூடிய வெறும் கற்பனைமாடம்! (Speculation with a vengence. Page : 138.)

செங்குட்டுவன் வடநாட்டுப் படையெடுப்பு, நடவாத ஒன்று: வெறும் கட்டுக்கதை என்பதற்குத் திரு. அய்யங்கார் காட்டும் பிறிதொரு காரணம், அவன் வெற்றி கொண்ட அரசர்கள், உண்மையில் இருந்தவர் என்பதற்கு வேறு இலக்கியச் சான்றோ, கல்வெட்டுச் சான்றோ இல்லை என்பது.

நூற்றுவர் கன்னர் துணையால், கங்கையைக் கடந்து, வடகரை அடைந்து, உத்தர நாட்டில் பாசறை கொண்டிருந்த செங்குட்டுவன், அங்கு வந்து எதிர்த்த உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன், கனகன், விசயன் ஆகிய வடநாட்டு மன்னர்களை வெற்றி கொண்டான் எனக்கூறுகிறது கால்கோள் காதை.

"கங்கைப் பேரியாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங்கு எய்தி
ஆங்கு அவர் எதிர் கொள அந்நாடு கழிந்து, ஆங்கு,
ஓங்கு நீர் வேலி உத்தரம் மரீஇப்,
பகைப்புலப் புக்குப் பாசறை இருந்த
தகைப்பருந்தானை மறவோன் தன்முன்
உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன்,
சித்திரன, சிங்கன், தனுத்தரன், சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவரெல்லாம்
தென் தமிழ் ஆற்றல் காண்குதும் யாம் எனக்,
கலந்த கேண்மையின் கனக விசயர்
நிலந்திரைத் தானையொடு நிகர்த்து மேல்வர"

—கால்கோள் : 176-187.

இம்மன்னர்கள், கங்கைக் கரையின் வடக்கே அரசாண்டு இருந்தவர் என்பதை வேறு இலக்கியமோ, கல்வெட்டோ உறுதி செய்யவில்லை; ஆகவே, செங்குட்டுவனின் இப்படையெடுப்பு ஒருகட்டுக்கதை என்கிறார் திரு அய்யங்கார் அவர்கள்.

"Canto III then makes Senguttuvan defeat a number of Trans - Gangatic monorchs, for whose existence there is no other evidence, literary or epigraphical. All these must be fables". (History of the Tamils : Page : 600).

செங்குட்டுவன், இம்மன்னர்களை வெற்றி கொண்டான் என்பதைச் சிலப்பதிகாரச் சான்று உறுதி செய்தாலும், அதை உறுதி செய்ய, வேறு இலக்கியச் சான்று தேவை; கல்வெட்டுச் சான்று தேவை; அவை இல்லாதபோது சிலப்பதிகாரம் கூறுவது உண்மையாக இருக்க முடியாது; அது ஒரு வெறும் கட்டுக்கதை எனக்கூறும் திரு. அய்யங்கார் அவர்கள், வட இந்தியச் சீயபாகுவின் மகனும், ஈழத்தில் பௌத்த சமயத்தை

பரப்பியவனுமாகிய விஜயன் குறித்து, கி. மு. நான்காம் நூற்றாண்டில் தொகுக்கப் பெற்ற ஜாதகாக் கதைகள் கூறுவதை, அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளார்; அவர் கூறுவன இதோ :

"ஜாதகா கதைகள், கி. மு. நான்காம் நூற்றாண்டில் தொகுக்கப் பெற்றவை; ஆனால், அவை, புத்தர் காலத்திற்கு நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே நாடோடிப் பாடல்களால் இருந்து வந்தன."

The Jataka tales were written down about the IV century B. C., But they must have existed as folk-tales, long before the time of the Buddha" (History of the Tamils. Page : 125.)

"புத்தர் இறந்த அன்று, சீயபாகுவின் மகன் விஜயன், தன்னைப் பின்பற்றுவோர் ஏழுநூற்றுவருடன் ஈழத்தில் காலடிவைத்தான் : ஆங்கு வாழ்ந்த யக்கரை அழித்து வென்று, அந்நாட்டின் அரசன் ஆனான். தனக்கும், தன் உடன் வந்தோர்க்கும் மனைவியர் வேண்டித் தக்கிணத்தில் உள்ள மதுரைக்குப் பரிசுப்பொருட்களோடு தக்கவர்களை அனுப்பி வைத்தான்; எண்ணற்ற தமிழ்ப் பெண்கள், அணிகள் பல அணிந்து, யானைகள், குதிரைகள், பண்டப்பொதிகள் பின்தொடர ஈழத்திற்குச் சென்றனர். ஜாதகாக்கதைகள் கூறும் இச்செய்தி, பாண்டியர்களும், வட இந்தியர்களும் ஒருவரையொருவர் அறியாதவரல்லர்; மாறாக, தன் கைப்பற்ற, பாண்டியர் மகளை, விஜயன் கேட்டுப் பெறுமளவு நெருக்கமாக அறிந்திருந்தனர் என்ற உண்மையை உறுதி செய்கிறது".

"On the day that the Buddha died, Vijaya son of Sihabahu, the armed lion to gether with seven hundred followers landed in Ceylon......He became kink of the country after defeating and slaying the Yakk people who lived there and requiring wives for himself and his followers,

he sent people to the city of Madura in the Dakkana, with gifts to woo the daughter of the Panduking and also to secure wives for the rest. A number of Tamil girls, bedecked with ornaments and accompanied by elephants, horsas, and waggons, went to ceylon This story...confirms the fact that the pandyas and the Northerners were not strangers to each other, but so familiar with each other that a Pandye girl could be demanded for the hand of Vijaya, as a normal event." (History of the Tamils, Page: 127-128.)

கங்கைக் கரையைச் சார்ந்த விஜயன், குமரிக்கு அப்பால் உள்ள கடலிடை நாடாம் ஈழத்தை வென்று அரசன் ஆனான்; தாம்பிரபரணி ஆற்றுப் பாண்டியர் மகளை மணந்து கொண்டான் என, கி.மு. நான்காம் நூற்றாண்டில் எழுதப்பட்ட ஜாதகாக் கதைகள் கூறுவதை அப்படியே ஏற்றுக்கொள்கிறார்: இதைத் தமிழகத்து இலக்கியமோ, தமிழகத்துக் கல்வெட்டோ உறுதிசெய்யவில்லை; ஆகவே இது வெறும் கட்டுக்கதை எனத் தள்ளிவிடவில்லை. வடக்கே உள்ள ஒருவன் தென்னாடு வந்து அரசமைந்து அந்நாட்டுமகளையும் மணந்துகொண்டான் என்ற ஜாதகாக் கதையின் கூற்று, திரு. அய்யங்கார் அவர்களுக்கு வேத வாக்கு. ஆனால், செங்குட்டுவன் வடநாடு சென்று அந்நாட்டு அரசர்களை வெற்றிகொண்டான் எனச் சிலப்பதிகாரம் கூறினால், அது கூறுவதை, வேறு இலக்கியமோ கல்வெட்டோ உறுதிசெய்யவேண்டும்; அது செய்யப் படவில்லை; ஆகவே, அது கட்டுக்கதை! திரு. அய்யங்கள் அவர்களின், இத்திறனாய்வு முடிவு, அவர் கூற்றுப்படி, பழி வாங்கும் உணர்வோடு கூடிய வெறும் கற்பனை மாடம் ("Speculation with a vengence" Page: 138) அல்லது வேறு அன்று.

## ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் இமயப் படையெடுப்பு

சேரர், சோழர் வழிவந்தாரைப் போலவே, பாண்டியர் வழிவந்தான் ஒருவனும், இமயப் பெருமலையில் தன் குலச் சின்னமாம் கயலைப் பொறித்தான் என்கின்றன இலக்கியங்கள்.

''வடவாரிய மன்னர் ஆங்கோர்
மடவரலை மாலை சூட்டி
உடன் இருந்த இருக்கை தன்னில்
ஒன்றுமொழி நகையினராய்த்
தென்தமிழ் நாடாளும் வேந்தர்
செருவேட்டுப் புகன்றெழுந்து
மின்தவழும் இமய நெற்றியில்
விலங்கு வில் புலி கயல் பொறித்த நாள்
எம்போலும் முடிமன்னர்
ஈங்கில்லை போலும் என்ற வார்த்தை
அங்குவாழ் மாதவர் வந்து அறிவுறுத்த''

– சிலம்பு : வாழ்த்து ; உரைப்பாட்டுமடை.

2) ''வடவாரியர் படை கடந்து
தென் தமிழ்நாடு ஒருங்கு காணப்
புரைதீர் கற்பின் தேவிதன்னுடன்
அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
நெடுஞ்செழியன்''

—சிலம்பு ; கட்டுரை : கட்டுரை.

3) "வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன்"
—சிலம்பு; காடுகாண் : 21-22.

4) "கயல் எழுதிய இமய நெற்றியில்
அயல் எழுதிய புலியும் வில்லும்
நாவலம் தண் பொழிலில் மன்னர்
ஏவல் கேட்பப் பார் அரசாண்ட
மாலை வெண்குடைப் பாண்டியன்."
—சிலம்பு: ஆய்ச்சியர் குரவை : 1-5.

இவற்றுள், முதலாவது, திரு. அய்யங்கார் அவர்களால் சிலப்பதிகாரத்தின் ஓர் அங்கம் ஆகாத; இளங்கோவடிகளாரால் பாடப் பெறாதது எனக் கருதப்படும், வஞ்சிக் காண்டக் காதை ஒன்றில், இடம் பெற்றிருப்பது, அதிலும், அவ் வாழ்த்துக் காதை ஆசிரியர் யாவரே ஆயினும், அவரால் பாடப்பெற்றது என ஏற்றுக் கொள்ள இயலாததான, அதன் முன்னுரையாகக் கருதப்படும் உரைப்பாட்டு மடையில் இடம் பெற்றிருப்பது; ஆகவே, அதை அகச்சான்றாக ஏற்றுக் கொள்வது பொருந்தாது எனத் தள்ளிவிடல் கூடும்.

அதேபோல், இரண்டாவதும் சிலப்பதிகாரத்தின் ஒரு பகுதியாக, திரு. அய்யங்கார் அவர்களால் ஏற்றுக் கொள்ளப் பட்ட மதுரைக் காண்டத்தில் இடம் பெற்றிருந்தாலும், அவர் கருத்துப்படி, அக்காண்டத்து இறுதிக் காதை ஆகிய கட்டுரைக் காதையின் தொடர் வரிகளாக அல்லாமல், பிற்காலத்தவர் ஒருவரால், மதுரைக் காண்டம் முழுமைக்கு மான முடிவுரை எனக் கருதப்படும் கட்டுரையில் இடம் பெற்றிருப்பது என்ற காரணம் காட்டி, அகச்சான்றாக ஏற்றுக் கொள்ளப்படாமல் ஒதுக்கிவிடல் கூடும்.

ஆனால், இதை அவ்வாறு புறக்கணித்து விடுவதற்குத் திரு. அய்யங்கார் அவர்களும் விரும்பவில்லை. பொன்செய் கொல்லன் தன் சொல் கேட்ட தானே கள்வன் என்பதை

உணர்ந்ததும், "கெடுக என் ஆயுள்" எனக் கூறியவாறே, அரசமாதேவியுடன், அரசு கட்டிலிலேயே உயிர் விட்ட பாண்டியன், ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன்தான் என்கிறது இக்கட்டுரை.

இக்கட்டுரைப் பகுதியை எடுத்தாண்டு, இக்கட்டுரையின் ஆசிரியர், "ஆரியப் படை கடந்த" என்ற தொடருக்கு, வடநாட்டு ஆரியர்களைத் தோல்வி கண்டான் எனப்பொருள் கூறினும், அத்தொடர், கும்பகோணத்திற்கு அண்மையில் உள்ள பழம்பெரும் போர்க்களமாகிய ஆரியப்படையைக் கடந்து என்றும் பொருள்படும். [Thus the writer of the epilogue interprets the phrase ஆரியப் படை கடந்த, as "having defeated the Northern Aryars", where as it may also mean having crossed the place called Aryappadai, an ancient battle field near Kumbakonam. Page : 596] எனக் கூறியிருப்பதன் மூலம், அம்முடிவுரையாம் கட்டுரையினைத், திரு. அய்யங்கார் அவர்களே, அகச் சான்றாக ஏற்றுள்ளார் என்பது உறுதி ஆகிறது.

சங்க இலக்கியங்கள், 1) தலையாலங்கானம் (நற். 387: அகம் : 36, 175, 209: புறம் : 19, 23; மதுரைக்காஞ்சி : 127-130), 2) கழுமலம் (அகம் : 44); கூடல் (நற் : 39, 298; அகம் : 116, 253, 346); பாழி (அகம் : 208, 375, 396) வாகை (குறுந் : 393, அகம் : 125, 199); வெண்ணி, (நற் : 390 அகம் ; 55, 246) என்ற இப்போர்க்களங்களை மட்டுமே குறிப்பிடுகின்றன. திரு, அய்யங்கார் அவர்கள் கூறும் ஆரியப்படை என்ற போர்க்களம் ஒன்று இருந்ததற்கான அகச்சான்று எதுவும் இல்லை. ஆக, அத்தொகைச்சொல்லை ஆரியருடைய படை. என ஆறாம் வேற்றுமைத் தொகைச் சொல்லாகக் கொண்டு பொருள் கொள்வதே நேரிதாம்.

மூன்றும் நான்கும், திரு. அய்யங்கார் அவர்களால், இளங்கோவடிகளாரால் பாடப்பெற்றது என ஏற்றுக் கொள்ளப்பட்ட மதுரைக் காண்டத்தில் - காடுகாண்காதை

யிலும், ஆய்ச்சியர் குரவையிலும் இடம்பெற்றிருப்பவை; ஆகவே, அவற்றை அகச்சான்றுகளாக ஏற்க திரு. அய்யங்கார் அவர்கள் மறுக்க மாட்டார். ஆக, பாண்டியர் குலத்து வந்தான் ஒருவன், இமயத்தே கயல்பொறித்ததை இல்லை என மறுக்கும் வலுவான சான்று எதுவும் இல்லாத நிலையில், மேலே கூறிய அகச் சான்றுகளின் அடிப்படையில், இமயத்தே கயல் பொறித்தது உண்மையொடுபட்ட நிகழ்ச்சியே என்பது உறுதி ஆகிறது.

---

# அதிகாரம் : XXX

# பழமை புதுமைகளின் இணைப்பு

**ஆறாம் நூற்றாண்டில் பாண்டியர் :**

கி. பி. ஆறாம் நூற்றாண்டில் கடுங்கோனால் மீண்டும் ஆட்சிக்கு வரும்வரை, பாண்டியர் ஆட்சி மறைந்தே போய் விட்டது என்ற தவறான கருத்தை அளிப்பதால், பிழைபடு தொடராகக் கருதத்தக்கதான "களப்பிரர் இடையீட்டு இருட்காலம்" (Kalabbra Interregnum) என்ற, கல்வெட்டுத் துறை வரலாற்று ஆசிரியர்களால் கண்டுபிடிக்கப்பட்ட சொற்றொடர் இடம் பெற்றிருக்கும் நிலையிலும், அந்த இருண்ட காலத்திலும் பாண்டியச் சிற்றரசர்கள் சிறப்புற வாழ்ந்தே இருந்தனர். புறநானூற்றுச் செய்யுட் கொளுக்கள், பாண்டியர் எழுவரைக் குறிப்பிடுகின்றன. அவற்றைப் பாடிய புலவர்கள், அவர்கள் பாடிய பிற பாடல்களிலிருந்து அவர்கள் ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பது உணர்த் தப்படும் ஆதலின், அவர்கள் காலத்தால் பிற்பட்டவராவர். மேலும், இதற்கு முந்திய அதிகாரங்களில் ஆராயப்பெற்றகலித் தொகையும், பிறபாடல்களும் பாண்டியர் தலைவர் பலரைப் பெயர் சுட்டாமலே குறிப்பிடுகின்றன. ஆகவே, அவர்கள், தங்கள் தலைநகர்க்கு அப்பால், ஆட்சி செல்லாச்சிற் றரசர்களாவர் என்று உணரப்படும். களப்பிரர்களைக் கி. பி. 600க்குச் சற்று முன்னர், மதுரை மண்டலத்திலிருந்து விரைந்தோட்டிவிடுவதற்கும், மதுரை மண்டலம் முழுமையும் பாண்டியப் பேரரசை மீண்டும் நிலைநிறுத்துவதற்கும், இந் நிலையே வழிவகுத்திருக்கவேண்டும். ஆறாம் நூற்றாண்டில், சமணர்களும், சைவர்களும், வைஷ்ணவர்களும், பொது மக்களிடையே செல்வாக்குப் பெறத், தமக்குள்ளே போராடிக்

கொண்டிருந்தனர். மதுரையில் கோயில் கொண்டிருக்கும் சிவனின் திருவிளையாடல்களில் ஒன்றான, தருமி என்ற ஏழைப் பார்ப்பனனுக்குப் பொற்கிழி பெற்றுத் தருவான் வேண்டித் தமிழ்ச்சங்கம் சென்ற திருவிளையாடல், திருநாவுக்கரசுநாயனாரால் ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்கிறோம். ''நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி, நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன் காண்'' (திருப்புத்தூர் திருப்பதிகம் : 2: 1-2) ஆகவே, தமிழ்ச் சங்கம் நிறுவியது உள்ளிட்ட எண்ணற்ற திருவிளையாடல்கள் குறித்த பழங்கதைகள் எழுமளவு, சிவ வழிபாடு ஆறாம் நூற்றாண்டில் மக்களிடையே பயில இடம் பெற்றிருந்தது. பெரிய புராணக் கூற்றுப்படி, கர்னாடக அரசனை அரியணையிலிருந்து அப்புறப்படுத்தி விட்டு மதுரை அரசனாகிச் சிவவழிபாட்டை மீண்டும் உயிர்ப் பித்தவரும், அக்கர்னாடக அரசனால் கொல்லப் பட்டவருமான மூர்த்திநாயனார் ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராதல் வேண்டும்.

## ஆறாம் நூற்றாண்டில் சோழநாடு

சமணம், சைவம், வைஷ்ணவம் ஆகிய சமயங்களின் வழிபாட்டு நெறிகள், சோழ நாட்டில், இந்த நூற்றாண்டு காலத்தில் பெருமளவில் இடம் பெற்றிருந்தன. சிலப்பதிகாரம் எழுதப்படுவதற்கு முன்னரே, சீரங்கம் புகழ்பெற்றுத் திகழ்ந்தது என்பது ஏற்கெனவே கூறப்பட்டது. சீரங்கம் கோயிலில் பாதுகாக்கப்பட்டுவரும் கோயில் ஒழுகு என்ற கற்பனை வாய்ந்த வரலாற்று நூல், தொடக்கத்தில் கடவுளால் கட்டப்பெற்று, காவிரி ஆற்று மணலால் புதையுண்டுபோன கோயிலை அகழ்ந்து கண்ட சோழன் ஒருவன் பற்றிப் பேசுகிறது. சீரங்கம் பெருமானுக்கே தன்னை ஒப்படைத்துக் கொண்டு, அவனை ஆரிய முறைப்படி திருமணம் செய்து கொண்டு, பின்னர் அவனோடு இரண்டறக் கலந்து மறைந்துபோன ஒருத்தியை மகளாகப் பெற்ற உறையூர்ச் சோழன் ஒருவனின் கதை குறித்தும் அது விளக்கம்

அளிக்கிறது. அவள் தெய்வத்திருமேனி உறையூர்க்கோயிலில் இன்றும் வழிபடப்பெறுகிறது. ஆறாம் நூற்றாண்டை அடுத்த இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாகச் சோழர்கள் வரலாற்றிலிருந்தே மறைந்து விட்டனர். ஆதலின், மேலே கூறிய பழங்கதைகளுக்கு ஏதேனும் ஆதாரம் இருக்கிறதோ இல்லையோ, அவை அந்த ஆறாம் நூற்றாண்டில்தான் இடம்பெற்றன என்பது உறுதி.

**செங்கணான் :**

இக்காலத்தைச் சேர்ந்த ஒரு சோழ அரசன், செங்கணான். வைஷ்ண ஆழ்வார்களில், நனிமிகப் பழைய காலத்தைச் சேர்ந்தவர்களுள் ஒருவரான பொய்கை யாழ்வாராக பெரும்பாலும் கருதப்படும் புலவர்ப் பொய்கை யாரின் பாட்டுடைத் தலைவன் இவன். அந்நூல் களவழி நாற்பது எனும் பெயருடையது. அது இச்சோழ அரசன், சேரன் கணைக்கால் இரும்பொறையோடு மேற்கொண்ட போர்க்களக் காட்சிகளைக் குருதி வேட்கை உணர்வோடு பாடப்பெற்ற நாற்பது பாடல்களைக் கொண்டது. சோழ அரசனாகப் பிறப்பதற்கு முன்னர், சிவன் மீது பேரன்பு கொண்ட சிலந்தியாக இருந்தவன் அவன் என்ற பழங் கதையைக் கொண்டுளது பெரியபுராணம். பார்வதி, காவிரிக் கரையில் இருந்த ஒரு சிவலிங்கத்தை மக்கள் வடிவில் வழிபட்டு வந்தாள். பார்வதியைப் போலவே, அச்சிவலிங் கத்தின் மீது பக்தி கொண்டிருந்த ஒரு சிலந்தி, ஞாயிற்றின் ஒளி வெப்பத்திலிருந்து அச்சிவலிங்கத்தைக் காத்தற் பொருட்டு, அதன் தலைமீது நாள்தோறும் வலைபின்னி வந்தது. ஆனால் அதே சிவலிங்கத்தின் மீது பக்தி கொண்டிருந்த யானை ஒன்று, தன் துதிக்கையால், காவிரி ஆற்று நீரை முகந்து வந்து, அச்சிவலிங்கத்தை நாள்தோறும் நீராட்டி வந்தது; அதனால் சிலந்தி வலையும், இயல்பாகவே அறுபட்டும் வந்தது; பக்தி வெறியால் ஆத்திரங் கொண்டு, அந்த யானையின் மூக்கினுள் நுழைந்து கொண்டது. அதனால், யானை மூச்சுத்திணறி இறந்தது; அவ்வாறு

இறக்கும்போது யானை வலிபொறுக்கமாட்டாமல், தன் துதிக்கையை ஓங்கி ஓங்கித் தரையில் மோதவே, அம் மோதலால் சிலந்தியும் இறந்து, செங்கணனாக மறுபிறவி எடுத்தது.

செங்கணான், ஒரு புராணக் கதையின் தலைவனாயினும், அவன் ஒரு வரலாற்று அரசனுமாவன்: கி. பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வைஷ்ணவ ஆழ்வாராகிய திருமங்கை ஆழ்வார், எண்தோள் ஈசனுக்கு, எழுபது அழகிய திருக்கோயில்களைக் கட்டினான் செங்கணான் என்று கூறிய தோடு, தம்முடைய திருநறையூர்ப் பாசுரம் பத்திலும், அவ்வூரில் உள்ள கோயிலில் எழுந்தருளி இருக்கும், திருமாலை வழிபட்டான் என்றும் கூறியுள்ளார்.

''இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள்ஈசற்கு
எழில்மாடம் எழுபதுசெய்து உலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே.''

திருஞானசம்பந்தரும், சுந்தர மூர்த்தி சுவாமிகளும், செங்கணான், சிவன் கோயில்கள் கட்டிய நிகழ்ச்சியைத் தம்முடைய தேவாரங்களில், பல இடங்களில் சுட்டிக் கூறிப் பாராட்டியுள்ளனர். [திருஞானசம்பந்தர், திருவைகல் மாடக்கோயில் தேவாரம் 1, 4, 5; திருவம்பர் தேவாரம்; சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருநன்னிலம் தேவாரம் : 10; திருநறையூர் தேவாரம் : 1] திருத்தொண்டர் புராணம், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தொகுக்கப்பெற்றபோது, அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகச் செங்கணானும் சேர்க்கப்பட்டான். ஆனால், முன்னரே குறிப்பிட்டவாறு, அவன் ஒரு வைஷ்ணவ வழிபாட்டாளனும் ஆவன். சைவர் களும், வைஷ்ணவர்களும், பவுத்தர்களுக்கும், சமணர்களுக்கும் எதிராக, வேதநெறி தழைத்தோங்கச் செய்யும் பொதுப் பணியில் ஒன்று பட்ட காலமாம் ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன் செங்கணான்.

[இறையனார் அகப்பொருள் உரை, முதல் சங்கத்தை நிறுவிய 89 பாண்டியரில், எழுவர் கவியரங்கு ஏறினார் என்றும், இடைச்சங்கத்தை நிறுவிய 59 பாண்டியரில் ஐவர் கவியரங்கேறினார் என்றும், கடைச்சங்கம் நிறுவிய 49 பாண்டியரில் மூவர் கவியரங்கேறினார் என்றும் கூறுவதையும் சங்க இலக்கியப் புலவர்களில், அறிவுடை நம்பி, தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் முதலான பன்னிருவர் பாண்டியர் குலத்து வந்தவர் என்பதையும் மறந்து பாண்டிய அரசர்களில் எவரேனும், இதுபோலும் நூல்களை எழுதவல்லவர் என என்னால் நினைக்க முடிய வில்லை என பி. டி. எஸ். அவர்கள் கூறுவது, வியப்பாக உளது.]—மொழி பெயர்ப்பு ஆசிரியர் விளக்கம்.

கோப்பெருஞ் சோழன் :

இச் சோழ மன்னனும், ஆறாம் நூற்றாண்டிலேயே வாழ்ந்திருந்தான். நான் பாடிய 214 ஆம் எண் புறநானூற்றுப் பாட்டில், ஆரிய மதக் கோட்பாடாம் மறுபிறப்பு விவாதிக்கப் பட்டுளது. மேலும், தன் அரசவைப் புலவர்களோடு, சமணத்தில் சல்லேகனம் என அழைக்கப்படும் வழக்கமாம் வடக்கிருந்து உயர் துறத்தலும் செய்தான். தோல்வியால் பெற்ற இழிவினைத் துடைத்தற் பொருட்டு, ஏனைய அரசர்கள் தங்களைத் தாங்களே கொன்று அழித்துக் கொண்டார்களாக, இவன், உடலோடு வாழலாம் கட்டி லிருந்து விடுபட்டுக் கொள்வதற்காக, அவ்வாறு வடக்கிருந் தான்.

[மானம் உடைய மாண்பாளர், தமக்கோர் இழுக்கு நேரின், அதன்பின் ஒரு கணப்போதும் உயிர் வாழ மாட்டார். அத்தகையாரை, "இளிவரின் வாழாத மானம் உடையார்" எனப் பாராட்டும் உலகம். கோவலனை ஆராயாதே கொன்று விட்டேன் என்பதை உணர்ந்த அக்கணமே, இயல்பாகவே உயிர் இழந்து, அப் பழி துடைத்துப் புகழ் கொண்ட பாண்டியன் நெடுஞ்செழியன் போலத் தமக்கு ஒரு பழி நேர்ந்த

போதே, தம் உயிர் இயல்பாகவே பிரிந்து போய்விடாத போது, அத்தகு மானம் உடையவர், அவ்வுயிரைத் தாமே வருந்திப் போகப் பண்ணி விடுவர்.

பழிக்காம் காரணம் பலவற்றுள், போரில் புறப்புண் பெறுதல் ஒன்றாதல் போல, தானே படையெடுத்துச் சென்று கொன்று அழிக்க வேண்டுமளவு, பிழை நெறியினராகிய மக்களைப் பெறுதலும், பழிக்காம் ஒரு காரணமாம். ஆகவே, அப் பழிக்கு நாணி, உயிர் விடுதலும், புறப்புண் நாணி உயிர் விடுதல் போன்றதே, கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்து உயிர் துறந்தது அத்தகையதொரு பழி துடைத்தல் பொருட்டேயல்லது திரு. பி. டி. எஸ். அவர்கள் கூற்றுப்படி, உயிருக்கு உடற்கட்டிலிருந்து விடுதலை அளிக்கும் சமண மரபை ஒட்டியதன்று.] —மொழி பெயர்ப்பாசிரியர் விளக்கம்.

### சேர நாட்டில் :

கிரேக்கர்களால், 'தமிரிகே' என அழைக்கப்பட்ட சேர நாடு, ஆரிய ஆதிக்கத்தின் கீழ், ஏனைய தென்னிந்தியா வருவதற்கு முன்பே வந்துவிட்டது. ஆகவே தான், சேர அரசர்கள் மீது பாடப்பெற்ற, பாடல்களிலும், பதிற்றுப் பத்திலும், சோழ பாண்டிய நாடுகளைக் காட்டிலும், சேர நாடு, முழுதுமாக ஆரிய மயமாக்கப்பட்டுவிட்டது என்பதற்கான எண்ணிலா அகச் சான்றுகளை நாம் காண்கிறோம்.

### கோயில்கள் :

கி. பி. நான்காம் நூற்றாண்டிற்கு முன்னர்த், தமிழ் நாட்டில் ஆரியக் கோயில்கள் ஒரு சிலவே; அல்லது ஒன்று கூட இல்லை. ஆறாம் நூற்றாண்டில், காஞ்சி, வேங்கடம், திருவரங்கம், மதுரை ஆகிய ஈங்குள்ள கோயில்கள் புகழ் பெற்று விட்டதை நாம் அறிகிறோம். ஏழாம் நூற்றாண்டு தொடங்கி, தேவாரம், திருவாய்மொழி பாடிய நாயன்மார் களும், ஆழ்வார்களும் பல்லவ, சோழ, பாண்டிய, மற்றும் சேர நாடுகளில் உள்ள எண்ணற்ற கோயில்களைப் பாடிப்

பாராட்டியுள்ளனர். ஆகவே, தென்னிந்தியாவில் உயிர் பெற்றிருக்கும் அதாவது, நாயன்மார்களாலும், ஆழ்வார்களாலும் பாடப்பெற்ற நாள் தொட்டு, தெய்வத் தன்மைக்காகப் புகழப் பெற்ற, நாள்தோறும் வழிபாடும், விழாவும் கொண்டு விளங்கும் இக் கோயில்களெல்லாம், கி. பி. ஆறாம் நூற்றாண்டில் எழுந்தனவே ஆம். செங்கணான் செயல் ஒன்றே, பெருமளவில் கோயில் கட்டியமைக்கான சான்று. இக் கோயில்களெல்லாம் மரத்தாலும், செங்கல்லாலுமே கட்டப் பெற்றன: செங்கல், சிறப்பாக அடித்தளத்திற்கு மட்டுமே பயன் கொள்ளப்பட்டது; இந்தியப் பழங் காடுகள் இன்னமும் முழுமையாக அழிந்து விடவில்லை; ஆகவே கோயில் கட்டுவதற்கான மரம், தேவைக்கு மேலும் கிடைத்தது. இன்று திருவாங்கூரில் இருப்பதுபோல், மரத்தாலான கூரை, பெரும்பாலும் செப்புத் தகட்டால் மூடப்பட்டது; ஒரோ வழி, கரிகாலன், காஞ்சிக் கோயில் கூரைக்குப் பொன் வேய்ந்தது போல், ஒரோவழிப், பொன்னாலும் மூடப்பட்டது. மகேந்திர பல்லவன் (கி. பி. 600-625) மலைச் சரிவுகளில் பாறைகளைக் குடைந்து கற் கோயில் அமைக்கும் முறையை முதற்கண் தொடங்கினான்; அவன் வழிவந்த நரசிம்மன், பாறைகளை முழுமையாகக் குடைந்து தனிக் கோயில் அமைத்தான். கட்டமைப்புச் சார்ந்த கோயில்கள் எழத் தொடங்கலாயின. தமிழைச் சோழ அரசர்கள் (கி. பி. 9 மற்றும் 10ஆம் நூற்றாண்டு) இக் கோயில்களையெல்லாம் இடித்துவிட்டு, அக் கோயில்களின் சர்ப்பக்கிருகத்தைக் கல்லால் கட்டினர். பழைய கால சோழர் அமைப்புக் கோயில்கள், சிறிய கர்ப்பக்கிருகம், முன்னே ஓர் அரை மண்டபம் ஆகியவற்றை மட்டுமே கொண்டிருந்தன: பிற்காலத்தில், மேலும் பல மண்டபங்களும், திருவுலா வீதிகள், சுற்றுச் சுவர்கள், மேலும் பற்பல கருவறைகள் ஆகியவை இணைக்கப்பட்டுவிட்டன. வடிவமைப்பில் ஒருமைப்பாட்டை எதிர்பார்க்கும் வெளிநாட்டுக் கலை ஆய்வாளர் அதுபோலும் ஒன்றைக் காணப் பெறாமையால், அவர்களின் கலையழகு நுகர் இன்பத்தையே

கெடுத்து விடுமளவு கோயில்கள், அமைப்பு நிலையில், அத்துணைச் சிக்கல் உடையவாகி விட்டன. இச் சோழர் முறைக் கோயில்கள் சில, பிற்காலத்தில் முழுமையாக இடிக்கப் பெற்றுப், பெரிய அளவில் கட்டப் பெற்றன. சில கோயில்களைப் பார்த்து இவை நனிமிகப் பழமை வாய்ந்தவை எனக் கூறும்போது, அக் கோயில்களின் அடிமனை, கல்லாலோ, சுதையாலோ, மரத்தாலோ ஆன தெய்வத் திருமேனிகள் ஆகிய இவை மட்டுமே பழமையானவை; கட்டிடம் அன்று என்றே நாம் கொள்ள வேண்டுமளவு, கோயிலை இடித்துப் பெரிதாக்கும் முறை நம் காலத்தும் தொடர்கிறது.

## பக்தி வழிபாடு :

கட்புலனாகா அருவ நிலையிலும், கட்புலனாகும் உருவ நிலையே தமிழர் உள்ளத்தை நனிமிக ஈர்க்கவல்லது என்பதும், இறைவன், மக்களுக்காக இவ்வுலகில் படைத்திருக்கும் இன்பங்களை நுகர்வதைப் பாவமாக எண்ணாத அளவு, தமிழர்கள், எதிலும் நலமே காணும் நிலையில், நிலைகுலையா உறுதிப் பாடுடையவர் என்பதும், பொறிகளால் நுகரப் படவேண்டிய சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் போலும் இவை துறக்கப்பட வேண்டியதற்காகவே படைக்கப் பட்டதாகத் தமிழர்கள் கருதுவதில்லை என்பதும், ஆகவே தான், அவர்கள், இந்நிலவுலக இயல் கூறும் இயற்கையோடு இயைந்த பாடல்களையே, தம்மிடையே வளர்த்துக் கொண்டனர் என்பதும், இந்நூல் பல இடங்களில் அடிக்கடிச் சுட்டிக்காட்டப் பெற்றன. ஆகவே, உடற்றுன்பம் உயிர்த் துன்பங்களிலிருந்து மக்களைக் காத்தற்பொருட்டு, விஷ்ணுவும் சிவனும் மக்கள்வடிவம் தாங்கி அவ்வப்போது வந்த எண்ணற்ற வியத்தகு கதைகள் தமிழர்களிடையே வைக்கப் பட்டபோது அவர்கள், அவ்விரு கடவுள்களில், ஏதேனும் ஒன்றின்பால் உணர்ச்சி வயப்பட்டு ஒன்றிவிட்டது எதிர் பார்த்திருக்கக் கூடியதே. பவுத்த சமண வழிபாட்டு நெறி களும், வடநாட்டில் முதன் முதலாகத் தோன்றியபோது அவை தம்மைத் தோற்றுவித்த மக்கள் வடிவினராம்

சித்தார்த்தர், ஜீனர்கள்மீது தம்மைப் பின்பற்றுவோர் கொண்டிருந்த தனிப்பட்ட பக்தியையே, தம்முடைய செல்வாக்கிற்குப் பற்றுக்கோடாக் கொண்டிருந்தன. ஆனால், வெகுவிரைவில், இத்தனிமனித வழிபாடு, அவர்கள் உள்ளத்தை விட்டு அறவே மறைந்துபோக, அவ்விடம் தத்துவநெறியின் வாதங்களாம் முடிவுகாணமாட்டா வெறும் வார்த்தைகளால் இடம் கொள்ளப்பட்டது. இச்சமயங்கள், தாம் தோன்றிய சில நூறு ஆண்டுகளுக்கு உள்ளாகவே சீரழிந்து போனமைக்கு இதுவே உண்மைக் காரணம்; மக்களின் அடக்குமுறை அன்று. சமயச் சார்புடைய உணர்விற்கு அடிமைப்பட்டு விட்ட உள்ளத்திற்கு, உணர்ச்சி பூர்வமான அனுபவந்தான் நல்ல உணவாகுமே ஒழிய, வெறும் தத்துவ விளக்க வாதச் சொற்கள் ஆகா. இவ்விரு சமயங்களும், தென்னிந்தியாவில், சைவ, வைஷ்ணவ சமயங்களோடு போட்டியிட்டபோது, அவை, தெய்வத்தன்மை வாய்ந்த அனுபவங்கள் அனைத்தையும் வலிந்து அழித்துவிட்ட, இயற்கையோடு மாறுபடும், கனாநிலைக் கொள்கைகளால் மூடப்பட்டு விட்டன. ஆகவேதான், அவை, தங்கள் ஆன்மாவிற்குள் பாயவிட்ட இறைவன் பேருளாம் என வழிபாட்டாளர்களால் உணரப்பட்ட, வாழவைக்கும் வெள்ளப் பெருக்கை, அவ்வழிபாட்டாளர்கள் உணர்ந்து கொள்ளத் துணைபுரியும், சிவன் விஷ்ணு வழிபாட்டின்முன் உருக்குலைந்து போயின; ஆகவே, பௌத்த சமண சமயங்கள் இடம் அற்றுப் போக, சைவ, வைஷ்ணவ சமயங்கள் வளரலாயின. பௌத்த சமணச்சார்புடைய தமிழ்இலக்கியங்களின் தோற்றம், சில நூறு ஆண்டுகளுக்குள் வற்றிப்போக, கரைகாணமாட்டா வெள்ளம் போலும் சைவ வைஷ்ணவ சமயங்களின் வழிபாட்டு இலக்கியங்கள் உருவாகிப்பெருகின.

காலம் செல்லச் செல்ல, சாணக்கிய, வேதாந்த தத்துவங்கள், சைவ, வைஷ்ணவ சமயங்களுக்குள்ளே ஊடறுத்து நுழைந்து, தமிழில், தத்துவ நூல்களின் தோற்றமாம், ஓர் எதிர் விளைவினைத்தோற்றுவித்துவிட்டது என்பதில் ஐயம் இல்லை; ஆனால், அச்சமயங்களின் உயிர்

நாடியாம், இன்றியமையாப் பண்பு, இத் தத்துவங்களால் பாதிக்கப் படவில்லை; விஷ்ணுவும், சிவனும் பொது மக்களின் உள்ளத்தை, எண்ணெய் ஒழுக்குபோல் இடையறவு படாது, தொடர்ந்து ஈர்த்தே வந்தனர்; இச்சமயங்களின், உயிர்ப் பூட்டும் குறிக்கோளும், தானே வந்து பாயும் இறையருள் மூலமாகத் தனிநபர், வீடுபேற்றினை அடைவதாகவே தொடர்ந்து இருந்து வந்தது.

தாம் வணங்கும் தனிப்பெரும் கடவுள்பால் செலுத்தும் எல்லையற்ற வழிபாட்டு நெறி, தமிழ் நாட்டில் ஒரு மைலுக்கு ஒன்றாக, வானளாவ நின்று காட்சிதரும் எண்ணற்ற திருக் கோயில்கள்வழி, உறுதியாக வெளிப்பட்டு நிற்கிறது. தனியொரு கடவுள்பால் செலுத்தும் வழிபாட்டுமுறை, பக்தியை வெளிப்படக்காட்டும் நிலையாம், வழிபாட்டு இசை, வழிபாட்டு ஆடல்களாம் தனிப்பெரும் வளர்ச்சி நிலைக்குக் கொண்டு சென்று விட்டது. தமிழ்நாட்டில், ஆடலும் பாடலும், சமயத்தின் இன்றியமையா நிகழ்ச்சிகளாகப், பண்டு தொட்டே இருந்து வந்துள்ளன. சிவனும் விஷ்ணுவும், வழிபடு கடவுள் களாம் நாயகர்களாக ஆனதும், அவர்கள் தெய்வீக ஆடல் பாடல்களுக்கு உரியவர்களானது மட்டுமல்லாமல், அவற்றில் வல்லவர்களாகவும், சிவன் ஆடலிலும், கிருஷ்ணன் பாடலிலும் வல்லவர்களாகவும் ஆக்கப்பட்டு விட்டனர். இதன் விளைவு, தமிழ் நாகரீகம் உள்ளளவும், கலை, சமயத்திலிருந்து பிரிந்து தனிமையுறாது; சமயச் சார்புடையதாகவே அது தொடர்ந்து இருந்துவரும்.

விஷ்ணு அல்லது சிவன் மீது வெளிப்படுத்தும் நிலை, தமிழகத்தில், தமிழ்ப் பேரரசுகள் பெரும்புகழோடு விளங்கிய, கி. பி. 9, 10 நூற்றாண்டுகளில் மிகப்பெரும் அளவில் வளர்ச்சி பெற்றது. தமிழ் வளர்ந்த இக்காலத்தில், பக்தி மார்க்கத்தின் சிறப்பான இத்தமிழ்முறை, தெலுங்கானா மற்றும் செளுனா தேசங்களுக்கும் சென்று பரவிற்று; புகழ்பெற்ற பந்தர்பூர பக்திமார்க்கம் எழுந்தது. பிற்காலத்தில், தத்துவார்த்த முறையில், ராமானுஜ மத்துவ மதங்களோடு இணைந்து விட்

டார்லும், நடைமுறையில், பக்தியை ஆடல் பாடல்களாகவே, இன்னமும் கொண்டிருக்கும் கபீர்பந்தா, சைதன்யபந்தா போலும் வடநாட்டு மார்க்கங்களும், இதிலிருந்தே வளர்ச்சி பெற்றன.

## ஞான மார்க்கம்

தொடக்ககாலம் தொட்டே, தென் இந்திய பிராமணர்கள் ஆரியக்கருத்துக்களை வளர்ப்பதில் முக்கிய பங்கு கொண்டு இருந்தனர். பௌத்த மதக்கொள்கையின் பிற்கால வளர்ச்சியின் ஒரு பிரிவு மதாசாரியராகிய நாகார்ஜுனப் பேராசிரியர் தென்இந்தியாவைப், பெரும்பாலும் காஞ்சியைச் சேர்ந்தவராவர்.

''பெயர் அறியமாட்டாச் சமஸ்கிருத நூல் ஒன்றில், நாகார்ஜுனர், ஒரு மந்திர வாதியாக அதாவது சித்தி பெற்ற வராகப் புகழப்பட்டுள்ளார். அதே உணர்வில், அதுபோலும் சூழ்நிலையில் வேறு ஓர் இடத்திலும் அவர் கூறப்பட்டுள்ளார். அதன்படி, பிராமணர் குலத்தில் பிறந்த நாகார்ஜுனர், கிழக்கு இந்தியாவில் உள்ள காஞ்சியின் ஒரு பகுதியாம் கஹோரத்தில், தங்கியிருந்தபோது தாரா என்பவளிடம் சித்திகளைப் பெற்றதாகவும், பின்னர் நாட்டில் நிலவிய கொடிய வறுமையின் போது, தான் உடைமைகள் அனைத்தையும் கஹோரத்துப் பிராமணர்களுக்கு அளித்துவிட்டு அகன்று விட்டதாகவும், பின்னர், ராஜக்கிறகத்தை அடுத்த சிதவனத்தைக்கடந்து, துறவு நிலைபெற்று, ஐவகைசீலத்து அறிவின் எல்லையைக் கண்டு கொண்ட நாளந்தாவை, இறுதியாக அடைந்ததாகவும், அதன்பின்னர், உபதேசம் செய்வதில் வெறுப்புற்றுத் தாராவைக் காதலித்து, அவள் இசைவினை எதிர்நோக்கிக் காத்திருந்ததாகவும், அங்கும் உணவுக்கும் உறையுளுக்கும் தட்டுப்பாடு உண்டாகவே, பிறந்த மண்ணுக்கே மீண்டுவந்து விட்டதாகவும், பின்னர், ராஜ கிருகத்திற்கு மறுவலும் சென்று ஆங்கு பன்னிரண்டு ஆண்டுகள் இருந்து விட்டுப் பின்னர்க் கந்தசைலமலைக்குச் சென்ற

தாகவும், அதன் பின்னர்த் தென்னகத்தே உள்ள ஸ்ரீ பர்வதத்தை அடைந்து, தம் எஞ்சிய வாழ் நாட்களை ஆண்டே கழித்ததாகவும் கூறப்பட்டுளது.

தின்னாகர், புத்த தத்தர், தர்மகீர்த்தி ஆகியோர், பௌத்த மதத்தின் கொள்கை கோட்பாடுகள் குறித்த நூல்கள் எழுதிய பிற சான்றோர்கள் ஆவர். [M. Walleser, "The life of Nagarjuna from Tibetan and Chinese sources" Page : 3]

ஒரு பௌநாயனர், மீமாம்சத்தின் பூர்வ, உத்தா என்ற இரு பகுதிகளுக்கும் "கிந்த கோடி" எனும் பெயருடைய விர்த்தி எழுதினார். [Journal of Indian History Vol. I; Chap : 13; Page : 107-113]. வேதாந்த சூத்திரத்திற்கான தம்முடைய உரையில், சங்கராச்சாரியார், மேற்கோள் காட்டிய வார்த்திகத்தின் உரிமையாளன், ஆச்சாரிய சுந்தர பாண்டியனாவன் என்பது திருவாளர் எஸ். குப்புசாமி சாஸ்திரி அவர்களால் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது [Journal of Oriental Research : Vol : I. Page : 5-15] சுந்தர பாண்டியனுடையதாகக் கூறப்படும், மக்களின் ஒழுக்கம் பற்றியதான 'நீதி த்வி சஸஸ்டிகா' என்னும் நூல், அண்மைக்காலத்தே கண்டுபிடிக்கப்பட்டு, அச்சிடப்பட்டுளது. [By V. Prabhakara Sastri] அதிலிருந்து சில பகுதிகள் பஞ்ச தந்திரம், ஜனாஸ்ரயீ ஆகிய நூல்களில் எடுத்துக் காட்டுக்களாக வந்துள்ளன. ஆகவே, சுந்தரபாண்டியன், கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன் வாழ்ந்தவனாதல் வேண்டும். சுந்தர பாண்டியன் என்பது பல அரசர்களின் பெயராக நன்கு தெரிந்த பெயராதலின், இந்த ஆச்சாரியனை மதுரை ஆண்ட ஓர் மன்னனாகக் கொள்ளும் ஓர் ஆர்வமும் உளது. பாண்டிய அரசர்களில் எவரேனும், இதுபோலும் நூல்களை எழுத வல்லவர் என என்னால் நினைக்க முடிய வில்லை. சுந்தரபாண்டியன் என்பது, பாண்டிய நாட்டைச் சேர்ந்த சுந்தரன் எனப் பொருள்படும் என்றே நான் கருது கின்றேன்.

கி. பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை, நாடு முழுமைக்குமான தத்துவ மெய்ஞ்ஞான அறிவினை உருவாக்கிய எண்ணற்ற பேரறிஞர் பெருமக்கள், தென்னிந்தியாவில் தோன்றி வந்துள்ளனர். அவர்களுள் முதன்மையானவர் சங்கராச்சாரியார். வேதாந்தத்திற்கான அவர் விளக்கம் மெய்ஞ்ஞான உணர்விற்கான மிகச் சிறந்த ஒன்று அது. வெறும் கற்பனையாகாது. தனி மனிதன் உயிர், மற்றும் இயல் உலக அண்டம் ஆகியவற்றின் தனித்தன்மையை, மேலும் சுருங்கச் சொல்வதாயின், வாழ்தற்காம் நிலையை, ஆத்மா தன்னைத்தானே உணர்தல் அல்லது வேறு இல்லையாம் நிலையைக் கண்டு கொள்ள வல்ல ஆன்மீகத்தின் அனுபவம் ஆகும். இந்நெறியைப் பின்பற்றுதல், கத்திமுனைக் கூர்மை போலும், நுண்ணிய பாதைமீது செல்வதற்கு ஒப்பாகி, தனிமிகக் கொடிய இடர்ப்பாடுகளோடு கூடியதாம்.

அடுத்தவர், கொடிய வேதாந்த நெறிக்கும், எளிய ஆகம (வைஷ்ணவ ஆகமம்) நெறிக்கும் இடையில் ஓர் உடன்பாட்டினைக் கொண்டு வந்தவராகிய ராமானுஜர் ஆவர். ஆனந்த தீர்த்தர், ராமானுஜரைக் காட்டிலும், ஆகம உண்மைகளை மிக அதிகமாக வற்புறுத்தினார். வட இந்தியாவில் 'வைஷ்ணவ்' என அழைக்கப்படும், சமயத்தோடு சார்ந்த மெய்ஞ்ஞான முறை, இதிலிருந்து தோன்றி வளர்ந்தது. நீலகண்ட சிவாச்சாரியர் போலும். பிற, தென்னிந்திய ஆச்சாரியர்கள் வேதாந்தத்தையும், சைவ, மற்றும் சாக்த ஆகமங்களின், கொள்கை வழிபாட்டு நெறிகளை ஒன்றுபடுத்தி இணைத்தனர். வட இந்தியாவில், சைவ, சாக்த நெறிகளின் வளர்ச்சிக்கு, இவையே தூண்டுகோலாயின.

தனிமிகப் பழங்காலத்தில் போலவே, தனிமிக அண்மைக் காலத்திலும், ஆண்டாண்டு காலமாக, இந்தியாவின் இருதயமாகத், தென்இந்தியா இயங்கி வந்துளது. பழங்கால மனிதனின் கைத்திறன் காட்டும் பழம்பொருள் நினைவுச் சின்னங்கள், தென்னிந்தியப் பீடபூமியின் கிளையாம் மலைக்

குன்றுகள் மீதே காணப்படுகின்றனவாதலின், கற்காலத் தொடக்க நிலையில், மக்கள் தென்னிந்தியாவில் மட்டுமே வாழ்ந்திருந்தனர். அதன் பின்னரே, வடஇந்திய ஆற்றுப் படுகைகளுக்குச் சென்றது போலவே, அவர்கள் தென்னிந்திய ஆற்றுப் படுகைக்கும் சென்று குடியேறினர். இரும்பு கண்டு பிடிக்கப்பட்டு, தென்னிந்திய மக்களுக்குத் தொழில்துறையில் கருவிகளாகத் துணைபுரியத் தொடங்கிற்று. அங்கிருந்து அது, சைந்தவ நாகரீகத்தின் தேவையை நிறைவேற்ற, கி. மு. 300க்கு முன்னர், வடநாட்டிற்குச் சென்று பரவியது. இந்நிலை, மிகப் பழங்காலத்திலேயே இருந்தமைக்கான சான்று, நிலம் என்னும் நல்லாளின் நல்ல இருதயத்திலிருந்து, அண்மையில் அரும்பாட்டிற்கிடையே அகழ்ந்து எடுக்கப் பட்டது. தோன்றிய காலந்தொட்டே இலக்கியத்தோடு தொடர்பு கொண்டு, அதன் காரணத்தால், பேரறிஞர்களின் வழிகாட்டினைத் தனக்கே உரிமை கொண்டாடும், ஆரியம் என அழைக்கப்படும் நாகரீகம், சில காலம் கழித்துத் தோன்றிற்று. இந்த ஆரிய நாகரீகம், தத்துவங்கள், கடவுள் வழிபாட்டு நெறிகள், சமயக் கட்டுப்பாடு ஆகியவற்றின் பலவேறு நிலைகள், வரலாற்றுக் காலத்தில், வடநாட்டில் வளர்ச்சிபெற, இறுதியாக வழிவகுத்தது. பல்வேறு பிரிவு களையுடையதாய், எளிதில் புரிந்துகொள்ள இயலா நிலையினதான, இந்த நாகரீகம், அதுவரை இயற்கையோ டியன்ற இலக்கியத்திலும், சமயப் பாடல் ஆடல்களில் மட்டுமே கருத்தூன்றியிருந்த தமிழ்ச் சமயப் பயிர்க்கு உரம் ஊட்டிவிட்டது. வாழ்க்கையின் கலை, மற்றும் சமய நோக்கில் ஒரு திடீர் எழுச்சி எழுந்துவிட்டது. பக்தி என்றும் ஞானம் என்றும் அழைக்கப்படும் பேரொளி காட்டும் தீயின் இரு நாக்குகளாம், கலை சமயம் என்ற இருபெருந் தீக்கள் ஒன்றுகலந்துவிட்ட, இறைவனைத் தேடி அலையும் இந்துக்கள் அனைவர்க்கும், அவ்வாறு தேடி அலையும் அவர் காலடிகட்கு ஒளிதந்து வழிகாட்டும் ஒரு பெருந்தீப்பிழம்பு எனக் கருதத்தக்க ஒரு திடீர் எழுச்சி தோன்றிவிட்டது. ஆகவே, பண்டும், இன்றும் உண்மையான இந்து எனக்

கூறப்படும் பெரும்பாலானவற்றிற்குத், தென் இந்தியா, மூலமாக இருந்து வந்துளது. இடையற்றுப் போகாத தொடர்ந்து வளர்ந்துவந்த இந்திய வரலாற்றில், தமிழர் ஆற்றிய முக்கியபணி பிழையின்றி உணர்ந்துகொள்ளப் பட்டால்தான் அக்கால கட்டங்களில், தென் இந்தியா, தனியே நின்று, தனக்குத்தானே தனிஉறவு செய்துகொண்டிருக்க வில்லை; மாறாக, பாரதவர்ஷத்தின் ஏனைய பகுதிகட்கும் இடையறாது பாயும் அறிவியல், கலை மற்றும் சமயங்களாம், உயிர்ப்புநீர் சுரக்கும் வற்றாத ஊற்றாகவே இருந்து வந்துளது என்ற உண்மையை உணர்ந்துகொண்டால்தான், இந்திய வரலாற்றினை உண்மை நிலையில் நிறுத்தியதாகும்.

---

## 30ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு 1

## தமிழ் எழுத்தின் தோற்றம்

தம்முடைய இலக்கண நூலுக்கு ஆதாரமாகக் கொண்ட மரபு வழிப்பாடல்களுக்கு முற்பட்டதான, இயற்கைப் பாடல்கள் என அழைக்கப்படும் பாடல்களின் வளர்ச்சிப் பருவத்திற்கு, ஐந்நூறு ஆண்டுகளை வகுப்பது, மிகைப்படுத்தப் பட்ட மதிப்பீடு ஆகாது. இவ்வகையில் தமிழ் இலக்கியத் தோற்றத்தின் பிற்பட்ட கால எல்லையாக, ஏறத்தாழ கி.மு. 1000ஐ அடைகிறோம்.

(It will not be an exaggerated estimate to ascribe a period of five centuries to the development of, what one might call the natural poetry, which preceded the conventional poetry on which Tolkappiyanar based his grammar. We thus reach about 1000 B.C as the later limit of the birth of Tamil poetry: Page : 71)

இவ்விலக்கிய மரபுகளிலிருந்து, மக்கள் மேற்கொண்டு இருந்த உண்மை வாழ்க்கை நிலையைப் பாவாணர்கள் பாடிய பாக்கள், உள்ளது உள்ளவாறே எடுத்துக் காட்டிய அக்காலங் களுக்குக் கற்பனையில் பின் நோக்கிச் செல்லலாம். அந்தக் கால கட்டத்திலிருந்து, பாக்கள் எழுவதற்கு முற்பட்டதான ஒரு காலத்திற்குப் பின் நோக்கிச் சென்று இந்தியர்கள், அந்நனிமிகப் பழங்காலத்தில் நடத்திய வாழ்க்கைக் காட்சியை மின்னலின் ஒளிக்கீற்றுகள் போல், அங்குமிங்குமாகக் காணக் கிடைக்கும், காட்சியைப் பெறலாம். நனி மிகப் பழங்காலத்தை இவ்வாறு நுழைந்து பார்ப்பதன் மூலம், தென்னிந்தியர்களின், கி.மு. 2000, அல்லது அதற்கும் முற்பட்ட காலத்து வாழ்க்கை நிலையினைக், கண்ணெதிர் காணலாம் போல் காணலாம். அவ்வாறு செய்வதற்கு முன்னர், அந்நனிமிகச் சேய்மைக்

கண்ணதாய பழங்காலத்தில் வளர்ச்சிவேகம், வானூர்தி கம்பியில்லாத் தந்திகளின் காலமாம், இன்றைய வளர்ச்சி வேகத்தினும் மிகமிகக் குறைவு என்பதை நினைவில் கொள்ளுதல் வேண்டும். இன்றைய வாழ்க்கையின், மூச்சு விடுவதற்கும் இடைவெளியில்லா விரைவான மாற்றமும், வழுக்கும் பனிப்பாறைகளின் ஆறுபோலப் புலனாலும் உணர்ந்து கொள்ள இயலாப் பண்டைய நாட்களின் மெதுவான சிந்தனை செயல்பாடுகளும் இருகோடித் துருவங்கள்போலும் வேறுபாடு உடைய, ஆகவே கி.மு. 2000ல் எது உண்மை நிகழ்ச்சியோ, அதுவே, அதனினும் நனிமிகப் முற்பட்ட பழங்காலத்திலும் உண்மை நிகழ்ச்சியாகும்.

(From these conventions, we can go back in immagination to the ages when the poems, Sung by bards faithfully reflected the life, which people actually led. From this age we can go back to the age before the rise of poetry and get a glimbse of the life which indians led in the very remote past. Peeping thus in to the far past, we can visualise the life of the south Indians about 2000 B.C. or earlier. Before doing so, we aught to remember, that progress in remote antiquity was much slower than in present days of wireless, telegraphy and aeroplane. The breathlessly hasty changes of our present day life and the slow movement, imperceptible as that of glacier, of life, and thought in ancient days are poles apart. Hence, what was true of 2000 B.C. was equally true of much earlier times Page : 64)

மக்கள் வாழ்ந்து வளர்ந்த சுற்றுச் சூழலை அடிப்படையாகக் கொண்டே எழுந்தமையால், மாற்றவோ, அழிக்கவோ, முடியாததான, தனக்கே உரிய இலக்கிய மரபுகளோடு இணைந்து, முழுமையாக வளர்ச்சி பெற்ற ஓர் இலக்கியத்தையே அகத்தியர் கண்டார். முழுமையாக வளர்ச்சி பெற்ற இலக்கிய நடையோடு கூடிய ஒருமொழியையும் அவர்

கண்டார். அம்மொழி குறித்த இலக்கணத்தை இயற்றினார். அவ்வளவே;

(Agastya found a fully developed literature with literary conventions of its own, unalterable because, they were based on the condition of the environment in which people lived and grew. He also found a language with a perfected literary dialect and he wrote out the grammar of that language and that literature and no more. Page: 219)

அகத்தியனார், தம்முடைய இலக்கணத்தைத், தமிழ் எழுத்துக்கள் முப்பது என்ற எண்ணிலேயே தொடங்கினார் என நாம் கொள்ளலாம். எழுத்து என்ற சொல், தமிழ் இலக்கண ஆசிரியர்களால், குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பான நிலையில் ஆளப்பட்டுளது. ஒலியையும், உருவத்தையும் ஒருசேரக் குறிக்கும் வகையில், அது, பெயரிடப்பட்டுளது. முன்னது ஒலிவடிவில் உள்ள எழுத்து எனப்பொருள்படும். ''ஒலிவடிவு எழுத்து'' என்றும், பின்னது நேர்க்கோடுகளாகவும், வளைவுக் கோடுளாவும் வரையப்பட்ட எழுத்து எனப் பொருள்படும் ''வரிவடிவு எழுத்து'' என்றும் அழைக்கப்படும்.

(We way persume that Agattiyanar began his grammar with enumerating Tamil letters as thirty. The word eluttu is used in a peculiar sense by Tamil grammrians. It names a concept which includes the sound of a unit syllable and the sign rhatrepresents it. The former is called "olivadiveluttu," the elttu, that has the form of a sound, and the latter ' varivadiveluttu," the eluttu that has the form of a figure made of straight or curved lines. Page: 214)

எழுத்துக்கள் குறித்து அகஸ்தியனார் இலக்கணம் வகுப்பதால் அவர் கூறும் இலக்கணப்படியே, தமிழ் எழுத்து முறை, அவர் காலத்திலேயே இருந்திருக்க வேண்டும். (As Agattiyanar treats of Tamil letters, Tamil writing must have existed in his time. Page: 215)

இவ்வாறெல்லாம் கூறியிருப்பதன்மூலம், தமிழ் இலக்கியத் தோற்றம் கி.மு. 1000 என்பதையும், தமிழ் இலக்கியத் தோற்றத்தின் கருப்பொருளாம் தமிழர் வாழ்க்கை முறை, கி.மு. 2000க்கு முன்பே முழுவளர்ச்சி பெற்றுவிட்டது என்பதையும், தமிழ்கத்தில் அடியிட்ட அகத்தியர், முழுவளர்ச்சி பெற்ற மொழி, இலக்கியங்களையே கண்டார் என்பதையும், தாம் கண்ட அம்மொழிக்கான இலக்கணத்தை வகுத்த அவ்வளவே அவர் செய்த தமிழ்ப்பணி என்பதையும், எழுத்து என்றால், ஒலிவடிவ எழுத்து, வரிவடிவ எழுத்து இரண்டையும் குறிக்கும் என்பதையும், அகத்தியர் எழுத்துக்கு இலக்கணம் வகுத்தமையால், அவர் காலத்துக்கு முன்பே, தமிழ் எழுத்து முறை இருந்திருக்க வேண்டும் என்பதையும், தம் நூலின் பல்வேறு பகுதிகளில் ஒப்புக் கொண்டிருக்கும் திருவாளர். அய்யங்கார் அவர்கள், அதே நூலில், வேறு சில பகுதிகளில் கீழ்வருவனவற்றையும் கூறியுள்ளார்.

''ஆரியர்கள், தென்னிந்தியாவில் வந்து வாழத் தொடங்கியது மட்டுமல்லாமல், தமிழ்மொழி, தமிழிலக்கியங்களைக் கற்று, அம்மொழி இலக்கணங்களையும், அம்மொழியில் யாக்கப்பட்ட பாக்களையும் ஆராயத் தொடங்கிய பின்னரே, தமிழ் இலக்கியம், எழுத்து வடிவம் பெறத் தொடங்கிற்று.''

''It was only after the Arayas, not only settled in the South but began to study the Tamil language and literature and to investigate the grammar of that language, as well as of the poetry composed in it, that Tamil literature came to be committed to writing'' Page: 152.

கிடைக்கக்கூடிய அகச்சான்றுகளின்படி, கி. மு. மூன்றாவது நூற்றாண்டின் இறுதியில் அல்லது இரண்டாவது நூற்றாண்டின் தொடக்கத்தில், கல்வெட்டு வடிப்பதில் நீடித்துப் பயின்று, அழியாப் பயிற்சி பெற்றுவிட்ட வெளி

நாட்டிலிருந்து வந்தவர்களால், தமிழ் முதன் முதலில் வரி வடிவில் எழுதப்பட்டது எனத்தெரிகிறது.

"Thus so far as the available evidence goes, Tamil was first committed to writing late in the III century or early II century B. C. by foreign emigrants, who were inveterate makers of stone inscriptions. Page : 215.

இவ்வாறெல்லாம் கூறியிருப்பதன் மூலம், கி. மு. மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில், அல்லது கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் தமிழ் வரிவடிவம் பெற்றது; தமிழ்ப் பாக்கள் ஏடுகளில் இடம் பெற்றன; என்ற கருத்தையும் திரு. பி. டி. எஸ் அவர்கள் கொண்டுள்ளார் எனத் தெரிகிறது. தமிழ் எழுத்துக்களின் வரிவடிவத் தோற்ற நிலை, உண்மையில் அதுதானா ?

தொல்காப்பியர், தமிழில் எழுத்துக்கள் முப்பது; அகரம் முதல் ஔகாரம் வரையான பன்னிரண்டும் உயிர் எழுத்துக்கள். அவற்றில் அ, இ, உ, எ, ஒ என்ற இவ் வைந்து எழுத்தும் ஒரு மாத்திரை அளவுடைய குறில் உயிர் களாம். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற இவ்வேழு எழுத்தும், இரண்டு மாத்திரை அளவு ஒலியுடைய நெடில் உயிர்களாம். க முதல் ன வரையான பதினெட்டு எழுத்துக் களும் மெய் எழுத்துக்களாம். அவற்றில் க, ச, ட, த, ப, ற என்ற ஆறும் வல்லோசை உடையன. ங, ஞ, ந, ண, ம, ன என்ற ஆறும் மெல்லோசை உடையன; ய, ர, ல, வ, ழ, ள என்ற ஆறும் இடைநிலையவாய ஓசை உடையன;

"எழுத்தெனப்படுவ
அகரம் முதல் னகர இறுவாய்
முப்பஃது என்ப." (தொல் : எழுத்து : 1.)

"ஔகார இறுவாய்
பன்னீரெழுத்தும் உயிர்என மொழிப" (8)

"அவற்றுள்,

அ, இ, உ,
எ, ஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரளவு இசைக்கும் குற்றெழுத்து என்ப'' (3)

''ஆ, ஈ, ஊ, ஏ, ஐ,
ஓ, ஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரளவு இசைக்கும் நெட்டெழுத்து என்ப'' (4)

''னகார இறுவாய்ப்
பதினெண் எழுத்து மெய் என மொழி'' (9)

''வல்லெழுத்து என்ப க, ச, ட, த, ப, ற'' (19)

''மெல்லெழுத்து என்ப ங, ஞ, ந, ண, ம, ன'' (20)

''இடையெழுத்து என்ப ய, ர, ல, வ, ழ, ள'' (21)

என எழுத்துக்களின் ஒலி இலக்கணம் உணர்த்தியதோடு அமையாது, சில எழுத்துக்களின் வரிவடிவத்தையும் உணர்த்தி உள்ளார்.

மூன்று புள்ளிகளால் ஆனது ஆய்த எழுத்து ''ஆய்தம் என்ற முப்பாற்புள்ளி'' (2); மெய்எழுத்துக்கள், புள்ளி பெற்று வரவேண்டும். ''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்'' (15) மேலே பெறும் புள்ளியோடு, உள்ளால் பெறும் புள்ளியையும் பெற்றிருப்பது பகரத்திற்கும் மகரத்திற்கும் இடையே உள்ள வேறுபாடாம். ''உட்பெறு புள்ளி உருவாகும்மே:'' (14) மெய்யெழுத்து, உயிர் எழுத்தோடு இணைந்த வழி, புள்ளிகளை இழந்துவிடும்; அகர உயிரோடு சேர்ந்த மெய்கள், புள்ளியிழந்த இயல்பான உருவிலேயே காணப்படும்; ஏனைய உயிர்களோடு இணைந்தவழி, தன் உருவம் திரிந்து காணப்படும்.

'புள்ளி இல்லா எல்லா மெய்யும்
உருவு உருவாகி அகரமோடு உயிர்த்தலும்,

ஏனை உயிரோடு உருவு திரிந்து உயிர்த்தலும்
ஆயீரியல உயிர்த்தலாறே'' (17)

சொல்லின் ஈற்றில் வரும் மெய், புள்ளிபெற்றே வருதல் வேண்டும்.

''மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்'' (105)

உயிர்மெய்யெழுத்திலிருந்து உயிரெழுத்து பிரிந்து விடுமாயின், மெய்யெழுத்து, தனக்குரிய புள்ளிபெறுதலாம் இயல்புக்கு ஏற்ப, புள்ளியைப் பெற்றுவிடும்.

''மெய், உயிர் நீங்கின் தன்னுருவாகும்'' (140)

ஆக, தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரே, தமிழ் எழுத்து வரிவடிவம் பெற்றுவிட்டது என்பது, இதனால் உறுதி ஆகிறது. தொல்காப்பியர் காலத்துக்கு எத்தனை காலத்துக்கு முன்னர்த், தமிழ் அவ்வரிவடிவைப் பெற்றிருக்க இயலும்? தொல்காப்பியத்தில் அவர் கூறும் இலக்கணம், அவரே வகுத்துத் தந்தது அன்று; அவருக்கு முன்னர் வாழ்ந்திருந்த இலக்கண ஆசிரியர்கள் வகுத்துத் தந்த இலக்கணத்தைத்தான், தொல்காப்பியர் தம்முடைய நூலில் ஏற்றுக் கூறியுள்ளார்; தொல்காப்பியச் சூத்திரங்களில் இடம் பெற்றிருக்கும், ''என்ப'', ''என்மொழிப''; ''என்மனார் புலவர்'' ''நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே'' என்பன போலும் சொற்களும், சொற்றொடர்களும் அதை உறுதி செய்வது உணர்க.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் என்ப. நான்கு கால்கள் உடையது பசு என்றால், அது, பசுவுக்குரிய முழு இலக்கணம் ஆகிவிடாது. நான்கு கால்கள் உடையன வேறு விலங்குகளும் இருப்பதால்; நான்கு காலும் ஒரு வாலும் உடையது பசு என்பதும் நிரம்பிய இலக்கணம் ஆகாது, ஆட்டுக்கும் வால் உடைமையால், அதுவும் பொருந்தும் இலக்கணம் ஆகாது. நான்கு கால்களும், நீண்டவாலும், உடையது பசு என்பதும், முழுமையான இலக்கணம் ஆகாது,

அவை எருதுவுக்கும் உண்மையால்; நான்கு காலும், நீண்ட வாலும், இருகோடுகளும் உடைமையோடு, கன்று ஈன்று பால் தருவது பசு என்ற வழியே அதன் இலக்கணம் முழுமை பெறுகிறது. இந்த முழுமையான இலக்கணத்தைப் பெற, எத்தனையோ ஆண்டுகளைக் கடக்க நேர்ந்திருக்கும்.

இலக்கணத் தோற்றத்தின் இவ்வுண்மை நிலையைக் கருத்தில் வைத்து நோக்கின், ஒரு மொழிக்கு முழுமை பெற்ற ஓர் இலக்கணம் ஒன்று அமைந்துவிட்டது என்றால், அவ்விலக்கணத்திற்கு இலக்கியமாய் அமைந்த பாட்டும் உரையும், அவ்விலக்கணம் எழுதப்படுவதற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னரே, ஏன் சில ஆண்டுகளுக்கு முன்னரே, தோன்றி முழுமை பெற்றிருக்க வேண்டும். மொழித் தோற்றத்து இந்நிலையைத், திருவாளர், பி, டி. எஸ் அவர்களும் ஒப்புக் கொண்டுள்ளார். "அகஸ்தியரும், அவர் மாணவரும் வியத்தகு நிலையில் துல்லியமாக இலக்கணத்தை வகுத்துத் தந்துள்ளனர் என்றால், கிறித்துவ ஆண்டுத் தோற்றத்திற்கு 500 ஆண்டுகளுக்கு முன்பே, தமிழில் மிகப் பரந்த இலக்கியப் பாக்கள் புனையப்பட்டிருக்க வேண்டும்" என அவர் கூறுவது காண்க.

"A vast amount of Tamil literature must have been composed during these five centuries; otherwise, Agattiyanar and Tolkappiyanar, could not have composed their wonderfully accurate grammars of the Tamil language" (page : 162)

ஆக, தொல்காப்பியர், தமிழ் எழுத்துக்களின் ஒலி வடிவத்திற்கு மட்டுமல்லாமல், வரிவடிவத்திற்கும் இலக்கணம் வகுத்துள்ளார் என்றால், தவறு; அவர் வகுக்கவில்லை; அவருக்கு முன் வாழ்ந்திருந்த (எத்தனை ஆண்டுகளுக்கு முன்னர் என்பது அறியப்படாத ஒன்று) இலக்கண ஆசிரியர்கள் வகுத்த இலக்கணத்தைத்தான், தம் எழுத்தால் எடுத்து வடித்துள்ளார் என்றால், தமிழ் எழுத்துருவம் பெற்றது, தொல்காப்பியர் காலத்துக்கும், அவர் மதிக்கும், எத்தனை ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர் எனக் காலக்

கணிப்புக் காண முடியாத காலத்தே வாழ்ந்திருந்த அவர் ஆசிரியர் காலத்துக்கும் எத்தனையோ நூற்றாண்டு காலத்துக்கு முன்னரே நிகழ்ந்திருக்க வேண்டும்.

தமிழ் ஆராய்ச்சி (Tamil Studies) என்ற நூலின் ஆசிரியர், திருவாளர் எம் சீனிவாச அய்யங்கார் அவர்கள், பல்வேறு சான்றுகளை எடுத்துக்காட்டி, தொல்காப்பியர் கி. மு. 300க்கும் முற்பட்ட காலத்தவர் (பக்கம் : 117) எனக் கூறுவதை அறியாதே, திருவாளர். பி. டி. எஸ். அவர்கள் தொல்காப்பியரைக் கி. மு. முதல் நூற்றாண்டின் கடைவாயிற்கண் நிறுத்தவும் மறுத்துள்ளார். (பக்கம் : 216)

தொல்காப்பியர் காலம் குறித்து அவர் கூறுவதை அப்படியே ஏற்றுக்கொண்டு கணிப்பதாயினும், தொல்காப்பியர் காலம், கி. மு. முதல் நூற்றாண்டாயின், அவர் கூற்றுப்படி, தொல்காப்பியரால் இலக்கணம் வகுக்கப் பெறும் தமிழ், அவருக்குக் குறைந்தது 500 ஆண்டுகளுக்கு முன்பே வரிவடிவம் பெற்றிருக்க வேண்டும். அங்ஙனமாயின், தமிழ், கி. மு. 500க்கும் முன்பே வரிவடிவம் பெற்றுவிட்டது என்பது உறுதியாகிறது.

திருவாளர் பி. டி. எஸ். அவர்கள் "கி. மு. 500 முதல் கி. மு. 1 வரையான" காலத்தில் எண்ணற்ற தமிழ்ப்பாக்கள் பாடப்பட்டிருக்க வேண்டும்...அந்த இலக்கியங்கள் அறவே அழிந்துபோயினவாக நம்பப்படுகிறது என்றாலும், இப்போதுள்ள தொகை நூல்களில் இடம் பெற்றிருக்கும் பாடல்களில் சில அக்காலத்தைச் சேர்ந்தனவாதல் கூடும்" (பக்கம் : 162) எனக் கூறிவிட்டுச் சான்றுக்காக நற்றிணை, குறுந்தொகைகளிலிருந்து சில பாக்களை எடுத்துக் காட்டியுள்ளார். அவ்வகையால், அவர் கூற்றுப்படி, கி. மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த பாக்களைக் கொண்டதாக அவரால் மதிக்கப்படும் குறுந்தொகையில், வேதம் ஓதும் பார்ப்பன மகனைக் குறிப்பிடும் ஒரு பாட்டு, வேதத்தை "எழுதாக்

கற்பின் பாட்டு'' எனக் குறிப்பிடுகிறார் என்றால், அவர் காலம் வரை, வேதம் எழுத்துருதம் பெறவில்லை: மாறாகத் தமிழ் எழுத்துருவம் பெற்றுவிட்டது என்பது தெளிவாகிறது. இது கொண்டு மதிப்பிட்டாலும் தமிழ் எழுத்து, கி. மு. மூன்றாம் நூற்றகண்டிற்குச் சில பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே வரிவடிவம் பெற்றுவிட்டது என்பது உறுதியாகிறது.

கூறிய இவ்விளக்கங்களால் தமிழ், வெளிநாட்டிலிருந்து வந்த கல்வெட்டு வல்லுநர் துணையால், கி மு. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் வரிவடிவம் பெற்றது என்ற, திரு. அய்யங்கார் கூற்று முன்னுக்குப் பின் முரண் பட்டு நிற்பது காண்க.

தமிழ், கி. மு. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னரே வரிவடிவம் பெற்றுவிட்டது என்பதே உண்மை.

---

# 30 ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு: 2

## சங்க இலக்கிய காலம்

''பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் அறவே அழிந்து போய்விட்டன. தொடக்க நிலைப் பழந்தமிழ்ப் பாக்கள் ஒவ்வொன்றும், ஒருசில அடிகளையே கொண்ட சிறுபாடல்களாதல்வேண்டும் என நாம் கொள்ளலாம். அவற்றிற்குப் பிற்பட்ட காலத்திலும், நீளத்தில் நான்குமுதல் இருபது அல்லது முப்பது அடிகளைக் கொண்ட பாக்கள் மட்டுமே யாக்கப் பெற்றன.'' [The earliest Tamil literature has all perished. But we may assume, that the first Tamil poems must have been short odes of a few lines each even much later days, odes varying in length from four to twenty or thirty lines continued to be the only poetry composed. Page : 153.]

''இப்போது நாம் பெற்றிருக்கும் பழந்தமிழ்ப் பாக்களின் முன்மாதிரிப் பாக்களுக்குக், கிறிஸ்துவ ஆண்டின் தொடக்கத்திற்கு முற்பட்ட காலம் எதையும் உரிமையாக்க இயலாது'' [The earliest specimens of Tamil poetry we now possess cannot be assigned to any date much earlier than the beginning of the christian era. Page : 152.]

''பண்டைப் பாணர் எவரும் பார்ப்பனர் அல்லர்: பார்ப்பனர்கள், கி.பி. முதல் ஆயிரத்தாண்டின் முற்பாதியின் கடைசி நூற்றாண்டில்தான், அதாவது, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில்தான், தமிழ்ப்பாக்கள் பாடத்தொடங்கினர்.'' [None of the earlier bards (Panar) were Brahmans. The latter began to compose Tamil Poetry in the last century of the first half of the first millenium A.D. Page : 156.]

"மறந்தனபோக, மறவாதிருந்த பண்டைத் தமிழ்ப் பாக்கள், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலும், அதற்குப்பிற்பட்ட நூற்றாண்டுகளிலும் பல்வேறு தொகை நூல்களாகத் தொகுக்கப் பெற்றன" [In the V and latter centuries A. D., all that remained unforgotten of early poetry was collected together in different anthologias." (Page : 155.]

"பத்துப்பாட்டு, கி. பி. முதல் ஆயிரத்தாண்டின் முற்பாதியின் பிற்பாதியைச் சேர்ந்தது." [Pattupattu belongs to the latter half of the first half of the first millenniun after christ. (Page : 92)]

"சிலபல நூறு அடிநீளமுடையவாகிய பத்துப்பாக்களைக் கொண்ட பத்துப்பாட்டு என்ற தொகை நூல், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் முதன்முதலாக வெளிப்படலாயிற்று." [The odes of Ten Songs (Pattupattu), a few hunrdseds of lines long, first began to appear in the V century A. D. Page : 153.]

புலவர்களைப்புரக்கும் கரிகாலனின் கொடைவளம் பாராட்டும் பொருநராற்றுப்படை, அவன் சமகாலப் புலவர்களுள் ஒருவராகிய முடத்தாமக் கண்ணியாரால் பாடப் பெற்றது". [Porunararruppadai which is a description of Karikal's pattonage of poets, by one of his protegas, by name Mudattamakknniar, one of karikal's contemporaries" Page : 336] "கரிகாலன் புகழோடு வாழ்ந்தகாலம், பெரும்பாலும், கி.பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியும், ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆம்" [The most probable period when karikal flourished was the end of the IV and beginning of the V century, the central year of his reg being 400 A. D. Page : 382.]

பத்துப்பாட்டு வரிசையில், காலத்தால் முற்பட்டதும் கரிகாலன் ஆட்சியின் தொடக்க நிலையினைப் பாடுவதுமான பொருநராற்றுப்படை, கி. பி. 400க்குச் சற்றே முற்பட்ட

காலத்தில் பாடப் பட்டிருக்க வேண்டும். [The earliest of them (The Ten Songs), called porunararruppadai, which sings about karikalan in the earlier part of his reign, must have been composed a little before 400 A. D. (Page : 160.]

"கி.பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த இளந்திரையன் புகழ்பாடும் பெரும்பாணாற்றுப்படையில்தான், "கச்சி" என்ற பெயர் முதன் முதலாக இடம் பெற்றது." [Kacci for the first time occur in the Perumpanarruppadai, a poen In eblogy of Ilandiraiyan (V century A. D. Page: 322)

"பாண்டியன் நெடுஞ்செழியனின் அவைக்களப் புலவரும் அவன்புகழ்பாடும் நெடிய பாட்டாம் மதுரைக் காஞ்சியின் ஆசிரியருமாகிய மாங்குடி மருதனார். கி. பி. 450 ஐச் சேர்ந்தவர்." [Maduraikkanje, a long poem in praise of the Pandya Nedunjelian, by his fovourite poet Mangudi Marudanar (C. 450. AID.) Page : 220]

"கரிகாலன் புகழ்பாடும் பிறிதொரு நெடிய பாட்டு, கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப் பாலை.", [The other long poen sung in praise of karikal is Pattinappalai, by Uruttirangannanar of Kadiyalur. Page : 343.] "கரிகாலன் புகழ்பெருக வாழ்ந்த காலம், பெரும்பாலும், கி. பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியும், ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆம்." [The most psobable peried, when Karikal flourished was the end of the IV and beginning of the V century, the central year of his reg being 400 A. D. Page: 382.]

"பத்துப்பாட்டு என்ற பெயரில் தொகுக்கப்பெற்ற பாக்களில், நான்கு பாக்கள், (1. பொருநராற்றுப்படை; 2. பெரும்பாணாற்றுப்படை, 3. மதுரைக்காஞ்சி, 4. பட்டினப்பாலை) முன்னரே ஆய்வு செய்யப்பெற்று விட்டன. ஏனைய ஆறும் (1. முருகாற்றுப்படை, 2. சிறுபாணாற்றுப்படை, 3. முல்லைப்பாட்டு, 4. நெடுநல்வாடை,

5. குறிஞ்சிப்பாட்டு, 6. மலைபடுகடாம்.) காலத்தால் பிற்பட்டவை: கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை." [Four of the poems gathered together under names of Pattuppattu have been already discussed. The other six are later and belong to the VI century A. D. Page ; 537.]

இவ்வாறெல்லாம் கூறிப், பத்துப்பாட்டுப்பாக்களைக் கி. பி. 400க்கும் 600க்கு இடைப்பட்ட 200 ஆண்டு கால அளவில் கொண்டுவந்து நிறுத்தியுள்ளார், திருவாளர். அய்யங்கார் அவர்கள்.

திருமுருகாற்றுப்படை முதலாக, மலைபடுகடாம் ஈறாக உள்ள பத்து நெடிய பாக்களும், பத்துப்பாட்டு என்ற ஒரே தலைப்பின்கீழ்த் தொகுக்கப்பெற்றிருந்தாலும், அவை அனைத்தையும் ஒரே காலத்தைச் சேர்ந்தனவாகக் கொள்ளாமல், அவை ஒவ்வொன்றையும் வெவ்வேறு காலங்களில் கொண்டுசென்று நிறுத்துவது போலவே, நற்றிணை நானூறு முதலாக, புறநானூறு ஈறாக உள்ள எட்டு நூல்களும் எட்டுத்தொகை என்ற ஒரே தலைப்பால் அழைக்கப் பெற்றாலும், அவை அனைத்தையும ஒரே காலத்தைச் சேர்ந்தனவாகக் கொள்ளாமல், அவை ஒவ்வொன்றையும் வெவ்வேறு காலங்களில் கொண்டுசென்று நிறுத்தியுள்ளார். திருவாளர் அய்யங்கார் அவர்கள்.

நற்றிணை, பன்னாடு தந்த மாறன் வழுதியின் ஆணையாலும், குறுந்தொகை, பூரிக்கோவாலும் தொகை நூல்களாகத் தொகுக்கப்பெற்றன. அவ்விரு அரசர்களுமே பெரும்பாலும், கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்களாவர். [The Narrinai was made in to an anthology, by the orders of Pannaduthanda Maran Valudi and Kurunthogai of purikko, both Kings, probably of the VI century A. D. (page : 158)]

கி. மு. 500 முதல், கி. மு. 1 வரையான இந்த ஐந்நூறு ஆண்டுகளில், எண்ணற்ற தமிழ் இலக்கியங்கள் பாடப்

பட்டிருக்க வேண்டும். அப்படி இல்லை என்றால், தமிழ்மொழி குறித்த வியத்தகு நிலையிலான நனிமிகப் பொருந்தும் இலக்கணங்களை அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இயற்றியிருக்க இயலாது. அந்த இலக்கியங்கள் அறவே அழிந்துபோயினவாக நம்பப்படுகிறது. என்றாலும், இப்போதுள்ள தொகைநூல்களில் இடம் பெற்றிருக்கும் பாடல்களில் சில, அக்காலத்தைச் சேர்ந்தனவாதல் கூடும் என நான் எண்ணுகின்றேன். அவற்றுள் ஒருசில, பாடினோர் பெயர் அறியமாட்டா நிலையின. அதற்குக் காரணம், அவை நனிமிகப் பழங்காலத்தைச் சேர்ந்தனவாதலின், தொகை நூல்களில் அவை தொகுக்கப்பெற்ற காலத்தில், அவற்றைப் பாடியவர் பெயர் மறந்திருக்கக் கூடும்.

[A vast amount of Tamil Literature must have been composed during these five centuries. Otherwise Agattiyanar and Tolkappiyanar, could not have composed their wonderfully occurate grammars of Tamil language. This literature is believed to have entirely perished; but I think some of the oldest odes in the existing antholgies may belong to this period. A few of them are anonymous. Perhaps this anonymity is due to the fact, that being very old poems, the names of the authors had been forgotten by the time they were included in the anthologies. (Page : 162)]

இவ்வாறு கருத்துத் தெரிவித்துவிட்டு, 163 முதல் 180 வரையான பக்கங்களில், நற்றிணை, குறுந்தொகைகளிலிருந்து பல பாடல்களை எடுத்தாண்டுள்ளார்.

அகநானூறு, இறையனார் அகப்பொருள் சூத்திரங்கள் அறுபதுக்கும், சங்கப் புலவர்கள் பொருள் விளக்கம் அளிக்கும்போது, அப்புலவர் பேரவைக்குத் தலைமை தாங்கிய உருத்திரசன்மனால், உக்கிரப் பெருவழுதியின் ஆணைப்படி தொகுக்கப்பெற்ற முதல் தொகை நூலாகும். அத்தொகை நூல் பாக்களில் சில தொன்மை வாய்ந்தன; ஏனைய, கி. பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டைச்

சேர்ந்தவை. [Of these anthologies, the Agam four hundred seem to have been the earliest to be collected to gather, for its odes were made into an anthology by the orders of ukkirap-peruvaludi, by Uruthirasanman, who, according to the scholiast on Iraiyanar Agapporul, presided over the meeting of scholars gathered to expound those sixty sutras...Some of them ancient and the rest belonging to the IV or V century A. D. (Page : 156-157.)]

தொகை நூல்களில், புறநானூறு, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் பாடப்பெற்ற பாக்களைப் பெருமளவிலும், கி. பி. ஆறாம் நூற்றாண்டில் பாடப்பெற்ற பாக்கள் சிலவற்றையும் கொண்டுளது. [Of the four anthologies, the Puram cotains the largest number of late poems, those of the V century A. D. and a few of the VI century A. D. (Page:485)]

நான்கு தொகை நூல்களும் (நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு) கி. பி. ஐந்து ஆறாம் நூற்றாண்டு களில் தொகுக்கப்பெற்றபோது, ஒவ்வொரு பாட்டுக்கும் திணை, துறை, பாடிய புலவர் பெயர் ஆகியன கொடுக்கப் பட்டன. இவ்வகையில் தான் நற்றிணையும், குறுந் தொகையும், அகநானூறும் நமக்குக் கிடைத்தன. ஆனால், புறத்திற்கு மட்டும், இவற்றோடு அப்பாட்டு பாடப்பெற்ற சூழ்நிலையை விளக்கும் கொளுவும் கொடுக்கப்பட்டது. [When the four anthologies were made up in the V and VI centuries A. D. for each ode was noted the name of the thinai, and perhaps turai, to which it belonged and the name of its author. That is how the Agam, the Narrinai and the Kurunthogai have come down to us. But the puram, as we have, it has besides colophons, indicating the particular occasions, when each of odes were sung. (Page : 409-410)]

இந்நான்கு (நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு) தொகை நூல்கள் அல்லாமல், ஐங்குறுநூறு,

பதிற்றுப்பத்து, பரிபாடல், கலிநூற்றைம்பது என்ற வேறு நான்கு தொகை நூல்களும் உள்ளன. [Besides these four anthologies there are four others, called Five short hundreds, the ten fold Ten: the paripadal and the Kali one hundred and fifty. (Page : 159.)] காலத்தால் முற்பட்டனவாய அந்நான்கு தொகை நூல்களில் தொகுக்கப்பெற்ற பாக்களில் சில, இந் நான்கு தொகை நூல்களில் தொகுக்கப்பெற்ற பாக்களினும் காலத்தால் மிக மிக முற்பட்டனவாம் [Some of the poems] that constitute the four early anthologies are much earlier than those belonging to these later four. page: 160)]

இவ்வாறு ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை ஆகிய நான்கும், நற்றிணை, குறுந்தொகை அகநானூறு, புறநானூறுகளினும் காலத்தால் பிற்பட்டனவாம் எனப் பொதுவகையான காலக்கணிப்பு செய்த திரு. பி. டி. எஸ். அவர்கள், அவை ஒவ்வொன்றிற்கு மான காலம் குறித்து, தனித்தனியாகவும் கருத்து தெரிவித்துள்ளார்.

ஐங்குறுநூறு: எந்த ஒரு பாட்டும், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்னர்ப் பாடப்பட்டிருக்காது: [The five short hundred; None of the poems could have been composed earlier than the V century A. D. (Page : 495)]

பதிற்றுப்பத்து பாடிய புலவர்கள், கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிராமணர்கள் ஆவர். [The poets of the Ten fold Ten were Brahmanas of the V or VI century A. D. (Page : 495)]

பரிபாடல் எழுபது: பாடலாசிரியர்களின் பெயர்களைப் பொறுத்த அளவில், அவர்கள் அனைவரும் கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள் என்பதை உணர்த்துகின்றன; [The paripadal seventy: The author's names so far as known show, that they belonged to the VI century A.D. (Page : 583)]

கலித்தொகை : இத்தொகை நூலை உருவாக்கும் ஐந்திணைப் பாடல்கள் அனைத்தும் கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. [Kalittogai : The five songs that constitute this collection all belong to the VI century A. D. Page : 565)].

இவ்வாறெல்லாம் கூறி எட்டுத்தொகைப் பாக்களைக் கி. பி. 500க்கும் 600க்கும் இடைப்பட்ட 100 ஆண்டு கால அளவிற்குக் கொண்டுவந்து விட்டார் திருவாளர் அய்யங்கார் அவர்கள்:

பத்துப்பாட்டு எட்டுத் தொகைகளில் இடம் பெற்றிருக்கும் பாக்கள் பாடப்பெற்ற காலத்தையும், அவை தொகை நூல்களாகத் தொகுக்கப்பெற்ற காலத்தையும் இவ்வாறெல்லாம் கணித்துக் கூறியிருக்கும் திருவாளர் அய்யங்கார் அவர்கள், தம் முடிவிற்கான அடிப்படை எதை யேனும் காட்டியுள்ளாரா என்றால் இல்லை, "நம்பலாம்" [May assume Page : 153] "காணப்படுகிறது" [Seem to have been. Page : 156], "பெரும்பாலும் இயலக்கூடியது" [Most probable. Page : 158, 382], "நான் நினைக் கின்றேன்" [I think. Page : 162], "நம்பப்படுகிறது" [is believed Page : 162], "எனக்குத் தெரிந்த வரையில்" [so far as I known. Page : 583] என்றெல்லாம் தம் கற்பனை களைத்தான் கட்டவிழ்த்து விட்டுள்ளார்.

சில அரசர்களை மையமாக வைத்து, அவர்களைப் பாடிய புலவர்களின் காலத்தைக் கணித்திருக்கும் நிலையிலும் சில அரசர்களை மையமாக வைத்துச், சில தொகை நூல்கள் தொகுக்கப்பெற்ற காலத்தைக் கணித்திருக்கும் நிலையிலும், அவ்வரசர்களின் காலக்கணிப்பிற்காவது, எதாவது வரலாற்று அடிப்படைச் சான்றினைக் காட்டியுள்ளாரா என்றால், அதுவும் இல்லை.

கரிகாலன் காலத்தை மையமாகக் கொண்டு அவன் புகழ்பாடும் பொருநராற்றுப்படை, பட்டினப்பாலைகளுக்குக்

காலம் கணிக்கும் நிலையில், அக்கரிகாலன் காலத்தை அறுதியிட்டு வரையறுத்துள்ளாரா என்றால் இல்லை; அங்கும் பெரும்பாலும் இயலக்கூடியதுதான் [The most probable period. Page : 382.]

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் புகழ்பாடும் மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலைகளுக்குக் காலம் கணித்திருக்கும் திரு. அய்யங்கார், அவன் காலம் இது என வரையறுத்துள்ளாரா என்றால் இல்லை; அவனுக்குப் புகழ் சேர்க்கும் தலையாலங்கானப் போர் குறித்த ஆய்விற்குத், தம் நூலில் 443 முதல் 460 வரையான 18 பக்கங்களைச் செலவழித்திருக்கும் அவர், அவன் காலத்தை வரையறுத்துக் காண சிறு முயற்சி தானும் எடுத்துக் கொண்டாரல்லர். அது மட்டுமன்று; அவன் புகழ்பாடுவனவே மதுரைக்காஞ்சியும், நெடுநல்வாடையும்; ஆகவே இரண்டும் ஒரே காலத்தில் பாடப்பட்டனவே ஆதல் வேண்டும். ஆனால், மதுரைக் காஞ்சியைக் கி. பி. 450ல் நிறுத்திவிட்டு [பக்கம் : 220], நெடுநல்வாடையைக், கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்குத் தள்ளிக் கொண்டு வந்துள்ளார். [பக்கம் : 537] நெடுஞ் செழியனுக்கு 150 வாழ்வாண்டுகளை வாரி வழங்கியுள்ளார்!

பன்னாடு தந்த மாறன் வழுதியும், பூரிக்கோவும், கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள், அவர்கள் ஆணையின் படித் தொகுக்கப்பெற்றவை முறையே நற்றிணையும், குறுந்தொகையும்: ஆகவே அவை இரண்டும் கி. பி. ஆறாம் நூற்றாண்டில் தொகுக்கப்பெற்றனவாம் எனக் கூறும் திரு. அய்யங்கார் அவர்கள், அவ்விரு அரசர்களின் காலம் கி. பி. ஆறாம் நூற்றாண்டு என்பதை உறுதி செய்யவல்ல வரலாற்றுச் சான்று எதையேனும் காட்டினாரா என்றால் இல்லை; இங்கும் ''பெரும்பாலும்'' தான் [Both kings probably, of the VI century A. D. page : 158 ]

உக்கிரப்பெருவழுதியை மையமாகவைத்து, அகநானூறு கி. பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டில் தொகுக்கப்

பெற்றது எனக்கூறும் திரு. அய்யங்கார், [பக்கம் : 156-157], உக்கிரப் பெருவழுதியின் காலத்தைக் கணிக்க முயற்சி எதுவும் எடுத்துக் கொண்டாரல்லர். சங்ககாலப் பாண்டியர் வரிசையில், கடைசி மன்னன் உக்கிரப்பெருவழுதி [The last monarch of this early pandiya dynasty was ukkirep–peruvaludi" page : 460] என முடித்துக் காட்டும் இடத்திலாவது, அவன் ஆட்சி ஆண்டைக் கணித்துள்ளாரா என்றால் இல்லை.

இவ்வாறு காலக்கணிப்பு நிலையில், வரலாற்றுச் சான்றுகளைத் துணை கொள்ளத் தவறியது மட்டுமல்லாமல், புலவர்களை இனம் காண்பதிலும் தவறியுள்ளார். பதிற்றுப் பத்தில் கிடைத்துள்ள எட்டு பத்துக்களையும் பாடிய புலவர்கள் முறையே, 1) குமட்டூர்க் கண்ணனார், 2) பாலைக் கௌதமனார், 3) காப்பியாற்றுக் காப்பியனார், 4) பரணர், 5) காக்கைபாடினியார் நச்செள்ளையார், 6) கபிலர், 7) அரிசில்கிழார் 8) பெருங்குன்றூர்க் கிழார் என்ற எண்மராவர்; இவர்களுள் காக்கைப்பாடினியார், 2) அரிசில் கிழார், 3) பெருங்குன்றூர்க் கிழார் ஆகிய மூவரும் பார்ப்பனர் அல்லர் உறுதியாக. ஆனால் பதிற்றுப் பத்து பாடிய புலவர்கள் அனைவருமே, கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த பார்ப்பனர்கள்'' என்று கூறுகிறார் திருவாளர் அய்யங்கார். [The poets of the Ten fold Ten were Brahmanas of the V or VI century A. D. page : 495.]

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய சங்க இலக்கியங்களைக், கி. பி. 400க்கும் 600க்கும் இடைப்பட்ட காலத்திற்குக் கொண்டுவந்து நிறுத்துவதற்குத், திருவாளர் அய்யங்கார் காட்டும் தலையாய காரணம், அவை, ஆரியக் கோட்பாடுகளைப் பெருமளவில் மேற்கொண்டுள்ளன என்பதே.

**திருமுருகாற்றுப்படை :** தமிழ் முருகன், கார்த்திகை மகளிர் அறுவர் வளர்த்த, ஆறுமுகக் கார்த்திகேயனாக

மாறிவிட்ட ஆரிய சமய நெறியைத் தமிழர்கள் முழுமையாக ஏற்றுக்கொண்டுவிட்ட காலகட்டத்தைச் சேர்ந்தது. இந் நூலில், தமிழ் முருக வழிபாட்டு நெறி அழிவுற்றுப் போய் ஆரிய சண்முக வழிபாட்டு நெறியோடு கலந்துவிட்ட நிலையினைக் காணலாம். [This poem belongs to the eve of the final absorptions of Aryanism by the Tamils, when the Tamil Murugan had just been identified with the Aryan Six-faced Karthikeya, fosterchild of the stars of the Pleiades. In it, we can notice the dying Tamil rite of worship coalescing with the rite of the Aryan worship of Shanmuka. Page: 557-558.]

பெரும்பாணாற்றுப்படை: பாம்பணைப் பள்ளியில் அமர்ந்திருக்கும் திருமால் காட்சி இடம் பெற்றிருக்கும் ("நீடுகுலைக், காந்தளம் சிலம்பில் களிறு படிந்தாங்குப் பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்" (371-73) என்ற வரிகளை எடுத்தாண்டு காட்டிவிட்டு, பாம்பணைப்பள்ளி மீது விஷ்ணு அமர்ந்திருப்பதைக் குறிப்பிடும் இதுதான், தமிழ் இலக்கியங் களில் முதல் குறிப்பீடாகும். ["Kanchi, where the god slept on the serpent couch, like an elephant resting on a hill where grows the gloriosa superha, This is the earliest reference in Tamil literature to the worship of Vishnu stretched on his serpent couch" page : 391-392.]

முல்லைப்பாட்டு: இந்தப் பாட்டிலும், ஆரியக் குறிப்பீடுகள், இங்கொன்றும், அங்கொன்றுமாக அல்லாமல், எண்ணற்றனவாம். In this poem also, the Aryan allusions are not casual, but intimate. pege : 542.]

மதுரைக்காஞ்சி: மதுரை நகரில் ஆரிய ஆகமநெறி வழிபாட்டு முறைகள் விரைந்து பரவியதற்கான எண்ணற்ற அகச்சான்றுகளை நாம் பெறலாம். [We get evidence of the rapid spread of the Agama cults in the town of Madura. page : 450.]

நெடுநல்வாடை : ஆரியக் கோட்பாடுகள் தமிழர் வாழ்க்கையில் வலுவான இடம் பெற்றுவிட்ட காலத்திற்குப் பின்னரே இப்பாட்டு பாடப்பெற்றது. ஆரிய நாகரீகத்தோடு புறம்பாக அல்லாமல், இரண்டறக் கலந்துவிட்டதற்கான எடுத்துக்காட்டுகள் எண்ணற்றனவாம். [The poems was composed after Aryan concepts had definitely established themselves in the life of the Tamils. Not remote but intimate references to Aryan culture adound in the poem. page : 538.]

குறிஞ்சிப்பாட்டு : ஆரியக் கோட்பாடுகள் குறித்த குறிப்பீடுகள், இதில் போதுமான அளவு அதிகமே. [The Aryan allusions are sufficiently intimate. page : 545.]

பட்டினப்பாலை : ஆரிய நாகரிகம் தமிழ்நாட்டின் ஏனைய பகுதிகளைக் காட்டிலும், காவிரிப்பூம்பட்டினத்தில் விரைவாகப் பரவி, ஏனைய இடங்களில் பெறாத பெரும் செல்வாக்கினைப் பெற்றுவிட்டது. [Aryan culture spread in it sooner, than in the rest of the Tamil Country and attained there, an influence which it did not possess in other places. page : 353.]

மலைபடுகடாம் : ''நல்லோர் குழீஇய நாநவில் அவை'' யினை எடுத்தாண்டுவிட்டு, ''இதில் குறிப்பிடப்பட்டிருக்கும் அவையினர், பெரும்பாலும் சமஸ்கிருதப் புலவர்களாவர்'' எனக் கூறியுள்ளார். [The Scholars referred to, were probably Sanskrit pandits. Page : 550.]

பதிற்றுப் பத்து : பாடலாசிரியர்கள் பார்ப்பனர்கள். ஆகவே அப்பாக்கள், ஆரியக் கோட்பாடுகள், ஆகம நெறிகளால் நிறைந்து வழிகின்றன. [The poems were Brahmans Hence the poems teem with references to Aryan ideas and Agama practices. Page : 495-96.]

பரிபாடல் : கணக்கிலா ஆரியக் குறிப்பீடுகள்; சமஸ்கிருதச் சொற்கள்; ஆறுபாடல்கள் விஷ்ணுவைப்

பற்றியன. எட்டுப் பாடல்கள் முருகனைப் பற்றியன. [Six are about Vishnu; Eight about Murugan; abundant Aryan allusions and Sanskrit words in the poems. Page : 583.]

**கலித்தொகை:** இப்பாக்களில், பல உவமைகள், ஆரியப் புராணக் கதைகளிலிருந்து மேற்கொள்ளப்பட்டுள்ளன. [In these poems, several similies are drawn from Aryan mythology. page: 570.]

**அகநானூறு, புறநானூறு:** வடநாட்டு ஆரியக் கருத்துக்கள், கொள்கைகள், நம்பிக்கைகள், குருட்டு நம்பிக்கைகள் பற்றிய குறிப்பீடுகள், இப்பாக்களில் பையப் பைய, நனிமிகப் பையப்பைய நுழைந்துள்ளன. [In to the poems, slowly, very slowly entered chiefly by a way of allusions northern (Aryan) ideas, concepts, beliefs and superstitions. page : 463 ]

இவ்வாறெல்லாம், கருத்துக்களைத் தெரிவித்துவிட்டு, அதைத் தொடர்ந்து, ஒவ்வொரு நூலிலும் இடம் பெற்றிருக்கும் ஆரியக் கடவுள்கள், ஆரியக் கோட்பாடுகள் பற்றிய குறிப்பீடுகளை எடுத்துக் காட்டியுள்ளார். அடுக்கடுக்காக அவர் காட்டியிருக்கும் அவற்றையெல்லாம் எடுத்துக் காட்டுவதாயின் ஏடு பெருகும்; தேவையும் இல்லை என்பதால், அது செய்திலேன்.

சிவன், முருகன், திருமால், இராமன், கிருஷ்ணன், பலதேவன், திருமகள் ஆகிய கடவுளர்கள், தமிழகத்தில் கால்கொண்ட காலம் எது? இதற்கும் அவரே விடை கண்டுள்ளார்.

அர்மீனியாவில் ஓர் இந்திய வழிபாட்டு நெறி [An Indian cult in Armenia] எனத் தலைப்பு கொடுத்துப் பின் வருமாறு எழுதுகிறார் :

''அர்மீனியாவைச் சேர்ந்த 'அர்ஸசிடே' (Arsacide) மரபின் முதல் மன்னனாகிய முதலாம் 'வளர்ஷக்' (Valershak)

(கி. மு. 149-127) காலத்தில், இரு இந்தியத் தலைவர்கள், இயூப்ரடஸ் ஆற்றின் மேற்குக் கரையில், 'வான்' என்ற ஏரிக்கு மேற்கில் ஒரு புதிய குடியிருப்பை நிறுவி, கிருஷ்ணன், பலதேவன் (அர்மீனிய மொழியில் 'கிஸனி' (Gisani), 'தெமெதெர்' (Demeter) வழிபாட்டிற்காகக் கோயில்களைக் கட்டினர். இது வட இந்தியாவிலிருந்து வந்த ஆரிய வழிபாட்டு நெறியின் பெருக்கமா? மிக உறுதியாக இல்லை. கிருஷ்ண, பலதேவர்கள், திருமாலின் அவதாரங்களாம் எனப் புராணங்கள் கூறினாலும், இவ்விரு கடவுள்களையும், ஒருசேர வழிபடும் தனி வழிபாட்டு நெறி, வடஇந்தியாவில் எக்காலத்திலும் இருந்ததில்லை. ஆனால், பழந்தமிழ் இலக்கியங்கள், இதற்கான எண்ணற்ற அகச்சான்றுகளை அளிக்கின்றன. இவர்களில், முன்னவன் மாயோன் என்ற பெயரில், முல்லைநிலக்கடவுளாவன். கலப்பையைப் படைக்கலனாகவும், பனையைக் கொடியாகவும் கொண்ட வெண்ணிறக் கடவுள் எனும் பொருளில் வாலியோன் அல்லது வெள்ளையோன் எனப்படும் பின்னவன், தொடக்கத்தில் உழவுத்தொழில் முதலில் தொடங்கப்பட்ட முல்லைக்கும், மருதத்துக்கும் இடைப்பட்ட நிலத்தின் கடவுளாவன். பனை, கங்கை வெளியில் வளர்வதில்லை; ஆகவே, பலதேவ வழிபாடு, கங்கைக் கரையில் உருவாகியிருத்தல் இயலாது. கடலுக்கு வெகு தொலையில் அல்லாத, தென்னாட்டு ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியிலேயே, அவ்வழிபாட்டுமுறை தோன்றியிருக்க வேண்டும்.

பலதேவனுக்கு எனக் கட்டப்பட்ட கோயில்கள் வட நாட்டில் இருப்பதாக நாம் கேள்விப்பட்டது இல்லை; ஆனால், காவிரிப்பூம்பட்டினத்திலும், மதுரையிலும், அவனுக்கான கோயில்கள், கிருஷ்ணன் கோயிலை அடுத்துக் கட்டப்பட்டுள்ளன, எனக் கூறிவிட்டு, தம் கூற்றை உறுதி செய்யச் சிலப்பதிகாரத்திலிருந்து சில வரிகளைக் காட்டி விட்டு, தொடர்ந்து, "இவ்வெடுத்துக்காட்டுக்கள் எல்லாம், பிற்கால இலக்கியங்களிலிருந்து என்றாலும், அக்கால கட்டத்திலும், வடநாட்டில் பலதேவனுக்குக் கோயில்

இன்மை, இவ்வெள்ளைக் கடவுள் தெற்கில்தான் முதன் முதலில் எழுந்தான் என்ற முடிவிற்கு வலியூட்டுகிறது'' என முடித்துள்ளார். [In the time of the first Arsacide monarch of the Armenia, Valarshak (149-127 B.C,) two Indian chiefs established a colony at Vishap on the Western Euphrates, west of lake, van and founded temples for the worship of Gisani (Kisna) and Demeter (Baladeva). Was this an outflow of Aryan culture from the North of India? Most probably no, for while puranas talk of Krishna and Baladeva as being avatars of Vishnu, there is little or no evidence of existence of the joint worship of these two gods, as a separate cult in North India at any time; But early Tamil literature gives plenty of evidence of this. The former of these under the name of Mayon, was the ancient God, of the Mullai land and the latter, Valiyon or Vellaiyon, the white God whose implemept was the plough and flag was the palmyra, was probably in origin, the God of the region between Mullai and Marudam, where agriculture first began...The cult of Baladeva could not have been evolved in the Gansetic valley; for the palms do not flourish there and his worship must have risen in the sovthern lower river-valleys, not far from the sea.

We do not hear of temples dedicated to Baladeva in North India. But they existed in Kavirippattinam and in Madura, side by side with temples to Krishna. Besides these, there were temples, where the image of Krishna and Baladeva stood together...''

These quotations are from poems of a later date, but yet, the absence of Baladeva temples in the North, raises the presumption that the white God first rose in the sowth.] page : 202-204.

இவ்வாறு கூறியிருப்பதன் மூலம், கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், தமிழகத்து வணிகப் பெருமக்களால்

அர்மீனியாவுக்குக் கொண்டு செல்லப்பட்ட, கிருஷ்ணன் பலதேவன் ஆகிய கடவுளர் இருவரும், தமிழ் இலக்கியங்களில், மாயோன் என்றும் வாலியோன் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கும் கடவுளர்கள் தாம் என்பதையும், மாயோன், வெள்ளையோன் என்ற பெயர்களையே அல்லாமல், கிருஷ்ணன், பலதேவன் என்ற வடமொழிப் பெயர்களையும், தமிழர்கள் அக்காலத்திலேயே அறிந்திருந்தனர் என்பதையும், அக்கடவுளர்கள் தாம், தமிழகத்து வணிகப் பெருமக்களால், தாம் சென்று குடியேறிய வணிக நிலையப் பெருநாட்டிற்குக் கொண்டு செல்லப்பட்டனர் என்பதையும் திருவாளர் அய்யங்கார் ஏற்றுக் கொண்டுள்ளார் என்பது உறுதி ஆகிறது: அது உறுதி ஆகவே, அவ்வணிகப் பெருமக்களின் தாய்த் திருநாடாம் தமிழகத்தில், அக்கடவுளர்கள் கி. மு. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்னரே நிலைகொண்டிருக்க வேண்டும் என்பது கூறாமலே உறுதிப்படுகிறது. ஆகவே, அக்கடவுளர்களும், அவர்களே போலும், ஆகமநெறி, புராணநெறிக் கடவுளர்களும் இடம் கொண்டிருப்பது கொண்டு, அவர்கள் இடம்கொண்ட பாக்களைக் கி. மு. 200க்கும் முற்பட்ட காலத்தனவாகக் கொள்வதே, நடுக்க நெறி முடிவாகுமே அல்லது, அவ்விலக்கியங்களைக் கி. பி. 400க்கு, அதாவது 600 ஆண்டுகளுக்கும் மேலாகப் பின் கொண்டு நிறுத்துவது முறையாகாது.

திரு. அய்யங்கார் முடிவுகள், முன்னுக்குப் பின் முரண்படுகின்றன என்பதற்கு மேலும் ஒரு எடுத்துக்காட்டு இதோ:

"இராமன், விஷ்ணுவின் அவதாரங்களில் ஒருவன் என்ற கருத்து, இராமகாதையில் கி. மு. 1000ல் இணைக்கப் பட்டிருக்க வேண்டும்" [The conception that Rama was one of the Avatars of Vishnu could have got into the story of Rama, only after X century B. C. page : 45.]

"விஷ்ணு, சிவன் குறித்த புராணக் கதைகள், பாரதப் போரை அடுத்த காலகட்டத்தில் முக்கியத்துவம் பெற்ற ஆகம நெறிகளில் மேற்கொள்ளப்பட்டுவிட்டன"

[Tales of Vishnu and Siva, were evolved in the Agama schools, which rose to prominence in the period, succeeding the Bharatha battle. page : 87.]

"பெரும்பாலும், கி. மு. 1000க்குச் சில நூற்றாண்டுகளுக்குப் பிற்பட்ட காலத்திலேயே ஆகம நெறிக் கோட்பாடுகள், மகாபாரதத்தில் நுழைக்கப்பட்டுவிட்டன." [These Agama teachings were incorporated in an unsystematic form, into the Mahabaratha probably some centuries after 1000 B. C. page : 87.]

"பாரதப்போர் குறித்த கதையில் வடஇந்தியாவுக்கும், தென்னிந்தியாவுக்கும் இடையில், அரசியல் உறவுகள் இருந்தன என்பதற்கான அகச்சான்று இருக்கிறது: திரௌபதியின் சுயம்வரத்திற்கு வந்திருந்தவர்களில் பாண்டியனும் ஒருவன் என்கிறது. [In the story of the war, which is the heart of the Mahabaratha, there is evidence that there were political relations between South India and North India. Thus a Pandya king was one of those who were present at the swayamvara of Droupadi. page : 88-89.]

இவ்வாறெல்லாம் கூறியிருப்பதன் மூலம் பாரதத்தின் தலையாய கதாபாத்திரமாகிய கிருஷ்ணனைத், தமிழ்நாடு, கி. மு. ஆயிரம் ஆண்டளவிலேயே அறிந்திருந்து என்பதைத், திரு. அய்யங்கார் ஒப்புக் கொண்டுள்ளார் என்பது உறுதியாகிறது. இவ்வாறு, ஆகம வழிபாட்டு நெறிக் கிருஷ்ணனைக், கி. மு. ஆயிரத்திலேயே அறிந்திருந்தனர் என உறுதி செய்துவிட்டு, அவ்வாகமநெறிக் கடவுளர்கள் இடம் பெற்றிருக்கும் தமிழ்ப்பாக்களின் காலத்தை, 'ஆரியத்திற்கு முந்திய இந்திய வழிபாட்டு நெறியிலிருந்து முகிழ்த்த ஆகம வழிபாட்டு நெறி, தென் இந்தியர் உள்ளங்களை அடிமை கொள்ள, கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டில் பயணம் மேற்கொண்டது'"

(The Agama rites evolved from pre-Aryan Indian cults, were destined to subjugate the minds of Sowth India in the V and VI century A. D. page : 115) எனக் கூறுவதன் மூலம், அத்தமிழ்ப் பாக்களின் காலத்தைக் கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டிற்கு, அதாவது, தமிழர்கள் ஆகம நெறிக் கடவுளர்களாம் இராமனையும், கிருஷ்ணனையும் அறிந்து கொண்ட காலத்திலிருந்து 1000 ஆண்டுகளுக்கும் மேலான பிற்பட்ட காலத்திற்குக், கொண்டு வந்து நிறுத்துவது "முன்னுக்குப் பின் முரணான வாதம், பொருளற்றது என ஒதுக்கித் தள்ள வேண்டிய வாதம்.

பெரும்பாணாற்றுப்படை ஆசிரியராகிய, உருத்திரன் என்பாரின் மகனாகிய கண்ணனார் என்ற உறவினை உணர்த்தும் உருத்திரன் கண்ணனார், ஒரு பார்ப்பனர். மேலும் அவருடைய பாடற்பொருள், நான் முன்பே குறிப்பிட்டது போல், இவ்வாசிரியரின் காலத்துக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஆரிய மயமாக்கப்பட்டுவிட்ட காஞ்சி. (The author Kannanar, son of Rudra (Uruttirangannanar) was a Brahmana, and the subject of the poem was Kanchi which, as I have pointed out, had been Aryanized, for about a thousand years before the time of the author. page : 394) எனக் கூறியதன் மூலம், பெரும்பாணாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டிருக்கும் கடவுளர்களெல்லாம், அக்காஞ்சியில் ஆசிரியர்க்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, கோயில் கொண்டு விட்டனர் என்பதை ஏற்றுக் கொண்டுவிட்டார் திரு. அய்யங்கார் என்பது உறுதியாகிறது.

மேலும், இதை வேறு ஓரிடத்திலும் ஏற்றுக் கொண்டுள்ளார் திரு. அய்யங்கார். பெரும்பாணாற்றுப் படையில், பாம்பணைப் பள்ளிமீது படுத்திருக்கும் திருமால் கோலத்தைக் குறிப்பிடும், "நீடுகுலைக் காந்தளம் சிலம்பில் களிறு படிந்தாங்குப் பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்"

(371-373) என்ற வரிகளை எடுத்துக்காட்டிவிட்டு, "தமிழிலக்கியத்தில், திருமாலின் இக்காட்சி இடம் பெற்றிருப்பது இதுவே தொன்மையானதாம்" எனக் கருத்தும் அறிவித்துவிட்டு, "விஷ்ணுவின் இத்திருக்கோலம், எப்போது உருவகப்படுத்தப்பட்டது என்பது நமக்குத் தெரியாது; ஆனால், இப்போது நாம் பெற்றிருக்கும் அனந்தசாயி சிற்பக்கலை, குப்தர் காலத்துக்கு முந்தியது ஆகாது" என முடித்துள்ளார். (This is the earliest reference in Tamil literature to the worship of Vishnu stretched on his serpent couch. When this image of Vishnu was first conceived, we do not know. But the Ananthasayi sculptures We now have in India, do not go beyond the age of the Guptas. page : 392)

குப்தர் காலம் எது? அதன் தொடக்கம் கி. மு. 325 என்பது, இந்திய வரலாற்றுப் பேராசிரியர்கள் அனைவராலும் ஒருசேர ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்று: "கி. மு. நான்காம் நூற்றாண்டின் கடைசி நாற்கூற்றில், உலகம் அறிந்த நனிமிகப் புகழ் வாய்ந்தவன் சந்திரகுப்தன்" (The most splendid that the world knew in the last quarter of the IV century B. C. is Chandragupta. page : 142) எனக்கூறி திரு. அய்யங்கார் அவர்களும், இக்காலக்கணிப்பை ஏற்றுக் கொண்டுள்ளார்.

அனந்தசாயித் திருமேனி காஞ்சியில் கோயில் கொண்டு விட்டதைக் குறிப்பிடுகிறது பெரும்பாணாற்றுப்படை: உண்மை: ஆனால் அந்த அனந்தசாயித் திருமேனி வைஷ்ணவ சமயத்தவர் உள்ளத்தில், கி. மு. நான்காம் நூற்றாண்டிலேயே உருவாகிவிட்ட ஒன்று: ஆகவே, அது குறிப்பிடப்பட்டிருப்பது கொண்டு, அப்பெரும்பாணாற்றுப்படைப் பாடலைக், கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டிற்கு, அதாவது ஒன்பது நூறாண்டுகளுக்குப் பின்னுக்குக் கொண்டு விடுவது வரலாற்றுத் திறனாய்வு முறையாகாது.

ஆகவே, சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் சிவனையோ, திருமாலையோ, அவர்களைத் தொடர்பு படுத்திக் கூறியிருக்கும் புராணக் கதைகளையோ, துணை

கொண்டு, அப்பாக்களின் காலத்தை முடிவு செய்வது அறவே பொருந்தாது.

பத்துப்பாட்டு எட்டுத் தொகை ஆகிய சங்க இலக்கியங்களைக், கி. பி. 400க்கும் 600க்கும் கொண்டுவந்து நிறுத்தியதற்குத் திருவாளர் அய்யங்கார் அவர்கள் காட்டிய காரணம், அவை ஆரியக் கடவுளர்களைக் குறிப்பிடுகின்றன என்பது மட்டுமன்று; வேறுபல காரணங்களையும் காட்டியுள்ளார். அவற்றுள் ஒன்று சாதி வேறுபாடு.

''ஆரிய நால்வருண அமைப்பு வேதகாலத்தில் ஆரியவர்த்தத்தில் மட்டுமே வழக்காற்றில் இருந்தது. தென்னாட்டில், நால்வருணக் கோட்பாடு, வெறும் கொள்கை அளவில் இருந்ததேயல்லது, என்றும் நடைமுறையில் இல்லை. காரணம், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுவரை பிராமணர்கள் வாழ்க்கை, தமிழர் வாழ்க்கை நெறிக்கு அப்பாற்பட்டே இருந்தது. Caturvarnya, the four-caste organization of the Aryas was a fact only in Aryavartta in the vedic Age...In South India caturvarnya was always a matter of theory, and was never a reality. For the life of the Brahmanas till about the V century A. D., was totally apart from that of the bulk of the tamil people''—page: 122.) என அறிவித்துவிட்டார்.

அவ்வாறு அறிவித்தவர், ''உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும், பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே'' எனத்தொடங்கி, ''கீழ்ப்பால் ஒருவன் கற்பின், மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே'' என முடியும் புறநானூற்றுப் பாடலை (183) எடுத்துக்காண்டு, ''இதிலிருந்து, தன்னிலும் கீழான சாதியான் ஒருவனிடம், பிராமண சாதியான் ஒருவன் கற்பதை யூகிக்க முடிகிறது: [The guess can be made, that by men of the Brahmana caste, learning from those of lower ones.'' Page : 511] எனக் கருத்தறிவித்துச் சாதியைக் குறிப்பிடுவதன் மூலம்,

அது கூறும் புறநானூறு, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனக் கூறாமல் கூறியுள்ளார்.

ஆனால் தொல்காப்பியர், நாற்சாதி பிரிவு, தமிழர் வாழ்வில், தமக்கு முன்பே இடங்கொண்டுவிட்டதை உணர்ந்திருந்தமையால், தமிழ் வாழ்க்கைக்கான சட்ட நூலாம் தொல்காப்பியத்தில், அந்நூல் சாதிகளுக்கான இலக்கணத்தைப் பல்வேறு இடங்களில் வகுத்துள்ளார்.

''அடியோர் பாங்கினும், வினைவலர் பாங்கினும்''

''ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன''

''மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே''

''உயர்ந்தோர்க்கு உரிய ஒத்தினான''

''மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே''

''வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை''

''அன்னராயினும் இழித்தோர்க்கு இல்லை''

தொல் : பொருள் : 25, 28, 31, 33, 142, 622, 629.

தொல்காப்பியர் காலம் எதுவே ஆயினும், அவர் காலத்துக்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே, நால்சாதி வகுப்பு, தமிழரிடையே இடங்கொண்டுவிட்டது: அதனால் தான், அதற்குத், தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார் என்பது உறுதி ஆகிறது.

இதைத் திருவாளர் அய்யங்கார் அவர்களும் ஏற்றுக் கொண்டுள்ளார். ''தம்முடைய இலக்கண நூலில், ஆரியக் கருத்துக்களைக் கொண்டுவந்து குவிக்கும் ஆர்வத்திற்கு அப்பாற்பட்டவரல்லர் தொல்காப்பியர்.'' [Not that Tolkappiyanar rises above the temptation of importing Aryan ideas in to his grammar. page : 212] ''தொல் காப்பியருக்கு, உண்மையான சமுதாய அமைப்பு என்பது

மக்களை, நால்வருணத்தவராகக் கொள்வதே'' [To Tolkappiyanar, the ideal social organisation was the division of people into four Varanas page 212] என அவர் கூறுவது காண்க.

தமிழரிடையே இடம் பெற்றுவிட்டதாகத் திரு. அய்யங்கார் கூறும் பிறிதோர் ஆரியக் கோட்பாடு சகுனம் பார்த்தல். அதுகூறும் ''விருந்துவரக் கரைந்த காக்கை'' (குறுந்: 210): ''புள்ளும் பொந்தும்பழித்தல்'' (புறம்: 204) வரிகளைப் பதினேழாம் அதிகாரத்தில், ''நல்ல நல்லோர் வாய்ப்புள்'' (முல்லைப்பாட்டு: 18) என்ற வரியினை இருபத்தேழாம் அதிகாரத்திலும் எடுத்தாண்டிருப்பதோடு, ''மூடநம்பிக்கைகள் மக்களிடையே இடங்கொண்டிருந்தன'' [Superstitions prevailed among the people], ''சகுனத்தில் நம்பிக்கை ஆழமாக இருந்தது'' [Belief in omens was rampant. page : 274] எனவும் கருத்தறிவித்திருப்பதன் மூலம், அவை கூறும் சங்க இலக்கியங்கள், கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாம் எனக் கூறாமல் கூறியுள்ளார்.

சகுனம் பார்க்கும் வழக்கம், தமிழரிடையே பண்டே இருந்தமையால், தமிழர் வாழ்க்கை பற்றிய இலக்கணமாம் தம் நூலில் தொல்காப்பியர் சகுனத்திற்கான இலக்கணத்தையும் கூறியுள்ளார்:

தான் விரும்பும் காதலனோடு, அவனூர் சென்றுவிட்ட மகளைத் தேடிச் செல்லும் நற்றாயின் கூற்றுக்களுள் ஒன்றாக, ''மகள் வருவாளா? எப்போது வருவாள்?'' என்பதறிய சோதிடம் வல்லானிடம் கேட்பதாம் ''மன்னு நிமித்தம்'' (தொ. பொ. 39) என்ற துறையினையும், பகைநாட்டு ஆனிரைகளைக் கவர்ந்து செல்லும் வெட்சி வேந்தன் செயல்களுள் ஒன்றான நற்சொல் கேட்டலாம். ''பாக்கத்து விரிச்சி'' என்ற துறையினையும் [தொ. பொ. 61.] பொருள் தேடிப் போகும் தலைவன் குறிப்பைத் தலைவிபால் கூறவும், போகும் தலைவரைப் போகாவாறு தடுக்கவும், போன தலைவன்

விரைவில்வந்து சேர்வன் எனத் தலைவிக்கு ஆறுதல் கூறவும் உரியவராகிற பார்ப்பார்க்கு உரிய கடமைகளுள் ஒன்றாகிய "ஆவொடு பட்ட நிமித்தம்" என்ற துறையினையும் (தொல்: பொ: 1 5) இணைத்திருப்பது காண்க.

அரசர்கள், போருக்குப் புறப்படும் நாள் தம் வெற்றிக்கு வாய்ப்பு தரும் நல்ல நாளாக அமையாது போமாயின், அந் நாளுக்கு முற்பட்டதான ஒரு நல்ல நாளில், தம் குடையையும் வாளையும் போர்க்களம் நோக்கிப் போகவிடுவர். கரிகாலன் அது செய்ததை, "வாளும் குடையும் மயிர்க்கண் முரசும் நாளொடு பெயர்த்து" (சிலம்பு: 5 : 61–62) என்றும், செங்குட்டுவன் அது செய்ததை, "வாளும் குடையும் வடதிசைப் பெயர்க்கு" (சிலம்பு: 26 : 33) என்றும் கூறுவது காண்க. அரசர்கள் நிமித்தம் பார்க்கும் இந்நிலை, தமிழகத்தில் தமக்கு முன்னரே இடம் பெற்றிருந்தமையால், தொல்காப்பியர் அதற்கும் இலக்கணம் வகுத்துள்ளார். "குடையும் வாளும் நாள்கோள்" (தொ. பொரு: 69) என்ற சூத்திரத்தையும், அதற்கு நச்சினார்க்கினியர் தரும், "நாள் கொளலாவது, நாளும் ஓரையும் தனக்கு ஏற்பக் கொண்டு செல்லுழி, அக்காலத்திற்கு ஓர் இடையூறு தோன்றியவழித், தனக்கு இன்றியமையாதனவற்றை, அத்திசை நோக்கி, அக்காலத்தே முன்னே செல்ல விடுதல்" என்ற விளக்கத்தையும் காண்க. மேலும், பாடாண் திணைத்துறைகளுள், ஒன்றாக நிமித்தம் பார்த்தலையும் இணைத்துள்ளார் தொல்காப்பியர்: "நாளும், புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்" [தொ. பொ. 88 : 17] என்ற தொல்காப்பியம் காண்க.]

அகத்திலும் புறத்திலும் ஆரியக் கருத்துக்கள் [Aryam ideas in Agam and Puram] எனத் தலைப்பிட்ட 24வது அதிகாரத்தில், "கி. பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டில் பாடப்பெற்ற பாக்களில், வடக்கத்திய அதாவது, ஆரியக் கருத்துக்கள், கொள்கைகள், நம்பிக்கைகள், மூடநம்பிக்கைகள், பையப்பைய, மிகமிகப் பையப்பைய, நுழைந்துவிட்டன [In to the poems that were composed in

the IV and V centuries A. D., slowly, very slowly entered, chiefly by way of allusions Northern (Aryan) ideas, concepts, beliefs and superstitions] எனத் தோற்றுவாய் செய்துவிட்டு ''கர்மா'' என்ற துணைத்தலைப்பின் கீழ், ''இப்பிறவியில் செய்த நல்வினைப் பயனை, இறப்பிற்குப் பின்னர், மறுபிறவியில் அனுபவிக்கும் கர்மாவின் விதிமுறை ஒரு பாட்டில் குறிப்பிடப்பட்டுளது'' [The law of Karma, by which the results of good deeds in this life are reaped in the one, after death is stated in one passage. [page: 468] என்றும், ''மற்றொரு பாட்டில், இப்பிறவியில் ஒருவன் செய்த நல்வினைப்பயனை, உம்பர் உலகத்தில் அனுபவிக்க இயலுமா; அது இல்லாயின், மாறிப் பிறப்பில்லாமை இயலுமா என்பதில் கருத்து வேறுபாடு காட்டப்பட்டுளது. [In another passage the question of the enjoyments of the fruit of ones deed, either in the next world or in the next rebirth in this world is spoken of as a disputed point. page: 468] என்றும், ''மறுபிறப்புக் கொள்கை பிறிதொரு பாட்டிலும் குறிப்பிடப்பட்டுளது'' The doctrine of rebirth mentioned in another page: 469] எனறும் கூறிவிட்டு, முறையே,

''ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச் சென்று உணீஇயர்''

''செய்வினை மருங்கின் எய்தல் உண்டெனில்,
தொய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்;
தொய்யா உலகத்து நுகர்ச்சி இல் எனின்
மாறிப் பிறப்பின்மையும் கூடும்.''

''இம்மை போலக்காட்டி, உம்மை....
இடனுடைய வறவு ஆக்குக உயர்ந்த பாலே''

என்ற புறநானூற்றுப் பாக்களை (174; 214, 236) எடுத்துக் காட்டியுள்ளார்.

இம்மை, மறுமை, ஊழ்வினை எனப்பொருள்படும் பால் ஆகிய இக்கொள்கைகள், திரு. அய்யங்கார் அவர்கள் கூற்றுப்படி, தமிழர் உள்ளத்தைக், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் கொள்ளை கொண்டவை அல்ல: அவை, அவர்கள், உள்ளத்தைத், தொல்காப்பியர் காலத்துக்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே கொள்ளை கொண்டு விட்டன. அதனால்தான் தொல்காப்பியர், அவற்றிற்கு இலக்கணம் வகுத்துள்ளார்.

''பால் வரை தெய்வம் வினையே பூதம்''
—தொல்: சொல்: 58;

''ஒன்றே, வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப''
—தொல்: பொருள்: 90

என்ற அவர் சூத்திரம் காண்க.

ஆக, நல்வினை தீவினை பற்றிய கொள்கைகள், தமிழரிடையே, தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே இடம் பெற்றிருந்தன என்பது உறுதியாகிறது.

''கரிகாலனுக்குப் பிற்பட்ட சோழ அரசர்கள்'' என்ற தலைப்புள்ள 22ஆம் அதிகாரத்தில், சோழன் நலங்கிள்ளியின் வாழ்க்கை பற்றிய ஆய்வில், அவனைக், கோவூர்கிழார் பாடிய பாட்டில் பொருளும், இன்பமும், அறத்தின் பின்னாதல்போல், சேர பாண்டியர்களின் வெண் கொற்றக் குடைகள் தாழ்ந்து பின்வர அவன்குடை முழுமதிபோல் உயர்ந்து முன்செல்லும் அவன் பெருமை கூறும்,

''சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல

இருகுடை பின்பட, ஓங்கிய ஒரு குடை
உருகெழு மதியின் நிவந்து சேண்விளங்க''
— புறம் : 31.

என்ற வரிகளை எடுத்தாண்டுவிட்டு, அடிக்குறிப்பில், ''இத் தொடர். ஆரியக் கருத்துக்கள், தமிழ்நாட்டில் நன்கு இடம் பெறத் தொடங்கிவிட்டன என்பதை உணர்த்துகிறது. வாழ்க்கையின் குறிக்கோள் பற்றிய ஆரியக் கருத்துக்களை உள்ளடக்கிய உருவப் பொருட்களை, அருவப் பொருட் களோடு ஒப்புக் காட்டும் இவைபோலும் உவமைகள், கரிகாலனுக்கு முற்பட்ட காலத்து தமிழிலக்கியங்களில் காண்பது இயலாது. [This phrase shows that Aryan ideas were now rapidly gaining ground in Tamil India. Such a simile, involving the Aryan concept of the objects of life and comparing concrete objects with abstract ideas, cannot be discovered in Tamil Literature, before the time of Karikal. Page: 418.] எனக் கருத்தறிவிப்பதன் மூலம், அத்தகு கருத்துக்கள் அடங்கிய சங்க இலக்கியங்களைக் கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டிற்குக் கொண்டு வந்து நிறுத்துகிறார் திருவாளர் அய்யங்கார் அவர்கள்.

பண்டைத் தமிழர், ஐவகை நிலத்தும் மேற்கொண்ட வாழ்க்கை நெறியினைத், தொல்காப்பியர், ''இன்பமும், பொருளும் அறமும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை'' (தொல்: பொருள்: 89) எனக் கூறியுள்ளார். அதுமட்டுமன்று; ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா ஆகிய பாக்கள் நான்கும், எப் பொருள் பற்றியெல்லாம் பாட உரிமையுடைய என்ற வினாவிற்கு விடையளிக்கும் நிலையில், ''அந்நிலை மருங்கின் அறம்முத லாகிய மும்முதற் பொருட்கும் உரிய என்ப'' (தொல்: பொருள்: 411) எனக் கூறியுள்ளார்.

ஆகவே, அறம் பொருள் இன்பம் வீடு பற்றிய கொள்கை' தமிழர் உள்ளங்களைத், தொல்காப்பியர் காலத்துக்குச் சில பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே ஆட்கொண்டுவிட்டன;

என்பதே உண்மை நிலை! ஆகவே, அவை கூறும் சங்க இலக்கியங்களைத் தொல்காப்பியர் காலத்துக்கு முந்தியன வாகக் கோடலே முறை.

தமிழர் வரலாறு 23ஆம் அதிகாரத்தில், "மதுரையில் ஆகம வழிபாட்டு நெறி" [The Agama cults in Madura] என்ற தலைப்பின் கீழ், "ஆகம வழிபாட்டு நெறிகள் விரைந்து பரவியமைக்கான சான்றுகளை மதுரைக் காஞ்சியில் பெறலாம் [In Madurakkanchi we get evidence of the rapid spread of the Agama cults in the town of Madura. **Page : 450**] எனக் கருத்தறிவித்துவிட்டு, "நீரும், நிலனும், தீயும், வளியும், மாகவிசும்பொடு ஐந்துடன் இயற்றிய மழுவாள் நெடியோன்" [453 - 455] என்ற வரிகளைச் சான்றாகக் காட்டியுள்ளார்.

அது போலவே, "சேர அரசர்கள்" என்ற தலைப்புள்ள 25ஆம் அதிகாரத்தில், "பதிற்றுப்பத்து" என்ற குறுந் தலைப்பின் கீழ், "பதிற்றுப்பத்துப் பாக்கள், ஆரியக் கோட் பாடுகள், ஆகமப் பழக்க வழக்கங்களால் நிறைந்து வழி கின்றன. ஆகவே, அவை, ஆகம நெறிக் கோயில் வழிபாடு தமிழகத்தில் பரவிய பின்னர்ப் பாடப்பட்டன வாதல் வேண்டும்" எனக் குறிப்பிட்டுவிட்டு, தம் கூற்றுக்குச் சான்றாக, "நிலம், நீர், வளி, விசும்பு, என்ற நான்கின் அளப்பு அரிவை" (பதிற்றுப்பத்து : 14 : 1-2) என்ற வரிகளை எடுத்துக் காட்டியுள்ளார். அவ்வாறு காட்டியதன் மூலம், பஞ்ச பூதங்களைக் குறிப்பிடும் சங்க இலக்கியங்கள், கி. பி. ஐந்து, அல்லது ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனக் கூறாமல் கூறியுள்ளார், திருவாளர் அய்யங்கார்.

ஆனால், தொல்காப்பியர், "நிலம், தீ, நீர், வளி, விசும் பொடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம்" (தொல்.: பொருள் : 63 ) என விளக்கம் அளிப்பதன் மூலம், ஐம்பூத அறிவு, தமிழர்களிடையே, தாம் இலக்கணம் எழுதுவதற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே, இருந்ததை உறுதி செய்து, அவ்

வைம்பூத அறிவு இடம் பெற்றிருக்கும் பாக்கள், தம் காலத்திற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னரே பாடப்பெற்றனவாம் என்பதை உறுதி செய்துள்ளார்.

கரிகாலன் வரலாறு பற்றித் திறனாய்வு செய்யும் 20 ஆம் அதிகாரத்தில், "ஆரிய நாகரீகம், தமிழ் நாட்டின் பிற பகுதிகளைக் காட்டிலும், காவிரிப் பூம்பட்டினத்தில், நனிமிக முற்பட்ட காலத்திலேயே பரவி, வேறெங்கும் பெறாத, பெரும் செல்வாக்கினை, அங்கும் பெற்றுவிட்டது" [Aryan culture spread in Kavirippumpattinam, sooner than in the rest of the Tamil country and attained there an influence which it did not possess in other places. Page: 353] எனக் கூறி, அதற்குச் சான்றாக, "நான்மறையோர் புகழ் பரப்பியும்" (202) என்ற பட்டினப்பாலை வரியினைக் காட்டியுள்ளார்.

இளந்திரையன் வரலாறு பற்றித் திறனாய்வு செய்யும் 21ஆம் அதிகாரத்தில், "நான் அறிந்த வரையில் தமிழ்நாட்டில் பிராமணர் குடியிருப்பு பற்றிய முதல் வருணனை இதுதான்" [This is, so far as I know, the earliest description of Brahmana village in the Tamil land." எனக் கூறிச், சான்றாக,

> "செழுங்கன்று யாத்த சிறுதாள் பந்தர்,
> பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்,
> மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது,
> வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
> மறைகாப்பாளர் உறைபதி"

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகளை (297-302) எடுத்தாண்டுள்ளார்.

பதிற்றுப்பத்து பற்றிய திறனாய்வு செய்யும் 25ஆம் அதிகாரத்தில், "பதிற்றுப் பத்துப் பாடலாசிரியர்கள், கி. மு.

'ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டுப் பார்ப்பனர்கள்: ஆகவே அவை, ஆரியக் கோட்பாடுகள், ஆகமநெறிப் பழக்கவழக்கங்களால் நிரம்பி வழிகிறது'' [The poets of the Ten fold-Ten, were Brahmanas of the V or VI Century A. D. Hence the peoms team with references to Aryan ideas and Agama practices. Page: (495-496)] எனக் கூறிவிட்டு, அது தொழில் புரியும் அந்தணர் பற்றிய குறிப்பு வரும், ''ஓதல் வேட்டல், அவை பிறர் செய்தல், ஈதல், ஏற்றல் என்று ஆறு புரிந்து, ஒழுகும் அந்தணர்'' என்ற பதிற்றுப்பத்து வரிகளை (24: 6-8) எடுத்தாண்டுள்ளார்,

முல்லைப்பாட்டுப் பற்றித் திறனாய்வு செய்யும் 21ஆம் அதிகாரத்தில், ''இப் பாட்டிலும், ஆரியக் கோட்பாடுகள் பற்றிய குறிப்பீடுகள், அங்கொன்றும், இங்கொன்றுமாக என இல்லாமல், நிறையவே உள்ளன'' [In this poem also, the Aryan allusions are not casual but intimate. Page: 542] எனக் கூறிவிட்டு, அதற்குக் காட்டும் சான்றுகளில் ஒன்றாகக் ''கல் தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான் முக்கோல்'' என்ற வரிகளை (37-38) காட்டியுள்ளார்.

இவை போலும், அகச்சான்றுகளை அடுக்கடுக்காக எடுத்துக் காட்டியதன் மூலம், அவை இடம் பெற்றுள்ள உங்க இலக்கியப் பாடல்கள், கி. பி. ஐந்து அல்லது ஆறம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்பதை நிலைநாட்டமுனைந்து உள்ளார். திரு: P. T. S. அவர்கள்

ஆனால், இவ்வாரியக் கோட்பாடுகள், தம் காலத்திற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழரிடையே இடங்கொண்டுவிட்டமையால், அவற்றிற்கு இலக்கணம் வருத்திருப்பதன் மூலம், அவ்வாரியக் கோட்பாடுகள் இடம்பெற்றிருக்கும் சங்க இலக்கியப் பாடல்கள், தம்முடைய காலத்திற்குப் பல நூறு ஆண்டுகாலம் முற்பட்டன என்பதை உறுதி செய்துள்ளார் தொல்காப்பியர். அவர் கூறும் இலக்கணங்கள் இதோ:

"அறுவகைப் பட்ட பார்ப்பன பக்கம்"

—தொல் : பொருள் : 74.

[அவையாவன. ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன]

"ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன"

—தொ. பொ. 28.

"நூலே கரகம், முக்கோல், மணையே
ஆயுங் காலை அந்தணர்க்கு உரிய" —தொ. பொ. 615.

"கரிகாலன், தன்னுடைய புதிய தலை நகரில், ஆரிய நாகரீகத்தோடு கொண்டுவிட்ட நெருக்கமானத் தொடர்பின் விளைவு, அவன் கற்பனை வளமெல்லாம், பிராமணர்களால் செய்துகாட்டப்பட்ட ஒளிமயமான எரியோம்பல் நெறிகளால் கவரப்பட்டு, அவன், பொருட்செலவு மிக்க வேத யக்ஞங்களைப் பேணிக்காத்த, முதல் தமிழரசன் ஆயினான்" [One result of Karikal's coming into intimate contact with Aryan culture in his new capital was, that his imgination was captivated by the gorgeous fire-rites performed by the Brahmanas and he, thus became, the first Tamil king, that patronised the costly vedic yajnas." (Page: 356 - 357) எனக் கூறிவிட்டு, அவன் புகழ்பாடும், "அவிர்சடைமுனிவர் அங்கி வேட்கும் ஆவுதி நறும்புகை" என்ற பட்டினப் பாலை வரிகளையும் (54-55), "பருதிஉருவின் பல்படைப் புரிசை, எருவை நுகர்ச்சி யூபநெடுந்தூண், வேதவேள்வித் தொழில் முடித்ததூஉம்" என்ற புறநானூற்று வரிகளையும் (புறம்: 224 : 7-9) காட்டியுள்ளார்.

20 ஆம் அதிகாரத்தில் இவ்வாறு கருத்து அறிவித்ததைத் தொடர்ந்து, 28 ஆம் அதிகாரம் வரையுள்ள அதிகாரங்கள் ஒவ்வொன்றிலும், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் போலும் பெருவேந்தர்கள், இளந்திரையன், மலையமான் திருமுடிக்காரி போலும்

சிற்றரசர்கள் புகழ்பாடும் சங்கச்செய்யுட்களில், வேள்வி தொடர்பான செய்திகள் இடம் பெற்றிருக்கும், "நெய்ம்மலி ஆவுதி பொங்கப் பன்மாண் வீயாச் சிறப்பின் வேள்விமுற்றி" (புறம் : 15), "அந்தணர் அருங்கடன் இறுக்கும் முத்தீ" (புறம் : 2), "கேள்வி அந்தணர் அருங்கடன் இறுத்த வேள்வித் தூண்". "முனிவர், வெண்கோட்டுக் களிறுகரு பிறங்கின் வேட்கும்" (பெரும் பாண் 315-317 : 499), "அழல் புறந்தரூஉம் அந்தணர்" (புறம்: 122) என்பனபோலும் பாடல்வரிகளை அடுக்கடுக்காக எடுத்துக்காட்டி, அவை இடம் பெற்றிருக்கும் அப்பாக்கள் எல்லாம், கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவே என்ற தம் முடிவிற்கு அரண்தேட முயன்றுள்ளார், திருவாளர் அய்யங்கார் அவர்கள்.

ஆனால், பாட்டுடைத் தலைவன் புகழ்பாடும் பாடாண் திணைத்துறைகளுள், ஒன்றாக, வேள்விமுடிவில், வேள்வி ஆசிரியனுக்குப் பசுக்களைத் தானமாகக்கொண்டும், பெருஞ் செயலைப் பாராட்டும், "கபிலை கண்ணிய வேள்வி நிலை" (தொ. பொ 87) என்ற துறையையும் ஒன்றாக வைத்து, வேள்விகள், தமிழகத்தில் தம் காலத்திற்கு முன்பே நிலை கொண்டு விட்டன: ஆகவே, அவை இடம் கொண்டிருக்கும் சங்க இலக்கியப் பாடல்கள் தம் காலத்திற்கு முற்பட்டனவே என்பதை முடித்து வைத்துள்ளார் தொல்காப்பியர்.

சங்க இலக்கியங்களில், ஞாயிறும், திங்களும் பல்வேறு இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. செவ்வாய், "செம்மீன்" (புறம் : 60) என்ற பெயரிலும், வெள்ளி, "வைகுறுமீன்" (பெரும்பாண் ; 318), "வெண்மீன்" (பட்டி : 1) என்ற பெயர்களிலும், சனி, "மைம்மீன்" (புறம் : 117) என்ற பெயரிலும் இடப்பெற்றுள்ளன.

அதுபோலவே, கார்த்திகை, "அறுமீன்" (அகம் : 141) "ஆரல்" (மலைபடு : 200) என்ற பெயர்களிலும், உரோகிணி, "சகடம்" (அகம் : 136) என்ற பெயரிலும், புனர்பூசம், "கடைக்குளம்" என்ற பெயரிலும், அனுடம், "முடப்பனை"

(புறம் : 229) என்ற பெயரிலும், அருந்ததி, "வடவயின் விளங்கும் சிறுமீன்" (பெரும் : 303) என்ற பெயரிலும், மேஷராசி, "ஆடு" (பெரும் : 160) என்ற பெயரிலும், வால்நட்சத்திரம், "தூபம்" (புறம் : 117) என்ற பெயரிலும் இடம் பெற்றுள்ளன.

இவற்றையெல்லாம் அரிதின் முயன்று தேடி, எடுத்துக் காட்டியதன் மூலம், இவை இடம்பெற்ற சங்க இலக்கியங்களைக் கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டிற்குக் கொண்டு வந்து நிறுத்தியுள்ளார் திருவாளர் அய்யங்கார்.

ஆனால், இந்த வான நூல் அறிவையும், கணிநூல் அறிவையும், தமிழர்கள், தம்முடைய காலத்திற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னரே பெற்றிருந்தமையால், தம்முடைய இலக்கண நூலில், "மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன்" (தொ. பொ. : 74) அவ்வறிவு வரப்பெற்றாரை வாயார வாழ்த்தியும், "மறைந்த ஒழுக்கத்து ஓரையும், நாளும் துறந்த ஒழுக்கம் கிழவற்கு இல்லை" (தொ. பொ. : 133) எனக் களவுக்காலத்துக் காதலர்கள், நாளும் கிழமையும் பார்க்கத் தேவையில்லை என அவர்களுக்கு விதிவிலக்கும் வழங்கியுள்ளார் தொல்காப்பியர்.

உண்மை நிலை இதுவாகவும், திருவாளர். அய்யங்கார் அவர்களுக்குச் சங்க இலக்கியங்களுக்கு, அத்துணைப் பழம் பெருமைதர மனம் வரவில்லை: அதனால், தொல்காப்பியர் "ஓரையை" அறிந்துள்ளார் என்பது உண்மை ; ஆனால், அந்த "ஓரை" தமிழில் கி. பி. முதல் நூற்றாண்டிற்கு முன்னர் இடம் பெற்றிருக்க இயலாது. ஆகவே, தொல்காப்பியர் காலம் அதற்குப் பிற்பட்டதாதலே வேண்டும். ஆகவே, அவர் கூறும் இலக்கணங்களுக்கு இலக்கியங்களாகிய, சங்க இலக்கியங்களைக் கி. மு. நூற்றாண்டுகளுக்குக் கொண்டு செல்வது இயலாது எனக் கூறிமுடிக்கிறார். (Surely it will not be a modest estimate if we assume, that Orai, could not have got into Tamil, before the first century A. D. which must

be the upper limit of the age of Tolkappiyar (Page: 216) என அவர் கூறியிருப்பது காண்க.

ஒரு பொருளுக்கு இலக்கணம் வகுக்கப்படுகிறது என்றால், அப்பொருள், அதன் இலக்கணம் வகுக்கப்படுவதற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே நிலைகொண்ட ஒன்றாக இருந்திருக்க வேண்டும் என்பது நியதி; தொல்காப்பியர் திரு. அய்யங்கார் கூற்றுப்படி, கி.பி. முதலாம் நூற்றாண்டினர் தான் எனக் கொண்டாலும், அவர் இலக்கணத்திற்கு இலக்கியமாகிய சங்கச் செய்யுட்கள், அவர் காலத்திற்குச் சில பல நூற்றாண்டுகளுக்கு முன்னவாதலே வேண்டும்; இதைத், திருவாளர் அய்யங்கார் அவர்களும் ஒப்புக் கொண்டுள்ளார். "தொல்காப்பியனார், தம்முடைய இலக்கண நூலுக்கு ஆதாரமாகக் கொண்ட மரபுவழிப் பாடல்களுக்கு முற்பட்டதான இயற்கைப் பாடல்களின் வளர்ச்சிப் பருவத்திற்கு, ஐந்நூறு ஆண்டுகளை வகுப்பது, மிகைப் படுத்தப்பட்ட மதிப்பீடு ஆகாது. இவ்வகையில் தமிழ் இலக்கியத்தின் பிற்பட்ட கால எல்லையாக, ஏறத்தாழ கி. மு. 1000ஐ அடைகிறோம்." [It will not be an exaggerated estimate to ascribe a period of five centuries to the development of, what one might call, the natural poetry, which proceeded the conventional poetry, on which Tolkappiyanar based his grammar. We thus reach about 1000 B.C., as the latter limit of the birth of Tamil poetry. page: 71) என அவர் கூறியிருப்பது காண்க.

"ஓரை" என்ற சொல், கிரேக்க மொழியிலிருந்து வந்த சொல் என்பதை ஏற்றுக்கொள்வதானாலும், அதற்குக் கி. பி. முதல் நூற்றாண்டை வகுப்பதும், வரலாற்று நிகழ்ச்சிகள்படி ஏற்புடையதாகாது; கிரேக்க பெருவீரன் அலெக்ஸாண்டர், இந்தியா மீது படையெடுத்து வந்து சிந்து நதியைக் கடந்தது கி. மு. 326 பிப்ரவரியில்; போரஸ் மன்னனோடு போரிட்டது ஜூலையில்; தன் நாடு திரும்பியது கி. மு. 325 அக்டோபரில் என்பது வரலாற்றுச்

பேராசிரியர்கள் அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒன்று; ஆகவே, இந்தியாவுக்கும் கிரேக்கத்திற்கும் இடையில், கி. மு. நான்காம் நூற்றாண்டிற்கு முன்னரே போக்குவரத்து இருந்திருக்க வேண்டும். இதையும், திருவாளர் அய்யங்கார் அவர்கள் ஒப்புக்கொண்டுள்ளார்; அரசியல் தொடர்பு மட்டுமல்லாமல், மொழிகளுக்கிடையே சொல்மாற்றம் ஏற்பட்டிருப்பதையும் ஏற்றுக்கொண்டுள்ளார்.

''கிறித்தவ ஆண்டு பிறப்பதற்கு முந்திய 500 ஆண்டுகளில் ஐரோப்பாவுடனான இந்த இந்திய வணிகத்தில், கிரேக்கர்கள் பெரும் இடைத்தரகர்களாக இருந்தனர். உலகப் பெருநாடுகளுக்கு இடையிலான இந்த விரிவான வாணிகப் போக்குவரத்தின் ஒரு விளைவு, தென்னாட்டு வணிகப் பண்டங்களின் தமிழ்ப் பெயர்கள், கிரேக்கப் பழங்குடியினரின், தூய கிரேக்க மொழியால் கடன் வாங்கப் பட்டன.'' (The Greeks were the greatest intermediaries of this trade of India, with Europe, in the half-millennium, that preceeded the birth of Christ. One result of this extensive international commercial intercourse was, that the Tamil names of South Indian articles of trade were borrowed by the Hellenes. Page : 193-94.) என அவரே கூறியிருப்பது காண்க.

ஆக, பத்துப்பாட்டு எட்டுத்தொகைப் பாடல்களால் பாடப்பெற்றிருக்கும் அரசர்களைக் காட்டியோ, அப்பாக்களில் கோயில் கொண்டுவிட்ட ஆரியக் கடவுள்களை வழிபட்டோ, அப்பாக்களில் இடம் பெற்றுவிட்ட ஆரியக் கோட்பாடுகளை ஏற்றோ, அப்பாக்களில் ஒளிகாட்டும் விண்மீன்களைக் கண்டோ, அப்பாக்களைக் கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டிற்குக் கொண்டுவந்து நிறுத்தும்

திருவாளர் அய்யங்கார் அவர்கள் முடிவு உண்மை நிலைக்கு முற்றிலும் முரண்பட்டது. தொல்காப்பியரும், அவர் கூறும் இலக்கணத்திற்கு இலக்கியமாக அமைந்திருக்கும் சங்க இலக்கியப் பாடல்களும், அய்யங்கார் கூறுவதுபோல் கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டிற்குத் தாழ்ந்துவிடவில்லை; மாறாகக், கி. மு. நான்கு அல்லது மூன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்திலேயே ஒலிக்கத் தொடங்கிவிட்டன என்பதே, வரலாற்று நெறியொடு பட்ட உண்மை நிலையாம்.

— முற்றும் —




தலைமை நிலையம் :

154, டி. டி. கே. சாலை,
ஆழ்வார்பேட்டை, சென்னை-18.

கிளை நிலையங்கள் :

79, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை-108.

திருநெல்வேலி-6 மதுரை-1.
கோயமுத்தூர்-1. கும்பகோணம்-1.
திருச்சிராப்பள்ளி-2. சேலம்-1.

**விலை ரூ. 60-00**

அப்பர் அச்சகம், சென்னை-108.